உ

சிவமயம்.

# அகத்தியர் குணவாகடம்.



மலையப்பசாமி வைத்தியசாலை,
பழனி.

 1973. [விலை ரூ. 5—00.

உ

அகத்தியர் துணை.

# நூன் முகம்.

தமிழ் நாட்டின் தலையாய, பழமையான மருத்துவம் சித்த மருத்துவமே யாகும். சித்த மருத்துவத்தில் அச்சு ஏருத பழமையான ஏட்டுச் சுவடிகள் பல உள்ளன. சித்த மருத்துவம் பயிலும் மாணவர்களுக்கும், சித்த மருத்துவர்களுக்கும் பயன்படும்படி சில நூல்களை அச்சிட நாம் எண்ணி, முதன் முதலாக **"அகத்தியர் குணவாகடம்"** என்ற இந்நூலைப் பிரசுரித்துள்ளோம். மறைந்த **தவத்திரு விருதை சிவஞான யோகிகள்** நம்மிடம் மனமுவந்து கொடுத்த பிரதிகளில் உள்ள வற்றைச் சோதித்துப் பார்த்ததில் **'அகத்தியர் குணவாகடம்'** என்ற தலைப்பைக் கொண்ட சில பாடல்கள் இருந்தன. இந்நூல் முழுமையாக இல்லை. மறைந்த கோவை சித்த வைத்திய சிகாமணி C. K. **குமாரசாமி பிள்ளை** அவர்களிடம் இருந்த சில பிரதிகளில், இதே தலைப்பின் கீழ் சில பாடல்களும் இருந்தன. அவைகளைப் பிரதி செய்து கொள்ளும்படி அனுமதித்தார். இவைகளைத் தொகுத்து பிரதிகளில் உள்ளவாறே இந்நூலை வெளியிட்டிருக்கிறேம். இந்நூலின் ஆசிரியர் பெயர், காலம், ஊர் முதலியவை தெரியவில்லை.

சித்த மருத்துவ உலகம், விருதை மறைத்திரு, சிவஞான யோகிகளை நன்கு அறியும். சித்த மருத்துவத்திற்குப் புத்துயிர் ஊட்டியவர். தமிழ் நாட்டில் முதல் முறையாக **சித்த மருத்துவ சங்கம்** ஒன்றை நிறுவி சித்த மருத்துவர்களை ஒன்று திரட்டி உறுப்பினர்களாக்கினர். முதன் முதலாக **சித்த மருத்துவ மாநாடுகள்** கூட்டியவர் இவரே. சென்னை, மதுரை, திருநெல்வேலி முதலிய இடங்களில் மாநாடுகள் நடத்தினர். சித்த

மருத்துவத்திற்கு அரசாங்கம் ஆதரவு கொடுக்கவேண்டு மென்று குரல் எழுப்பினர். மாநாட்டில் கலந்துகொண்டு சிறந்த மருந்துகளைக் கண்காட்சியில் வைத்த சித்த மருத்துவர்களுக்கு தங்கப் பதக்கம், பட்டம், நற்சான்றிதழ்கள் வழங்கி மருத்துவர்களை ஊக்கினர். இவருடைய முயற்சியால் சித்த மருத்துவர்களிடையே விழிப்பு ஏற்பட்டது. இந்திய மருத்துவக் கல்லூரி அமைய முயற்சித்தவர்களில் இவரும் ஒருவர். இவர், சைவ சித்தாந்தத்திலும் நுண்ணறிவு படைத்தவர். 'தேவோபாசனதீபத்திற்கு' தெள்ளிய உரையும், 'விபூதி ருத்திராக்ஷதாரண நிரூபணம்' என்ற நூலுக்கு கருத்துரையும் வழங்கிப் பிரசுரித்தவர்.

இந்நூலில் சில பாடல்கள் சந்தர்ப்பத்திற்குப் பொருத்தமில்லாமல் இருக்கின்றன. சில பாடல்கள் முழுமையாக இல்லை. பிரதியில் உள்ள பிழைகளைக் கூடியமட்டும் நீக்கிப் பிரசுரித்து உள்ளோம். இந்நூலின் கண் உள்ள பிழைகளைச் சுட்டிக் காட்டினால் மறு பதிப்பில் பிழைகளை நீக்கி அச்சிடுகிறோம்.

இந்நூலை, சித்த மருத்துவர்கள் வாங்கிப் பயன் அடைந்து ஊக்குவிக்க வேண்டுகிறோம்.

**Dr. C. P. சாமி,**

சாமி அச்சகம், இரயில்வே பீடர் ரோடு, பழனி.

உ
சிவமயம்.

# அகத்தியர் குணவாகடம்.



## காப்பு.

கரிமுகனடியை வாழ்த்திக் கருத்தினி லமைத்துப் பின்னர்
குறுமுனி அருளிச்செய்த குணபாடந் தன்னை முற்றுந்
தெரிந்திட வுலகத்தோரின் தேகத்தில் விளைந்த நோயின்
அருந்தொகை ஒவ்வொன்றுக்குங் குணமுட னருளு வோமே.

## நூல்.

ஆதியென்ற பராபரத்தின் பதத்தைப் போற்றி
அம்புவியில் மானிடருக் களித்த நோயின்
நீதியாந் தொகையதனை நிகழ்த்தக் கேளாய்
நிர்ணயமாய் வாதத்தி லெண்ப தாகும்
பாதியாம் பித்தத்தில் நாற்ப துண்டாம்
பரிந்ததொரு சிலேற்பனத்திற் றெண்ணூற் றுரும்
சோதியா மிதற்குள்ளே யநேக நோயின்
சூட்சுமத்தைச் சொல்லுகிறேன் துலங்கக் கேளே. (1)

கேளப்பா சுரமதுதான் அறுபா னொன்கு
கெடியான சன்னியது பதின்மூன் றுரும்
வாளப்பா வீச்சஞ்சு தோட மேழு
வளமான தோடத்திற் சலதோட மொன்று
நீளப்பா ரெத்தபித்தம் பதின்மூன் றுக்குள்
நிலையாக வாறுவிதம் பெண்களுக் கேதான்
ஆளப்பா சுவாசமஞ்சு காச மஞ்சு
அடைவான விக்கலது ஏழ தாமே. (2)

ஆமேதான் சயரோகம் இருபத் தொன்றில்
அழகான குரல்கம்மல் ரோக மாறும்
நாமேதான் அரோசிய ரோக மஞ்சு
நலமான வாந்தியுடன் ரோக மாறும்
போமேதான் மருட்சி ரோகங்க ளைந்து
புகலான தாகரோக மது ஐந்தாகும்
ஓமேதான் உன்மாத ரோக மேழாம்
உத்தமனே மதமூர்ச்சை ரோக மஞ்சே. (3)

அஞ்சான மூலமதி லுற்ப வித்த
அசையாத மூலநோய் இருப தய்யா
நஞ்சான அதிசாரம் ஈரைந் தாகும்
நலமான கிராணியது பத்தோ டொன்றும்
துஞ்சான் அசீர்ணமாம் ரோகம் பத்தில்
தோகையரே விடபேதி ரோக மாறும்
பஞ்சான கிரிச்சனங்கள் இருப தாகும்
பாரோர்க்கு மேகமது இருபத் தொன்றே. (4)

ஒன்றான மேகத்தின் கட்டி பத்தாம்
ஒழுகிவரும் வெகுமூத்திர ரோக மொன்றும்
நன்றான பிரமியந்தான் பதினென் றாகும்
நாடியதோர் வெக்கைக்கட்டி யிரண்ட தாகும்
குன்றான குடல்விருத்தி ரோக மேழு
குடிகெடுத்த குன்மமதோ ரெட்ட தாகும்
அன்றான அண்டத்தின் ரோக மெட்டு
அறியாத அனுகதத்தின் ரோக மஞ்சே. (5)

அஞ்சடிக்கும் சூலையது பதிவெட் டாகும்
அதன்பின்னல் உதாத்தின் ரோகம் பத்தாம்
கெஞ்சடிக்கும் பீலிகா ரோகம் நான்கு
கிளர்ந்துவரும் பாண்டுரோ கங்கள் ஏழு
துஞ்சடிக்கும் காமாலை பதின்மூன் றாகும்
துக்கமுள்ள சோகையது ஈரைந் தாகும்
விஞ்சையென்ற விசற்பநோய் ஏழே யாகும்
விதமான வைசூரியது பதினு லாமே. (6)

நாலான குட்டமது பதினெட் டாகும்
　　நெளிந்துவரும் கிருமியுள்ள ரோக மேழாம்
பாழான மகாவாத ரோக மெட்டு
　　பரிசுத்த சுரோணிதத்தின் ரோக மெட்டு
ஆழான ஆவிர்தநோய் இருபத் திரண்டு
　　அடைவான விடபாக ரோக மெட்டே
ஊழ்வினையா மலட்டு ரோகங்க ளேழு
　　உண்டான பிரசவத்தின் ரோகம் பத்தே. (7)

## குழந்தை நோய்.

பத்தான பாலருக்குப் பிறந்த நோய்கள்
　　பாரிலுள்ளோர் தானறியப் பகரக் கேளாய்
முத்தான சூலைகணை கிரந்தி நோய்கள்
　　முடிவிலவை ஒவ்வொன்றும் பதினெட் டாகும்
சித்தான மாந்தமுடன் சுரமுந் தோடம்
　　சிறப்புடனே ஒவ்வொன்றும் இருப தாகும்
எத்தாலே வந்ததென்று கேட்பா யாகில்
　　இளமாதர் முலைப்பாலால் விளைந்த நோயே. (8)

நோயான கழிச்சலொடு கரப்பான் றனும்
　　நோக்கமுடன் வகையொன்று பதினா றாகும்
வாயான அட்சரந்தான் ஒன்ப தாகும்
　　வரிசையுடன் சன்னியது ஆற தாகும்
மாயாத அமரமுடன் ஏங்கல் தானும்
　　மார்க்கமுள்ள கடுவானும் கக்கு வானும்
ஓயாதபடி யழுகுமிளம் பிள்ளை வாதம்
　　ஓடிவரும்காமாலை செவ்வாப்பு கட்டி யெட்டே. (9)

எட்டுமிரண்டு மிழிபட்சி தோட மும்
　　முட்டுமாதரின் மூன்றுநாள் தோட மும்
சட்டமாகவே புணர்ந்திடுந் தோட மும்
　　இட்டமாகவே யினிவரும் நோய் களே. (10)

பூதகண ரோகமது முப்பத் தாறும்
புகலான உன்மத்த ரோக மாறும்
பேதமில்லா அபஸ்மார ரோகம் நாலு
பிரிந்தறிவு கெட்டிறந்த கட்டை போலாம்
வேதனைசெய் நேத்திரநோய் தொண்ணூற் றாறு
விளைந்த குன்மரோக மிருபத்தி நாலு
சேதமிலா வெள்விழிச் சந்திலொன்ப தாமே
சிறந்த வெள்ளைவிழியிற் பதின்மூன் றாமே. (11)

ஆமேதான் கருவிழியில் ஏழ தாமே
அப்பனே பார்வையில்தான் இருபத் தேழாம்
காமேதான் கண்ணில்நோய் பதினா றாகும்
கருவான செவியின்நோய் நூற தாமே
நாமேதான் நாசிநோய் பதினெட் டாகும்
நலமான முகத்தில்நோய் எழுபத் தைந்தாம்
போமேதான் தந்தநோய் இருபத்து மூன்றும்
புகழான நாக்கில்நோய் ஆற தாமே. (12)

ஆறான தாளின்நோய் எட்ட தாகும்
அடைவுடனே கண்டநோய் பதினெட் டாகும்
மாறான சர்வமுக ரோக மெட்டு
மகத்தான சிரரோகம் பத்தே யாகும்
காறான கபாலநோ யொன்ப தாகும்
காசினியில் ரணரோக மறுபத் தைந்தாம்
சீரான கிரந்திரணம் பதினென்றே தான்
சிறந்ததோ ரானைக்கால் மூன்ற தாமே. (13)

மூன்றான கண்டத்தின் மாலை ரெண்டு
முட்டிவரும் அரையாப்பு மிரண்டே யாகும்
ஊன்றான துடைவாழை யிரண்ட தாகும்
உள்நாடி ரணபேதம் அஞ்சே யாகும்
பேன்றான அத்திரணம் முப்பத் தாறும்
பித்தவெடி யொன்றுபத ரோக மைந்து
ஆன்றான ஆண்குறியி லிருபத் திரண்டு
ஆனதோர் பிரமேகம் இருபத் தொன்றே. (14)

ஒன்ருன யோனிநோ யிருபத் தொன்று
உத்தமனே விடரோக மறுபத் தேழாம்
மன்ருன எலிகடிகள் பதினெட் டாகும்
மாருத நாய்க்கடிகள் இரண்டே யாகும்
நின்ருடும் நீராம்பல் கட்டி யொன்று
நிலையாத கவுசியெனுங் கட்டி யொன்று
சென்றுமே திரிந்தோடும் விப்புருதி யெட்டு
சீரான கெண்டையென் கட்டி யொன்றே. (15)

## சுர வகை.

கேளப்பா சுரம்பிறக்கும் வகையைக் கேளாய்
கெடியான அறுசுவையின் பேதத் தாலும்
தாளப்பா தகாததொரு நடக்கை யாலும்
தருவான வாதபித்த சிலேற்பன மென்னும்
மூளப்பா மூன்று தோசமு மொன்ருகி
முடிவாக இரண்டிரண்டாய்த் தொந்தித்தே தான்
சூளப்பா தனித்தனியே ஆக்ரமித் துச்
சுகமான அமாசயத்தைப் பற்றுந் தானே. (16)

பற்றியங்கு மிருதுகெட்டி ரூப மாகப்
படிந்திருக்கும் ஆமமது அடை தானுகி
தத்திதங்கள் வலிமைக்குத் தக்கவா றிளகித்
தகுந்தபடி அவ்வடையை யுப்பச் செய்து
சத்திதரு மன்னத்தை அசீர்ணமே செய்து
சதிரான சீரணத்தின் நரம்பு துவாரம்
சுத்திவரும் ரோமத்தின் துவாரந் தன்னை
சுகமாக மறைத்தபின்பு சொல்லக் கேளே. (17)

சொல்லுகிறேன் பக்குவா சயத்தைச் சேர்ந்து
சுயமாக வளர்ந்துவருஞ் சடாக் கினியை
மெல்லவே விசிறுவதா லெழுப்பி விட்டு
மெதுவாக அதனுடனே தானுஞ் சேர்ந்து
வல்லவே சரீரத்தில் வியாபித்துப் பின்
வளமாக வுடல்முழுதுங் கொதிப்பைத் தந்து
அல்லல்செய்து தேகத்தைக் கொடுமை செய்யும்
அழலான சுரத்தினது தன்மை தானே. (18)

தானான அக்கினிதான் வீச லாலே
    தக்கதொரு ஆகாரஞ் செல்லா தய்யா
ஊனான நரம்பினது துவார முற்றும்
    உறவான ரோமத்தின் துவார முற்றும்
தேனாக அடைவதனல் சுரமே யுண்டாய்த்
    தேகத்தில் வியர்வையது காணு தய்யா
மானேகேள் ஆமத்திற் பித்தகப தோடம்
    வருமாயின் வியர்வையது உண்டாம் பாரே. (19)

பாரேநீ சகலசுரந் தீர வேண்டிற்
    பக்குவங்கள் சொல்லுகிறேன் பரிந்து கேளு
ஊரேதான் உப்பினதோர் சேட்டுமத் தடை
    உறுதியாய் முன்போலே சுருங்கவே தான்
வீரேதான் விசிறினதோ ரக்னி தானும்
    விளைவான பக்குவா சயத்தி லடங்க
சீரான லங்கணந்தான் முதலிற் செய்து
    சிறப்புடனே பின்னாலே அவிழ்தம் பாரே. (20)

## பாண்டு வகை.

பாரடா பாண்டுவகை சொல்லக் கேளாய்
    பரிவான பாண்டதுதா னஞ்சே யாகும்
வாரடா வாதபித்தம் சீத பாண்டு
    வகையான விடபாண்டு மிருத்திகா பாண்டு
தேரடா தேகத்தில் இரத்தம் வற்றித்
    தீங்கான விந்தநோய் காணு மப்பா
கூறடா சொல்லுகிறேன் நன்றாய்ப் பாரு
    குறிப்புடனே நீயதைத்தா னறிந்து கொள்ளே. (21)

கொள்ளடா அபக்குவ போசனத்தி னாலும்
    குடிகெடுத்த பெரும்பாடு கிராணி யாலும்
கள்ளடா கருப்பத்தின் கிரந்தி யாலும்
    கனமான ரத்தத்தின் போக்கி னாலும்
அள்ளடா அதியாம கவனத் தாலும்
    அளவற்ற விசாரந்தா னடையும் போதும்
தெள்ளவே தேகத்தில் ரத்தம் கெட்டு
    தெளிவான பாண்டதுவு முண்டாம் பாரே. (22)

உண்டாகும் வேளைதன்னில் தேக நேர்மை
உறுதியாய்ச் சொல்லுகிறேன் நன்றாய்ப் பாரு
குண்டான முகம்கண்கள் உதடு நாக்கு
குறிப்பான வாய்வேறும் தேக முற்றும்
வெண்டாக வேயுலர்ந்து வெண்மை யாகி
விரல்நகங்கள் முழுவதிலும் ரத்தம் வற்றி
கண்டான கால்கள்தான் தணிந்து நிற்கும்
கருவான நாடியது மெதுவாய்ப் போமே. (23)

போமேதான் தீபனங்கள் மட்டுப் பட்டு
பொலிவான கண்விழிகள் பெருத்துத் தோன்றும்
ஆமேதான் அசக்தியு மாயாசங் கண்டு
அவர்நடையும் தளர்ந்து பெருமூச்சுக் கண்டு
மூமேதான் மூர்ச்சையுடன் மார் துடித்து
முடிவான கணுக்காலில் வீக்க முண்டாய்
தூமேதா விருதயத்தின் வதனந் தன்னிற்
துருத்திநிகர் சத்தமது கேட்கும் பாரே. (24)

## மிருத்திகா பாண்டு.

பாரேநீ மலமூத்திரம் யாவு மய்யா
பண்பாக மஞ்சநிறத் திறங்கு மப்பா
கூறேநீ மிருத்திகா பாண்டின் நேர்மை
குணமுடனே சொல்லுகிறேன் குறிப்பாய்க் கேளு
தேரேநீ தித்திப்பு மண்ணுங் கூட
திரமான துவர்மண்ணுஞ் சவுட்டு மண்ணும்
தீராகத் தினந்தினமுந் தின்று வந்தால்
தீரமான மிருத்திகா பாண்டுண் டாமே. (25)

உண்டாகும் போதினிலே தேக நேர்மை
உறுதியாய் முன்சொன்ன குணத்தைக் காட்டும்
பண்டாக இதுதீர மருந்து சொல்வேன்
பகுத்ததொரு பாவனநல் லோகமுந் தான்
நண்டான லகுவிரோ சனமு மாகும்
நலமான தேகத்தி லெல்லாம் வீங்கும்
துண்டான கிருமிமலம் ரத்தங் கோழை
துலங்குமடா இந்நோய்க்குக் குணந்தான் பாரே. (26)

## அசாத்திய பாண்டு.

தானுன அசாத்தியத்தின் பாண்டி னேர்மை
தானறியச் சொல்லுகிறேன் தரணி யோர்க்கு
ஊனுன தேகத்தில் இருமல் பேதி
உறுதியாய் வாந்தியுடன் விக்கல் காணும்
தேனுன தோற்றமடா மஞ்சள் காட்டும்
தெளிவான நகக்கண்களு மஞ்ச ளாகி
வீணுகப் போகுமடா மருந்து செய்தால்
விண்ணுலகிற் செல்வான்பார் விதிதீர்ந் தோனே. (27)

## விச பாண்டு.

விதிதீர்ந்த ரோகமடா விடப்பாண் டய்யா
விபரமாய்ச் சொல்லுகிறேன் விசிதங் கேளாய்
மதிபோன்ற தேகமது வெளுத்துக் காட்டும்
மதிகெட்டு மிகுசுரமுந் தோடமுண் டாய்ச்
சதிசெய்யும் வாந்திவிக்கல் இருமல் கண்டு
சதிராக வரோசிகத்தை யுண்டு செய்து
அதிகமாய்த் தேகத்தில் வீக்கமுண் டாய்
அன்னத்தைத் தள்ளிவிடு மவனி யோர்க்கே. (28)

அவனியோர் தனக்கிவ்வித ரோகங் காணில்
அப்பனே விடபாண்டு தீர வென்ருல்
புவனமதில் வசந்தகுசுமா கரத் தால்
குணங்காட்டு மென்றுநீ குறிப்பாய்ச் சொல்லு
கவனமுடன் மற்றையவாம் பாண்டுக் கெல்லாம்
கடினமாய் அயமெழுகோ டன்ன பேதி
சிவகரந்தை லேகியமு மண்டூர மீய்ந்தால்
சிறப்புடனே தீர்ந்துவிடுந் திண்ணந் தானே. (29)

## பீலிகை.

திண்ணமாம் பீலிகா நோயின் நேர்மை
தேகத்தில் காணுகின்ற விதத்தைக் கேளு
உண்மையாய்ச் சொல்லுகிறேன் மேடு பள்ளம்
உறுதியாய் வாய்க்கால்கள் இவைகளேத் தான்

வன்மையாய் வேகமாய்த் தாண்ட லாலும்
வகையான பேதியவிழ்தங் கொண்ட போது
தண்மையுடன் அதிகநடை நடக்க லாலும்
சாலவே மிகப்புசித்து வேகமாயோடு வோர்க்கும். (30)

ஓடுகின்ற வேளையிலே இருதயத் தின்
இடப்பக்கம் பிலிகந்தான் குலுங்கு மய்யா
வாடுகின்ற காலமதில் அகத் தீனி
வளமில்லா வரச்சோரு டெல்லாந் தின்று
சாடுகின்ற பகல்தூக்கம் மிகவுஞ் செய்து
தகாததொரு நடக்கைமுதல் யாவுஞ்செய் தால்
சாடிவிடும் பிலிகா ரோக மப்பா
சாண்வயிற்றிற் கட்டிபோற் காணும் பாரே. (31)

காணுமடா உதரரோகத்தின் தன்மை போல
காட்டுமடா குறிகளெல்லாம் கண்டிப் பாகத்
தோணுமடா வயிற்றினில் வாய்வது நாளும்
துள்ளியுப்பி வேதனையே செய்யும் பாரு
காணமற் போகவே மருந்தைச்சொல் வேன்
காய்ச்சுப்பு லவுங்கேசுர மாத்திரை யோடு
கோணுத யவச்சாரக் குழம்பு மியக்
குணமாகும் என்றுநீ தெரிந்து கொள்ளே. (32)

## நீர்க்கோவைக் குணம்.

தெரிந்து கொள்வாய் நீர்க்கோவை ரோகந்தன்னை
திரமாகச் சொல்லுகிறேன் நன்ருய்க் கேளு
அறிந்து கொள்வாய் தேகத்தின்சவ்வி லேனும்
ஆக்கையின் தோலடி யிருக்கும்சவ்வி லேனும்
பரந்துநீர் ரத்தநீர் சேர்வ தாலே
பாரிலது நீர்க்கோவை யென்று பேராய்த்
துரந்துமே வெளியாகத் தோற்ற லாலே
தொல்லுலகில் அநேகவிதப் பேருமாச் சே. (33)

ஆச்சப்பா சிரசில்தான் நீரேகண் டால்
அப்பனே அதற்கு சலமஸ்தக மென்பார்
பேச்சப்பா மார்பில் நீரேற்றங் கண்டால்
புகழான உரோசல ரோகமென் பார்

வாச்சப்பா வயிற்றில்தான் நீரேகண் டால்
வளமான மகோதரம் என்றே சொல்வார்
ஓச்சப்பா ஓரிடத்தில்த் தானிருந் தால்
உறுதியாய்ச் சோகையென்று சொல்வார் பாரே. (34)

பாரேநீ அண்டத்தில் நீரேதங் கில்
பளபளத்த நீரண்டம் என்று பேராம்
கூரேநீ சர்வாங்க முற்றுங்கண் டால்
குடிகெடுத்த நீர்க்கோவை வந்ததென் பார்
ஊரேநீ இந்தவகை ரோகங் கட்கே
உடலிலுள்ள நீர்ச்சுரப்பு அதிகமா னல்
காரேநீ கிறுகிறுப்பு அதிகமானு லும்
கண்டிப்பாய் இவ்ரோகங் காணும் பாரே. (35)

காணுமடா சொறிசிரங்கு சருமரோ கம்
கதியுடனே உள்ளடங்கிப் போவதா லும்
பூணுமடா இரத்தத்தின் பொருமலா லும்
புகலான இரத்தத்தோட்டங் குறைதலா லும்
தோணுமடா நாளகத்தில் இரத்தங் கன்றி
துடிப்புடனே தான்கெட்டுப் போகு மப்பா
வீணுகப் போவதினுல் இந்த ரோகம்
விதிப்படிக்குக் காணுகின்ற செய்கை கேளே. (36)

கேளடா நாடியது விரைவாய்ச் சென்று
குறிப்புடனே மூத்திரமும் வியர்வை குன்றும்
பாழான தாகியது விஞ்சுமா கில்
பண்புடனே நாடிதுடி அடங்கிப் போகும்
வாளான இவ்விரோகந் தீரவென் றுல்
வளமான மூத்திரத்தைப் பெருக்கச் செய்வாய்
தேளான பேதிக்கும் கொடுத்து வந்தால்
தெளிந்துவிடு மண்டூர மீய்ந்தால் தானே. (38)

## குன்மம்.

தானுன குன்மவகை எட்டு மிந்தத்
தாரணியி லுண்டான விதத்தைக் கேளாய்
ஊனுன அசீரணத் தாலிந்த ரோகம்
உற்பத்தியாகு மென்றே உறுதி சொல்லு

தேனுக உண்கின்ற அன்னமுற் றும்
    தெளிவான அன்னவா சயத்திற்ரு னும்
மானுன சிறுகுட லிற்ருனு மப்பா
    மகிழ்வுடனே சீரணங்கள் ஆகுந் தானே. (38)

ஆகுமடா சடராக்கினி வேகங் கூட
    அருந்து நீரோடு கரியுப்பு நீரும்
போகுமடா புளிப்புடனே ரத்தநீ ரும்
    பொங்கமுடன் உமழ்நீரும் இருக்கு தய்யா
யேகுமடா சடராக்கினிக் குணமே தென்னில்
    இதமாகத் தீனிப்பைக் குள்ளே செல்லும்
பாகமடா பதார்த்தத்தின் குணத்தைப் பற்றிப்
    பண்பாக நூதனமாய்ச் செய்யும் பாரே. (39)

செய்கின்ற மூளை நுரையீர லப்பா
    செயலான உதாத்திற் கருப்பைக் குள்ளே
உய்கின்ற எதற்கேனும் விகற்பம் வந்தால்
    உறுதியாய் அக்கினி மாந்தத்தைத் தந்து
கொய்கின்ற வாந்தியுடன் பேதி யாகி
    குடிகெடுத்த சுரந்தன்னை விசிறச் செய்து
கைகால்கள் முழுவதுமே அயர்ந்து போகும்
    கண்டிப்பாய்க் குன்மமது காணுந் தானே. (40)

குன்மமது வருகின்ற வேளைதன் னில்
    குணமான சடராக்கினி குறைந்து போக
அன்னமது மெதுவாகத் தகனமா கில்
    அப்போது மேல்வயிற்றின் இடது பக்கம்
சின்மயமாய் வலிகண்டு வேதனைகள் செய்து
    சிறப்பான குலைவயிற்றில் புடைப்புக் காணும்
வன்மமுள்ள வாய்வதுதான் மேலே நோக்கி
    வகையான புளியேப்பம் உண்டாம் பாரே. (41)

உண்டான போதுமலங் கட்டிப் போகும்
    உத்தமனே மார்த்துடிப்புக் காணும் பின்னுல்
நண்டான நாடிதுடி ஒட்ட மாகி
    நலமான மனதுதான் தத்தளிக்கு மப்பா

திண்டான தீனிப்பை தன்னி லப்பா
திரமான வாய்வுதான் சேர்ந்தால் கேளு
சுண்டான சுவாசமது முட்டல் காணும்
சொல்லொணுத் துயரத்தை எண்ணு வாரே (42)

என்னுவதற் கின்னமொரு விதந்தா னுண்டு
இதமாகச் சொல்லுகிறேன் இன்ப மாக
நண்ணிவரும் அன்னு சயத்தி லப்பா
நலங்கெட்ட பின்புரணங் காணும் பாரு
குண்ணிதமாய்க் குலேவயிற்றில் வேதை செய்யும்
குடிகெடுத்த புண்ணதுதான் இருக்கு மப்பா
நண்ணியதைத் தானறிந்து பார்ப்ப வற்கு
நலமான குறியதனைச் சொல்லக் கேளே. (43)

கேளடா தீனிப்பை தன்னிற் ருனும்
குடிகெடுத்த வியாதியது கண்டதா னல்
நாளடா போசனந்தான் செய்த பின்பு
நலமான வேதைதா னதிகமா கும்
மூளடா அதன்தொழில் பேதப்பட் டால்
முக்கியமாய்ப் போசனத்தால் வேதை தீரும்
வாளடா விரணத்தில் வேதைகண் டால்
வளமாக எப்போதும் இருக்கும் பாரே. (44)

பாரு,நீ யாகாரமுள் ளேசென் ருல்
பாரித்து நோயதுதா னதிகமா கும்
கூறேநீ இந்தவிதம் தெரிந்து கொண்டு
குறிப்பாகச் சொல்லுவாய் ரோகந் தன்னே
சீரான இடுப்புவலி கைகால் நோவு
சிரோபாரம் குலேஎரிவு பிரமைகா ணும்
தீராத தீனிப்பை முறுக்குண் டாகில்
திரமான குன்மமென்று சொல்லு வாயே. (45)

சொல்லுவேன் இன்னமொரு பாகந் தன்னேச்
சூட்சமமாய் நீயறிய யுரைப்பேன் கேளு
சொல்லுகிறேன் குன்மத்தின் வேதைதா னும்
குணமாக நான்குவிதம் உண்டா மப்பா

வெல்லுவேன் வெறுவயிற்றில் நோவுகண் டால்
விருப்பமுடன் போசனந்தான் செய்யத் தீரும்
சல்லியமாய்ச் சாப்பிட்ட உடனே நோவு
தான்வருகும் சிலருக்குத் தன்மை தானே. (46)

தானுக அன்னமது சீரணிக்குந் தனே
தான்நோவு சிலருக்கிங் கிருப்ப துண்டு
மானுக மாந்தருக்கு வாந்தியா னல்
மகத்தான நோயுடனே தீருந் தீரும்
தோனுன ஆகாரம் கொண்ட பின்பு
தொல்லுலகில் சிலருக்குச் சொல்லக் கேளு
ஊனுன நாழியீரைந் துக்கப் பால்
உண்டாகும் வயிற்றுநோய் உள்ள தாமே. (47)

ஆமேதா னின்னமொன்று சொல்லக் கேளு
அப்பனே காலபேதத் தாற்கா ணும்
தாமேதான் அடிவயிற்றைச் சுருட்டிப் பற்றித்
தாரணியில் மாதருக்குக் காணும் நோவாம்
போமேதான் வாந்தியுட காரணத்தைச் சொல்வேன்
புகழான தீபனந் தனக்கு மப்பா
கோமேதான் கொதிப்புச் சுரமதிர்ச்சி கண்டு
குறிப்பாக வாந்தியது ஆகும் பாரே. (48)

## விக்கல்.

குறிப்பாக விக்கல துண்டாகு நேர்மை
கூறுகிறேன் நீயறியக் குணமாய்க் கேளு
சிறப்பான ஈரல்தாங்கிச் சதைக்கு மப்பா
சீரான தீனிப்பை தனக்கு மப்போ
தெறிப்பாக வலிகாணப் படுவ தாலே
திரமான விக்கலது தானே காணும்
விரிப்பான தீனிப்பையிற் புளிப்புச் சேரில்
விதவிதமாய் விக்கல்தான் விளைக்கும் பாரே. (49)

## வயிற்றுப் பொருமல்.

விளைக்கின்ற வயிற்பொருமல் வருகும் நேர்மை
விள்ளுகிறேன் பெருங்குடலில் வாய்வு சேர்ந்து

முளைக்கின்ற வாய்வதுதான் எழும்பி யப்போ
முக்கியமாய் வயிற்று நோயிரைச்சல் கண்டு
வளைக்கின்ற வயிறதுதான் விம்மி மெத்த
வருத்தமாய்த் தான்காணு மப்போ தப்பா
நுளைந்திருக்குங் குடலுக்கு வலிமை கெட்டு
நேராக இக்குணங்கள் காணும் பாரே. (50)

காணுதற்குக் காரணங்கள் சொல்லக் கேளாய்
கதிப்பாகப் போசனத்தை யருந்தலா லும்
ஊணுதற்கிங் உபயோக மற்றுப் போன
ஊன்கறிகள் மிகவுமதைக் கொள்ளலா லும்
பேணுதற்குச் செய்துவரும் பதார்த்தந் தன்னைப்
பெலமாக மென்றுமதைப் புசிக்காததா லும்
கோணிவிடு மதுபான மருந்தலா லும்
கொடுவிசாரங் கொண்டுதுய ரடைவா ரன்றே (51)

அடைவுடனே புகைச்சுருட்டும் பொடிபுகையிலை யும்
அதிகமாய்க் கொள்ளுதலா லப்பா கேளே
மடையனைப்போல் சோம்பலாய் இருந்ததா லும்
மானிலத்தில் அதிகமாய் உழைத்தலா லும்
கடினமாய் வாசிப்பில் வியாபித்தலா லும்
கனமான மனஊக்கங் கொள்ளலா லும்
கெடியாக இந்நோய்கள் அணுகு மென்று
கேட்டோர்கள் தனக்குமெத்த உறுதி சொல்லே. (52)

உறுதியாய்த் தீர்வதற்கு மருந்து கேளு
உத்தமனே கரியுப்புச் செந்தூரஞ் செய்து
பருதியாய்ப் பஞ்சாக்கினிச் சூரணத் தில்
பக்குவமாய்த் தானீந்தால் பறக்கு மய்யா
குருதியாய்க் குன்மத்தின் குடோரி செய்து
குறிப்புடனே ஐந்துநா ளீய்ந்தாயா னல்
அறுதியாய்ப் போகுமடா அட்ட குன்மம்
அலறியே ஓடுமம் புவியிற் பாரே. (53)

## சய ரோகம்.

சயரோகம் உண்டாகும் நேர்மை தன்னைச்
சாற்றுகிறேன் மாநிலத்தில் மாந்தர்க் கய்யா

கயரோகம் வரும்போது ரத்தந்தன் னில்
காணுகிற சிறுகிருமி சுவாசப்பை யின்
மயமான கண்ணறைக்கு மத்திமத்தி லும்
மகத்தான அவ்வறைக் குள்ளுஞ் சென்று
சயமான சுவாசப்பை கிளைகளிலுஞ் சென்றால்
செயலான சயரோகம் உண்டாம் பாரே. (54)

உண்டாகும் வேளைதன்னில் கிரந்தி அய்யா
உத்தமனே நாளுக்குநாள் பெரிதே யாகி
பண்டாகி முதலில்அது உறுதி யாகிப்
பாரித்து நாள்சென்று லப்பாகே ளாய்
சிண்டிக்குங் கிரந்தியில் சுற்றிலுந் தான்
சிறந்துப்பு சத்தில்தா பனமுங் கண்டு
கண்டிதமாய் சீக்கொண்டு கிரந்தி யாகிக்
கதித்துடைந்து சுவாசக்குழல் களுக்குட் செல்லும். (55)

சென்றுபின்பு கபத்துடனே வெளியே வந்து
சிறப்பான கிரந்திகளில் குழியுண் டாகி
அன்றுமுதலக் குழியைச் சுற்றியே தான்
அழகான நூதனக் கிரந்தியுண் டாய்ப்
பன்றிபோல் அதைப்பெருக்கச் செய்து விட்டு
பண்பான புப்புசத்தில் பாஸ்தானத் தில்
குன்றியே பண்ணுமது கிரந்தியுண் டாய்
குறிப்பாக உப்புசத்தைக் கெடுக்குந் தானே. (56)

கெடுக்கின்ற வேளைதன்னில் குறியைக்கே ளாய்
கெடியான இருமலுடன் ரெத்தகா சம்
நடுக்குகின்ற சயகாசம் அக்கினி மந்தம்
நலமான நாடியது விரைந்தே யோடும்
படுக்கின்ற சுரமுடனே கஷ்டசுவா சம்
புண்பாகத் திரேகத்தில் சடவுகா ணும்
விடுக்கின்ற குரல்கம்மல் வியர்வை பேதி
மிகுந்திரு கண்கனத்துச் சிவக்கும் பாரே. (57)

பாரேநீ மாதருக்கு இவ்விரோகம் வந்தால்
பண்பான சூதகத்தை நிறுத்து மய்யா
கூறேநீ சிலநாட்கள் சென்ற பின்பு
குறிப்பாக சொற்பசுரம் பலவீனங் கள்

தேரேநீ முகந்தன்னில் மினுமினுப்புண் டாம்
தெளிவாக மாலைதனிற் சுரமுண்டா கும்
காரேநீ காலையில்தான் வியர்வையுண் டாய்
கனமான சோகமது காணும் பாரே. (58)

காணுமடா இன்னுமொரு குறியைக் கேளு
கனமாகத் தோன்றிச் சேற்பனமுங்கா ணும்
பூணுகின்ற விரலதினுல் தட்டிப்பார்த் தால்
பொங்கமுடன் கெட்டியாய்ச் சத்தம் கேட்கும்
பேணிவந்த ஆரம்பம் தனிலேசுவா சம்
பிரியமுடன் பலமான சத்தம்காட் டும்
காணுகின்ற ரோகமது மீறிநின் ருல்
கதிப்பாகக் குடுகுடெனக் காட்டும் பாரே. (59)

காட்டுகின்ற திரேகத்தின் எடைதான் மெத்தக்
கதிப்பாகக் குறையுமடா நாளுக்குநாள் தான்
ஊட்டுகின்ற இரண்டாண்டு வரையிலுந் தான்
உள்ளபடி போராடும் உயிருக்கே தான்
பூட்டிவிடும் சிலருக்கு மூன்ருந்திங் கள்
புகழான மரணமது உண்டா மப்யா
ஆட்டமுடன் இதற்குத்தான் மருந்துகே ளாய்
அப்பனே அயவெள்ளை யப்பிரக மாமே. (60)

ஆமேதான் தாம்பிரத்தின் சுன்னமீய்ந் தால்
அப்பனே மூன்று தினத்தில்தீரும் பார்
போமேதான் தாளகத்தின் சுன்னமீய்ந் தால்
புகழான ஐந்துநாள் பத்தியம் காரு
பாமேவும் சிவபூசை நந்தாவன மும்
பக்குவமாய் சத்திரங்கள் கட்டி வைத்து
பூமேவும் அன்னதானங் கள்செய் தால்
பொறிவிட்டு ரோகமெல்லாம் பறக்கும் பாரே. (61)

## காசம்.

உரைக்கிறேன் காசரோகத் தின்நேர் மை
உட்பரிச நரம்பையது பற்றிக்கா ணும்
மரைக்கான சுவாசத்தின் குழல்கள்தன் னில்
மருங்கியதோர் சிறுகிளைகள் பிருவமாய்ச் சுண்டி

முரைப்பதினு லிக்கொடிய ரோக மப்பா
முறையாகக் காணுமடா மாந்தர்க்கே தான்
சருக்கென்று உடலுக்குக் குணத்தைக் கேளாய்
தலைவலியால் நித்திரையும் கெட்டுப் போமே. (62)

கெட்டபின்பு மூச்சடைப்புக் கொஞ்சமுண் டாய்க்
குபீரென்று மார்பினிலே பாண்டே யாகி
திட்டென்று ரோகியவன் எழுந்து மெத்தத்
திண்டாடி சுவாசம்விட அழுவான் பாரே
பட்டவுடன் தலைகவிழ்ந்து கரத்தை வாங்கிப்
பாரினிலே கைகளைத்தான் தலைமேல் வைத்து
சட்டமுடன் வாய்திறந்து இருப்பானய்யா
சதிரான தொண்டைதனில் சத்தம் பாரே. (63)

சத்தமடா கருகுரென்று கேட்கும் மெத்தச்
சாதகமாய் நாடியது மெதுவாய்ப் போகும்
சித்தமுடன் கண்ணிரண்டும் உற்றுப் பார்த்து
சிறப்பான முகமதனில் கவலை கொள்ளும்
தத்துவத்தி னதிகமடா தணிந்து காணும்
தாளாத தால்வியர்வை கிளம்ப லுண்டு
உத்திரத்த வியாதியது நீங்கிப்போ னல்
உரமதனில் கபம்நீங்கி வெளியாங் காணே. (64)

வெளியாகு மிந்தநோய் தினமு மேனும்
விதிப்படியே வாரத்துக் கொரு நாளேனும்
வழியாக மாதத்துக் கொடுக்கா லேனும்
வன்மையுடன் வருடத்துக் கொருக்காலே னும்
தெளிவாகக் காணுமடா திரேகந் தன்னில்
தீங்கில்லை இதனலே கண்டு கொள்வாய்
பழிப்பாக இத்துடனே வேறு நோயும்
பாரித்துக் கண்டக்கால் இறப்பான் பாரே. (65)

இறக்காமல் பிழைத்திடவே மருந்து கேளாய்
என்மகனே முதலில்நீ வாந்திக் கீய்ந்து
மறக்காமல் மலத்தில்துர் மலத்தை நீக்கி
மருவியே புகைச்சுருட்டுக் கொள்ளச் செய்வாய்

துறக்காத மத்தனிலைச் சுருட்டுத்தந் தால்
தூலத்தின் ரோகந்தான் தவிர்ந்துபோ கும்
கரைக்காத வெடியுப்பைக் கரைத்து அப்பா
காகிதத்தில் நனைத்தப்பா காயப் போடே. (66)

போட்டபின்பு அதைஎடுத்துச் சுருட்டித்தந் தால்
பொங்கமுட னிளைப்புத்தான் தணியும் பாரே
ஆட்டிவிடுமா தோடைக் கியாழமே னும்
அன்பாக வசம்பினிட கியாழமே னும்
காட்டிவிடு காப்பிவிரத் தண்ணீரே னும்
கனமான கற்பூரம் காயமே னும்
பூட்டிவிட்டால் ரோகமது தணிந்துபோ கும்
புவியதனில் சஞ்சாரம் செய்வான் பாரே. (67)

## தமரக வாயு.

சஞ்சரிக்கும் தமரகத்தின் வாயு கேளாய்
சாதகமாய் இருதயத்தைப் பற்றிக்கா ணும்
நெஞ்சடைக்கும் இக்கொடிய ரோக மப்பா
நிலைத்துவருந் தன்மைதனைச் சொல்வேன் பாராய்
பஞ்சான இரத்தமுறை ஸ்தானந் தன்னில்
பரிவாக நின்று வேதனைகள் செய்து
நஞ்சான மார்புமுதுகு கழுத்துத் தன்னில்
நடப்பது போலிருக்கும் தீநாட்டந் தானே. (68)

## இரத்த காசம்.

நாட்டமடா இரத்தகாச ரோக நேர்மை
நரருக்குத் தோன்றுகின்ற தன்மைகே ளாய்
பூட்டகமாய்க் குரவளையின் குரலில் நின்றும்
புனிதமுடன் சுவாசக்குழற் குள்ளே நின்று
தாட்டிகமாய் புப்புசத்திற் குள்ளே நின்றும்
தான்வாயில் ரத்தமது வந்ததா னல்
சாட்டிகமாய்ச் சிலவேளை வெளித்தோன்றா மல்
சடலத்திற் புப்புசத்தில் நிற்கும் தானே. (69)

தானகை அவ்வேளை இடது பக்கம்
தானிருக்கும் புப்புசத்திலி ரத்தம் ஒடி
ஊனுன சூதகந் தானதிகமா னல்
உறுதியா யிந்த நோவுண்டா மய்யா
தேனுன இருமலது உண்டாம் போது
தெளிவான பருவத்தி லேறலா லும்
கோனுன இந்த நோயுண்டா மென்று
குறிப்பாகச் சொல்லுகிறேன் குறியைக் கேளு. (70)

கேளடா குறியதனைச் சொல்லக்கே ளாய்
கெடியான மார்புதன்னை வேதனையே செய்யும்
நாளடா வாயடைப் பாயாசங்கா னும்
நலமான முகம்சிவப்பு வாயி லுப்பு
வாளடா வறட்சியுட னிருமல்கா னும்
வளமான இருதயந்தான் துடிப்புத்தோன் றும்
நீளடா மாரினுட எலும்பின் கீழே
நிச்சயமாய் உட்டணங்கள் உண்டாம் பாரே. (71)

பாரய்யா இக்குறிகள் ஒன்று மின்றி
பரிவுடனே இரத்தந்தான் கபத்தில்கீத் தாய்
கூறய்யா துளித்துளியாக் கட்டி யாகக்
குறிப்புடனே விழுகுமடா மாந்தர்க்கே தான்
வாரய்யா ஆழாக்குப் படிகண க்கு
பவளமாய் ரத்தந்தான் விழுகு மப்பா
தேரய்யா இருமலுடன் தும்மும் போது
தெளிவுடனே இரத்தந்தான் வருகுங் காணே. (72)

காணேநீ அதிகமாய்க் கண்ட தானல்
கதிப்பாக வாந்தியுடன் வெளியே தோன்றும்
பூணுவாய் அதைநிறுத்த மருந்து கேளாய்
புனிதமுடன் துவர்மருந்து செய்வா யப்பா
பேணுவாய் காரமில்லாப் போசனமுஞ் செய்து
பொல்லாத புளிபுகையுங் காரந் தள்ளி
காணுவாய் ஊன்கறிகள் அறிந்துகொண் டால்
உத்தமனே தீருமடா உறுதி காணே. (73)

## இரத்த வாந்தி.

உறுதியாய் இரத்தவாந்தி ரோக நேர்மை
உரைக்கிறேன் அதனுடைய உண்மை கேளாய்
பருதியாய் அன்னவா சயத்தி னின்று
பக்குவமாய்த் தோன்றுகின்ற இரத்தத் திற்கு
அறுதியாய் இரத்தவாந்தி யென்றும் பேராம்
அப்பனே அதிலிருந்து பெலமாய்த் தோன்றும்
குருதியாய் இதுதானும் இருக்கு தய்யா
கொற்றவனே குன்றுபோல் குறியைக் கேளே. (74)

கேளப்பா சடராக்கினியிற் புளிப்புள்ள தால்
கெடியான இரத்தந்தான் கறுத்திருக் கும்
வாளப்பா இரத்தாசயந் தன்னிலே தான்
வளமான மூச்சடைப்புத் தொண்டைக் குத்தல்
நீளப்பா மார்பில் சங்கடமும் கண்டு
நிசமான இரத்தந்தான் பின்னே காணும்
தேளப்பா கொட்டுதல்போல் இருமலுண் டாய்
சிறந்திரத்தம் வாய்நிறைய வருகும் பாரே. (75)

நிறைந்தரத்தம் செவந்திருக்கும் சேட்மத் தோடே
நிச்சயமாய் அதன் காரணத்தைக் கேளு
மறந்ததுபோல் தற்செயலாய்க் காண்ப துண்டு
மகத்தான மாதருக்குச் சூதகமே நின்றால்
அறைந்தோமே அவருக்குக் காண்ப துண்டு
அப்பனே இருதயமீரலில் நோய் தோன்றும்
சிறந்தஇரத்தம் கறுத்திருக்கும் கரியைப் போல
திறமாக உண்டாகும்முன் குணத்தைக் கேளே. (76)

குணமான வாந்திதான் உண்டாம் முன்னே
குவலயத்தில் பிடிப்புடனே வலியுண் டாகி
சினத்துக்குள் வேதனையு மிகவும் கண்டு
சிறந்தபுத்தி யேக்கமுண்டாய் மூர்ச்சை காணும்
மனமற்ற இரத்தத்தை ரோகிகண் டால்
மகத்தான பிரமைகொண்டு போவான் பாரு
பணப்பைபோல் சிலவேளை இரத்த மய்யா
பண்பாகு மதுவழியாய்ச் செல்லும் தானே. (77)

செல்லுகின்ற இரத்தம்தான் கருமை யாகிச்
சிலவேளை தாரைபோல் கருத்தே தோன்றும்
அல்லல்செயும் இரத்தம்தான் குடல்நீ ரோடு
அணுகாம லிருந்தக்கால் அப்பா கேளாய்
சொல்லுகின்ற இரத்தமது கருத்தி ராது
குடிகெடுத்த ஈரல்குடல் தாபன மப்பா
தொல்லைசெய்யும் சீதபேதி இதனால் கண்டு
தோற்றுமடா இந்தநோய் தோனுந் தானே. (78)

தோன்றின தோரின்நோய் தான்காண வேண்டிச்
சொல்லுகிறேன் மருந்துவகை நன்றாய்ப் பாரு
ஊன்றிச்செய் எலுமிச்சம் பழத்தின் சாறும்
உற்றதொரு புளிப்பாக்கிச் சலங்கள் தானும்
மேன்மையுடன் குளிர்ச்சியாம் அவுழ்தமிய்ந் தால்
மெதுவாக சவுக்கியங்க ளுண்டாம் பாரு
ஊன்போல் வாளைத்தான் முன்னு லப்பா
உறுதியாய் லங்கணமாய்ப் போடு வாயே. (79)

## இரத்தப் பிரமேகம்.

போடுவோம் இரத்தப் பிரமேகந் தன்னை
பொங்கமுடன் சொல்லுகிறேன் பண்பாய்க் கேளு
மூடுவாய் மூத்திரக்குண்டிக் காயிலே னும்
முக்கியமாய் மூத்திரத்தின் பையிலே னும்
நாடுவாய் மூத்திரத்தின் குழலிலே னும்
நலமான கல்லுத்தா லிருப்ப தாலே
தேடுவா யிடுப்பின்மேல் அடிபடுவ தாலும்
தெளிவான உஷ்ணநோயால் வருகுந் தானே. (80)

தானான மாதர்கள்தான் விலகும் போது
தக்கரத்தம் மூத்திரத்தோ டுண்டாகு மப்பா
தேனான இரத்தமுடன் சேர்ந்த மூத்திரம்
தெளிவற்றுக் கலங்கலாய் கருத்துக் காணும்
மானான குண்டிக்காயி லிருந்து வந்தால்
மகத்தான மூத்திரத்தில் ரத்தங் காணும்
ஊனான மூத்திரப்பையி லிருந்து காணில்
உத்தமனே முதல்மூத்திரம் தெளிவாயிறங்குந்தானே (81)

தெளிவான மூத்திரந் தானுனை பின்பு
தேனிறங்கும் வகைபோலே இரத்தங் காணும்
தெளிவாக அதனுடனே சீயுங் காணும்
உத்தமனே நீர்த்தாரைதனில் இரத்த முண்டாய்
முனைப்பாக இவர்களுக்கு மருந்தே தென்னில்
முக்கியமாய் துவர்மருந்து உள்ளுக் கீய்ந்து
அணியான புண்ணுக்குத் துவர்நீர் அடிக்க
அப்பனே சவுக்கியமது ஆகும் பாரே. (82)

## பெரும்பாடு.

பாரேநீ பெரும்பாடுவரும் வகையைக் கேளாய்
பக்குவமாய் வருகின்ற கண்ட மாலை
ஊரேநீ மூத்திரக் குண்டிக்காயின் ரோகம்
உத்தமனே பிலிகா ரோகந் தானும்
தேரேநீ நாள்பட்ட பாண்டு ரோகம்
தெளிவாக இந்தரோகம் தன்னு லையா
சீரேநீ சினைப்பைக்கும் கருப்பைக்கு மப்பா
சிறப்பாக அதிகாரத்த மேறுங் காணே. (83)

காணுவாய் சூதகம் வெளியாகு மப்பா
கருப்பைதான் அழலைகொண்டு போவ தாலே
பூணுவாய் சம்போக மதிகத்தா லும்
பொல்லாத புத்துகளாற் கட்டியா லும்
பேணுவாய் பெரும்பா டுண்டா மென்று
பெலமாகத் தான்சொல்வாய் உலகத்தோர் க்கு
காணுவாய் அப்போது கருப்பை நின்று
கருவான இரத்தந்தான் வருகுந் தானே. (84)

வருகின்ற இரத்தந்தான் பெரும்பாடென் பார்
வன்மையுள்ள இரத்தந்தான் அதிகா ரல்
தெரிகின்ற நாளினிலே நின்றிடா மல்
திரேகத்தில் சிலநாட்கள் வடிந்தாலுந் தான்
குறிகண்டு அதற்குநீ மருந்துகே ளாய்
கொற்றவனே துவர்மருந்து வங்கமீந் தால்
பரிகொண்டு நடப்பான்போல் ரோக மப்பா
பாரைவிட்டுப் போகுமெனப் பகர்ந்தோம் பாரே. (85)

## காசம்.

பாரேநீ காசரோ கத்தின் நேர்மை
பக்குவமாய்ச் சொல்லுகிறேன் பண்பாய்க் கேளு
ஊரேநீ சுவாசத்தின் குழல்கடன் னில்
உற்பவித்த வியாதிக்குக் காசமென் பார்
கூறேநீ புப்புசத்தின் வியாதிக் குள்ளே
குறிப்பாக வெப்போதுங் காணு மப்பா
தீரேநீ இதுக்குள்ளே ரண்டுவித முண்டு
தெளிவான தீவிரம் சாத்மீக மாமே. (86)

ஆமேதான் தீவிர காசரோ கம்
அப்பனே சொல்லுகிறேன் அறிந்து பாரு
போமேதான் சுரமுடனே மார்பில் குத்தல்
பொங்கமுடன் நுரையதிலே கருகுர்ச் சத்தம்
நாமேதான் மேல்சுவாசம் இருமல் கண்டு
நலமான கபமதுதான் நார்போல் தோன்றும்
தூமேதான் துர்ப்பலமும் அதிக மாகி
சுகமாக நாடியது விரைவாய்ப் போமே. (87)

விரைவான நாக்குத்தான் அழுக்க டைந்து
விருப்பமில்லாத் தலைவலி ஆயாசங் கண்டு
மறைவில்லாக் குமட்டலுடன் கபமு மாகி
மகத்தான உறக்கமுடன் விக்கல் காணும்
சிறுப்பமுடன் சுவாசக்குழல் பொருமி யெய்த்தால்
திறமான வருத்தமது அதிகந் தானே
முறுக்கமுள்ள சிறியகுடல் தனக்கே கண்டால்
முக்கியமாய் அய்யமது முண்டாம் பாரே. (88)

உண்டாகும் குழந்தைக்கும் கிழவருக் கும்
உறுதியுள்ள சிறுகுழலில் வியாதிகா ணும்
பண்டான வாலிபர்க்குக் காணு தய்யா
பருத்ததொரு புப்புசத்தில் இரண்டு பக்கம்
அண்டாத புப்புசத்தின் மேற்பக்க மேனும்
அப்பனே புப்புசத்தின் மேற்பக்க மேனும்
திண்டாக அதினுடைய குணத்தைக் கேளாய்
திறமாகச் சுவாசகஷ்டம் மூச்சடைப் பாமே. (89)

ஆமேதான் திரேகமதுநீல வர்ணங்காட் டும்
அப்பனே ஓயாத இருமல்தோன் றும்
பூமேதான் புரட்டலோடு ரோகி தன்னை
துவளாகப் படுக்கவே மிடங்கொ டாது
நாமேதான் சதாகாலம் உட்கார்ந்து கொள்வான்
நலமான மூத்திரம் சிவந்து காணும்
காமேதான் நாடியது பெலனுங் கெட்டு
கண்டிப்பாய்த் தீவிரமாய் நடக்குந் தானே. (90)

தானான பாதம்-கால் தனிலே யப்பா
தக்கதொரு வீக்கந்தான் காணு மப்பா
மானான அசாத்தியங்கள் உண்டாம் வேளை
மயக்கமொரு பிதற்றலுட னுறக்கமுண் டாம்
தேனான பிராணந்தான் போகு மென்று
செப்பிடுவாய் ரோகிதனைக் கண்ட போது
ஊனான வியாதியடா ஆரம்பத் தில்
உள்ளபடி யிரண்டுவிதச் சத்த மாமே (91)

சத்தமது குழல்தன்னில் ஓடும் போது
சதிரான அந்நீருடனே காத்து மோதும்
மத்ததொரு குமிழ்களுண் டாகிப் பின்னே
மகிழ்வுடனே வுடைகிறதும் இப்படியே யாகி
சுத்தமுடன் போவதினால் சத்தமுண் டாகி
சதிரான பெருங்குழலில் பெருத்துக் காட்டும்
சித்தமுள்ள சிறுகுழலில் சிறுத்துக் காட்டும்
சீரான குழாய்க்குள்ளே இன்னுங் கேளே. (92)

கேளேநீ சளியடைத்துக் கொண்ட தானால்
கெடியான துவாரமது மூடிக் கொண்டு
வாளேபோல் காத்தடைய யிடமில்லா மல்
வளமில்லா மந்தசத்தம் உண்டா மய்யா
பாழான இதுதீர மருந்து கேளாய்
பக்குவமாய் உப்பினங்கள் இரசசெந் தூரம்
நாளேநீ கபமதனை வெளிப் படுத்த
நலமான பூரணச்சந்திரோதய முதலி லீயே. (93)

வளமான சாத்மீக காசரோ கம்
வன்மையதைச் சொல்லுகிறேன் வளமாய்க் கேளாய்
தளமான இந்தநோய் வாலிபர் க்கு
தான்காணு மென்றுநீ யறிந்து கொள்ளு
சளமான குளிர்ச்சியாலும் யீரத்தா லும்
தான்காணு அப்பாநீ சப்தங் கேளாய்
களியான அதின்குணத்தைச் சொல்லக் கேளாய்
அப்பனே மூச்சுமுட்டல் சலமதிகங்காணும் பாரே. (94)

பாரேநீ இதுதீர மருந்து கேளாய்
பக்குவமாய் மிளகுலேகியங் கற்கண்டுசேர்த்துச்
கூறேநீ ஆடாதோடைக் கிருதம் செய்து [செய்வாய்
கொத்தவனே அந்திசந்தி கொண்டா யானல்
தீராத ரோகமெல்லா மிதற்குத் தீரும்
தினந்தினமுஞ் சாப்பிடுவாய் இருமல்காணும் போது
ஆருத இரணமெல்லாம் ஆறிப்போ கும்
அப்பனே இதையறிந்து அவிழ்தஞ் செய்யே. (95)

## குரல்வளை.

செய்கின்ற குரல்வளையின் மந்தரோ கம்
குறிப்பறிய சொல்லுகிறேன் மைந்தா கேளு
உய்கின்ற கண்டத்தின் சிலேட்டும சவ்வு
உறுதியாய்த் தடித்துமே போவ தாலே
அய்யமில்லாத் துவாரங்கள் மூடிக்கொ ண்டு
அப்பனே சுவாசந்தான் தடையே பட்டு
பைபோலே தண்டுண்டு போவ தாலே
பண்பாக இந்தநோய் காணுந் தானே. (96)

அணுகிலந்த வேளைதனில் குணத்தைக் கேளாய்
அப்பனே சுரமுடனே யிருமல் கண்டு
கணிதமுடன் மூச்சுமுட்டல் வேதனையுங் கண்டு
கனமான கவலையுடன் குரல்கம்மல் தான்
குணிதமுடன் விழுங்குவது கஷ்ட மாகி
கூப்பிடவே சத்தமின்றித் தொனியில் லாமல்
பணிகள்செய்யப் பெலங்கெட்டு முகமும் ஊதி
பண்பான கண்களுந்தான் பிதுங்கிப் போமே. (97)

போமேதான் உதடுகளும் விக்கங் கண்டு
மெலிவான நாடியது விரைவாய்ச் செல்லும்
ஆமேதான் அவ்வேளை குரல்வளையுஞ் சுவாசக்குழலுமய்யா
அதிவேக மாகவே மேல்கீழ் செல்லும்
தாமேதான் விலாவெலும்பு யெடுத்தெ டுத்துத்
தானடித்துக் கொள்ளுமா மிந்த நோய்க்கு
மாமேவும் ரோகியப்போ காற்றை வேண்டிப்
பக்குவமா யனுசரிப்பான் பண்பாய்த் தானே. (98)

தான்பிறகு சொல்லுகிறேன் உறக்கமும்விவகாரமும் கண்டு
தக்கதொரு மூச்சுமுட்டல் பிரிந்துமே தான்
ஊனன பிராணனது போகு மய்யா
உள்ளபடி யிதற்குடனே பரிகாரஞ் செய்வாய்
தேனன சுவாசக்குழல் தனையே அய்யா
சோதித்து விடுவதே நல்ல வேளை
மானன இந்தநோய் அபூர்வமாகப் பார்த்தே
மானிடர்க்கு வருமென்று வழுத்தி னேனே. (99)

## சல தோடம்.

வழுத்துவேன் சலதோட வகையைக் கேளாய்
வன்மையாய் நாசிக்கும் சுவாசக்குழலுக் குந்தான்
அழுத்துவேன் அதிலிருக்கும் சிலேட்மச் சவ்வுக்கேதான்
அப்பனே உக்கிர தாபங் கண்டால்
நழுத்துவேன் அதற்குசல தோட மென்பார்
நலமானசளியூரும் சவ்வுக்கு வெப்பங் கண்டால்
கிளர்த்தியாஞ் சலதோட மென்றே பேராம்
கடிதானநாசிக்காய் பிடத்துக்கு வேதனைகாணுங் காணே (100)

காலான அதற்குமேல் கரகரப்பென் னும்
கடிதான சுவாசக்குழல் அதன்கிளைக்குங் கண்டால்
மேலான அதற்குத்தா விருமலென் பார்
மெதுவாகத் தானிதற்குக் காரணத்தைக் கேளாய்
சேலான குளிர்ச்சியொடு காத்தின் பேதம்
செம்மையுள்ள ஈரத்தில் நடக்கை யாலும்
வாலான வாவிவருமென்று சொன் னேன்
வன்மையுள்ள சலதோடத்தின் மேன்மை தானே. (101)

நேர்மையுட னதினுடைய குணத்தைக் கேளாய்
நெத்திமுகம் கண்கால்கள் வேதனையே செய்யும்
கூர்மையுடன் நீர்விடுதல் குரலுங் கம்மல்
குடிகெடுத்த சுரந்தாக மன்னத்து வேசம்
பாரய்யா தொண்டைதான் புண்போல் நோகும்
பண்பான உஷ்ணந்தா னதிகங் கொண்டு
சீர்மையுடன் மூன்றுநாள் வருத்தந் தந்து
சிறப்புடனே அப்பாலே எல்லாம் போமே. (102)

## பீனிசம்.

எல்லையுள்ள பீனிசத்தின் நோயைக் கேளாய்
எப்போதும் சலதோடம் வருவ தாலும்
தொல்லை செய்யும்மேக ரோகத்தி னலும்
தோன்றினதோர் திரேகத்தின் தன்மை யாலும்
அல்லல்செய்ய இந்தநோய் பிறக்கு தய்யா
அப்போது நாசிதனில் சொல்லக் கேளு
சல்லியஞ்செய் சலதோட மாகத் தோன்றி
சளியூருஞ் சவ்வப்போ தடித்துப் போமே. (103)

தடித்துமே மூக்கடைப்பு மிகவுங் கண்டு
சதியான பீனிசம்போல் முதலில் தோன்றி
நெடித்துமே நெத்திதனில் வேதனையுங் கண்டு
நெடிதான இருமலுடன் துர்ப்பலமு முண்டாம்
துடிப்புடனே சளிதானும் அதிக ரித்து
துர்நாற்ற முடன்சீயும் எப்போதுங் கண்டு
சடித்தமுடன் சளிஐயா சீயைப் போலே
தான்மாறிப் போகுமடா தரணி யோர்க்கே. (104)

தரணி தனில் சிலேட்டு மத்தின்
தானுரு கிரணமாகிப் புண்ணே யானல்
முரடிதனில் சளியுடனே இரத்தங் காணும்
முக்கியமாய்ச் சளியுறைந்து அடிக்கடி வீழும்
பரணியுள்ள போஜனத்தி லிஷ்ட மின்றி
பன்மையுள்ள திரேகந்தான் சடைவுண் டாகி
விரணமுள்ள திரேகத்தில் மேகநீருண் டாகில்
விக்கினமாய் மூக்கின்தண்டில் துவாரமுண் டாமே. (105)

உண்டாகும் வேளைதனில் மூக்கி லய்யா
உறுதியுள்ள சன்னெலும்பு ரணமே யாகி
துண்டுதுண்டாய் வெளியேவரும் போதுகண் டால்
தொல்லுலகில் தீராப்பீனிச மிதுவேயென் பார்
கண்டிதமாய் மற்றதொரு பினிசங்க ளெல்லாம்
கடிதாகச் சிலநாள்மூக்கு நீர்வடிந்து காட்டும்
துண்டரீக ரோகத்தைத் தீர்க்க வேண்டி
சூட்சமொன்று சொல்லுகிறேன் துலங்கக்கேளே. (106)

கேளடா நாசியுட சளியை நீக்கி
கெடிதமுடன் சலமதனால் சுத்தி செய்து
வாளாடா பன்றிநெய் தனிலே அய்யா
வளமான குங்குமப்பூ யிட்டு நீயும்
தேளடா தைலமதை காய்ச்சிக் கொண்டு
தினமும்நீ மூக்கிலே விட்டுவந் தால்
பாளடா போகாது இந்த ரோகம்
பறக்குமடா தினமெட்டில் பறக்குந் தானே. (107)

## குழந்தைகளின் மாந்தம்.

பண்பான குழந்தைகளுக் கிந்த ரோகம்
பாரிலுள்ளோர் தானறியப் பகர்வேன் கேளாய்
தண்மையுள்ள சுவாசக்குழல் தாபனத்தில் ரோகம்
தருவான குரல்வளைக்கும் வியாபித்தே தான்
வன்மையுள்ள தாபனத்தின் இடத்தி லய்யா
வளமாக நூதனமாய் சவ்வுண் டாகி
நுண்மையுள்ள குழந்தைகட்கே மாந்த நோவு
உண்டாகு மென்றுநீ உறுதி சொல்லே. (108)

உறுதியாய் சுவாசக்குழல் கிளைகளுக் கும்
உற்றதொரு புப்புசமுந் தொந்தப் பட்டு
அறுதியாய்த் தளர்ச்சியொடு மூச்சடைப்புக் கண்டு
அப்பனே இருதயத்தில் இரத்தங் கட்டி
கருதியே கொல்லுமடா பாலர் தன்னைக்
கண்டிப்பாய் அதனுடைய குணத்தைக் கேளாய்
குருதிபோல் சலம்வடியும் இருமல் தோன்றும்
குரல்கம்மல் உறக்கமுடன் கண்சிவக்கும் பாரே. (109)

ஆமேதான் அற்பசுரங் கொஞ்சம் கண்டு
அப்பனே நாள்மூன்று ஆன பின்பு
பூமேவு பாலகர்தான் இருமும் போது
பொல்லாத வெண்கலத்தின் சத்தங் காணும்
காமேதான் சுவாசமது உள்செல்லுங் காலை
கருவான சத்தமது கூவும் பாரு
வாமேதான் வாயைநீ திறந்துபார்த் தால்
வளமான கோளங்கள் வீங்கிவிடுங் காணே. (110)

வீங்கியது சிவந்துமே உள்நாக்குங் கூட
விரிவாக வீங்கியே இருக்கு மப்பா
தூங்கியே திரியாதே வியாதி மீறில்
தொந்தித்த சுரமுந்தான் சாஸ்தியா கும்
தேங்கியதோர் சுவாசமுந்தான் அதிக மாகி
தெளிவான மூச்சுவிடக் கஷ்ட மாகும்
தாங்கியதோர் இருமலய்யா அதிகமா கும்
தத்துவத்தின் நாடியது தணியும் பாரே. (111)

தணியுமடா திரேகத்தின் திடமுங் கூட
தாகமுடன் பாலனது அழுது வாடும்
கணிதமுடன் தூக்கங்கள் அற்றுப் போய்க்
கழுத்தையுமே தொங்கவிட்டுக் குழந்தை வாடும்
துணிகரமாய் விரலைத்தான் வாயில் இட்டுத்
தள்ளியே கொள்ளுமடா குழந்தை தானும்
அணியான இரவில்தான் நோய்அதிகங் கண்டு
அப்பனே காலையில்தான் தணியும் பாரே. (112)

பாரேநீ ரோகந்தான் நீங்கும் வேளை
பக்குவமாய் இருமலுந் தொண்டைச்சத்தம் நிற்கும்
கூறேநீ ரோகந்தா னதிகமா னால்
குடிகெடுத்த உறக்கமுடன் பல்லிருகிக் காணும்
சீரான மூச்சடைப்புஞ் சலவை கண்டு
சரீரத்தில் வியர்வையது தானேதோன் றும்
தீராத இசிவுகண்டு குழந்தை அய்யா
தீயணுகா வண்ணங்காண் திண்ணந் தானே (113)

திண்ணமுடன் இந்தநோய் தீர வேண்டி
திறமான மருந்தொன்று சொல்லக் கேளு
பண்டிதனே இரசசுன்னம் கடுகு பத்து
பக்குவமாய்க் கொடுத்துவந்தால் வியாதி தீரும்
கண்மணியே வாந்திக்குக் கொடுத்தா யானல்
கனமான கோழையது கீழே செல்லும்
அண்ணலேநின் கிருமையாலே இந்த ரோகம்
அநேகமாய்க் குணமாகும் அறிவுள் ளோர்க்கே. (114)

## மாந்தம் இரைப்பு.

அறிவாய் குழந்தையுட மாந்த ரோகம்
அப்பனே சொல்லுகிறேன் அறிவாய்க் கேளு
குறியான பல்முளைக்கும் வயதில் காணும்
குரவளையின் துவாரம் இசிவு கண்டு
தெறிவான இந்தநோய் காணும் வேளை
தெளிவான சுவாசக்குழ லின்து வாரம்
சிறிதாகப் போவதினல் புப்புசத்துக்குங் காற்று
சிறப்புடனே தடைபட்டு நிற்குந் தானே. (115)

தானை ரோகத்தில் சுரமி ராது
தக்கதொரு சுவாசமே கஷ்ட மாகும்
மானை குழந்தைதான் திடீ ரென்று
மகத்தான மூச்சு-முட்டி உழைத்துக் கொள்ளும்
தேனை மூச்சதுதான் உள்ளே போகாமல்
தீங்கான மூச்சடைப்புக் கொஞ்ச நேரம்
கோனைக் கொஞ்சநேரம் சென்ற தானல்
குரவளையின் பிகுநீங்கும் குறிப்பான் பாரே. (116)

குறிப்பான சுவாசமது அடிக்கடி யேனும்
கணிதமுடன் நேரம்விட்டு நேர மேனும்
அதிகமாய் வெகுநாட்கள் சென் றேனும்
அவனிதனில் பாலனுக்குக் காணும் பாரு
கதிப்பாகக் குரவளைக்குச் செல்லு கின்ற
கதிர்போன்ற ஸ்பரிசநரம்புக்கு வியாதி கண்டு
கோதிப்பான இந்தநோய் வருகு தென்று
கொற்றவனே தெரிந்துகொண் டுரைத்தி டாயே. (117)

உரைத்திட்ட வியாதிதான் தீர வேண்டி
　　உள்ளபடி பேதிக் கீய்ந்து முன்பு
பரைத்திட்ட மாந்தகுளிகை யொன் றீய்ந்தால்
　　மகத்தான மாந்தந்தான் தீரு மய்யா
குரைத்த குரவளை எப்போதும் போல
　　குணமாகிக் குழந்தைதான் வளரு மய்யா
தரித்திட்ட ரோகந்தான் அணுகாமல் நின்று
　　தரணிதனில் வாழ்வார் தன்மை பாரே. (118)

## கக்கிருமல்.

தன்மையுடன் கக்குவாய் இருமல் கேளாய்
　　தாரணியில் பாலருக்குக் காண்ப துண்டு
உண்மையாய் ஒருதரமே காணு மல்லால்
　　ஒருக்காலும் மறுபடியே காணு தய்யா
வண்மையுடன் அணுகிவரும் வேளை தன்னில்
　　வளமான அற்பசுரம் வாந்தி கண்டு
பண்டிதனே சலதோட மாதிரியாய்க் கண்டு
　　பக்குவமா யிருமலது காணும் பாரே. (119)

பாரேநீ யிருமலது விட்டு விட்டு
　　பக்குவமா யிருபத்தோர் நாளில் தீரும்
கூறேநீ யிப்படியே தீரா விட்டால்
　　குறிப்பாக முத்திங்கள் சங்கடங்கள் செய்யும்
சீரேநீ அதினுடைய குணத்தைக் கேளு
　　சிறப்பாக வேகந்தான் நரம்பைப் பற்றி
கூராக வருகுதென்று சொல்வா யப்பா
　　கொற்றவனே இருபதுநாள் சென்றுல் கேளே. (120)

கேளடா குழந்தைகட் கிருமல் கண்டால்
　　கெடிதாகத் தாயாரைக் கட்டிக் கொள்ளும்
வாளடா மூச்சதுதான் திணறிக் கொண்டு
　　வளமாக ஓயாம லிருமல் காணும்
காலடா கண்கள்ரெண்டும் பெருத்துக் காட்டும்
　　கனமான சுவாசத்தின் துவாரமப்பா
கீழாக யிருப்பதினுல் சுவாசமுள் போகுங்காலை
　　சிறுவனுக்கு இழுப்புமாதிரியாய்க் காட்டுங் காணே.

காட்டுமப்பா தொண்டையில்தான் சத்த மப்பா
கனமான எங்கல்போல் குறியே காட்டும்
மூட்டுகின்ற இருமல்கண்டு நின்ற பின்பு
முக்கியமாய்க் குழந்தைக்குத் தைரியங்காணும்
வாட்டிவிடுஞ் சிலவேளை வாந்தி யாகும்
வளமாக வரும்வேளை வித்தியாசங் காட்டும்
ஆட்டிவிடு நாள்தனக்கு இருமூன்று வேளை
அடிக்கடியும் வருவதுவும் வளமை தானே. (122)

வளையடா இதுதீர மருந்து கேளாய்
வண்மையுடன் தூதுவளைக் கிருத மிய்ந்தால்
பழையபடி மெதுவாக நின்று போகும்
பக்குவமாய்ச் சாராய மிருதுளியே விட்டால்
குளகரிபோல் கம்மலப்பா கரைந்து போயிக்
குழந்தைதான் குதித்திடுவான் புவியின் மீது
அளவில்லாச் சந்தோஷங் கொண்டு தானே
அலைந்து திரிவானிப் புவியின் மீதே. (123)

## வாத ரோகம்.

அம்புவியில் வாதநோய் வருகும் நேர்மை
அப்பனே சொல்லுகிறே னறிவாய்க் கேளு
தெம்புடனே ஓரிடத்தி லேனு மப்பா
தெளிவாகப் பலவிடத்தி லேனு மப்பா
சம்பிரமமாய்ப் பரிச நரம்பி லேனு
சதிரான சலனநரம்பி லேனு மப்பா
கம்பிதமா யிரண்டு மில்லாமற் போனல்
கடிதான ஸ்தம்பனரோக மென்றே சொல்வார். (124)

சொல்லுவார் பரிசமும் சலனமு மப்பா
சுயங்கெட்டுப் போயிருந்தால் பூரணமே யென்றும்
அல்லுவா ரேதேனு மென்றே கெட்டால்
ஆபூரண மென்றே யதற்குப் பேராம்
வெல்லுவார் அசைவற்றுப் போவ தற்கும்
விரைவான ஸ்பரிச மற்றுப் போவதற்கும்
தொல்லைசெய்யுந் திமிர்வாத மென்று சொல்வார்
தொல்லுலகில் இன்னும்வெகு வாத முண்டே. (125)

வாதமடா சர்வாங்க வாத மென்றும்
வண்மையுள்ள ஏகாந்த வாத மென்றும்
போதமடா ஒருபக்கம் மட்டுங் கண்டால்
பொலிவான பாரிச வாத மென்றும்
பாதமடா சுவாதீன மில்லா விட்டால்
பரிவான தோரங்க வாத மென்றும்
நாதமடா அசைவற்றுச் சதைகள் கெட்டால்
நலமா னசீத வாத மாமே. (126)

ஆமேதான் நேத்திரத்தின் நரம்புக் கப்பா
அப்பனே வாதமது வந்த தானல்
போமேதான் கண்கள்ரெண்டுந் தெரியா தப்போ
பொரியான விழிகுரு டென்று சொல்வார்
பாமேவும் இமைகளுக்கு வாதங் கண்டால்
பரிவான நேத்திரத்தின் வ்ாயு வென்பார்
சீர்மேவுங் கேள்விநரம் புக்கே கண்டால்
செவிடுவந்து தோன்றுமென்று சொல்லு வாயே. (127)

சொல்லுவாய் வாசனைநரம் புக்கே கண்டால்
சுகமான கந்தநாச மென்றே சொல்லு
அல்லுவாய் ருசிநரம்பு தனக்குக் கண்டால்
அப்பனே இரசநாச மென்று சொல்லு
தொல்லைசெய்ய இன்னும்வெகு வாத நோய்கள்
தொல்லுலகில் மாந்தருக்குக் காண்ப துண்டு
எல்லையில்லா வாதநோய் நேர்மை தன்னை
இயல்பாக அறிந்திடவே விபரங் கேளே. (128)

விவரமடா அசதி-சன்னி மூளை நோவு
விரிவான மூளையது மிருது வாகி
அவனிதனில் திடமாகப் போவ தாலும்
அப்பனே மூத்திரக்குண்டிக்காய் வியாதி யாலும்
தவமுனிவர் தீர்காக்கை மேக ரோகம்
தன்மையுள்ள முத்தண்டுக் கொடி வியாதி
அவமிலாப் பரிச நரம்பழுத்தங் கண்டால்
அணுகுமடா வாதநோய் ஆகும் பாரே. (129)

அணுகுமடா மாமிசத்தின் வியாதி யாலும்
அப்பனே சூதகத்தின் பெருக்க லாலும்
குணமில்லா இரசம்வங்கம் தின்ன லாலும்
குடிகெடுத்த வாதமது உண்டா மப்பா
பணமதனைச் செலவழித்துப் பார்த்தா லுந்தான்
பயன்படாமல் போதல் மெத்த வுண்டு
கணப்பொழுதில் தீர்ந்துவிடும் ரோக மப்பா
கண்டிப்பாய்ச் சொல்லுகிறேன் கருதிக் கேளே. (130)

## சர்வாங்க வாத ரோகம்.

கேளடா சர்வாங்க வாத ரோகம்
கிளர்ந்துவரும் நேர்மைதனைச் சொல்வேன் பாரு
வாளடா உணர்ச்சியுடன் சவ்வு மற்று
வண்மையுடன் சர்வாங்கம் உணர்ச்சி கெட்டு
நாளடா தினமெட்டில் மரண மாகும்
நலஞ்செய்ய இதற்கு மருந்தொன்று மில்லை
பாழடா செய்கின்ற பாரிச வாதம்
பக்குவத்தைச் சொல்லுகிறேன் பண்பாய்க் கேளே.

## பாரிச வாதம்.

பண்பான பாரிச வாத நேர்மை
பக்குவமாய் நீயறியப் பகர்வேன் கேளாய்
தன்மையுள்ள சரீரத்தில் பாதிப் பாகம்
தம்பித்துக் கையுடனே காலும் வீழ்ந்து
வண்மையுடன் வலதுபக் கத்திற் கேனும்
வலுவாக யிடதுபக்கம் அதிகங் காணும்
கண்டிதமாய்க் கைமட்டும் சொரணை கெட்டு
கடினமாய் அசைவற்றுப் போகும் பாரே. (132)

போகுமடா ஒருவேளை ஒருபுறத்துக் கையும்
பொங்கமுடன் மற்றொரு புறத்துக் காலும்
யேகியே விழுந்துவிடும் விதத்தைப் பாரு
யென்மகனே வாயோரம் வியர்த்துத் தானும்

பாகமதில் வாயிழுத்துக் கொண்டு போகும்
    பக்குவமாய் நாக்கின்முனை வியாதி நிற்கும்
கூகைபோல் வார்த்தைதான் குளறிப் பேசும்
    குழுமையுள்ள கண்ணிமைகள் அசைவு போமே. (133)

அசைவற்ற கண்ணிரண்டும் மூடிக் கொள்ளும்
    அப்பனே கருவிழி துவாரங் காணும்
தசையற்ற பார்வைதான் கெருட பார்வை
    தன்பரிசம் கெடும்புத்தி விகற்ப மாகும்
விசையுள்ள கண்ணீரில் நீருண் டாகி
    விசனங்கள் மிகப்பட்டு நினைவுங் குன்றி
பசையற்ற கைகால்கள் முடங்கிப் போகும்
    பாங்கான நோய்கள்தான் தீரும் பாரே. (134)

தீருதற்கு குறியதனைச் சொல்லக் கேளாய்
    திரமான காலில்தான் சுகுணங் காட்டும்
மாறியே அசாத்தியத்தில் வந்து விட்டால்
    மகத்தான கால்கள் சூம்பிப் போகும்
கூறுகிறேன் நோய்கண்டவிடம் சில்லிட்டுப் போகும்
    குடிகெடுத்த மூளையது மிருதுவாகி விட்டால்
பாருநீ கைகாலு மிழுத்துக் கொண்டு
    பண்புடனே பிகுவாகி இருக்கும் பாரே. (135)

இழுக்கின்ற வாதமது உண்டாகும் நேர்மை
    இருதயத்தில் நீயறிய இயம்புவேன் கேள்
மருக்கின்ற வலதுபக்கத்து மூளைக்கு வியாதிகண்டால்
    மகத்தான இடதுபுறம் கைகால் விழுந்துபோகும்
சேருகின்ற இடதுபுறத்து மூளைக்கு வியாதிகண்டால்
    வலதுகரம் கால் விழுந்து போகும்
பருக்கின்ற முள்ளந்தண்டுக் கொடியில் ஓர்பக்கம்
    பண்பாக இந்தநோய் காண்ப துண்டே. (136)

உண்டாகும் வேளைதனில் வியாதிப் பக்கம்
    உறுதியாய்க் கைகாலும் அசைவற்றுப் போகும்
பண்டான இதில்சாதி இரண்டே யுண்டு
    பக்குவமாய் மூளையைச் சார்ந்த தொன்று

முண்டான முள்ளந்தண்டு கொடியைச் சார்ந்ததொன்று
முக்கியமாய் இன்னேய்க்குச் சலனமே யில்லை
கண்டிதமாய் நரம்புகளும் கெடுதல் பட்டு
கதியாக அனுவற்றுப் போகும் பாரே. (137)

பாரேநீ இந்தநோய் தீர வேண்டி
பக்குவங்கள் சொல்லுகிறேன் பண்பாய்க் கேளு
தீரேநீ திறமாகப் பேதிக் கீய்ந்து
திறமான இரசபற்பம் தன்னைக் தாக்கு
கூராக வைத்தியங்கள் செய்யும் போது
குறிப்பாக ரோகியுட கையுங் காலும்
நேராகப் பிடித்துமே முடக்கிப் பார்த்தால்
நிச்சயமா யதின்குணங்கள் தெரியும் பாரே. (138)

தெரியுமடா சதைகள்தான் பிகுவாய்க் காணில்
தெளிந்ததொரு மூளையில்தான் இரத்தங் கட்டி
அறிந்துநீ கடுகரைத்துப் பத்து மிட்டு
அப்பனே இரத்தமதைக் கரையச் செய்வாய்
முறிந்ததுபோல் சதைகள்தான் தளர்ச்சி கண்டால்
மூளையது கெட்டுப்போ யிருக்கு தென்று
தெரிந்ததற்கு இரத்தத்தைச் சுத்தி செய்ய
திறமான அயமுதலாய்க் கொடுத்தி டாயே. (139)

கொடுத்திடவே வியாதிதான் நாட்சென்று விட்டால்
கொதிப்பான எட்டியுட உப்பை யீய்ந்தால்
சடுத்தமுடன் தீருமடா வாத நோய்கள்
சதிரான வாதயெண்ணெய் விடமுட்டித் தேய்ப்பாய்
அடுத்ததொரு அக்கினியாம் செந்தூ ரத்தை
அனுதினமுந் தின்றுக்கால் வியாதி தீரும்
மடத்தனமாய் இருந்தாக்கால் வியாதி கொல்லும்
மகத்தான பச்சையென்ற வாத மாமே. (140)

## இளம் பிள்ளை வாதம்.

வாதமடா இளம்பிள்ளை வாதங் கேளாய்
வன்மையுள்ள கால்கள்தா னசைவற்றுப் போகும்
நீதமுடன் குழந்தைகளுக்கே இந்த ரோகம்
நிச்சயமாய்க் காணுமென நினைவாய்ச் சொல்லு

போதமுடன் ஆரம்ப மாகும் வேளை
 பொலிவான வாதங்கள் கண்டு
பாதமதில் திமிருடனே சுரணை கெட்டு
 படிப்படியாய் உணர்ச்சிகெட்டுப் போகும் பாரே. (141)

போகுமடா மூத்திரப்பை குதம் இவைகள்தானும்
 முக்கியமாய் அசைவற்றுப் போகு மய்யா
ரோகியப்போ மல்லாக்காய்ப் படுத்துக் கொள்வான்
 நிச்சயமாய்ப் பிரஷ்டத்தில் புண்ணுண் டாகும்
பாகமுடன் மூத்திரந்தான் இறங்காமல் கொஞ்சம்
 பக்குவமாய் தாமதித்து இறங்கு மாகில்
வேகமாய் நார் போலே நீரிறங்கி
 விளக்கமுள்ள துர்வாசனை நெடியுண் டாமே. (142)

உண்டாகும் இராத்திரியில் சதைதுடிப்புக் கண்டு
 உத்தமனே ரோகியைத்தா னலட்டிக் கொல்லும்
பண்பான முள்ளந்தண்டு கொடிக்கே யேனும்
 பக்குவமா யதனுடைய சவ்வுக் கேனும்
கண்டிதமாய் வியாதிகண்டு இந்த ரோகம்
 காசினியி லுண்டாகுமென்று கருதிச் சொன்னேன்
துண்டான காயங்கள் படுவ தாலும்
 தொல்லுலகில் இந்தநோய் வருகும் பாரே. (143)

பாரேநீ இந்தநோய்க்கு மருந்து செய்ய
 பக்குவமாய்ச் சொல்லுகிறேன் பண்பாய்க் கேளு
சீரேநீ கொடிக்கேனும் அதின்சவ்வுக் கேனும்
 சிறப்பான தாபனத்தின் குறி தனக்கு
நேராக உணர்ச்சிகண்டு மருந்து செய்வாய்
 நிச்சயமாய் அதன்குறிகள் தெரிந்து கொண்டு
வாரான சதைகளுக்கு சொல்லு கின்ற
 வண்மையுள்ள நரம்புகளுக்கு அதிகரத்தம் கண்டால்
 [பாரே. (144)

கண்டாக்கால் அதிர்ச்சியுடன் இசிவு கண்டு
 கதிப்பான கொருக்குவலி சதைஅடித்துக் கொள்ளில்
கண்டிதமாய் ஆண்குறியும் விம்மல் காணும்
 கதிப்பான ஸ்பரிசநரம்புக்கு அதிர்ச்சி கண்டால்

வண்மையாய் நமைச்சலுடன் சூடா யேனும்
வளமையாய் குளிர்ச்சியுடன் உணர்ச்சி யேனும்
பண்டிதனே மூத்திரத்தில் நெடியுண் டாக்கும்
படுக்கையில்தான் விரணமுதல் பலவுங் காணும். (145)

காணுகின்ற நோயதுதான் தீர வேண்டி
காசினியில் அநேகவித மருந்து செய்வாய்
பூணுகின்ற அயச்செந்தூரம் லிங்க மாத்திரை
புனிதமுடன் எட்டியுட யுப்பு மீய்ந்தால்
தோணுமடா உணர்ச்சியுடன் ரத்தோட் டங்கள்
தொலையாத வாதமெல்லாம் தொலைந்து போகும்
பேணிவரும் அர்த்தமுக வாதந் தானும்
பிறந்துவரும் வகையதனை பின்னால் காணே. (146)

## அர்த்த முக வாதம்.

பின்னிவரும் அர்த்தமுக வாத நேர்மை
பிடிக்கும் வகையதனைச் சொல்வேன் பாராய்
உன்விதமாய் முகத்தில்பாதி நோய் கண்டு
உறுதியுள்ள மூக்கணையைக் கெடுத்துப் போகும்
சென்னியுட நரம்புக்கு வியாதி காணில்
சிறப்பான இந்தநோய் வருகு தென்று
நன்னயமாய்ச் சொல்லிவிட்டோம் உலகத் தோர்க்கு
நீயறிய குணமதனை நிகழ்த்து வேனே. (147)

நிகழ்த்துவேன் கண்ணிமைகள் மூட ஐயா
நிச்சயமாய் வருத்தமடா இருக்கு மப்பா
மகத்துவமாம் கன்னமது தளர்ந்து தொங்கி
மானிடர்க்கு வாயோரங் கீழிறங்கிக் கொள்ளும்
செகத்தினிலே இதனாலே பயமே யில்லை
செப்புகிறேன் குளிர்ச்சிபல் சொத்தை யாலும்
அகத்தில்வாழ் குழந்தைக்கு செவிப்புண் ணாலும்
அய்யனே இந்தநோய் அணுகும் பாரே. (148)

## நடுக்கு வாதம்.

நோயாக நாடுகின்ற நடுக்கு வாதம்
நேர்மையுடன் வந்தணுகும் நேர்மை கேளாய்
பாயான ஸ்பரிசத்தின் நரம்புக் கப்பா
பக்குவமாய் வியாதிகண்டு பின்பு கேளாய்
தேயாத விரலுக்கேனும் சிரசுக் கேனும்
தென்படுமே முதலில்தான் நடுக்க மப்பா
ஓயாமல் பின்பு சர்வாங்க மெல்லாம்
உத்தமனே வியாபித்து நடுக்க மாமே. (149)

நடுக்கங்கள் தீருவதற்கு மருந்து கேளாய்
நன்மையுள்ள அயச்செந்தூர முதலா யுள்ள
சடுத்தமுடன் சரீரத்தின் பெலமே கொள்ள
தக்கதொரு ஊட்டமும்நீ கொடுத்து வந்தால்
பிடுத்தங்கள் முதல்யாவும் விட்டுப்பிலனே வந்து
பிறகாலே நடுக்கமுந்தான் அற்றுப் போய்
குடித்தனத்தில் வேலைசெய்ய பெலமுண் டாகி
கொற்றவனாய் ஆவான்தான் குறிகண் டாயே. (150)

## காக்கை வலிப்பு விபரம்.

குறியான காக்கைவலி ரோகந் தன்னை
குறிப்பறியச் சொல்லுகிறேன் குணத்தைக் கேளு
மறைப்பில்லாக் குறியின்றி இன்னேய் காணும்
மக்களே காணுதற்கு முன்னால் கேளு
தெரிப்பாக கீச்சுக்குரல் போட்டுக் கொண்டு
திரமாகக் கூப்பிடுவானப் போதையா
மரிப்பவன்போல் பூமிதனில் கிடப்பான் பாரு
மகத்தான காக்கைவலிக் காரணம் பாரே. (151)

காக்கைவலி வந்தபின்பு உதறல் காணும்
கனமான மூச்சதுவுந் திணறல் கண்டு
ஆக்கைமுகம் விம்மி நீலநிற மாகி
அப்பனே புருவங்கள்நெருங்கி விகாரங் காட்டும்

வாக்கதனில் இருந்தப்போ நுரையே தள்ளும்
வண்மையுள்ள தொண்டையது அடைத்தது போல்
சாக்கியமாய்ச் சத்த முண்டா மப்போ
சரியான கண்கள்இரண்டும் முழிப்பான் பாரே. (152)

முழிப்பிலே வெள்ளைமுழி மாத்திரமே காணும்
முக்கியமாய் விரல்முடங்கி கைபுரளும் பாரு
குழிபற்கள் பதினறுங் கிட்டிக் கொள்ளும்
கூவுகின்ற நாக்குத்தான் பல்லிற் சிக்கி
அழிபுண்போல் காயந்தான் பட்டுப் போகும்
அப்பனே இக்குறிக ளெல்லா மையா
பழிதீர்க்கும் பத்து நிமிஷத்திற் குள்ளே
பண்பாகப் பின்னுடி தூங்குவான் பரே. (153)

பாரேநீ சிலருக்குஒரு நாழிகைக்கு மேலே
பக்குவங்கள் காட்டாம லிருப்ப துண்டு
கூருக அதனுடைய காரணத்தைக் கேளாய்
கொற்றவனே பரம்பரையாய்க் காண்ப துண்டு
மாருத மாதவிடாய் அதிக மானல்
மகத்தான பெண்களுக்கு காண்ப துண்டு
சீரில்லாச் சம்போகம் மதுபானங் கள்
சிறப்பான இந்திரியப்போக்கால் காணுந் தானே. (154)

காணுமடா பயத்துடனே சிரசில்அடி படுவதாலும்
கனமான உன்மாதம்பல் வேதனையி னுலும்
பூணுமடா இதனுடனே அஜீர்ண மலபந்தம்
பொங்கமுடன் நித்திரையின் கெடுதல் காணும்
தோணுமடா மாதருக்குக் கடுப்பு மேகம்
சொப்பனத்தில் கலிதமது வாகு மப்பா
ஆணுவங்க ளில்லாமல் அற்றுப் போகும்
அப்பனே சிலருக்கு அதுவு முண்டே. (155)

உண்டான சூதகத்தின் சன்னிக் கப்பா
உறுதியுள்ள அசதி சன்னிக் கப்பா
பண்டான காக்கைவலி தனக்கு மப்பா
பாரினுள்ள வித்தியாசம் பகரக் கேளாய்

முண்டான காக்கைவலி வந்த பேருக்கு
முக்கியமாய் அறிவுதா னற்றுப் போகும்
கண்டான சூதகத்தின் சன்னிக் கப்பா
சுகமான முன்குறிகள் தோன்றி டாதே. (156)

தோன்ருது அசதிசன்னி ரோகத்துக் கப்பா
தோன்றிடுமே தாமதித்துக் குறட்டை சுவாசம்
ஊன்றியே எழுந்திருக்கும் கைகால் இரண்டும்
உத்தமனே அசையாம லிருக்கும் பாரு
கண்ணூரக் காக்கைவலி தீர வேண்டி
கடினமுள்ள அயநாகம்வெள்ளி கொடுத்தால் தீரும்
வானவர்கோன் கிருபைதான் மிகவும் வேணும்
வன்மையுள்ள மருந்தினுல் தீரும் பாரே. (157)

## சூதக சன்னி உற்பத்தி விபரம்.

தீராத சூதகத்தின் சன்னி ரோகம்
திறமதனைச் சொல்லுகிறேன் மறைப்பில் லாமல்
நேரான நரம்பைத்தான் பற்றிக் கொண்டு
நிச்சயமாய் வருகின்ற நோயிது வய்யா
மாறிமாறி விட்டுவரும் நோய் இதப்பா
மகத்தான சன்னியிது வந்த பேரை
ஊரான மூத்திரந்தான் தெளிவே யாகி
உள்ளபடி யடிவயிறு நோகும் பாரே. (158)

செய்யுமடா இரைச்சலுட னுருண்டை போலச்
செயலாக மேலேறி தொண்டையைத் தான்
பையவந்து அடைப்பதுபோல் தோன்று மய்யா
பதருமல் சிலவேளை வலியே காணும்
உய்யவரும் மாதருக்கே முக்கியமாய்க் காணும்
உறுதியுள்ள ரோகமய்யா இந்த ரோகம்
தையலர்கள் தனக்குவரும் ஆரம் பத்தில்
தான்சூதகம் நிற்கும்வரை வேதனையே செய்யுந்தானே.

வேதனைகள் செய்துவரும் குறியைக் கேளாய்
விதமான கைகால்கள் இசிவு கண்டு
பேதமில்லா விரல்களைத்தான் முடக்கிக் கொண்டு
பலமாக மார்பில்தான் அடித்துக் கொள்வாள்

வாதனையால் தலைமயிரைப் பிய்த்துக் கொள்வாள்
　　வளமான மார்பில்தான் அடைப்பதுபோல் தோன்றும்
வாதனைகள் தீருகின்ற வேளை தன்னில்
　　வளமாகக் கண்களில்நீர் வடியும் பாரே. (160)

பாரடா சிலவேளை அழுவாள் பாரு
　　பண்புடனே சிலவேளை நகையே செய்வாள்
நேரடா விடாமல்தான் விக்கல் காணும்
　　நிர்ணயமாய்ச் சிலவேளை பிரக்கினையு மற்றுப்போகும்
கூறடா இதுவெல்லாங் கொஞ்ச நேரத்தில்
　　குறிகண்டு தெரியுமடா கூர்ந்து பாரு
வாரடா வலிநின்ற உடனே நீர்தான்
　　வண்மையுடன் தெளிவாக இறங்கும் பாரே. (161)

இறங்குமடா சிலருக்குவலி காணும் போதே
　　இன்பமா யவர்க்குத் தெரியாமல் தான்
திறந்துஅதைச் சொல்லிவிட்டேன் இந்நோயைத் தான்
　　திறமான பிசாசென்றுஞ் சூனியமென்றுஞ் சொல்வார்
பறந்துமே அதற்குத்தான் மந்திர பூசை
　　பக்குவமாய்ச் செய்வார்கள் மாதர்க்கே தான்
சிறந்ததொரு மந்திரத்தா லொன்று மில்லை
　　செப்புகிறேன் மருந்ததனைச் சொல்லக் கேளே. (162)

சொல்லுகிறேன் சன்னிதான் கண்ட வேளை
　　சுயமான காத்துள்ள இடத்தி லப்பா
அல்லல்பட மாதரைத்தான் படுக்க வைத்து
　　அப்பனே திரிபுகையுங் கொடுக்கச் செய்து
வல்பிணிதான் நீங்கியது பிரக்கினையே வந்தால்
　　வலுவான பெருங்காயக் குழம்பு யீவாய்
தொல்லைகள்தான் தீர்ந்தபின்பு பேதிக் கீய்ந்து
　　தேகத்தைப் பெலமாக்க மருந்து செய்யே. (163)

மருந்துசெய்வாய் தேகந்தான் பெருத் திருந்தால்
　　முக்கியமாய்ப் போசனத்தைக் குறைக்க வேண்டும்
குறைந்துமே இரத்தந்தான் தேகந் தன்னில்
　　குருதியற்று உடம்புதான் வெளுத்துக் கண்டால்

அருந்துவாய் அயமுதல் செந்தூரந் தன்னை
அப்பனே உள்ளுக்குக் கொடுத்தாயானல்
சிறந்ததொரு வியாதியெல்லாம் ஓடிப் போகும்
செய்கின்ற சூலையுட குணத்தைக் கேளே. (164)

## சூலையின் விபரம்.

கேளடா சூலைநோயின் நேர்மை தன்னைக்
கிருபையுள்ள பரிசத்தின் நரம்பைப் பற்றி
வாளடா வல்லயத்துக் குத்துப் போல
வலிப்பதனல் சூலையென்ற பேரு மப்பா
நாளடா இராத்திரியாம் வேளை தன்னில்
நலமான வலியதிற்தா னதிகங் காட்டும்
பாளடா வியாதிகண்ட இடத்தி லேனும்
பக்குவமாய் வேறுஇடந் தோணு மாமே. (165)

தோணுமடா நரம்பின் மூலத்தி லேனும்
தொலையாத அதனுடைய கிளையி லேனும்
பூணுமடா வேதனைகள் விட்டு விட்டு
புகழாகக் கிரமமாய்க் காணும் பாரு
தோணுமடா சூலையில் அநேக முண்டு
தொல்லுலகில் சொல்லுகிறேன் தொடர்ந்து பாரு
பேணிவரும் முகத்தினது நரம்பிற் கண்டால்
பொல்லாத முகசன்னி யென்று சொல்லே. (166)

சொல்லடா சிரசினுட நரம்பிற் கண்டால்
சிறிதான சூரியாவர்த்த வாத மென்றும்
பில்லடா பிருட்ட நரம்பிற் கண்டால்
பிறிதான கெரித்த சிரவாத மென்றும்
மல்லடா இருதயத்தின் நரம்பிற் கண்டால்
மகத்தான மார்விடப்பாண்டு நோயே என்றும்
அல்லடா அன்னசயத்தின் நரம்பிற் கண்டால்
அப்பனே குன்மமென்று சொல்வார் பாரே. (167)

## முக சன்னி விபரம்.

பாரடா மூளையினின் றுண்டா கின்ற
பரிசுத்த ஓரைந்தின் நரம்பின் நோய்க்கு
நேரடா முகசன்னி யென்று பேராம்
நிலையாக அந்நரம்பில் மூன்றுகிளை யுண்டாம்
வாரடா முதல்கிளைதான் நெற்றி சொல்லும்
வலுவாக அதற்குத்தான் வியாதி கண்டால்
கூறடா குத்தலுடன் குடைச்சல் காணும்
குணமான இரண்டாங் கன்னத்திற் போமே. (168)

போனதொரு நரம்பிற்கு வியாதி கண்டால்
பொங்கமுடன் கன்னங்கண்கள் றெப்பை நாசிபக்கம்
ஆனதொரு மேலுதடு இந்தத் தானம்
அளவில்லா வேதனைகள் மிகவே யுண்டாம்
மோனமதாய் முகரைக்குச் சொல்லு கின்ற
மூன்ருன கிளைக்குத்தான் வியாதி கண்டால்
பானமுடன் கீழுதடு ஈறுபற்கள் முகவாய்க்கட்டை
பக்குவமாய் நாவின்பக்கம் குடைச்சல் காணும்பாரே.

பாரேநீ முகசன்னி யொரு பக்கத்தில்
பண்பாக வேதனை செய்யு மப்பா.
கூறேநீ வலதுபக்கம் எப்போதுங் காணும்
குணமாக வரும்போது முகத்தி லப்பா
பாரேநீ விருவிருப்பா இருக்கு மப்பா
பக்குவமாய்ப் பிறகுயெரிவு குத்தலுண் டாய்க்
காரேநீ குடைச்சலுடன் ஆயாசங் கண்டு
கண்டிதமாய் மாறிவிடுங் கட்டந் தானே. (170)

தானன நித்திரைதான் வரா தய்யா
தயவான தூக்கமது வந்திட் டாக்கால்
மானன வியாதியெல்லாம் விலகிப் போகும்
மைந்தனே அதுவருங் காரணத்தைக் கேளு
தேனன முகத்தெலும்பு வியர்தி யாலும்
தெளிவான மூளையுட வியாதி யாலும்
வீணன விடக்கரத்து சூதகசன்னி யாலும்
விதமாக இந்தநோ யுண்டாம் பாரே. (171)

## அசீரண வாதம்.

உண்டாகும் அசீரணக் குறிப்பே தென்னில்
உறுதியுள்ள கரத்தினுட வாதை யாலும்
குண்டான தேகந்தான் குலுங்க லாலும்
குதியான வியாதியின் துயரத் தாலும்
முண்டான இந்தநோய் வருகு மென்று
முக்கியமாய்ச் சொல்லுகிறேன் முகர்ந்து பாரு
கண்டான கிரத்திர வாத ரோகம்
காணுகின்ற நேர்மைதனைக் கருதிக் கேளே. (172)

## கிரத்திர வாதம்.

கேளடா தொடைநரம்பின் வியாதிக் கப்பா
கெடியாகத் தோன்றுகின்ற வியாதிக் கப்பா
நாளடா கிரத்திர வாத மென்பார்
நலமான வேதனைதான் பிருஷ்டத்தில் காணும்
தோளடா தொடையின் பின்புறத்தி லய்யா
தெளிவான முழங்கால் மடிப்புவரைத் தோன்றி
வாளடா சிலருக்குக்கால் நரம்புகளைப் பற்றி
வளயான பாதம்வரை சொல்லும் பாரே. (173)

செல்லுகின்ற தொடைநரம்பு அழுந்த லாலும்
செயலான மலபந்தம் மிகநடையுஞ் சீதக்காத்து
மல்லுகின்ற உடம்புதான் நனைத லாலும்
மானிடர்க்குத் தானுமடா இந்த ரோகம்
கொல்லுகின்ற வாதநோ யுடைய மாதருக்கு
கொப்பெனவே பிரசவித்த பின்பு கேளாய்
அல்லல்செய்யும் குடைச்சல்தான் காண்ப துண்டு
அழகாக இராத்திரியில் அதிகங் காணும். (174)

அதிகமாய் நித்திரையும் வரா தய்யா
அதிலான துர்ப்பலந்தான் மிக வுண்டாகி
சதியாக ஒருகாலில் வாதங் கண்டு
சதைகள்தான் பிகுவாக இருப்ப தாலே

நிதியாக நோயாளி நொண்டி நொண்டி
நிச்சயமாய் நடப்பாரென்று அறிந்து கொள்ளு
மதியாக இந்தநோய் தீர வேண்டி
மைந்தனே மருந்தொன்று நிகழ்த்து வேனே. (175)

நிகழ்த்துவேன் சரீரந்தான் ஸ்தூல மானல்
நிர்ணயமாய் யடிக்கடிதான் பேதிக் கீய்ந்து
அகத்திலுள்ள மாமிசத்தின் பதத்தைத் தீர்த்தால்
அப்பனே வியாதிதா னகலும் பாரு
சுகங்கெட்ட சரீரமது சுட்கித் தோன்றில்
சுகமான ஆகாரம் அயச்செந்தூர மீவாய்
செகத்திலுள்ள வியாதிக்கு மேல்பூச்சுத் தைலம்
செயலாகச் சொல்லுகிறேன் செம்மை கேளே. (176)

கேளடா வியாதிக்கு அபின் தைலம்
கெடியான கற்பூரத் தைலம் தேய்ப்பாய்
வாளடா லேபனங்கள் அசுவகெந்திச் சூரணம்
வளமான வச்சிரபிசகுடி தைல மப்பா
நாளடா விடமுட்டித் தைலம் நாபி
நலமான இவைகளைத்தான் தேய்ப்பா யாகில்
மூளடா வியாதியெல்லாந் தீர்ந்து போகும்
முக்கியமாய்ச் சூரியா வர்த்த வாதங்கள். (177)

## சூரியா வர்த்த வாதம்.

வாதமடா சூரியாவர்த்த வாத ரோகம்
வன்மைதனைச் சொல்லுகிறேன் மைந்தா கேளு
தீதமடா ஒருபுறத்துப் புருவம் நெற்றி
தேள்கொட்டி னப்போலத் தோன்றும் பாரு
வேதனைகள் செய்யுமப்பா குமட்ட லோடு
வெகுவான துர்ப்பலமே யதிகங் காட்டும்
நீதமுடன் பிரதிதினம் உதயத்திற் கண்டு
நிச்சயமாய் மத்தியானம்வரை யதிக மாகி. (178)

## திமிர் வாதம்.

வரிசையாய்த் திமிர்வாதம் வன்மை கேளாய்
வகையான சரபத்தின் நரம்புக் கப்பா
சரியான உணர்ச்சிதான் கெடுவ தாலும்
சலிக்காத பஞ்சேந்திரிய நரம்புக் கப்பா
குறியான உச்சிதான் கெடுவ தாலே
குடிகெடுத்த திமிர்வாதம் உண்டாகும் பாரு
விரியான விடமுட்டித் தைலம் தேய்க்க
விட்டோடிப் போகுமடா திமிர்வாதந் தானே. (179)

## தலை நோவு உண்டாகும் விபரம்.

பாரேநீ தலைவலிதா னுறு விதங்க ளுண்டு
பண்பாக ஒவ்வொன்றும் பகரக் கேளாய்
கூறேநீ தலைச்சதையைப் பற்றி யொன்று
குறிப்பாக எலும்பினுட மேலே யப்பா
சீராக மூடிக்கொண்ட சிரசி லப்பா
சிறப்பான சவ்வைப்பற்றிய தலைநோ வொன்றும்
நேரான பரிசத்தின் நரம்புக் கப்பா
நிச்சயமாய்ப் பற்றியதோர் தலைநோ வொன்றே. (180)

ஒன்றான மூளையில்தான் இரத்தஞ் சேர்ந்து
உண்டாகும் தலைநோவின் உண்மை கேளாய்
நன்றான அக்கினியாம் மந்தத்தி னாலே
நாடிவரும் தலைநோய் தானென்றே யாகும்
கன்றான மூளைநோய் தன்னா லப்பா
காணுகின்ற தலைநோய்தா னென்றே யாகும்
அன்றான ஆறுவித நோயின் நேர்மை
அன்புடனே நீயறிய அறைகு வேனே. (181)

அறைகுவேன் சதையைப்பற்றிக் காணும் நோயின்
அப்பனே வேதனைசிரசில் முற்றுங் காணும்
தெரிகுவாய் வலியதுதான் தணிந்து காணும்
தெளிந்தவிரு புருவமுந் தாழ்வாய்க் கட்டைச்

சரியாக அசைப்பதி னாலு மப்பா
 சதைகளைத்தான் அழுத்துவதி னாலு மப்பா
பரிவாக விரலதினால் தட்டுவதி னாலும்
 பண்பாக நோயதுதா னதிகரிக்கும் பாரே. (182)

பாரேநீ அப்போது முகம்பிடரி தோளும்
 பக்குவமா யின்னும்பல விடங்களில் தானும்
சீரான நோயதுதான் தொடர்ந்து காட்டும்
 தெளிந்ததொரு இன்னோய் வருங்காரணத்தைக் கேளாய்
கூரான சீதளமே காரணமே யாகும்
 குவலயத்தில் நீயிதற்கு மருந்து கேளாய்
நேரான வாதநோய்க்குச் செய்யும் வேலை
 நிச்சயமாய்ச் செய்திட்டால் தீரும் பாரே. (183)

தீருமடா தலைவலி எலும்புமேலே யப்பா
 திறமாக மூடியிருக்கும் சவ்வைப் பற்றி
சாருமடா காணுகிற தலைநோய் தானே
 சதிராக ஓரிடத்தில் தங்கிக் கொண்டு
சீருமடா அழுத்தினால் நோயதி கரிக்கும்
 சிறப்பான சதையசைத்தால் நோயதிக மாகும்
தேரினதோர் மாரெலும்பு காலெலும்புக் குள்ளும்
 திறமாக நோய்கள்தான் செல்லும் பாரே. (184)

செல்லுகின்ற நோய்கள்தான் ஓரிடமே தங்கில்
 செயலான விக்கலது கொஞ்சம் காணும்
அல்லல்செய்யு மனக்கவலை யாலு மப்பா
 அழகான சீதளத்தி னாலு மப்பா
தொல்லை செய்யும் மேகரோகத்தி னாலும்
 தொலையாத இந்தநோய் வருவ தாகும்
கல்லல்செய்து கலைத்திடவே மருந்து கேளாய்
 கனமான துர்மலத்தைப் போகி க்டாயே. (185)

ஆனதொரு பரிசத்தின் நரம்புகளைப் பற்றி
 அப்பனே காணுகின்ற தலைநோயுந் தான்
ஊனமில்லாப் புருவத்தில் தானு மப்பா
 உற்றதொரு நாசியின் பக்கம் யாவும்

வேனதொரு வேதனைகள் மிகவே காணும்
வெப்பமுடன் ஒருபுறத்தில் சிரசு நோவும்
நாணமில்லா முகமுமொரு புறமே நோவும்
நலமான சிரமுகம்நோய் தோன்றுங் காணே. (186)

தோன்றுமடா வேதனைதான் சீதசுரம் போல்
துங்கமுடன் விட்டுவிட்டுக் கிரம மாக
ஊன்றியே நாள்தோறும் தவறுமல் காணும்
உள்ளபடி நிறையன்றிச் சிலநாள் போகும்
சான்றோர்கள் சொற்போல மறுபடியுங் காணும்
சாதகமாய்ச் சிலருக்கு அடிக்கடியே காணும்
தோன்றினதோர் இன்னோயை ஒருத்தலை நோயென்று
தொல்லுலகோர் திண்ணமாய்ச் சொல்லு வாரே. (187)

சொல்லியதோர் இந்நோய்க்குக் காரணமே தென்னில்
சுகமான சீதளத்தின் விடக்காற் றுலும்
வல்லயம்போற் காணுமெனச் சொன்னர் முன்னோர்
வகைதீர மருந்துவகை இன்ன தென்று
தொல்லுலகிற் சொல்லுகிறேன் மைந்தா கேளு
தொகையான பாடாண முதலா யுள்ள
சல்லியம்செய் மருந்துகளை யிய்ந்தா யானல்
சதாகாலம் அணுகாது சடலத் தோர்க்கே. (188)

அணியவரும் இரத்தந்தான் மூளையிற் சேர்ந்து
அப்பனே காணுகின்ற தலைநோ யிற்றுன்
குணிதமுடன் வேதனைகள் முக்கியமாய் நெற்றி
கொப்பெனவே பிடரி இவைகளிலே தோன்றும்
துணிந்துவரும் திரேகத்தில் இரத்தம் விம்மி
துரிதமுடன் முகமுதலாய்க் கண் சிவந்து
அணியான நாடிதான் பருத்துக் காட்டும்
அப்பனே முகக்களையுஞ் சோர்ந்து போமே. (189)

போமேதான் இதற்குவளம் மருந்து கேளாய்
பொங்கமுடன் கன்னத்தின் பொரியதனில் தான்
ஆமேதான் இரத்தத்தை யெடுத்தால் நன்மை
அப்பனே அடிக்கடிதான் பேதிக் கீய்ந்து

சாமேதான் கடும்பத்தியந் தன்னி லப்பா
சதிரான திரேகத்தில் இரத்தம் மிஞ்சில்
ஓமேதான் இந்தநோய் போகு மென்று
உறுதியாய்ச் சொல்லுகிறேன் உண்மை பாரே. (190)

பாரேநீ அக்கினி மந்தத்தி னாலே
பரிவுடனே காணுகிற தலைநோய் தானும்
கூறான வலதுகண் மேலே யேனும்
குறிப்பாக இடதுபுறம் கன்னப் பொரியிலேனும்
நேராக நெத்தியின் மேலே யேனும்
நெறியுடனே வேதனைகள் காட்டும் பாரு
கூறுகிறேன் நோயாளி காலையில் தானப்பா
குறிப்பாக எழுந்துவரும் போது காணே. (191)

காணுகின்ற நோயதுதான் அற்ப மாகில்
கதிப்புடனே போசனந்தான் செய்தால் தீரும்
பேணிவரும் வியாதிதான் பெலமே யானல்
பெலமாக ஓரிடத்தில் வேதனையே தங்கும்
தோணியே குமட்டலுடன் வாந்தி கண்டு
கொதிப்பாக புத்தி மாருட்டங் காணும்
காணுகின்ற பார்வைதான் மந்த மாகிக்
காதுதனில் இரைச்சலுடன் வேதனையு முண்டே. (192)

உண்டான பித்தநீர் வாந்தி யானல்
உத்தமனே தலைநோய் தானுடனே நிற்கும்
செண்டான வயிற்றில் வாய்வு கொண்டு
செயலாக உபத்திரவத்தை உண்டு பண்ணி
பண்டான இந்நோய்தான் மந்தத் தாலும்
பரிவாக அடிக்கடி பேதிக்கீய்ந்த தாலும்
கண்டிதமா யுண்டாகு மென்று நீதான்
கருத்துடனே சொல்லுவாய் கண்டு கொள்ளே. (193)

கண்டுகொள்ளு மூளையுட வியாதி யாலே
கதிப்பாகக் காணுகிற தலைநோய்க்கே தான்
உண்டாகும் குறியதனைச் சொல்வேன் கேளாய்
உத்தமனே வேதனைதான் தலைக்குள் நோவும்

சண்டையுடன் சிந்தனையும் சிரத்தை மெத்த
சதிராக அசைப்பதினால் நோய் அதிகமாகும்
துண்டாக வியாதியால் சிலபேருக் கப்பா
துடிப்புடனே இசிவுசன்னி பாரிசவாதங் காணுந்தானே.

தானான சுரம்சயம் காதுநோ யாலும்
தருவான பல்வலிகள் ஈர்நோ யாலும்
ஊனான சூதகத்தின் அதிகத் தாலும்
உத்தமனே உஷ்ணமுதல் வாய்வி னாலும்
மானான கவலையின் யேக்கத் தாலும்
மகத்தான குன்மநோய் வருவ தாலும்
தேனான இந்நோய்தான் வருகு மென்று
தெளிந்துநீ யதையறிந்து சொல்லு சொல்லே. (195)

சொல்லுகிறேன் அதற்குவகை மருந்து கேளாய்
சுயமான மூளையில்தான் இரத்தம் பொங்கி
அல்லல்செய்து காணுகின்ற தலைநோய்க் கப்பா
அப்பனே அட்டையிட்டு இரத்தம் வாங்கி
வல்வினைகள் தீருதற்குப் பேதிக் கீய்ந்து
வகையான துர்நீரை வெளியே போக்கி
தொல்வினைகள் தீருதற்குப் பத்தியம் வைத்துச்
சுயமான வீரத்தின் மெழுகீ வாயே (196)

சுயமான தலைவலிக்குக் காரணங்கள் மெத்தச்
சொல்லுகிறேன் அதனுடைய விபரங் கேளு
சயரோகம் சுரரோகம் வந்த போது
சதுரான காதுவலி பல்லின் ரோகம்
மயமான இந்தநோய் வருகும் போது
மகத்தான தலைநோய்கள் வந்து நேரும்
பயமான முதல்ரோகம் நிவர்த்தி யானால்
பண்பான தலைநோய்தான் தீரும் பாரே. (197)

பாரேநீ சூதகத்தால் தலைநோய் கண்டால்
பண்பான அயங்கொடுத்தால் தீரு மப்பா
கூடுரன காதுநோய் தலைநோய்க் கப்பா
கொப்பெனவே கைகளைத்தான் தலைமேல் வைப்பாய்

சீராக நோயதுதான் தீரு மென்று
　　சிறப்பாக இன்னமொரு மருந்து கேளு
நேரான குளிர்ந்தநீர் பாலே யேனும்
　　நிசமாகத் தலையிலிட்டால் தீருந் தானே. (198)

தானான இன்னமொரு மருந்து கேளு
　　தயவான சுக்குடனே திப்பிலியுங் கூட
மானான மஞ்சளுடன் சதகுப்பை மிளகு
　　மகத்தான கற்பூர மொன்றாய்ச் சேர்த்து
தேனான ஒருநிறையாய்ச் சேர்த்துக் கொண்டு
　　தெளிவான குன்றுமணி இலைச்சார் விட்டு
ஊனாக மைபோல அரைத்து மப்பா
　　உறுதியுள்ள கருந்துணியில் தடவிப் போடே. (199)

போடேநீ உருட்டியதைத் திரியாய்ப் பண்ணிப்
　　பொங்கமுடன் கொளுத்தியதின் புகையை வாங்கே
கூடோடே தலைவலிதான் விட்டுப் போகும்
　　குறிப்பாக இன்னமொரு மருந்து கேளு
அடேநீ அபின்சுக்கு சாம்பி ராணி
　　அடைவான கஸ்தூரி மஞ்சள் கூட
நாடேநீ யிதையரைத்துப் பத்துப் போட்டால்
　　நலமான தலைவலிதான் நாடா தோடும். (200)

ஓடிவிட அதற்குச் சந்தனாதி செய்து
　　உறுதியாய் அடுத்தடுத்து மூழ்கி வந்தால்
நாடாமற் போய்விடும் பகரும் நோய்தான்
　　நலமான வேதுகளால் போகு மப்பா
தேடிவா மாவிலிங்கப் பட்டையைத் தான்
　　திறமாக இடித்துவொத் தனமே போட்டால்
ஓடிவிடும் தலைநோய்கள் உடனே மைந்தா
　　ஒருநொடியில் தீர்ந்துவிடும் உண்மை பாரே. (201)

## கிராணி.

பாரேநீ கிராணிவகை யாருக்கு மப்பா
　　பக்குவமா யுண்டாகும் விதத்தைக் கேளாய்
ஊரேநீ நாட்சென்ற சீதபே திக்கு
　　உத்தமனே கிராணியென்று உறுதி சொல்லு

பேரான பெருங்குடலுக்கும் மலக்குட லுக்கும்
பெலமான வதின்சிலேட்டும சவ்வுக் குந்தான்
காரேநீ கொதிப்பினுல் இரணமுண் டாகி
கண்டிப்பாய் இந்நோய்தான் பிறக்குங் காணே. (202)

காணடா மந்தத்குடல் சவ்வுக் குந்தான்
கதிப்பான உஷ்ணந்தான் செல்லு மப்பா
ஊணடா வியாதிதான் அதிக மானல்
உட்குடலில் துவாரமுண் டாகும் பாரு
பேணியே வப்போது சுரமுண் டாகும்
பெலமான திரேகந்தான் தளர்ச்சி காணும்
கோணடா பெருங்குடலின் இரணந்தா னப்பா
பொங்கமுடன் சிறுகுடலிற் செல்லுந் தானே. (203)

தானுக உண்டாகும் விதத்தைக் கேளாய்
தரணிதனிற் குளிர்ச்சியுடன் விடசத்துத் தானும்
தேனுக மிகுதீனி புசித்த லாலும்
திரண்டசனக் கூட்டத்தில் போவ தாலும்
மானுன சீதசுரங் காணும் போதும்
மகத்தான இந்தநோ யுண்டா மென்று
கோனுன நூல்தனிலே பெரியோர் சொன்னுர்
கொற்றவனே யதினுடைய குணத்தைக் கேளே. (204)

கேளடா முதலில்தான் வயிற்றி லப்பா
குறிப்புடனே மந்தந்தான் உண்டாம் பாரு
வாளடா குடல்முறுக்கும் வேதனையுங் காட்டும்
வளமான மலபாதை யடிக்கடியே வுண்டாம்
தேளடா போனவுடன் வேதனைதான் தீரும்
தெளிவான வியாதிதான் பலமாகும் வேளை
பாளடா குடலில்தான் இரணமுண் டாகிப்
பண்பாக அடிக்கடிதான் பேதி போமே. (205)

பேதிதான் போனபின்பு இளைப்புண் டாகும்
பெலமான மலத்தில்ரத்தஞ் சீதங் காணும்
ஆதியென்ற மலந்தானும் உண்டை கட்டி
அப்பனே தீய்ந்துஅது புழுக்கை போலாம்

வாதையுடன் மலந்தானு மிறங்கு மப்பா
வன்மையுடன் கடுப்புடனே முக்கல் காணும்
வாதிமனம் அலைவதுபோல் மனது மெத்த
வன்மையுடன் வேதனைகள் படுவான் பாரே. (206)

பாரடா மலமதுதான் துர்க்கந்த மாகி
பண்பாகக் கறுப்புடனே பச்சைநிறங் காட்டும்
ஊறுகின்ற மூத்திரப்பை கொதிப்புக் கண்டு
உத்தமனே மூத்திரந்தான் செவந்து மெத்த
தேரேநீ யடிக்கடிதா னிறங்கும் பாரு
தெளிவாகச் சிலவேளை நீர்சுருக்குக் காணும்
சீரான நாடியது தீவிரமாய்ச் சென்று
சிறுத்திருக்கும் நேர்மைதான் கண்டு கூறே. (207)

கூறுன திரேகந்தான் சோரசோரப் போடு
கொதிப்புடனே உலர்ந்திருக்கும் குறியைப் பாரு
மாறுகத் தாகந்தான் அதிக ரிக்கும்
மகத்தான பசியுந்தான் ஒடுங்கிப் போகும்
தீராத வேளைக்குக் குறியைக் கேளாய்
தீறமான மூச்சுந்தான் பிடித்த முண்டாம்
நாரான துர்ப்பலந்தான் அதிகங் காணும்
கண்டிப்பாய் நாடியுந்தான் கெட்டுப் போமே. (208)

போமேதான் வயிற்றின்மேல் கையை வைத்தால்
பொங்கமுடன் இரணமாகி இருக்கு மப்பா
ஆமேதான் நாவுலர்ந்து சிவந்துமினு மினுப்புண்டாம்
அப்பனே நித்திரைதான் வாரா தய்யா
பாமேவும் மலமதுவும் நீராய்ப் போகும்
பக்குவமாய்த் துர்க்கந்தம் விக்கல் ஆயாசங்காணும்
பூமேவுந் திரேகந்தா னிளைப்புக் கண்டு
புவியைவிட்டு மரணந்தான் உண்டாங் காணே. (209)

உண்டாகும் பேதிதான் உக்கிரமாய்க் கண்டால்
உத்தமனே குடலுக்குள் துவாரங் கண்டு
நன்றுன குடல்சவ்வுத் தாபிதமே காணும்
நலமான ஈரலில்தான் சீக்கட்டிக் கொள்ளும்

பண்டான இரணமுலர்ந்து குடற்சுருங்கி னுக்கால்
பளிச்சென்று மலபந்தம் உண்டா மப்பா
சிண்டான சிலேட்டுமச்சவ்வு அழுகிப் போனால்
சிறப்புடனே சுரப்புக்கண்டு இறப்பான் காணே. (210)

காணுகின்ற ரோகந்தான் பழகி விட்டால்
கண்டிதமாய்ச் சீக்கிரத்தில் சிட்சைசெய்தா லுந்தான்
பூணுகின்ற ரோகந்தான் வசப்ப டாது
பொல்லாத குடற்சவ்வு சுருங்கிப் போனால்
ஆணிபோ லதிருக்கும் கிரந்திநோய் கொல்லும்
அப்பனே திரேகந்தா விளைத்துப் போகும்
சாணான திரேகந்தோ லுரிந்து போகும்
சதிராக ஒருகுணமாய் நில்லா தென்றே. (211)

நில்லாத ரோகந்தான் தீர வேண்டி
நியறிய மருந்ததனை நிகழ்த்தக் கேளாய்
பொல்லாத பேதிமுதல் பெலவீ னங்கள்
புண்ணியனே தீரவென்றால் மருந்து கேளாய்
சொல்லாத அயந்தானுங் கொடுத்தா யானால்
சுருக்குடனே வியாதிதான் தீரும் பாரு
நில்லாத பேதிதான் நிற்க வென்றால்
நீகொடுப்பாய்க் கபாடமதை நிசமாய்த் தானே. (212)

## அதிசார நொண்டி.

அதிசாரம் வாலாறு தன்னைக் கேளாய்
அம்புவியில் மானிடர்க்கு அறைந்தேன் பாரு
மதியுடனே பெருந்தீனி புசிப்ப தாலும்
மகத்தான பக்குவமில்லாப் போசனத் தாலும்
சதிசெய்யும் அசுத்தசலங் குடிப்ப தாலும்
சண்டாளத் துர்நாற்றங் கொள்ள லாலும்
மதியில்லா இருதயத்தின் பயத்தி னாலும்
மயங்கிடுங் குளிருடலிற் படுவ தாலும். (213)

மதியதுதான் உஷ்ணத்தில் போவ தாலும்
மகத்தான இக்கா ரணத்தைக் கொண்டு
கெதியற்ற விடசுரந்தா னுற்பத்தி யாகிக்
கெடியாகச் சயமுதல் பற்றும் நோயால்

சதிசெய்பு மதிசாரங் காணு மென்று
சகத்திலுள்ள மானிடர்கள் அறிய வேண்டி
விதிமுனிதான் விரிவாகச் சொன்ன ரப்பா
விதங்கண்டு மப்போது குறியும் பாரே. (214)

அப்போது குறிகேளாய் மைந்தா நானும்
அறைகிறேன் பேதியொடு குமட்டல் காணும்
தப்பில்லா நோயாளன் நாக்கி லப்பா
தான்மாவு படிதல்வாய் நாற்றங் காணும்
ஒப்பிதமாய் வயிறிரைச்சல் உண்டாம் பாரு
ஓயாத புடுங்கலுடன் புளியேப்பங் காணும்
செப்புகிறேன் அவனுக்கு முக்கல் காணும்
சென்மித்த மலமய்யா குழம்பாய்ப் போமே. (215)

போமடா மலமுடனே சீதந் தானும்
பொங்கமுடன் இரண்டுமே கலந்து கொண்டு
ஆமடா மலமதுவே நீரா யேனும்
ஆனதோர் நுரைத்தண்ணீர் தன்னைப் போலும்
மாமடா மாக்கரைத்த சலமாயேனும்
மகிழ்வுட னேபல விதமா யேனும்
பூமியிலே வசந்தகா லத்தில் தானும்
பொங்கமுடன் காணுகிற வேதியின் நேர்மை. (216)

அறிந்திடவே வகைதன்னைச் சொல்லக் கேளாய்
அப்பனே பித்தமது மிகுத்துக் காணும்
தெரிந்திடவே வயிற்றில்ரெம்ப வலியுண் டாகும்
தெளிவான காலதனிற் குறட்டுவலி காணும்
பரிவுடனே பலவீனம் இரத்தங் காணும்
பக்குவமாய் வாழுகின்ற மானி டர்க்கு
விரிவாக முன்விதித்த காரணத் தால்
வருமென வேவிண்டு சொன்னேன் நானே. (217)

சொல்லுகிறேன் உனக்காக இன்னங் கேளாய்
சுகமான நுரையீரல் இருதய வியாதி
கல்லீரல் துடிப்புடனே விரணங் காணும்
கனமான அன்னசய வியாதி தனிலும்

கொல்லும் பின்விட சுரத்திற் ருனும்
குணமான குடலின்கிரந்தி வியாதி தனிலும்
அல்லல்செயும் க்ஷயமுடனே உள்மூ லந்தான்
ஆகியநோ யதில்ரத்தங் காணு மென்றே. (218)

மந்தமென்ற பதார்த்தந் தன்னுல்க் காணும்
மகத்தான பேதிக்குக்கொஞ்சம் வாந்திக் கீவாய்
பிந்தியே செய்யுமருந் தொன்று கேளாய்
பெலமான காசுக்கட்டி நெல்லிடை பத்துங்கூட்டி
அந்தமுள்ள கருவாப் பட்டை யோடு
அறைகிறேன் நெல்லிடை பத்துங் கூட்டி
சுந்தரமாய் அரைநெல்லு சேர்த்து மேதான்
சுகமான தேனிலரைத்து மூன்று செய்வாய். (219)

மூன்றுவேளை யிம்மருந்தை ஈய்ந்தா யானுல்
முக்கியமாய்ப் பேதிநின்று ஓடும் பாரு
சான்ருேர்கள் சொன்னதொரு வாகடந் தான்
சரியாக மூன்றுநாள் கொடுப்பா யானுல்
ஊன்றினதோர் நோயதுதான் தீரும் பாரு
உத்தமனே வுடற்கி யாழம் கேளாய்
நின்றதோர் நிலவேம்புக் கியாழம் ஈய்ந்தால்
நிலையான திரேகந்தான் பெலக்கும் பாரே. (220)

## பித்த பாண்டு.

அம்புவி தனில்வாழு மானிடர்க்கு அளித்த
பாண்டுவின் நேர்மை தனைத்
தம்பிரான் சொல்கிறேன் தக்க விபரமாய்
தன்மை தனைக் கண்டு கொள்வாய். (221)

கொள்ளடா காரணம் விள்ளுகிறேன் கேளாய்
குறித்ததோர் மத்த குடலுக்குத் தான்
மெள்ளவிழுவது தடைப் பட்டுப் போனபின்
மெதுவாகப் பித்தப் பையில் சேரும். (222)

சேர்ந்துமே இரத்தத்தில் கலந்து கொண்டே
பின்பு செயலான பித்தபாண்டாய் மாறும்
ஊர்ந்துமே பார்ப்பாய் இதுதான் காரணம்
உள்ளபடி நான் சொன் னேனே. (223)

இன்னொரு காரணம் இயம்புவேன் கேளாய்
இன்ப முள்ள என் சீடனே நீ
பொன்மய மானயிரல் தனில் யெட்டுப்
பித்த நீரைச் சுரப்ப தில்லை. (224)

சுரக்கா ததினால் பித்தந்தானே பின்பு
உள்ளுக்குத் தங்கியே இரத்தத்தில் நின்று
திரக்க மாகவே திரேகத்தைப் பூரிக்க
குணந் தன்னைப் பாரே (225)

பாரேநீ பித்தத்தில் கல்லுண் டாகியே
மத்தக் குழலைத்தான் அடைத்துக் கொண்டு
ஊறின பித்தம் குடலில் விழாமலே
உள்ளுக்கு நின் றிட்டால் பித்தபாண்டு வாச்சே. (226)

ஆச்சடா பித்தநீர் இறுகின பின்பு
அநின்று கல்லுண்டாம் பாரு
போச்சடா பித்தப் பையி லநேகம்
பொல்லாத கல்லுக விருக்கும் பாரே. (227)

பாரடா பித்தக்குழல் சுருங்கின பின்பு
பக்குவ மாகவே மலபந்த முண்டாய்
காரடா குழல்நிறைந்து பித்தக் குழல்
கண்டித மாகவே மூடிக் கொள்ளும். (228)

ஆனபின் நேர்மையால் பித்தபாண்டு கண்டு
அழிக்குதே மானிடர் திரேகந் தன்னை
தேனனை குன்மம் தன்னைக்கண்டு உரைக்கிறேன்
தெளிவுடன் நீயதைக் கண்டு கொள்வாய். (229)

கண்டுகொள் நீயேதிரேகம் நகம் மூத்திரம்
கருத்துடன் மஞ்சளாய்க் காட்டு மய்யா
துண்டினில் பட்ட மூத்திரக் கறையுந்தான்
பசுமைநிறங் கண்டு காட்டுங் காணே. (230)

காணடா மலம்வெளுத்துக் களிமண் போலக்
கனத்த திரேகத்தில் நமைச்சல் காணும்
வேண்டியமட்டும் ஆயாசம் தூக்க மயக்கமுடன்
கோபம் வந்து தோன்றும் (231)

தோன்றும் வாய்கசப்பு மேதியுற்ற நாடியும்
தோன்றிடும் கண்களும் மஞ்சளாகும்
யின்றதோர் மூளையும் கெட்டுப் புத்திமாறி
இளைக்குமே திரேகந்தான் க்ஷணத்துக் குள்ளே. (232)

க்ஷணத்துக்குள் தீர்ந்திட மருந்து கேளாய்
சொல்வேன் செயலான பேதிக் கீய்ந்தாயானால்
பணப்பை போலொத்த பித்தப் பைக்குள்தான்
பளிச்சென்று கீழ்நோக்கி விழுகும் பாரே. (233)

விழுந்தபின் திரேகந்தான் சுபாவம் கொண்டு
மெல்லவே ஆரோக்கியம் கொண்ட பின்பு
அழுந்தின அயமுதல் செந்தூரம் தந்துமே
அப்புறம் வியாதியை நீக்குவாயே. (234)

## சுரக்கட்டி.

கேளடா சுரக்கட்டி விபரந் தன்னைக்
கிருபையுடன் சொல்லுகிறேன் நன்றாய்க் கேளு
நாளடா இடதுவிலா வெலும்புக்குக் கீழாய்
நலமான பிலிகா ஸ்தானமிருக்கு மப்பா
வாளடா அதற்குள்ளே இருந்து வாழும்
வளமான பிலிகந்தான் பருக்கும் நோய்க்குத்
தேளடா சுரக்கட்டி யென்று பேராம்
திறமாக அதற்குள்ளே வலுவாய் நீருமுண்டே. (235)

உண்டான தானத்தை அழுத்திப் பார்த்தால்
உத்தமனே கட்டிதான் விரலுக்குத் தோன்றும்
நண்டான கட்டிதான் பெரிதே யாகில்
நலமான வயிறுதான் பெருத்துத் தோன்றும்
பண்டான கட்டிதான் சிறிதேயானால்
பரிசுத்த வயிறுதான் சிறுத்துக் காட்டும்
சென்டாக குளிர்காய்ச்சல் வருகின் றோர்க்குச்
செயலாக இன்னோய்தான் காணும் பாரே. (236)

பாரடா குணந்தன்னைச் சொல்லக் கேளாய்
 பண்பான திரேகந்தான் சுகமி ராது
காரடா கண்ணிரண்டும் பிரகாசந் தோன்ருது
 கண்ணியமாய் வாய்கறுத்து வெளுத்துக் காட்டும்
கூருன திரேகத்தில் இரத்தம் தோன்றும்
 குறிப்பான அக்கினிமந்தம் மலமுங் கட்டும்
மாருன மலத்தில்துர் வாசனை காட்டும்
 வகையுடனே சீனமுதல் ரணமு மாமே. (237)

ஆமடா வியாதிதான் நாட்பட்டுப் போனல்
 அப்பனே இரத்தமது காணும் பாரு
ஓமடா இதற்குத்தான் மருந்து கேளாய்
 ஓராயிரஞ் சென்ற வேம்பின் சூரணம்
நாமடா நீயீய்ந்தால் நலமே காட்டும்
 நல்ல-அய ஊட்டமுத லெல்லா மீய்ந்தால்
தேமடா திரேகந்தான் தெளிவுண் டாகும்
 தினந்தினமுந் தேறியே வருவான் காணே. (238)

## மகோதரம்.

காணடா மகோதரத்தின் விபாங் கேளு
 கடிதான குடற்சவ்வில் நீரே சேர்ந்து
பூணியே வயிறுதான் பெருத்துக் கொண்டு
 பொல்லாத மகோதரம் உண்டாம் பாரு
பேணியாய் இன்னேய்வரும் வரலாறு தன்னை
 பிடித்தமாய்ச் சொல்லுகிறேன் பெலமாய்க் கேளு
யிணியே யீரல்மூத்திரக் குண்டிக்காய் நோவு
 இதமான இருதயம் பிலிகா வியாதியாமே. (239)

வியாதியாம் குடற்சவ்வு வியாதி யாலும்
 விரிவான அற்பரோ கங்க ளாலும்
மயாதியாம் யீரல்மூத்தி ராசயன மதனுல்
 மகத்தான நோவுதான் வருகு மப்பா
கயாதியாம் அதினுடைய குணத்தைக் கேளாய்
 கனமாக வயிறுதான் பெருத்துத் தோன்றும்
சயாதியாச் சரீரம் சாஷ்மித்துக் கொள்ளும்
 சதிரான முகந்தானும் வாடும் பாரே. (240)

பாரடா வயிற்றின் தோல் மினுமினுப்புக் காட்டும்
பண்பான நரம்பெல்லா மேலே நோக்கும்
கூறடா இன்னேய்தான் வருகும் வேளை
கொத்தவனே நீர்க்கோர்வை காண்ப துண்டு
காரடா காலில்நீர் சுரந்து கொள்ளும்
கனமான மூத்திரா சயநோயி லப்பா
நேரடா முகம்கையில் நீர்காண்ப துண்டு
நீயாக அதைஅழுத்தில் பள்ள மாமே. (241)

ஆமடா அப்போது மூத்திரந்தான் குன்றும்
அப்பனே அதிலுப்பு மெத்தத் தோன்றும்
ஓமடா ஈரல்தான் பத்திக் கண்டு
உத்தமனே இந்தநோய் வந்த தானல்
நாமடா மூத்திரத்தில் இரத்தம் தோன்றும்
நலமான மூத்திரக் குண்டிக் காயின்
தேமடா இன்னேய்தான் வருமே யாகில்
தெளிவான மூத்திரத்தில் பசையும் உண்டே. (242)

உண்டான உறுப்புகளின் வியாதி தன்னில்
உத்தமனே இன்னேய்தான் காணு மாகில்
நண்டான அசாத்தியமாய்ப் போகு மப்பா
நலமான குளிர்ச்சியால் மூத்திரக்குண்டிக் காயில்
செண்டான இரத்தந்தான் சேர்ந் தேனும்
சிறிதான இருதயநடை கலக்கத் தாலும்
பண்டான பித்தத்தின் பாண்டு வாலும்
பலமாக இதுவந்தால் தீரும் தானே. (243)

தானகச் சேர்ந்திருக்கும் நீரைப் போலத்
தான்வயிறு பெருக்குமடா யாருக்குந் தான்
மானக வயிற்றின்மேல் ஒருபக்க மாக
மகிழ்வுடனே கைவைத்து மற்றோர் கைவிரலால்
தேனக அதற்கெதிரே தட்டி னக்கால்
தெளிந்துநிற்கும் சலந்தத் தளிக்கும் பாரு
கோனன மேல்வயிற்றைத் தட்டிப் பார்த்தால்
குடிகெடுத்த குடல்மேலே மிதக்கும் பாரே. (244)

மிதக்குமடா வயிறுதான் மத்தளத்தைப் போல
மிகுசப்த மிடுமடா வியாதி யோர்க்கு
சதித்துவிடும் நீரதுதான் வயிற்றுக் குள்ளே
சதிராக இரண்டுமுதல் பத்துப்படி உண்டு
கதித்துவரும் இந்தநோய் தீர வேண்டி
கனமான நீர்ப்பேதிக் கீவா யானல்
குதித்துமே போகுமடா இந்த நோய்தான்
குணமாக இன்னம்வேறு விதங்களுண்டே. (245)

## கணை ரோகம்.

உண்டான கணைரோகம் சொல்லக் கேளாய்
உத்தமனே மணிக்குடலி லிருக்கின்ற தோர்
நண்டான ரோகத்தின் வியாதிக்குத் தான்
நலமான கணைரோகம் என்று பேராம்
திண்டான உதிரச்சய மென்றே சொல்வாய்
தீங்கில்லா மணிக்குட லின்வென் பதனில்
செண்டாகக் கிரந்தியனு சரித்துப் பின்பு
சொரூபத்தை மாற்றிவிடும் பால ருக்கே. (246)

பாலருக்குக் குடல்வழியாய்ப் போகு கின்ற
பலமான ரசவாக்கினிக் குடலடைத்துக் கொண்டு
காலன்வந்து பிடிப்பதுபோல் பொரிக்காட் டாமல்
கனமான அன்னரசம் தனியாய்த் தீரும்
மாலவனே கோளங்கள் சிலருக்குத் தான்
மகவாகப் பெருத்துமே கல்லுப் போலும்
சீலமுடன் சிலருக்கு மிருது வாயும்
சிறப்பாகப் பாலருக்கு இன்னேய் காணும். (247)

காணுகின்ற குறியதனைச் சொல்லக் கேளாய்
கருவான குழந்தைகள்தான் கால்முடக்கிக் கொண்டு
பூணுகின்ற வயிற்றோடு அணைத்துக் கொள்ளும்
புகழான உதடிரண்டும் சிவந்து காட்டும்
வாணிபேசும் வாயோரம் புண்க ளுண்டாம்
வகையான உதடெல்லாம் வெடிப்புக் காணும்
நாணிநிற்கும் மலங்கள்தான் நிறமில் லாமல்
நலமான பேதியுந்தா னுகும் பாரே. (248)

பாரடா மலங்கெட்டு துர்வாடை தோன்றும்
பலமான வயிறுபெருத்துப் பிகுவாய்த் தோன்றும்
கூறடா அன்னரசம் சரியாய்ச் செல்லாததாலே
குணமான சரீரந்தான் உலர்ந்து போகும்
தேரடா திரேகந்தான் வெளுத்துக் காட்டும்
தெளிவான பலவீனம் அதிக மாகும்
நார்போலக் குழந்தைகள்தான் இளைத்துப் போகும்
நமனுக்கு உயிர்கொடுப்பான் என்று சொல்லே. (249)

## மூத்திரக் குண்டிக்காய் நோவு.

சொல்லுகிறேன் மூத்திரப்பை வியாதி தன்னை
சுருக்குடனே நீயறிவாய் சுகம தாக
அல்லுவேன் இன்னேய்க்குக் காரணமே தென்னில்
அதிகமாய்க் குளிரதிலே செல்வதாலும்
கொல்லுகின்ற மூத்திரப்பை தனிலே அய்யா
குடிகெடுத்த கல்லுகள் உண்டாவ தாலும்
மல்லுடனே அடிபடுதல் மருந்தி னலும்
மகத்தான உஷ்ணமருந் தருந்தில் வருமே. (250)

வருகின்ற குணமதனைச் சொல்வேன் கேளாய்
வாகான இடுப்பிலும் குண்டிக்காயிலு மப்பா
தெரிக்கவே வேதனைகள் செய்யும் பாரு
தெளிவான மூத்திரப்பைக் குழல்வழியாய்ச் சென்று
மரிக்கவே கழுத்துக்கு வருகுங் காலை
மகத்தான இடையுடன் பீசப் பையும்
குறிப்பான பீசமத்தியிலுள்ளே யேனும்
சுருக்குடனே வேதனைகள் காட்டுந் தானே. (251)

தானகத் தொடையில்தான் திமிருங் காணும்
தப்பில்லாப் பீசமது மேலுக் கேகும்
மானன மூத்திரந்தான் அடிக்கடியே யுண்டாம்
மகத்தான மூத்திரத்தின் குண்டிக் காயின்
தேனன மூத்திரக் குழல் வழியாய்த்
தெளிவாக வந்திறங்கி மூத்திரப் பையில்
ஊனன நரம்பெல்லாம் வேதனையே காட்டும்
உள்ளபடி சொல்லுகிறேன் உண்மை கேளே. (252)

கேளடா இச்சூலை வேதனை செய்யும்
கெடிதாக க்ஷணத்திலது மாறிப் போகும்
வாளடா அப்போது சுரமும் வாந்தி
வகையான குமட்டலுடன் தாகங் காணும்
தேளடா நாடிதான் விரைவாய்ப் போகும்
தெளிவான மலமதுதான் பந்த மாகும்
நாளடா வயிறுதான் மத்தள வோசை
நலமுடனே காட்டுமடா நண்ணிப் பாரே. (253)

பாரேநீ மூத்திரந்தான் குறைந்து அப்பா
பரிவாகச் சிவந்துஅடிக் கடியே காணும்
கூறேநீ அப்போது ரத்த மேனுங்
குறிப்புடனே சீயேனும் சிலவேளை காணும்
தேரேநீ இதற்குவகை மருந்து கேளாய்
தெளிவாக வெந்நீரின் ஒத்தனமே செய்வாய்
வாரேநீ விரோசனங்கள் பேதிக் கீய்ந்தால்
வகையாக லகுவாகும் வன்மை காணே. (254)

## குடல் சவ்வு ரோகம்.

காணடா குடல்சவ்வு ரோகந் தன்னை
களிப்புடனே நீயறியச் சொல்வேன் பாரு
பூணவே இன்னோய்க்குக் காரணமே தென்னில்
புகழான சிரசிலடி படுவ தாலும்
கோணவே குடலில்துவாரம் விழுவ தாலும்
குடிகெடுத்த அன்னாசயத்தில் ஓட்டையாவ தாலும்
யீணவே சீக்கட்டிக் கொண்டு தானும்
இதமாக உடைந்தபின் சவ்வில் போமே. (255)

போமடா குடல்தாபிதம் சினைப்பை வியாதி
குடிகெடுத்த அக்கிமுதல் இரத்தம் கெட்டு
நாமடா வியாதியினால் இன்னோய் தோன்றும்
நலமுடனே அதுசெய்யுங் குணத்தைக் கேளாய்
தாமடா முதலில்தான் நோயுண் டாகும்
தப்பாமல் வயிறெங்கும் வியாபிக்கு மப்பா
ஆமடா வயிற்றைத்தான் அழுத்தி னாக்கால்
அப்பனே வேதனைதான் மிகவுண் டாமே. (256)

உண்டாகும் சுரமுடனே குளிருண் டாகும்
உத்தமனே நடுக்கலுடன் ஆயாசங் காணும்
பண்டாகச் சிலருக்கு முன்கூ றன்றிப்
பளிச்சென்று காணுமடா சுரமும் முன்னல்
நண்டான அடிவயிறு மத்தியி லேனும்
நலமான அள்ளையிட பக்க மேனும்
முண்டான வேதனைகள் மிகவே காட்டும்
முக்கியமாய் இன்னம்வெகு குணங்க ளுண்டே. (257)

குணங்களைத்தான் சொல்லுகிறேன் நீயே கேளு
குறிப்பான திரேகத்தைத் தளர்ச்சி செய்யும்
அணங்கிநிற்கும் வயிற்றினிட சதைகள் கொஞ்சம்
அசைந்தாலும் அப்போது வலியுண் டாகும்
அணிந்துவரும் போர்வைத்துணி மேலே பட்டால்
அப்பனே வேதனைதான் உடனே தோன்றும்
சிணுங்கிநிற்கும் நோயாளி மல்லாந்து கொண்டு
சிறப்புடனே முழங்காலை முடக்குவான் பாரே. (258)

பாரடா வயிறுதான் பெருத்துக் கொண்டு
பண்பாகச் சூடுகொண்டு மத்தளச் சத்தமிடும்
கூறடா மலங்கட்டி வாந்தி காணும்
குறிப்பான திரேகந்தான் வறண்டு போகும்
நேரடா நாடியது மெதுவாய் ஓடும்
நிலையான சுவாசமது மெதுவாய்ப் போகும்
வாரடா விக்கல்கண்டு நாவின் மேலே
வளமான மாவுடனே முகமும் வாடும். (259)

வாடியே ஏக்கமுற்றுச் சிலநாள் சென்று
வயிற்றுட சத்தந்தான் மாறிப் பின்பு
கூடியே நீருண்டாய் விம்மிக் கொண்டு
குடிகெடுத்த மரணந்தான் வருகும் போது
ஆடியே வயிறுதான் பெருத்து ரெம்ப
அனுதியாம் நாடியது கெட்டுப் போயே
வேடியே வேகமாய் நடக்கும் போது
வெளிமுகமும் பின்முகமாய்க் காட்டுந் தானே. (260)

காட்டுகின்ற திரேகந்தான் குளிர்ச்சி யாகிக்
கனமான பிசுபிசுப் புண்டாய்ப் பின்பு
பூட்டுகின்ற வியர்வைதான் அதிகங் காணும்
பொல்லாத வியாதிகண்ட ஈரைந்து நாளில்
காட்டுக்கே போய்விடுவான் ரோகி யப்பா
கடினமா யதற்குள்ளே மருந்து செய்தால்
நாட்டிவிலே வாழ்ந்திட மருந்து சொல்வேன்
நலமாக நீயதனைத் தெரிந்து கொள்ளே. (261)

தெரிந்துகொண்டு அபினியிட கவாடந் தன்னைத்
தெளிவாகச் செய்துமே கொடுத்தா யானல்
பரிந்துமே தீர்ந்துவிடும் இந்த ரோகம்
பண்பாகத் தண்ணீர்பால் கொடுப்பா யப்பா
அறிந்துநீ போசனங்கள் செய்ய வேணும்
அப்பனே மந்தத்தின் பதார்த்த மாகா
குறைந்தபலம் வரவரத்தான் போச னத்தைக்
குணமாகக் கொடுப்பாய்நீ குணமாய்த் தானே. (262)

## அஸ்மரி ரோகம்.

தானென்ற மூத்திரத்தில் நறநற வென்று
தங்கியதோர் பொடியேனும் மணல்தா னப்பா
வானென்ற சிறியதொரு கல்லாவ தப்பா
வளமாக வந்துவிழும் நோய்க்குத் தானே
ஏனென்ற அஸ்மரிரோக மென்ற பேராம்
எளிதாகக் கல்லுகள்தான் விழுகும் போது
கோனென்ற குண்டிக்காய் மூத்திரக்குழ லப்பா
குணமான மூத்திரப்பை நீர்த்தாரை கேளே. (263)

கேளடா முன்குறியில் எரிச்சல் கண்டு
கெடியாக வேதனைகள் காட்டு மப்பா
வாளடா சிறியதொரு கற்கள் தானே
வளமான மூத்திரப்பை குழல்வழிப் படியாய்த்
தேளடா வரும்போது திரேகந் தன்னில்
தெரிப்பதுபோல் யிருவேதனை செய்யும் பாரு
நாளடா கற்கள்தா னிறங்கா விட்டால்
நலமான வேதனைதான் தீரும் பாரே. (264)

## மூத்திரப்பை சூடு ரோகம்.

பாரடா மூத்திரக் குண்டிக் காயின்
பதிவான மூத்திரப்பை நீர்தாரை தானும்
ஏரடா எதற்கேனும் வியாதி காணில்
இதமான கருப்பிணியில் மூத்திரப்பை தானும்
வாரடா கருப்பையை அழுத்த லாலும்
வளமான மூத்திரப்பை கெடுத லாலும்
கூறடா மூலத்தின் அழலை யாலும்
கொற்றவனே இன்னேய்தான் வருகும் பாரே. (265)

வருகுமடா சீரணத்தின் தொழில்தான் கெட்டு
வளமாக அதிகஉஷ்ணத்தி னலே யப்பா
மருவியே இன்னேய்தான் வருகும் வேளை
மானிடர்க்கு அடிக்கடிதான் சிறுநீர் காணும்
திருகியே அதையடக்க முடியா தப்பா
திரேகத்தில் பிரயாசை மிகவே காட்டும்
குறுகியே மூத்திரந்தான் இறங்கும் பாரு
குணமாக இதுதீர மருந்து கேளே. (266)

கேளடா போசனத்தைக் கிரமமாய்ச் செய்து
கெடிதான உஷ்ணத்தின் பதார்த்தம் தள்ளு
நாளடா சாராயம் முதலா யுள்ள
நலங்கெட்ட வஸ்துவெல்லாந் தள்ளிப் போடு
தேளடா அயமுதல் குளிரக் கரியான்
தெளிவான தேத்தான்நெய் முதலா யுள்ள
வாளடா வளமைகண்டு ஈய்ந்தா யானல்
வலுவற்று ரோகந்தான் நீங்கிப் போமே. (267)

## மூத்திரப்பை இசிவு ரோகம்.

போமடா மூத்திரப்பை இசிவு ரோகம்
பொங்கமுடன் சொல்லுகிறேன் நன்ருய்க் கேளு
நாமடா அடிவயிறு சிறுநீர்த் தாரை
நலமான ஆண்குறியின் நுனியில் தானும்

ஓமடா வேதனைகள் காட்டு மப்பா
உத்தமனே ரோகத்தில் தெரியாம லேதான்
போமடா சிறுநீர்தான் போவ துண்டு
பொங்கமுடன் நீரடைப்புக் காணும் பாரே. (268)

காணுமடா சிறுநீர்தான் வருகிருப் போல்
கண்டாலும் பேசத்தான் சக்தி யில்லை
பூணவே முக்கலுந்தான் காணும் பாரு
பொல்லாத சலப்பைக்கு இசிவு கண்டு
தோணவே விடாம லிருந்த தானல்
தொலையாத மூத்திரப்பை சுரப்பில் லாக்கால்
காணுகின்ற குறியெல்லாங் கண்டு பின்பு
கடினமாய் மரணந்தான் உண்டாம் பாரே. (269)

உண்டாகுங் காரணத்தைச் சொல்லக் கேளு
உத்தமனே மூத்திரத்தின் பையி லேதான்
நண்டான கல்லுகள்தான் இருக்க லாலும்
நலமான மூத்திரப்பை குண்டிக்காய் ரோகம்
திண்டான மலக்குடல் கருப்பாசய மான
தீங்கான ரோகத்தால் இந்நோய் காணும்
பண்டான அதிபோகம் சூதக சன்னி
பாழான ஆசனக்கிருமிநோயால் இந்நோய் தோன்றுங்
காணே. (270)

தோன்றினதோர் நோய்தீர மருந்து கேளாய்
தொல்லுலகில் மூத்திரத்தை வெளியே போக்கி
ஊன்றியே யிருந்திட்டா லதனைத் தானே
உத்தமனே வெளியேற்ற உபாயங் கேளு
சான்றோர்கள் சொற்படியே சிலாக்குப் போட்டால்
சதிராகக் கல்வெளிவருந் தன்மை பாரு
ஊன்றியே வெந்நீர்ஒத் தனமே செய்தால்
ஓடிவிடும் இந்நோய்தான் உண்மை பாரே. (271)

## மூத்திரப்பை வதம்ப ரோகம்.

உண்மையாய்ச் சொல்லுகிறேன் மூத்திரப் பையின்
உத்தமனே வதம்பரோகந் தன்னைக் கேளாய்
தன்மையுள்ள மூத்திரத்தை யடக்கிக் கொண்டு
தான்நேரம் இருப்பதனல் இந்நோய் காணும்

பண்டிதனே அதிசன்னி ரோகத் தாலும்
பக்குவமாய் தலையிற்காயம் படுவ தாலும்
கண்டிதமாய் முள்ளந்தண்டு நோவி னாலும்
கனமான இந்நோய்தான் காணும் பாரே. (272)

பாரேநீ குறிகுணங்கள் சொல்லக் கேளாய்
பதிவான குதத்தின்சதை ஸ்தம்பித்துக் கொண்டால்
கூறேநீ மலந்தான்தற் செயலாய்ப் போகும்
குடிகெடுத்த மூத்திரப்பையின் ஸ்தம்பத்தி லப்பா
நேராக மூத்திரந்தான் இறங்கா தப்பா
நிச்சயமாய் மூத்திரந்தான் அடைத்துக் கொள்ளும்
காரேநீ மூத்திரப்பை நிறைந்து விட்டால்
கதிப்புடனே துளித்துளியாய் விழுகும் பாரே. (273)

துளியான மூத்திரத்தில் உப்பே ரெம்பத்
துடிப்புடனே நாடியது ஒடும் பாரு
முழிப்புள்ள நாடிதான் பெலமே கெட்டு
முக்கியமாய் நாக்குமது அழுக்கடைந்து கொள்ளும்
சுழிமுனையின் தூக்கந்தான் கெட்டுப் போகும்
சுத்தமாய்ப் பசிதானு மிராது மப்பா
பழியாக உறக்கந்தான் அதிக மாகிப்
பளிச்சென்று பிராணன்தான் போகும் பாரே. (274)

போகின்ற மூத்திரத்தா லிந்த ரோகம்
பொங்கமுடன் வந்தக்கால் சிலாக்கை விட்டு
ஆகின்ற மூத்திரத்தை மெதுவா கத்தான்
அப்பனே தானெடுத்து வருவா யப்பா
வேகமாய் மூத்திரத்தை இறங்கச் செய்தால்
வெகுவாக இரத்தந்தான் வருகும் பாரு
பாகமுடன் நோய்தான்சீ ராகா விட்டால்
பக்குவமா கப்பேதிக் கீவாய் தானே. (275)

தானென்ற மூத்திரத்தைத் தங்காமற் செய்வாய்
தரணிதனி லேரோகந் தானு மப்பா
வானென்ற மூத்திரந்தான் தங்கிக் கொண்டால்
வளமான மூத்திரப்பைச் சவ்வுங் கெடுமே

மானென்ற வெடியுப்புச் சுன்ன மீய்ந்தால்
மகத்தான சலக்கட்டு உடனே தீரும்
தேனென்ற திரேகமது தெளிந்து பின்னே
தேறுவான் உலகினிலே தேறு வானே. (276)

## மூத்திரப்பை தாபித ரோகம்.

தேறினதோர் மூத்திரப்பை தாபிதரோ கத்தைத்
தெளிவாகச் சொல்லுகிறேன் திறமாய்க் கேளு
கூறினதோர் மூத்திரப்பையின் ஓரிடத்தி லேனும்
குறிப்பாகப் பைமுழுதும் தாபிதமே கொள்ளும்
ஆறினதோர் இந்நோய்தான் தற்செயலா யேனும்
அடைவாக யிடைக்குழியி லிருக்கும் பக்கத்து
கூறினதோர் உறுப்புகளின் வியாதி யாலும்
குறிப்பாக கல்லிருப் பதினூற் காணும். (277)

காணுகின்ற குறியதனைச் சொல்லக் கேளாய்
கனமான மூத்திரப்பை தானத்தி லப்பா
பூணவே வேதனைநீர்த் தாரை தன்னில்
புண்போலே எரிச்சலுந்தான் உண்டாம் பாரு
தோணவே அடிக்கடிதான் மூத்திரமே தோன்றும்
தெளிவான மூத்திரந்தான் குறைந்து காணும்
ஆணவே அகோரமாய்ச் சுரமும் காணும்
அப்பனே குமட்டலுடன் கவலை கொள்வான். (278)

கொள்ளுவான் அடிவயிற்றைத் தொட்டுப் பார்த்தால்
குணமான சிறுகட்டி தோன்றும் பாரு
அள்ளியே வேதனைகள் அதிக மாக
அப்பனே பக்கத்திலும் நீர்த்தாரையிலுந் தோன்றும்
மெள்ளவே அடிவயிற்றை அழுத்தி னுலும்
மெதுவாக ஆசனத்தில் விரலை விட்டுத்
தள்ளவே மூத்திரப்பை பின்புறத்தைத் தொட்டால்
தணியாத வேதனைகள் காட்டுந் தானே. (279)

காட்டுகின்ற மூத்திரந்தான் இறங்கி னுக்கால்
கனமான வேதனைகள் தணிந்து போகும்
நாட்டுகின்ற மூத்திரந்தான் சேர்ந்த போது
நலமான வேதனைகள் முன்போல் காட்டும்

பூட்டிவரும் மூத்திரப்பைக் கொதிப்பு அப்பா
புகழாக ஆசனத்தைப் பற்றும் பாரு
காட்டிடவே அப்போது முக்கல் காணும்
கண்டிப்பாய் நாள்மூன்றில் சொஸ்தம் செய்வாய். (280)

செய்குவாய் யொருமூன்றிற் சுகங்காணு விட்டால்
சுருக்காக வேதனைகள் அதிக மாகும்
உய்கின்ற சிறுநீர்தான் துளித்துளியாய்த் தோன்றும்
உத்தமனே மூத்திரப்பை சக்தி யற்று
வெய்கின்ற மூத்திரந்தான் உள்ளே நின்று
வேகமுடன் சுரமுந்தான் அதிக ரிக்கும்
கைநாடி குறைந்துமே ஆயாசங் கண்டு
கனமுடனே திரேகத்தில் சீதளமு மாமே. (281)

சீதளத்தால் வியர்வைதான் மிகவே தோன்றி
சிறப்பான விகாரந் தானுண்டா மப்பா
பேதமில்லா நாளெட்டில் மரண மாகும்
பெலமில்லா வியாதிதான் அற்ப மானல்
கோதில்லாத் தாபிதந்தான் போகும் பாரு
குணமான மூத்திரப்பை மிருது வாகி
மேதினியில் ரணங்கண்டு வேதனையுங் காணும்
மெதுவாக யிதுதீர வித்தை கேளே. (282)

கேளடா இக்கொடிய ரோகந் தன்னைக்
குணமாக்க வகையொன்று சொல்லக் கேளாய்
நாளடா அபினியொத் தணந்தான் செய்து
நலமான உஷ்ணநீர் ஈய்ந்த பின்பு
தேளடா வாந்திக்குக் கொடுத்தா யானல்
தெளிவுடனே வசப்பட்டு வருகும் பாரு
வாளடா மூத்திரந்தா னடைத்துக் கொண்டால்
வளமான சிலாக்கினல் வெளியாக்கு வாயே. (283)

ஆக்குவாய் போசனந்தான் லகுவாய் ஈய்ந்து
அப்பனே தண்ணீரும் கொஞ்சம் ஈவாய்
போக்குவாய் மூத்திரப்பை சுருங்காமல் தான்
புகலாக இருந்திடவே உபாயம் செய்வாய்

தாக்கியபின் நீகெந்தி செந்தூ ரத்தைத்
தணிவாக ஏழுநாட் கொடுத்தா யானல்
கூக்குரல்தான் போட்டுக்கொண்டு ஓடும் பாரு
குடிகெடுத்த நீர்ரோகந் தானே அப்பா. (284)

## பக்கசூலே.

தானை பக்கசூலே விபரங் கேளு
தனியாக வலப்பக்க ஈரலுக் கேதான்
மானகத் தாபிதமே கண்ட தானல்
மகத்தான பக்கசூலே யென்று சொல்வார்
தேனை உஷ்ணத்தா லிந்த ரோகம்
தேடியே வருமென்று திறமாய்ச் சொல்லு
ஊனக ஆரம்பந் தனிலே அய்யா
உள்ளபடி வலதுபக்கம் மேல்வயிற்றில் தானே. (285)

வயிற்றிலடா மேல்வயிற்றில் வேதனையே செய்யும்
வலமான ஈரலேத்தான் மூடிக் கொண்டு
கயிற்றைப்போ லிருக்கின்ற சவ்வி லப்பா
கனமான தாபிதமா யிருந்த தானல்
பயமுடனே வேதனைதான் அதிக மாகும்
பாழான வியாதிதான் அதிக மாகச்
சைத்தியமாய்ச் சுரங்காணும் திரேகந் தன்னில்
தனிச்சூடு தான்றேன்றித் தாகங் கொள்ளும். (286)

கொள்ளுமடா சிறுநீர்தான் குறைந்து போகும்
குணமான தோசந்தான் வருகும் பாரு
அள்ளவே ஈரல்தான் வீக்கங் கொண்டு
அப்பனே அந்தயிடம் புடைப்புக் காணும்
தள்ளவே அதைத்தானும் தட்டிப் பார்த்தால்
தனியான மந்தசத்தம் காட்டும் பாரு
தெள்ளவே மூச்சோடு இருமல் தோன்றித்
தெளிவாக வேதனைகள் அதிக மாகும். (287)

ஆமடா இடதுபுறம் படுக்கவொட் டாமல்
அப்பனே கண்ணிரண்டும் மஞ்ச ளாகும்
நாமடா சுவாசமுடன் இருமல் வாந்தி
நலமான விக்கலுந்தான் காண்ப துண்டு

ஓமடா ஊசிகுத்தும் வகையைப் போல
உள்நோவு இருந்தக்கால் அப்பா கேளு
ஈமடா ஈரலைத்தான் மூடிக் கொண்டு
இதமாகச் சவ்வின் தாபிதநோ யாமே. (288)

நோயான நோவுதான் மந்த மாயும்
மூர்க்கமுள்ள ஈரல்தான் விரிவதுபோற் கண்டால்
சாயாத ஈரலுட தாபிதமே என்றும்
சலியாத ஈரல்குவிந்த மேற்பக்கம் வியாதிகண்டால்
ஓயாமல் இருமல்தா னிருக்கும் பாரு
ஓங்கிநின்ற அடிப்புறத்தில் வியாதி கண்டால்
மாயாத வாந்திமுதல் அன்னுசயக் கெடுதியு
மதில்உடனே யிருக்குதென்று மகிழ்ந்து சொல்லே (289)

சொல்லடா ஈரலுட வியாதி யாலே
சுருக்குடனே உண்டாகும் நோவுக் கேதான்
அல்லடா வலதுபக்கந் தானுந் தோன்றும்
அழகான அவ்விடத்துக் காரண எலும்பினிலும்
பொல்லாத வேதனைகள் உண்டாம் பாரு
புனிதமுள்ள ஈரலின் இடது பக்கம்
கல்லான வியாதிதான் கண்ட தானல்
கடினமாய் இடதுதோள் வேதனை யாமே. (290)

வேதனையாற் சிலவேளை யீரலில் தான்
விளைந்துமே மகத்தான கவரோகங் கொள்ளும்
வாதனைக ளுண்டாகிக் குளிருங் காணும்
வன்மையுடன் சுரமுந்தா னதிகங் காணும்
நீதமுடன் ஈரல்தான் பழுவாய்த் தோன்றும்
நிச்சயமாய் வறட்சியுட னிருமல் காணும்
கோதில்லா ஈரல்தான் புடைத்துக் காணும்
கொற்றவனே நான்கேட்டால் சொல்வேன் கேளே.(291)

கேளடா ரோகிதான் இளைத்துப் போவான்
கெடிதான திரேகத்தின் பலமும் போகும்
வாளடா கிராணிதான் உண்டாம் பாரு
வளமாக இதிற்காணும் தாபிதமே நின்று

நீளடா சவுக்கியமும் ஆவ துண்டு
நிச்சயமாய்க் கட்டிகள்தான் கரையாவிட்டால்
பாழான ஈரலிற் சீக்கட்டிக் கொண்டு
பண்பான ஈரல்தான் அழுகிப் போமே. (292)

போமடா ஈரலில்தான் காணு கின்ற
பொல்லாத சீக்கட்டி பெருத்துக் கொண்டு
ஆமடா அதிலதிகச் சீயே கொள்ளும்
அப்பனே அதினுடைய சீதளம் காய்ந்து
நாமடா தற்செயலாய்ப் போவ துண்டு
நலமான கட்டியின் குடலி லப்பா
ஓமடா சவ்வில்தான் உடைந்து கொண்டால்
உத்தமனே சவ்வுக்குத் தாபிதமே காணும். (293)

காணுகின்ற வேளைதன்னில் ஆளைக் கொல்லும்
கனமுடனே சிலர்க்குப்பித்தக் குழல்தா னப்பா
பேணியே உடைந்துஅத் துணைகுடலி தன்னில்
பெலமாக சீதானு மிரங்கிக் கொள்ளும்
பூணுகின்ற சீ,யீரலுக்கு வெளியே வந்தால்
புனிதமுடன் அவ்விடத்தி லிருக்கின் றதோர்
வாணியென்ற சவ்வுதான் தாபிதமே கொண்டு
வன்மையுடன் அதின்பசைதான் வெளியே போமே.
(294)

வெளிப்பட்டு அடுத்திருக்கும் உறுப்பி னேடு
வெகுசுருக்காய் ஒட்டியே கொள்ளும் பாரு
முழிப்பான சதையோடு ஈரல்தாங்கி யோடும்
முக்கியமாய் அன்னசயத்தில் குடலி லேனும்
பளிச்சென்று ஒட்டியே கொள்ளு மப்பா
பாங்கான சீவெளிக்கேனும் நுரையீர லேனும்
அளவில்லாக் குடலன்ன சயத்தி லேனும்
அப்பனே சீதானும் வருகும் பாரே. (295)

பாரடா இதுதீரச் சிகிச்சை சொல்வேன்
பண்பான ரோகிக்குப் பலமுண் டாக
கூறடா அயமுதலாய்ச் செந்தூரம் செய்து
கொற்றவனே கொடுத்தால்தான் தீரும் பாரு

நேரடா முன்னாலே பேதிக் கீய்ந்து
நினைவாகப் பின்னாலே சூதமெழுகே யீவாய்
வாரடா ரோகியைத்தான் அழையாமல் தானே
வன்மையுடன் தானிருக்கச் செய்வாய் தானே. (296)

## மலக்கிருமி ரோகம்.

தானான மலக்கிருமி ரோகந் தன்னைத்
தானறியச் சொல்லுகிறேன் தன்மை கேளு
மானான மலக்கிருமி சாதி மூன்றில்
மகத்தான இருபூச்சி குழலாய்த் தோன்றும்
ஊனான ஒருபூச்சி கெட்டி யப்பா
உள்ளபடி வயிற்றுக்குள் ளிருக்கும் பாரு
தேனான பெரும்பூ நாக்குப் பூச்சி
தொல்லுலகில் குழந்தையுட சிறுகுடலிலிருக்குங் காணே (297)

காணடா முக்காலடி நீள முள்ள
கடும்பூச்சி தானிருக்கும் குழந்தை கட்கு
பேணடா இதற்குள்ளே பெரும்பூச்சிக் கப்பா
பெருத்துமே பெரிதாக இருக்கும் பாரு
வாணடா ஆண்பூச்சி அதற்குக் கொஞ்சம்
வண்மையாய்ச் சிறிதாக யிருக்கும் பாரு
பூணடா குடலிற்சஞ் சரித்தா லுந்தான்
புனிதமுடன் மேலுக் கேறும் பாரே. (298)

ஏறியே அன்ன சயத்திற் சென்று
இதமாகக் கீழிறங்கிப் பெருங்குடலிற் சென்று
வாரியே அன்ன சயத்திற் சென்றால்
வளமாக வாந்தியால் வெளியே தோன்றும்
நாரியே பெருங்குடலிற் சென்ற தானால்
நலமான மலத்தோடே கீழே தோன்றும்
காரியே ஆணுக்கும் பெண்ணுக் குந்தான்
கனமாகப் பூச்சிகள்தா னிருக்கும் பாரே. (299)

இருக்கின்ற திமிர்ப்பூச்சி விபரங் கேளு
என்மகனே இந்தக்குணந் தன்னைப் பாரு
பருக்கின்ற பெருங்குடலின் வளைவி லேனும்
பண்பாகக் குதத்துக் குள்ளே யேனும்

இருக்குதடா காலங்குலப் பிரமாண மாக
இதமான ஆண்பூச்சி தனைப்பார்க்கி லுந்தான்
பருக்கின்ற பெண்பூச்சி நீண்டு காட்டும்
பண்பாக இதுசெய்யுங் குணத்தைப் பாரே. (300)

பாரடா சிறிதாக யிருந்தா லுந்தான்
பண்புடனே குதத்தில்தான் நமைச்சல் செய்யும்
கூறடா சிலவேளை யிரைச்சல் காட்டும்
கொற்றவனே முக்கலுந்தான் காணு மப்பா
தேரடா தட்டையென்ற கிருமி சாதி
தெளிவான நாடியைப்போல் தட்டை யாக
தூரடா துண்டுகள்போல் ஒட்டிக் கொள்ளும்
துப்புரவாய் நீளமாய் இருக்குந் தானே. (301)

நீளத்தில் ஐந்துமுதற் பதினைந்து கெசமுண்டு
நிச்சயமாய்ச் சிறுகுடலில் சஞ்சரிக்கும் பாரு
ஆழத்தில் அதின்சிரசிற் கொஞ்சம் தானே
அப்பனே தட்டையாய் மத்தியில் தான்
நாளத்தில் சீமுனை போலே தோன்றும்
நலமான போசனத்திற் கலையு வார்கள்
கோளத்திற் பலவீனம் திரேகம் வாடும்
கொற்றவனே அன்னுசயம் வேதனையே காட்டும். (302)

காட்டுகின்ற குறியதனைச் சொல்வேன் பாரு
கனமான வயிற்றிலிப் பூச்சி காணில்
பூட்டுகின்ற வயிற்றில்வே தனையே செய்யும்
பொல்லாத வயிறுவிம்மல் சோகை காட்டும்
நாட்டுகின்ற மலக்குடல் குதத்தில் தினவு
நலமான வாய்நாற்றம் பேதி காணும்
தாட்டிகமாய் யிரவிற்பல் கடிப்பான் பாரு
சதாகாலம் அதிகபசி காணும் பாரே. (303)

காணுகின்ற வயிற்றில்தான் அதிக மாகக்
கனமாகக் குத்திக்கொண் டிருக்கு மாகில்
பூணுமடா வலியுடனே காக்கைவலி காணும்
பொல்லாத இந்நோய்தான் தீர வென்றால்

கோணமல் பேதிக்கு எண்ணெய் ஈய்ந்து
    கொடிதாக அதற்குமுன் கசப்புப் பண்டமீவாய்
பேணியே மூன்றுநாள் கொடுத்த பின்னல்
    கொற்றவனே எண்ணெய்தான் பேதிக் கீவாய். (304)

பேதிதான் ஆனபின்பு சொல்லக் கேளு
    பெரிதான நிலவேம்புக் கியாழம் தந்தால்
ஊதியே ஓடுமடா புழுக்க ளெல்லாம்
    உள்ளபடி சொல்லிவிட்டேன் உண்மை பாரு
ஆதியென்ற வரிக்குமட்டி யெண்ணெய் தந்தால்
    அடியோட அத்துவிடும் புழுக்கள் முற்றும்
நீதியாய் நானுனக்குச் சொல்லி விட்டேன்
    நிச்சயமாய் நீயறிந்து செய்வாய் பாரே. (305)

## மலபந்த ரோகம்.

பாரடா மலபந்த ரோகந் தன்னைப்
    பக்குவமாய்ச் சொல்லுகிறேன் பண்பாய்க் கேளு
ஆரடா அறிவார்கள் இந்த வியாதி
    அப்பனே அநேகரோ கத்தால் காணும்
நாரடா தனித்துமே காண்ப துண்டு
    நலமாக இறங்கும்மலம் வித்தியாசங் கண்டால்
பேரடா தினமும்ஒரு தரமே போவார்
    பெலமான திரேகமென்று அறிந்து கொள்ளு. (306)

கொள்ளடா தினமிரண்டு மூன்றுதரமே சிலர்க்குக்
    கொடிதான மலபந்த மிறங்கும் பாரு
நள்ளடா சிலருக்கு இரண்டு வேளை
    நலமுடனே இறங்குவதும் உண்டே பாரு
வள்ளடா இப்படியே தான்போவோ ருக்கு
    வளமைகெட்டுக் கிரமந்தப்பி மலம்சிக்கிக் கொண்டால்
தெள்ளடா சீரணத்தின் உறுப்பு தானும்
    திறமான வியாபகந்தான் கெட்டுப் போச்சே. (307)

போச்சடா திரேகத்தில் துர்க்குணங்கள் காட்டும்
    புகழான புத்திக்கும் சரீரத் திற்கும்
நாச்சடா ஒருவிதமாய் மந்தங் கொள்ளும்
    நகைசெய்யும் முகக்களையும் மாறும் பாரு

வாச்சடா திரேகந்தான் வறட்சி போலே
வகையான மூத்திரந்தான் குறையும் பாரு
காச்சடா இறங்குகின்ற மலந்தான் அப்போ
கனமுடனே வெளுத்துக் களிமண் ணுமே. (308)

மண்ணுன துர்வாடை அதிகங் காட்டும்
மகத்தான வியாதிதான் மீறி னுக்கால்
புண்போலே தலைவலிதான் மிகவுண் டாகும்
பொறிகள் எல்லாம் சோம்பல்தான் அதிகங்காட்டும்
பண்டிதனே இருதயந்தான் துடிப்புண் டாகும்
பாங்கான திரேகந்தான் குத்தல் கொள்ளும்
கண்டிதமாய்ச் சிலர்க்கிரண்டொன்று நாளி லொருக்கால்
கனமுடனே இறங்குவதுங் காண்பாய் தானே. (309)

தானுன காரணங்கள் சொல்வேன் கேளாய்
தனியான பெருங்குடலில் அசைவு தானே
மானுன மந்தத்தை அடைத்துக் கொண்டால்
மகிழ்வுடனே யிந்தநோய் உண்டாம் பாரு
தேனுன இந்தநோய் வயதுசென் றோர்க்கும்
திறமான திரேகந்தான் மெலிந்த வர்க்கும்
ஊனுன சூதகபாண் டுடையபெண் டிருக்கும்
உத்தமனே இன்னுமொரு புதுமை கேளே. (310)

கேளடா சோம்பலா யிருப்ப வர்க்கும்
கெடியான மலந்தன்னை யடக்கு வோர்க்கும்
நாளடா உட்கார்ந்து வேலை செய்யும்
நலமான தொழிலாளி தனக்கு மப்பா
தேளடா இந்தநோ யுண்டாம் பாரு
திரியான மலபந்தத் தோடு கூட
வாளடா பசியற்றுப் போகு மப்பா
வளமான நாக்குத்தான் வெளுத்துப் போமே. (311)

போமேடா அபானவாய்வு மிகவும் போகும்
பொல்லாத வாய்நாற்றம் உண்டாம் பாரு
ஆமடா முகம்வேறு நிறமே யாகி
அப்பனே கண்ணிமைக்கு அடியில் தானும்

ஓமடா கறுப்புவிழும் விசனந் தோன்றும்
உத்தமனே மலஞ்சேர்ந்து இறுகிக் கொண்டால்
தாமடா பித்தநீர் வருகின் றதோர்
தனிவழியை அழுத்தியே கொள்ளும் பாரே. (312)

அழுத்தியே கொண்டாக்கால் அப்பா கேளு
அழகான மஞ்சட்காமாலை தோன்றும்
நழுத்தியதாய்ப் பெருநாளத்தில் ஓடு கின்ற
நலமான இரத்தத்தைத் தடுத்துக் கொண்டால்
பழுவாகக் கால்களில்தான் நீருண் டாகும்
பாங்கான திரேகந்தான் கெட்டுப் போகும்
சுளுவாக இதுதீர மருந்து கேளாய்
சூட்சமமுடன் சொல்லுகிறேன் துலங்கக் கேளே. (313)

துலங்கினதோர் மலபந்தந் தன்னை நீக்க
துடியான பேதிக்குக் கொடுக்க லாகா
சிலம்போன்ற சித்தாமணக் கெண்ணெ யப்பா
சீரான இரவல்சின்னி இந்துப் போடு
நிலந்தனிலே விளைகின்ற நிலவாகை லேகியம்
நீசெய்து சாப்பிட்டால் போகும் பாரு
மலங்கட்டி யிருந்ததெல்லாம் இளகிய பின்பு
மகத்தான சுகுணத்தைக் கொடுக்கும் பாரே. (314)

கொடுக்கின்ற குதிரையின் சவாரி செய்தால்
கோதில்லா மலபந்தம் போகும் பாரு
அடுக்கின்ற ஆகாரம் நன்றாய்ச் செய்து
அப்பனே சரீரத்தில் வேர்வை யாக
நடந்துவிட்டால் வெகுகுணங்கள் காட்டு மப்பா
நலமான குளிர்ந்தசலந் தன்னில் மூழ்கி
சடுத்தமுடன் தினமுந்தான் செய்து வந்தால்
சதிரான குடலுக்குப் பெலமுண் டாமே. (315)

## வயிற்றுவலி ரோகம்.

உண்டாகும் வயிற்றுவலி விபரங் கேளாய்
உத்தமனே வாய்வோடு அக்கினி மந்தம்
பண்டான மலபந்தம் இவைக ளோடு
பாரித்துப் புளிப்புநீர் குடலி லுண்டாய்

நண்டான வயிற்றுவலி தோன்றும் போது
நலமான குணங்களைநீ சொல்லக் கேளாய்
பண்டாக முக்கியமாய் விட்டு விட்டு
பண்பாக தொப்புள்சுற்றி வேதனைகள் செய்யும். (316)

செல்கின்ற வேளைதனிற் குறியைக் கேளாய்
செயலாக அவ்விடத்தை அழுத்தி னுக்கால்
பையவே வேதனைகள் சமன மாகும்
பாங்கான மலபந்தம் வாந்தி காணும்
செய்கின்ற சுரங்காணு நாடி முன்போல்
சுகமாக இருக்குமடா மனித ருக்கே
தொய்யவே அபானவாயு ஏப்பம் வந்தால்
தொலைந்துவிடும் வயிற்றுவலி தொல்லுல கோர்க்கே. (317)

உலகினில்வாழ் மனிதருக்கு இந்த ரோகம்
உத்தமனே வயிற்றில்தான் புளிப்புச் சேர்ந்து
சலமுடனே உபத்திரவம் பிறப்ப தாலே
தான்கொடுப்பாய் சாராயந் தன்னி லப்பா
கலக்கமில்லா வெந்நீரைக் கலந்து கொண்டு
கடுசாகக் கொடுத்திட்டால் வேதனைகள் தீரும்
மலங்கழிய எண்ணெய்தனைக் கொடுத்தா யானல்
மாருத வயிற்றுவலி வருவ துண்டு. (318)

மாண்டுபோம் நரம்பதனைப் பற்றிக் கொண்டு
மகத்தான வயிற்றுவலி வருவ துண்டு
பாண்டியனே பயம்குளிர்ச்சி சூத வாய்வு
பண்பான கணுவாதம் இவையா லிந்த
பூண்டநோய் காணுமென்று பெரியோர் சொன்னர்
பொல்லாத நேர்வாளம் கொடுத்தி டாதே
ஆண்டகைசேர் கிராம்புசுக்குக் கியாழம் போட்டு
அப்பனே கொடுத்திட்டால் வேதனைகள் போமே. (319)

போமடா கடுகுப்பத்து வெந்நீ ரொத்தணம்
பொல்லாத வயிற்றுவலி சுகுண மாகும்
ஆமடா குழந்தைகட்கு இந்நோய் காணில்
அப்பனே பெருங்காயந் தன்னி லீவாய்

ஓமடா சொல்லாமல் போகும் பாரு
உத்தமனே வெந்நீர்ஒத் தனமுஞ் செய்வாய்
நாமடா இந்தநோய் தீரு மென்று
நலமாக உந்தனுக்கு அறிவித் தேனே. (320)

## குடல் வேதனை ரோகம்.

அறிவிப்பேன் குடல்வேதனை ரோகந் தன்னை
அப்பனே சிலருக்கு அற்ப மாயும்
தெரிவிப்பேன் சிலருக்கு உக்கிர மாயும்
திரேகத்தில் வெகுசுருக்காய் வந்து தோன்றி
மரிக்கவே செய்யுமடா மனிதர் தம்மை
மாநிலத்தில் குடல்முழுதும் வியாதி கொண்டு
தெரிந்துகொள்ளக் குறிகளொன்றுங் காணு தப்பா
தொல்லுலகில் இந்தநோய்ச் சுபாவந்தானே. (321)

தானான குடலினுட புரையெல்லா மேனும்
தரித்திருக்கும் சிலேத்துமத்தின் புரையிலேனும்
மானான இந்தநோய் காணும் பாரு
மகத்தான குழந்தைக்குப் பல்முளைக்கும் போதும்
கோனான சிலேத்துமத்தின் சவ்வி லப்பா
தெளிவாக வேதனைகள் கொள்ளும் பாரு
ஊனான இதன்குறிகள் காணும் முன்னால்
உத்தமனே காணுகின்ற குறியைக் கேளு. (322)

குறிசொல்வேன் குளிர்கொண்டு சுரமுங் காணும்
கொற்றவனே வயிற்றில்தான் தொப்புள் சுற்றி
சரியான வேதனையும் குமட்டல் காணும்
சத்தியுடன் மல்லாந்து படுத்துக் கொண்டு
வரியான வயிற்றினுட சதைகளைத் தான்
வழக்கமாய்த் தளர்ச்சிசெய்து முழங்காலை யப்பா
குறிப்பாக முடக்கியே வைத்துக் கொள்வான்
கொற்றவனே பின்னுமதின் குணத்தைக் கேளே. (323)

கேளடா அரட்டலுடன் புரட்டல் காணும்
கெடிதாக அதிகசுரம் துர்ப்பலமுங் காணும்
நாளடா ஏக்கமுடன் மலபந்தங் கண்டு
நலமான விகாரமும் காணு மப்பா

தேளடா வயிற்றைத்தான் விரலைக் கொண்டு
    தெளிவாக அழுத்தினல் வேதனைக ளுண்டாம்
வாளடா வாதத்தால் காணு கின்ற
    வளமான வேதனைகள் சமான மாகும். (324)

ஆகின்ற வாந்தியில்தான் வெளியே தோன்றும்
    அப்பனே வருகின்ற வஸ்து வெல்லாம்
தூக்கியே துர்க்கந்தம் ரெம்ப வீசும்
    தொல்லுலகிற் சிலவேளை மலமுந் தோன்றும்
நாகியே நாடிதான் முதலி லப்பா
    நலமுடனே தான்பெருத்துத் திடமாய்ச் சொல்லும்
போகியே விடும்பின்னல் சிறுத்துப் போய்ப்
    பொங்கமுடன் விரலுக்குத் தோன்று தாமே. (325)

ஆமடா ஆறுஎட்டு மாதஞ் சென்ற
    அழுகுழந்தை குடலினுட் சவ்வுக் கப்பா
தாமடா தாபிதங்கள் காண்ப துண்டு
    தன்வேதனை குழந்தைக்கு உடம்பு சூடாம்
ஓமடா குழந்தைதான் கையில் தானே
    ஒழுங்காக நிற்காமல் அழுகும் பாரு
நாமடா நாக்குலர்ந்து தாகங் காணும்
    நலமுடனே நாவின்மேற்கருத்தமா வுண்டாம் பாரே.

உண்டான சிசுவுதான் கதறிக் கதறி
    உத்தமனே தூங்காமல் அழுகும் பாரு
வண்டான வாந்திதான் பண்ணு மப்பா
    வயிற்றினிலே வேதனைகள் மிகவே காட்டும்
நண்டாக அதைவிரலால் அழுத்தினக் கால்
    நலங்கெட்ட வியாதிதான் அதிக மாகும்
குண்டாக மலமுந்தான் இறுக லாகும்
    கொற்றவனே சிலகுழந்தைக்குப் பேதி யாமே. (327)

பேதிதான் பச்சைநிறந் துர்வாசனை காட்டும்
    பெலமாகச் சுரந்தானும் அதிக ரிக்கும்
நீதியாய்த் தாகமுடன் நா வறட்சி
    நிச்சயமாய்த் தண்ணிராய்ப் பேதி யாகும்

பாதியாம் திரேகந்தான் இளைத்துப் போகும்
பக்குவமாய்ப் பேசச்சயம் தொடரும் பாரு
கோதில்லாத் திரேகந்தான் வெளுத்துக் காணும்
கொற்றவனே பவளமாய்ச் சிவந்து போமே. (328)

சிவந்ததொரு ரோகந்தான் தெளிய வேண்டிச்
சிறப்பான மருந்துகளைச் சொல்லக் கேளு
குவிந்ததொரு வயிற்றுக்குச் சூடொத் தனமும்
கொடுத்திட்டால் சவுக்கியங்கள் உண்டாம் பாரு
ஆவியுள்ள வெந்நீரை யாச னத்தில்
அப்பனே ஒத்தனமும் செய்வாய் பாரு
வேவிதமாய்த் தாபனங்கள் தீர்ந்த பின்பு
வெறும்எண்ணெய் பேதிக்குக் கொடுப்பாய் நீயே.(329)

கொடுத்திடுவாய் திரேகந்தான் தேற வேண்டி
கொற்றவனே அயமுதலாய்ச் செந்தூர மீவாய்
சுடுதியாய் ஆகாரம் லகுவாய்த் தந்து
சாதத்தைப் போசிப்பாய் தினமு மப்பா
சுடுதியாய்க் குளிர்ந்தசலம் கொடுப்பா யானல்
சுகங்காணும் ரோகமடா ரோகிக் கேதான்
திடங்காணுந் தினமுந்தான் ரோகிக் கேதான்
தீர்க்கமாய்ச் சொல்லுகிறேன் திறமாய்த் தானே. (330)

## அன்னுசய ரோக வேதனை.

திறமாக அன்னுசய ரோகந் தன்னைத்
தீர்க்கமாய்ச் சொல்லுகிறேன் திறமாய்க் கேளு
உரமாக உக்கிரம காலிக்க மென்று
உள்ளபடி இரண்டு வகுப்பே யுண்டு
சுரமான அதின்குணத்தைச் சொல்வேன் கேளாய்
சதிராக இந்நோய்தான் காணு தய்யா
பரமான பாடாணம் கார வஸ்து
பக்குவமாய் வெந்நீர்கொடுத்தால் காணும் பாரே. (331)

காணுமடா வாந்திதான் அதிகங் கண்டால்
கதிப்பாக இந்தநோய் உண்டாம் பாரு
பூணுகின்ற விடந்தின்று அன்னுசயந் தான்
பொல்லாத தாபிதமே கண்ட தானல்

பேணியே மேல்வயிற்றில் எரிச்சல்வேதனை யுங்காணும்
பொங்கமுடன் அதைத்தொட்டா லதிகங் காணும்
நாணியே குமட்டலுடன் வாந்தி காணும்
நாடியுடன் சுவாசந் தீவிரமாய்ப் போமே. (332)

போமடா தாகத்தால் குளிர்ந்தசலங் கேட்பான்
பொங்கமுடன் கொடுத்திட்டால் உடனே கேளு
ஓமடா வெளிக்குமே வந்து செல்லும்
உத்தமனே தளர்ச்சியுடன் ஆயாசம் மூர்ச்சை
நாமடா நாடிதான் கெட்டுப் போகும்
நலமான திரேகந்தான் வெளுத்துப் போகும்
காமடா கைகால்கள் குளிர்ந்து போகும்
கனமான யேக்கந்தான் உண்டாம் பாரே. (333)

பாரடா தாபிதங் கண்டு நேரமானல்
பண்பான நாக்கதுதான் சிவப்பே யாகி
பாரடா பளபளவென் றிருக்கும் பாரு
பண்பாக மலந்தானும் இறுக லாகும்
நேரடா மூத்திரந்தான் சிவந்து மப்போ
நிச்சயமாய்க் குறைந்துமே இருக்கும் பாரு
கூறடா அரட்டலுடன் புரட்டல் விக்கல்
குடிகெடுத்த தளர்ச்சிகண்டு இருப்பான் காணே. (334)

இருக்காமல் இருப்பதற்கு சிகிச்சை சொல்வேன்
என்மகனே முதலில்தான் ஆசனவஸ்தி செய்து
துருக்கமுடன் மலத்தையப்பா வெளியே போக்கித்
துப்பான அபினியைத்தான் கொஞ்ச மீய்ந்து
காட்டான பனிக்கட்டி சப்பச் செய்தால்
கடினமுள்ள வாந்திதான் உடனே தீரும்
சிறப்பாக வேதனையை நிறுத்தும் பாரு
சீராகப் போசனத்தை உண்ணச் சொல்லே. (335)

சொல்லடா நொய்கஞ்சித் தண்ணீர் தானும்
செயலான கோதுமையால் கஞ்சி யாகும்
அல்லடா மாமிச ரசங்களுமே யாகும்
அப்பனே வயிற்றுக்கு வெந்நீர்ஒத்தனமே செய்வாய்

நில்லடா போசனத்தை வெகுசாக்கிர தையாக
நிச்சயமாய்ச் செய்துவந்தால் வியாதி தீரும்
கல்லடா கஞ்சியுடன் மாமிசங்கள் ஈய்ந்தால்
கனமான நோயதுதான் தீர்ந்து போமே. (336)

தீருகின்ற காலிக அன்னுசய ரோகம்
திறமாக நீயறியச் செப்பு கின்றேன்
ஊறிவரும் புழுப்போலே இந்த ரோகம்
உத்தமனே சாதாரண மாகக் காணும்
தேறியே நாட்சென்ருல் அப்பா கேளு
திறமான அன்னுசயச்சவ்வு தடித்துப் போகும்
பாரியே கல்லுப்போ லாகி யப்போ
பண்பான அதின்துவாரம் சிறுத்துப் போமே. (337)

போமடா புண்ணுகித் துவாரங் காணும்
பொங்கமுடன் இந்நோய்க்குக் காரணங் கேளு
ஆமடா பெருந்திண்டி சுர பானம்
அப்பனே நாட்பட்ட உபவா சங்கள்
தாமடா சுரத்திற் பாடாணத்தின் போர்
தனியான கணுவாத ரோகத் தாலும்
ஓமடா சிறுகுடலுக் காகார மப்பா
உள்ளபடி தடங்கலின்றி போகாத தாலே. (338)

போகாததால் வழியின்றி அன்னுசயத் துவாரம்
பொங்கமுடன் சுருங்கிக் கொள்வ தாலே
மூவாத திரேகந்தான் கெட்டுப் போய்
முக்கியமாய் இந்தநோய் உண்டாம் பாரு
மேவியதோர் லட்சணங்கள் சொல்லக் கேளு
மேன்மைதரும் அன்னத்தைத் தள்ளுமப்பா
தாவியதோர் குலேவயிற்றில் வேதனைகள் மெத்தத்
தன்மையுடன் புசித்தபின்பு வாந்தி யுண்டாமே. (339)

உண்டாகு அசீரணமும் வயிற்றி லப்பா
உத்தமனே முருக்கலுடன் புளித்த சலமேனும்
கண்டிதமாய்ச் சுத்தசல மாக வேனும்
கடுமையாய் வாந்தியுடன் மலமுங் கட்டும்

பண்டிதனே நாவுதனில் மாவு தோன்றும்
பாங்கான பெண்களுக்கு இத்தோடு கூட
அண்டியிருக்கும் கருப்பை கருவியாதி காட்டும்
அப்பனே இதற்குக்குன்ம பிரயோகஞ் செய்யே. (340)

## கண்டக் கிரந்தி.

செய்கின்ற சயித்தியத்தின் கட்டி நோவு
செயலாக உண்டாகும் வேளை தன்னில்
கொய்கின்ற கடினசுரத் தோடே யப்பா
குணமுடனே வந்துபின்பு தொண்டை தன்னில்
மெய்மயங்கி வேதனையும் வீக்கங் காட்டும்
மேதினியோர் தொண்டைதனி லிரண்டு பக்கம்
பையவே இருக்கின்ற மாமிசக்கிரந்தி வீங்கி
பரிவாக வேதனைதான் செய்யும் பாரே. (341)

பாரடா விழுங்குதற்கு கஷ்ட மாகும்
பண்பான வியாதிதான் கடின மானல்
வேரடா வியாதிகாது வரையில் போகும்
வீச்சாகச் சிலவேளை மூச்சடைப்புக் காணும்
கூறடா இந்தநோய் கொஞ்சநாள் சென்று
குணமான கட்டிதான் கரைந்து போகும்
நேரடா கிரந்திதனில் வீக்கம் போகா
நேரான வியாதிதான் பலமே யாமே. (342)

ஆமடா கட்டிதான் பழுத்து உடையும்
அப்பனே சீதான் வெளியே போகும்
நாமடா வேதனைதான் அதிக மாகும்
நலமான இந்நோய்க் காரணமே தென்னில்
ஓமடா குளிர்ச்சிதான் காரணமாய்ச் சொல்லு
உத்தமனே இதற்குஒரு சிகிச்சை கேளு
போமடா பேதிக்குக் கொடுத்துப் பின்பு
தொண்டைக்கு வெந்நீரை ஒத்து வாயே. (343)

ஒத்துவாய் வெண்டக்காய் மாவு செய்து
உத்தமனே கிளறியதைக் கட்டி வந்தால்
சத்தியமாய்ச் சவுக்கியங்கள் ஆகும் பாரு
சதிரான போஸ்தக்காய் நன்னை யப்பா

பத்தியுடன் வெந்நீரில் போட்டுக் காய்ச்சிப்
பாங்காக ஆவிநீர் வாயில்படும்படியே செய்தால்
சித்தியுடன் வேதனைகள் தணியும் பாரு
சீக்கிரத்தில் அபினியை நீராய்ச் செய்யே. (344)

நீரைத்தான் வாயில்விட்டுக் கொப்பளித் தால்
நிலையான புண்கள்தான் ஆறிப் போகும்
ஊரைச்சுற்றி வளருகின்ற ஊமத்தன் சாற்றை
உத்தமனே தொண்டையின்மேல் தடவியே தான்
சீரான மாவுவைத்துக் கட்டினுக் கால்
சிறப்பான குணங்காட்டும் சீமையோர்க்கு
ஓரான கட்டியில்தான் சீசேர்ந்து விட்டால்
உள்ளபடி கீறியதை வெளியாக்கு வாயே. (345)

வெளியாக்கக் கீருமல் கட்டியைத் தான்
வேணமட்டும் உட்புறமாய்க் கீறினுக் கால்
முளியான நரம்புக்குச் சேத மில்லை
முடியாமல் ஒருவேளை நரம்பில் பட்டுப்
பழியாக நரம்பினின்று ரெத்தங் காணில்
பாங்கான அயத்தினுட திராவந் தன்னை
புளிபோல பூசிவிட்டால் இரத்த மப்போ
பொங்கமுடன் நின்றுவிடும் புதுமை தானே. (346)

தானுக நிற்காவிட்டால் சொல்லக் கேளு
தான் கழுத்தில்கீறி நரம்பின் அடிவாய்
மானுகக் கட்டியே விட்டா யானுல்
மகத்தான ரத்தந்தான் நின்று போகும்
தேனுகப் பத்தியமா யிருக்க வேண்டும்
தெளிவான புளியைத்தான் தள்ள வேண்டும்
ஊனுன இந்தநோய் தீரும் பாரு
உத்தமனே இன்னுமொரு வியாதி கேளே. (347)

## மன்னைக்கட்டி மாரி புட்டாலம்மை.

கேளடா மன்னைக்கட்டி மாரி ரோகம்
கிளர்ச்சியா யுண்டாகும் விதத்தைக் கேளாய்
நாளடா காதினுட சமீபத்தி லுள்ள
நலமான காதடிக்கீழ் நின்று மப்பா

வாளடா உறுப்புகள்தான் வீங்கிக் கொண்டு
வளமாக நோவெடுத்தால் ஜனங்க ளப்பா
பாளடா புட்டா லம்மை யென்று
பரிவுடனே சொல்வார்கள் பழமை தானே. (348)

தானான உமிழ்நீர்தான் உண்டா கின்ற
தக்கதொரு கோளங்கள் வீங்கிக் கொள்ளும்
தேனான வீக்கமொரு பக்க மேனும்
தெளிவுடனே இருபுறமும் வருவ துண்டு
ஊனான திரேகத்தில் உண்டாம் வேளை
உத்தமனே முதலில்தான் சுரமே தோன்றும்
மானான வீக்கங்காதுக் கடியில் தோன்றி
முக்கியமாய்க் கழுத்திறங்கி மோவாய்க்குப் போமே.

போமடா இந்நோய்தான் இருநாலு நாளில்
பொல்லாத நோயெல்லாந் தணிந்து போகும்
ஆமடா சிலவேளை வியாதி உக்கிரம்
அப்பனே தணிகின்ற வேளை யேனும்
தாமடா உக்கிரந் தீர்ந்தபின் பேனும்
தக்கதொரு பிசந்தான் வீங்கிக் காணும்
நாமடா பெண்ணுக்குமுலை வீக்கங் காணும்
நலமான இந்நோய்தற் செயலாய்ப் போமே. (350)

செயலாக இந்நோய்க்குப் பேதிக் கீய்ந்து
செம்மையாய் வியர்வைய துண்டாகச் செய்தால்
மயமாகப் போய்விடும் வீக்கத் துக்கு
மகத்தான வெந்நீரை ஒத்தச் செய்வாய்
நயமான கம்பளியைக் கழுத்தில் கட்டி
நட்புடனே தானடக்க நாடா தோடும்
பயப்பட்டு வெகுபேர்கள் பொன்மணியைக் கட்டிப்
பண்புடனே பலிகொடுத்துத் தெய்வ மென்பார். (351)

## நாக்கு தாபித ரோகம்.

என்கின்ற நாக்குதாபித ரோகந் தன்னை
என்மக்காள் சொல்லுகிறேன் இன்னங் கேளு
சின்மயமாய் வேறுவித வியாதி யாலும்
சிறப்பாகத் தற்செய லாலு மப்பா

கன்மத்தால் செனித்தோர்க்கு இந்த ரோகம்
காணுமென்று நீயதின் குணத்தைக் கேளு
வன்மையுள்ள சுரந்தானும் அடிக்கும் பாரு
வளமான நாக்கதுதான் தளர்ச்சி யாமே. (352)

தளர்ச்சியுடன் துர்ப்பலமும் உண்டாம் பாரு
தனிநாவு சிவப்பேறி வீங்கிக் கொள்ளும்
குழறியே பேசுவா னப்போ தய்யா
கொடியதொரு உஷ்ணந்தான் கொள்ளும் போது
வளர்ந்துவரும் நாவுதான் மிகவும் வீங்கி
வாய்க்குள் ளடங்காமல் வெளியே தோன்றும்
பளிச்சென்று இக்குணங்கள் கண்ட போது
பண்பான மூச்சடைப்புக் காணும் பாரே. (353)

பாரடா அப்போது சிகிச்சை கேளாய்
பண்பான காடிக் காரம் வாங்கி
கூறடா நாக்கில் தடவி னக்கால்
கொற்றவனே விக்கந்தான் கரையும் பாரு
நேரடா கத்தியா லப்பா கேளு
நீகீறி விட்டாக்கால் இரத்தம் போகும்
சீரான சீகோர்த்துக் கொண்ட தானல்
சிறப்புடனே கீறிவிட்டு ஆத்திப் போடே. (354)

போடேநீ நாவில்தான் பலகா ரணத்தால்
பொங்கமுடன் பலவிதமாய் இரணை முண்டாகும்
வாடாமல் சிலபுண்கள் இருந்து கொண்டு
வலியுடனே உபத்திரவம் செய்யும் பாரு
வாடாமல் வேதனைகள் செய்யும் புண்கள்
வன்மையுடன் சிறிதாக மேல்பக்கம் தோன்றும்
பாடாகப் பலரூப மாகத் தானே
பண்புடனே பலவிதமாய் வேதனையே செய்யும். (355)

செய்யுமே நாவினுட முனையி லப்பா
செயலாக ஓரமதில் வருகும் பாரு
நையுமே நாவினுட சவ்வி லப்பா
நலமான மடிப்புக்கு அடியில் தானே

கொய்யுமே தோன்றியடா வேதனையே செய்யும்
குவலயத்தில் இதுதீர மருந்து கேளாய்
மைபோன்ற மயில்துத்தம் தன்னைப் போட்டு
மகிழ்வாகச் சவுக்கியங்கள் செய்வாய் நீயே. (356)

செய்கின்ற ரசந்தின்று புண்க ளாகும்
செயலதனைக் கண்டுகொள்ளும் விதத்தைக் கேளாய்
உய்கின்ற ஈறுகள்தான் தடித்துக் கொண்டு
உத்தமனே வாய்நாற்ற மடித்துக் காணும்
பையவே நீங்கிடவே மருந்து கேளாய்
பாருப்பு பேதிக்குக் கொடுத்துப் பின்பு
நையவே மயில்துத்தம் துத்தம் சேர்த்து
நலமான சலம்விட்டுக் கொப்பளிப் பாயே. (357)

கொப்பளிக்கும் மேக ரோகத் தினாலே
குணமான நாக்கில்தான் ரணமே வந்தால்
அப்போது சடலம் மேகக்குறிகள் காட்டும்
அப்பனே யதற்கு ரசமெழுகு செய்து
துப்புரவாய்க் கொடுத்தாக்கால் வியாதி தீரும்
துலையாத புண்ணுக்குமேற் காடிக்காரம் பூசு
இப்படிநீ செய்தாக்கால் மேகப் புண்கள்
இப்புவியில் நில்லாது இன்னும் கேளே. (358)

## நாக்கு வெடிப்பு (அக்கரம்).

கேளடா நாவெடிப்பு ரோகந் தானும்
கேடாகச் சிலருக்குக் காண்ப துண்டு
நாளடா பேசவும் உண்கவும் ஆகா
நலமாகச் சீக்கிரத்தில் காய்ந்தி டாது
வாளடா வேதனைதான் அதிக மாகும்
வளமான நாக்குத்தான் வெடித்துப் போகும்
ஆளடா ஆலம்பால் மூன்றுநாள் வாங்கி
அப்பனே இருந்தாக்கால் வியாதி போமே. (359)

போமடா உப்பில்லா பத்திய மேசெய்தால்
பொல்லாத அக்கரந்தான் ஓடிப் போகும்
ஆமடா வப்பாலைக் கொப்பளித் தாலும்
அப்பனே ஒருவிதமாய்த் தீரும் பாரு

ஓமடா சிலருக்கு அற்ப மாயும்
உத்தமனே சிலருக்கு நாவில்லாமல் தோன்றும்
தாமடா சிலருக்கு மேக வியாதியாலே
தான்காணில் நாக்கின்மேல் தோலுரியும் பாரே. (360)

பாரடா நன்னாரிக் கியாழம் ஈய்ந்து
பக்குவமாய் அயமுதல் செந்தூரம் செய்து
கூறுக ஈந்திட்டா லிந்த ரோகம்
கொற்றவனே தீருமடா குணமாய்ப் பாரு
நேரான வல்லாரை கெந்தி நெய்யும்
நீகொடுத்த பின்பு பத்தியமே செய்வாய்
சீரான பத்தியங்கள் தீர்ந்த பின்பு
சிறப்பாக இந்தநோய் ஒடுங் காணே. (361)

## மாரடைப்பு.

காணடா மாரடைப்பு ரோகத் திற்குக்
கனமான தமரக வாத மென்றும்
பூணடா தமரக வாயு வென்றும்
பொல்லாத இருதயத்தின் ரோக மென்றும்
சாணடா ருத்திர வாயு வென்றும்
சரியான தமரவாதம் மார்புநோ வென்றும்
வேணதொரு பேரிதற்குச் சொல்வார் பாரு
விதமான இதன்குணத்தைச் சொல்வேன் கேளே (362)

சொல்லுகிற இருதயத்தைப் பற்றி யப்பா
சுகமாக இந்நோய் காணும் பாரு
தொல்லைசெய்து இந்தநோய் விட்டு விட்டுத்
தொல்லுலகில் காணுமடா மாந் தருக்கு
செல்லுகின்ற வேளையிலும் சாதம் தன்னைத்
தின்கின்ற வேளையிலும் உட்கார்ந்திருக்கும் போதும்
அல்லல்செய்து திடீரென மார்பு தன்னை
அடைத்துமே பேசுகையில் லாமல் போமே. (363)

ஆமடா மூச்சுத்தான் அடைத்துக் கொள்ளும்
அப்பனே யதின்குறியைச் சொல்லக் கேளாய்
தாமடா இரத்தாசயத்தில் நின்று கொண்டு
தக்கதொரு வேதனைகள் செய்யும் பாரு

நாமடா மூச்சு முட்டலுமே கண்டு
நலமான ஆவியது போமென்றே தான்
ஓமடா சிலசமயம் சம்ப விக்கும்
உத்தமனே இந்நோயைப் பலவிதமே சொல்வார். (364)

சொல்லுவார் சிலபேர்கள் குத்த லென்பார்
சொகுசான எரியென்பார் சிலபேர்கள் தான்
அல்லுவார் இதைச்சிலர்கள் பிடித்த மென்பார்
அழகான மார்பினின்று கழுத்துக் கேனும்
தொல்லுலகில் தோளுக்கும் முதுகுக் கேனும்
தோன்றியே தோர்புசத்துக்கு வாய்வே ஓடும்
அல்லல்செய்து இவ்விதமாய் மனிதனைத் தான்
அலக்கழித்துப் போகுமடா அம்புவியில் தானே. (365)

தானாக நடந்துபோம் வேளை தன்னில்
தக்கபடி இந்நோய்தான் காணு மாகில்
ஊனாக உடனேதான் படுத்துக் கொள்வான்
உள்ளபடி நாடியுந்தான் மெதுவாய்ப் போகும்
தேனான சுவாசமது பிடித்த மாயும்
தெளிவுடனே வேகமாய் ஓடும் பாரு
மானான முகம்வெளுத்துத் திகில டைந்து
மகிழ்வுடனே திரேகஞ் சில்லிட்டுப் போமே. (366)

போமடா பிசுபிசுத்து வியர்வை கொள்ளும்
பொங்கமுடன் புத்திக்கு விகல்ப்பம் தோன்றும்
ஆமடா வேதனைதான் தீர்ந்த பின்பு
அப்பனே ரோகிக்கு ஒன்று மில்லை
ஓமடா வேதனைதான் கொஞ்ச நேரம்
உள்ளபடி தானிருந்து ஒழிந்து போகும்
நாமடா சிலருக்கு இரண்டரை நாழிகை
நலமாகத் தானிருந்து நன்மை யாமே. (367)

நன்மையாய்ச் சிலருக்கு வாரந் தோறும்
நலமுடனே சிலருக்கு மாதந் தோறும்
வன்மையுடன் நோய்தானும் அதிகப் பட்டு
வழக்கமாய் அடுத்தடுத்துக் காணும் பாரு

சின்மயமாந் திரேகத்தில் எப்போ தேனும்
சிறப்புடனே காண்கின்ற நோயி தப்பா
வன்மையுள்ள ஆளுக்கு வருத்தம் தந்து
வல்லுயிரை வதையதுதான் செய்யும் பாரே. (368)

பாரடா சிலருக்கு மரணந் தோன்றும்
பண்பாகச் சிலருக்கு ஒரிரண்டு வேளை
கூடுருக வந்தபின்பு கொல்லா விட்டால்
கொத்தவனே பின்னாலே கொல்லும் பாரு
நேரான இந்நோய்தான் கிழவ னுக்கும்
நிச்சயமாய்ப் பெண்கள் சிலருக்குக் காணும்
வாரான ஆணுக்கே அதிகம் தோன்றும்
வல்பிணியைப் போக்கவொரு மருந்து கேளே. (369)

கேளடா சாரத்தின் சுன்ன மேனும்
கெடியான வெடியுப்புச் சுன்ன மேனும்
நாளடா வீரத்தின் மெழுகே ஏனும்
நலமான பஞ்சபாடாண செந்தூர மேனும்
கொள்ளடா லிங்கத்தின் சுன்ன மேனும்
கொடிதான துரிசுனுட சுன்ன மேனும்
தாளாமல் கொடுத்திட்டால் உடனே தீரும்
தன்மைபார் பிற்பாடு மருந்து செய்யே. (370)

## இருதயம் கிழிந்து போதல்.

செய்கின்ற இரத்தா சயந்தா னப்பா
செயலாக வியாதி யினாலே யும்
அய்யமுள்ள அபாயத் தினாலே யும்
அப்பனே இரத்தாசயம் கிழிந்து போகும்
பையனே வியாதியினால் கிழிந்த தானால்
பாரித்து இடதுபக்கம் கிழிந்து போகும்
அய்யமுள்ள அபாயத்தில் கிழிந்த தானால்
அப்பனே வலதுபக்கம் கிழிவுண் டாமே. (371)

உண்டான முக்கலுடன் பயத்தி னாலும்
உறுதியாய்ச் சந்தோடப் படுவ தாலும்
பண்டான கிழிவுக்குக் காரணங்க ளென்றும்
பாரிலுள்ளோர் தானறியப் பகர்ந்தேன் கேளாய்

செண்டாகப் புருடருக்கே யதிகங் காணும்
செயலாக அறுபது வயதோர்க்குங் காணும்
குண்டாக இதுகண்டால் மரண மாவார்
குவலயத்திற் சாகாவிட்டால் குணத்தைக் கேளே. (372)

கேளடா மூச்சதுவுந் தளர்ச்சி காணும்
கெடியான முகமதுவுங் கருத்துப் போகும்
வாளடா வலிகாணுந் திரேக மெல்லாம்
வன்மையுட னிரத்தமுந்தான் வாந்தி யாகும்
தேளடா இருதயந்தான் கிழிந்த பின்பு
தெளிவான பிராணன்தா னுடனே போகும்
கொள்ளடா இதற்குஒரு மருந்து மில்லை
கொற்றவனே யமபுரந்தான் மருந்தாம் பாரே. (373)

## இருதயச் சோர்வு ரோகம்.

பாரடா இருதயச் சோர்வு ரோகம்
பக்குவமாய்ப் பாடுகிறேன் பண்பாய்க் கேளு
ஆரடா அறிவார்கள் இந்த நேர்மை
அப்பனே இருதயந்தான் இரண்டு பத்துத்
தோரடா தோலாவின் கனமே யாகும்
தெளிவாக அதிலிருக்கும் பள்ளத் திற்கு
நாரடா யாதொரு குறைவே யின்றி
நலமாக வதைச்சுற்றி வாழுஞ் சதைகள்தானே. (374)

சதைமாத்திரம் தடித்துமே போகு மப்பா
சாங்கமாய்ச் சிலவேளை சதைதடித்து மப்போ
வதையான அரைகளும் பருத்துப் போகும்
வண்மையுடன் இப்படியே ஆகா விட்டால்
சதியான சதைதடித்துக் காத்திரம் குன்றும்
சாங்கமாய் இப்பேதம் சன்மத்தி லுண்டு
சதியான வியாதியினுல் காணு தென்பார்
சாத்திரங்கள் பார்த்தாக்கால் தெரியுங் கூறே. (375)

கூறுன இரத்தஓட் டத்தி னலும்
குறிப்பாக இருதயத்தின் சலனத் தாலும்
வாராகத் தடையுண்டாய் இந்த ரோகம்
வண்மையுடன் வருகுதென்று வளமாய்ச் சொல்லு

ஏரான வலது பக்கத்திற் கேனும்
இதமான இடதுபக்கச் சடல மப்பா
நேராகத் தடித்துமே போவ துண்டு
நிச்சயமாய் இதன்குணத்தை நிகழ்தக் கேளே. (376)

கேளடா இருதயத்தில் துடிப் புண்டாகும்
கெடியான மூச்சுமுட்டல் தோன்று மப்பா
நீளடா வேகமாய் நடக்க வொட்டா
நிசமான இடதுபக்க இரத்தா சயத்தில்
வாளடா வேதனையும் உணர்ச்சி குன்றி
வளமான சிரசினில்தான் வலியும் காட்டும்
தேளடா அடிக்கடிதான் மயக்கம் உண்டாம்
தெளிவான இருதயத்தில் காதுவைத்துக் கேளே (377)

காதுவைத்துக் கேட்டாக்கால் இருத யத்தின்
கனமான சத்தங்கள் கேட்டி டாது
நீதியாய்க் கையைவைத்துப் பார்த்தா யானுல்
நிச்சயமாய் இருதயத்தின் துடிப்பு அப்போ
வேதனையாய்ப் பலமாக அடிக்கும் பாரு
வெகுதூரம் பரவியது விரைவாய்ப் போகும்
சோதித்த சிகிச்சையைநான் சொல்வேன் பாரு
சுகமாக்க வகையறியச் சொல்வேன் பாரே. (378)

சொல்லுகிறேன் ரோகியைத்தான் படுக்க வைத்து
சுகமாகக் காணுகின்ற குறியைப் பார்த்து
அல்லல்செய்யும் பலவீன மாகத் தோன்றில்
அப்பனே யதற்கு அயச்செந்தூர மீவாய்
தொல்லைசெய்யும் இருதயத்தின் துடிப்பு கண்டால்
தோன்றியதோர் நாவிசேர்ந்த மருந்தே ஈவாய்
வல்வினையால் மூச்சுமுட்டல் கண்ட தானுல்
வன்மையுடன் உஷ்ணமருந்து கொடுப்பாய் நீயே (379)

## இருதய கோச தாபன ரோகம்.
## தாமரைக்காய் வெப்பு நோய்.

கொடுக்கின்ற இரத்தா சயத்தை யப்பா
    குணமுடனே சூழ்ந்துகொண் டிருக்கின்ற தோர்
அடுத்திட்ட பயித்தியத் தாப னங்கள்
    அப்பனே இரத்ததா ஷியத்தால் காணும்
சடுத்தமுடன் இதிற்காணும் குறியே தென்னில்
    சுரமுடனே இடதுபக்க இரத்தாசயந் தான்
கடுத்தமுடன் இரத்தாசய வேதனையுந் துடிப்புங் காணும்
    கண்டிதமாய் நாடிநடை அதிக மாமே. (380)

அதிகமாய்ப் பெருமூச்சு வாங்கும் பாரு
    அப்பனே இடதுபக்கம் படுக்க வொட்டா
மதிமயக்கங் கொண்டுமே முகங்கள் வாடும்
    மகத்தான கண்டத்தின் நாடி யப்போ
குதிரைபோல் ஓடியே அடித்துக் கொள்ளும்
    குவலயத்தில் காதிரைச்சல் மயக்க முண்டாம்
ரதிபோன்ற மூக்கில்தான் இரத்தங் காணும்
    ரம்மியமாய் விழுங்கிடவே கஷ்ட மாமே. (381)

ஆமடா நோயதால் அதிக மானல்
    அப்பனே தளர்ச்சியுடன் இருமல் காணும்
ஓமடா அடிக்கடிதான் மூச்சடைப்புக் கொண்டு
    உத்தமனே முகம்,கை,கால் நீரேத்தங் காணும்
நாமடா இருதயத்தின் நடைதான் குன்றி
    நடுக்கலுடன் அடிக்கடிதா னடித்துக் கொள்ளும்
தாமடா சத்தங்கள் பலவீன மாகத்
    தன்மையுடன் விகற்பமாய்த் தோன்றுந் தானே. (382)

தானன ரோகந்தான் மூண்ட வேளை
    தங்காத நித்திரைதான் வாரா தப்பா
ஊனன ரூபமுகம் வெம்பித் தானே
    உள்ளதொரு விகாரமுந்தான் உடனே தோன்றும்
தேனன சத்தம்தான் முதலி லப்பா
    தெளிவற்றுக் காணுமடா ரோகிக்குத் தான்
மானகச் சிலநாட்கள் இருந்த பின்பு
    மக்கிப்போம் சத்தங்கள் மகளி னேர்க்கே. (383)

ஒன்றான வியாதியால் தாபனந் தானப்பா
ஒருவேளை கரைந்துவிடும் உண்மையாக
நன்றாகக் கரையாவிட்டால் அப்பா கேளு
நலமான இரத்தநீர்சுரந்து பையில் சேரும்
கன்றாக அப்போது பசையுண் டாகி
களிப்பான இரத்தா சயத்தையுந் தான்
அன்றான அதின்பையை மூடிக் கொள்ளும்
அப்பனே மெலிந்ததி ரேகத்திற்கண் டால்கேளே. (384)

கேளடா ஒருவேளை சீயே கொண்டு
கெடுத்துமே ஆளைத்தான் கொல்லும் பாரு
நாளடா இதுகாணும் வகையைக் கேளாய்
நலமான உக்கிரகீல் வாதரோகத்தில் காணும்
தேளடா மூத்திரக் குண்டிக்காய் ரோகம்
தெளிவான இரத்தத்தின் கெடுத லாலும்
மூளடா இந்தநோய் காணும் பாரு
முக்கியமாய் இதுதீர மருந்து கேளே. (385)

கேளடா முதலில்தான் ரோகிக் கப்பா
கெடியாக பேதிக்குக் கொடுத்துப் பாரு
நாளடா பேதிதான் ஆன பின்பு
நலமாக அயச் செந்தூரம் ஈய்ந்து
வாளடா நீரைத்தான் போக்கி னுக்கால்
வளமான இரத்தந்தான் ஊறும் பாரு
பாளடா போகாது இந்த நேர்மை
பக்குவமாய் இன்னமொன்று சொல்லக் கேளே. (386)

## நுரையீரல் வெப்பு நோய்.

சொல்லுகிறேன் நுரையீரல் வெப்புநோய் தான்
சுகமாக நீயறியச் சுருக்கமாய்த் தான்
வல்வினைதான் வருமுன்னே சரீர மப்பா
வளமாகச் சூடாக யிருக்கும் பாரு
பலவிதமாய் இரண்டுமூன்று நாளே சென்றால்
பலமாகக் குளிர்கண்டு குமட்டல் காணும்
சொல்லொணு இருமலுடன் பாரிசத்தில் நோவு
சொக்குடனே மூச்சுமுட்டல் காணுந் தானே. (387)

தானான நாடிதான் விரைவாய்ச் செல்லும்
தக்கதொரு சரீரந்தான் உஷ்ண மாகும்
மானான தாகமுடன் அன்னத்து வேசம்
மகத்தான அசீரணமுதல் தலைவலியுங் காணும்
தேனான விகாரமுந் தோன்று மப்பா
தெளிவான புப்புசஸ் தாபனத்தில்
கோனான மூன்றுசம யங்க ளுண்டு
கொற்றவனே இன்னதென்று சொல்வேன் பாரே. (388)

பாரடா முதல்பாகம் சொல்லக் கேளு
பண்பான புப்புசத்தில் இரத்த மப்பா
கூராக அதிகமா யிருக்கும் பாரு
குவலயத்தி லிரண்டாம்நோய் சொல்லக் கேளு
நேராகப் புப்புசந்தான் தடித்துப் போகும்
நிலையான மூன்றும் விதம்யா தென்றால்
வாரான புப்புசத்தில் சிக்கிக் கொள்ளும்
வன்மையுடன் இதின்குணத்தைச் சொல்லக் கேளே.

கேளடா முதல்பாகம் சொல்லக் கேளு
கெடியான இரத்தம்தான் அதிக மாகில்
நாளடா புப்புசந்தான் கருத்துப் போகும்
நலமுடனே நீயதனைச் சோதித் தாக்கால்
வாளடா இரத்தந்தான் சிவந்து நீராய்
வன்மையுடன் நுரைத்துமே வெளியே தோன்றும்
பாளான பிலிகத்தைப் போலே காட்டும்
பண்பாக அதையறிய வகைதுகையைக் கேளே. (390)

வகையான மார்பின்மேல் சத்தக்குழா யைவைத்து
வன்மையுடன் பரிசித்தால் நறநறவென் றசத்தம்
தொகையாகத் தோணுமடா அப்போ சொன்னேன்
தொட்டுமே பார்த்தருகில் ரோமந் தன்னை
வகையாகப் பிடித்துநீ விரலால்முட் டும்போது
வன்மையுள்ள சத்தம்போ லிருக்கும் பாரு
பகையில்லா விரல்களால் மாரைத்தட் டிப்பார்க்கில்
பண்புடனே சத்தந்தான் மந்த மாமே. (391)

ஆமேதான் புப்புசந்தான் தடித்துப் போனல்
அப்பனேகல் லீரல்போல் தடித்துக் காணும்
மாமேவும் மார்பில்கா தைவைத்துக் கேட்டால்
மகத்தான முன்சத்தம் மாறிப் பின்பு
நாமேதான் வேறுசத்தந் தோன்றும் பாரு
நலமாகத் தானடித்தால் அப்பா கேளு
பாமேவும் மந்தசத்தம் தோன்றும் பாரு
பக்குவமாய் மூன்ரும்விதம் சொல்லக் கேளே. (392)

சொல்லுகிறேன் புப்புசவே தனைதா னப்பா
சுருக்காக மென்மேலும் அதிக மானல்
அல்லல்செய்யும் புப்புசந்தான் சீழே கொள்ளும்
அப்பனே அதையறியச் சத்த மில்லை
எல்லையுள்ள புப்புசத்தின் தாது கள்தான்
இதமாக நைந்துமே சீயி னேடு
கல்லல்செய் யக்கலந்து கொண்டால்இரு மும்போது
கனமாக வெளியேதான் வருகும் பாரே. (393)

வருகின்ற வேளைதனில் கலகல வென்றசத்தம்
வகையுடனே காதுக்குக் கேட்கும் பாரு
குறுகியே மெலிந்துவரும் சரீரர்த் தோர்க்கு
கொப்பெனவே இந்தநோய் காணு மாகில்
அறுதியாய் ஒருவேளை புப்புசந் தானப்பா
அழுகியே போகுமடா சிலபேர்க் குத்தான்
மருவியே சுவாசத்தில் துர்க்கந்தம் வீசும்
மகத்தான மூச்சுமுட்டல் பலவீன மாமே. (394)

ஆமேதான் ஒருவேளை மரண மாவான்
அப்பனே ஒருபுப்பு சத்திற் கேனும்
ஓமேதான் இரண்டுபுப்பு சத்திற் கேனும்
உள்ளபடி தாபனங்கள் காணும் பாரு
பாமேவும் வலதுபுப்பு சத்திற் கப்பா
பண்பாக வழக்கமாய் நோவே காணும்
தாமேவும் மேற்புறத்திற் கேனு மப்பா
தன்மையுள்ள அடிப்புறமே வியாதி கொள்ளும். (395)

கொள்ளுகின்ற வியாதிதான் தொந்த மின்றிக்
குறிப்பாக இருந்தாக்கால் அப்பா கேளு
வள்ளிசாய் ஈரேழு நாளைக் குள்ளே
வன்மையாய்ச் சவுக்கியங்க ளாகும் பாரு
தெள்ளியே ஒருவேளை தொந்தப் பட்டால்
தெளிவாக மூவேழுநாள் போராடும் பாரு
அள்ளியே அசாத்தியத்தில் விழுந்து கொண்டால்
அப்பனே இரு பதுநாளில் சாவுவருமே தானே. (396)

வருகின்ற இந்தநோய் தீர வென்றால்
வகையான ஆமணக்கு எண்ணெய் தன்னை
பருகியே பேதிக்கு முதலில் தந்து
பக்குவமாய்த் துர்மலத்தை வெளியே போக்கி
மருவவரும் இரசச்சுன்னம் செய்து மேதான்
மகத்தான கெந்தகத்தின் நெய்யில் நீயும்
தருவாயே நெல்லிடைதான் ஆறு நாளே
தாண்டியே ஓடிவிடுந் தன்மை பாரே. (397)

## மார்புச் சவ்வு வெப்ப நோய்.

பாரடா மார்பையும் புப்புசத் தையுந்தான்
பண்பாக மூடிக்கொண் டிருக்கின் றதோர்
நேரான சவ்வின்தா பனத்தி லப்பா
நிச்சயமாய் இரண்டு விதமே யுண்டு
பாரடா தீவிரமாம் சாத்மிக மென்னும்
பரிவாக இரண்டுவிதம் கண்டு கொள்ளு
நேராக ஒருபுறத்துச் சவ்வுக் கேதான்
நிசமாக வியாதிதான் கண்டால் கேளே. (398)

கேளடா இருபுறச் சவ்வுக் கேதான்
கெடியாக ஒன்றுதா பனமே காணும்
பாளான அதின்குறியைச் சொல்லக் கேளு
பண்பாக இந்நோய்காண் பதற்கு முன்னே
நாளடா குளிருடனே சுரமுங் காணும்
நண்பான விலாவில் தான்குத்த லுண்டாம்
வாளடா வேதனைதான் காணும் போது
வன்மையாய்ச் சதைப்பிடிப்பு என்பார் பாரே. (399)

என்கின்ற அவ்வேதனை தான்சொல்லக் கேளு
இதமான மூலைக்காம்புக் குக்கீழே நோகும்
சின்மயமாய்ச் சுவாசத்தை உள்வாங்கும் போதும்
சிறப்பாக இருமல்வரும் வேளையின் போதும்
பன்மயமாய் நோய்ப்பக்கம் படுக்கும் போதும்
பரிவான விரல்களால் அழுத்தும் போதும்
கண்டிதமாய் வேதனைதான் அதிக ரிக்கும்
கனமான இருமல்தான் அற்ப மாமே. (400)

ஆமேதான் உடம்பதுவும் உட்ண மாயும்
அப்பனே கன்னங்கள் வீங்கும் பாரு
ஓமென்ற நாடியது தீவிரமாய்ச் செல்லும்
உத்தமனே அரட்டலுடன் புரட்டல் காணும்
நாமேதான் மூத்திரமுங் குறைந்து போகும்
நலங்கெட்டுச் சிவந்துமே இறங்கும் பாரு
சீமேவுந் திரேகத்தை அப்போ தய்யா
சிறப்பாகச் சோதனைக் குழாய்தன்னைக் கேளே. (401)

கேளடா குழாய்தன்னை மார்பில் வைத்தால்
கெடிதான சவ்விரண்டும் உரைவது போல
நாளடா சத்தமது கேட்கும் பாரு
நலமாகக் கையை யவிடம்வைத் துப்பார்த்தால்
கோளாக உரைகின்ற சத்தங் கேட்கும்
கொடிதான சத்தமது நின்று விட்டால்
நாளான சவ்வினுட கொடிதிப்பு நின்று
நலமுடனே தன்நிலைமை யடையுந் தானே. (402)

தானான இரண்டு சவ்வுகளு மேதான்
தான்ஒட்டிக் கொள்ளு மடாசில வேளையில்தான்
தேனாக ஒருவேளை இரத்தநீ ருண்டாய்
தெளிவான யிருசவ்வும் பிரிந்து போகும்
மானாக அதற்குத்தான் உரசல் ரோகமென்பார்
மகத்தான கொதிப்புத்தா னதிக மானால்
ஊனான இரத்தநீர் மிகுதி யுண்டாய்
உள்சவ்வு பைக்குள்ளே அடையும் பாரு. (403)

அடைந்துமே புப்புசத்தை அழுத்திக் கொண்டு
அதைவிரிய வொட்டாமல் செய்யும் பாரு
இடமான இரத்தா சயத்தை யப்போ
இடைவிட்டு பேதங்கள் செய்யும் பாரு
முடமான எலும்புகளை விரியச் செய்யும்
முக்கியமாய் இந்நோயால் சீயுங் காணும்
தடையாக இதற்குஒரு சிகிச்சை கேளாய்
தாரணியில் சொல்லுகிறேன் தன்மை கேளே. (404)

கேளடா தாபனத்தை முதலி லப்பா
கெடியாகச் சயனமே செய்வாய் நீயே
நாளடா அதின்பின்பு பேதிக் கீய்ந்து
நலங்கெட்ட துர்மலத்தைப் போக்கச் செய்து
பாளடா இரசபற்பத் தோடே நீதான்
பலமான அபின்மருந்து கூடச் சேர்த்து
நாளாகக் கொடுத்துமே வந்தா யானல்
நன்மைதரும் நோய்க்குத்தான் கெடுத லாமே. (405)

ஆமேதான் பத்தியம்பால் கஞ்சி யாகும்
அடவான மாமிசத்தின் ரசமு மாகும்
ஓமடா நீரச்செந் தூரங்கொண் டாலப்போ
உத்தமனே நீர்வத்த முயற்சி செய்வாய்
நாமேதான் பேதிக்கு ஈய்ந்த பின்பு
நலமான மூத்திரத்தின் பேதிக் கீய்வாய்
பாமேவு ரோகந்தான் பழகி விட்டால்
பண்பான அயமுதல் செந்தூர மீவாய். (406)

தானை உன்மாத ரோக மப்பா
தான்விளையும் விதமதனைச் சாற்றக் கேளாய்
பானகப் பரம்பரையாய்க் காண்ப துண்டு
பக்குவமாய்த் தாய்தந்தை தனக்கு மெத்த
கோளான மேகத்தின் வியாதி யாலே
குழந்தைதான் பிறந்திட்டால் அதற்குக் காணும்
மானகச் சிரசின்மேல் அடிபடுத லாலும்
மகத்தான சாராய வெறியால் கேளே. (407)

கேளடா லாகிரியாம் பதார்த்தம் தன்னை
கெணிதமா யதிகமாய்க் கொள்ள லாலும்
நாளடா சிற்றின்ப மதிகத் தாலும்
நலமான இந்திரியந் தன்னை யப்பா
பாழாகப் பலவந்தம் செய்து கொண்டு
பக்குவமாய் ஸ்கலிதந்தான் செய்வ தாலும்
தேளான அதிகசுர வியாதி யாலும்
தெளிவாகப் பைத்தியக்குணம் தோன்றும் பாரே. (408)

பாரடா அதின்விபரம் சொல்லக் கேளு
பக்குவமா யநேகவித மிருந்தா லுந்தான்
சீரடா அதற்குள்ளே நான்கு ரோகம்
செகத்தினிலே வருவதைத்தா னுகர்ந்து பாரு
தேரடா மூர்க்கஉன் மாத மென்றும்
தெளிவான ஏகவிஷ உன்வாத மென்றும்
நாரடா சாபல்யம் பிறவிப் பைத்தியம்
நலமான இதன்குணத்தை நீதான் கேளே. (409)

கேளடா மூர்க்கஉன் மாதரோக நேர்மை
களிப்பாகச் சொல்லுகிறேன் கருதிப் பாரு
பூணடா மனதுதான் கலக்க முற்று
பொல்லாத சேட்டைசெய் வான்புவி யுளோரே
நாணந்தா னில்லாமல் மூர்க்க மாக
நடப்பான் வேகமாய் எப்போதுந் தான்
கோணியே நடைநடந்து குவல யத்தில்
கொப்பெனவே நித்திரைதா னற்றுப் போமே. (410)

போமடா ஆகாரம் பெலமு மப்பா
பொல்லாத கூப்பாடும் நகையுஞ் செய்வான்
ஆமடா ஓயாமல் பேசுவான் காண்
அப்பனே திரேகந்தான் ஒடுங்கிப் போகும்
ஓமடா இதுதீரக் குறியே தென்னில்
உத்தமனே நித்திரையும் ஆகாரம் கொள்ளும்
நாமடா பசியுண்டாய் விகாரம் நிற்கும்
நலமான இதின்குணந்தான் நயந்து பாரு. (411)

பாரடா ஏகவிஷ உன்மாதந் தன்னை
பக்குவமாய்ச் சொல்லுகிறேன் பண்பாய்க் கேளு
கூறடா இதற்குத்தான் ஞானபைத்திய மென்பார்
கொத்தவனே புத்திதான் கொஞ்சவிகல் பமேயாகும்
நேரான சாபல்ய பைத்தி யந்தான்
நேரான அபாயத்தி னலேயே காணும்
கூறடா முதிர்வயது காலத்தி லேயேனும்
குணமாக்க காணுமென்று குறிதான் சொல்லே. (412)

கேளடா உஷ்ணசன்னி ரோகந் தன்னை
குறிப்பாகச் சொல்லுகிறேன் நன்ருய்க் கேளு
நாளடா சீததேசத்தில் வாழும் நலமான
மாந்தருக்கு இந்நோய் அப்பா
வாளடா உஷ்ணதேசம் வருகுங் காலே
வளமான இந்நோய்தான் வருகு மென்று
தேளடா மதுபானம் அதிகமாய்க் கொள்வோர்க்கும்
திரமான வெய்யிலில் சஞ்சரிப்போர்க் குந்தானே. (413)

தானன இந்தநோய் காணுங் காலே
தயவில்லா துஷ்டக்கிர கம்கொன்ற தென்று
மானன மாந்தர்கள் தான்சொல்வார் பாரு
மகத்தான லக்ஷணத்தைச் சொல்லக் கேளு
தேனன இந்நோய் வருகும்வேளை தலைவலியும்
திரேகம் உஷ்ணம் ஆயாசம் காணும்
ஊனன மார்பைத்தான் சுத்தி யப்பா
உருட்டியே கட்டியதுபோ லிருக்குதென்று சொல்வான்
பாரு. (414)

பாரடா நாடிதான் பெருத்துதீவிர மாயேனும்
பண்பாக விரல்களுக்கு அகப்படாம லேனும்
நாரடா சீரணித்து நடக்கு மப்பா
நலமான வியாதிதா னதிக மானல்
கூருன இருதயத்தின் நடைதா னப்பா
குறிப்பாகத் தீவிரமாய்ச் செல்லும் பாரு
நேரான ரோகிக்கு மந்த முண்டாம்
நிச்சயமாய் எழுந்திருக்க மாட்டான் பாரே. (415)

மட்டான முகம்வெளுத்து வாந்தி யுண்டாம்
மகத்தான போதசயங் காணும் பாரு
தட்டான அறிவின்றி திரேகம் மெத்த
தகுந்தபடி உஷ்ணமா யிருக்கும் பாரு
முட்டாகும் சுவாசந்தான் விட வொட்டாது
முக்கியமாய்க் கண்தாரை சுருங்கிக் கொள்ளும்
தட்டாக கண்ணுரெண்டுஞ் சிவந் திருக்கும்
தன்மையுள்ள இருதயந்தான் அக்கிரமமாய்ப் போமே. (416)

போமடா இறப்பதற்குமுன் குறிப்பைக் கேளு
பொல்லாத கண்தாரை விரிந்து கொள்ளும்
நாமடா சுரமுடன் வாந்தி யுண்டாம்
நலமான இந்நோய்தான் வெகுசீக்கிரத்தில் கண்டு
ஆமடா தீவிரமாய்க் கொன்று போடும்
அழகான ரோகந்தான் தீருவதாய்க் கண்டால்
ஓமடா காலேனும் கையை யேனும்
ஒருவிதமாய் ஸ்தம்பித்து அதிகக்ஷீண முண்டாங்காணே. (417)

காணடா ஆனுத்தான் சில நாளப்பா
கெடியாகப் படுக்கவைத்துப் போடும் பாரு
பூணடா திரேகம் உஷ்ணமிருக்கும் வேளை
புனிதமாய் ரோகிக்குப் பயமில்லை யென்று
வாணுளை நம்பாதே நீதா னப்பா
வளமான மூளையும் முள்ளந்தண்டுக் கொடியும்
கோணுத ஒற்றுணர்வு நரம்புகளும் சேர்ந்து
குடிகெடுத்த இந்நோய்தான் காணும் தானே. (418)

காணுகின்ற இக்கொடிய ரோகந் தீர
கனமான சிரசில்தான் ஈரத்துணியைக் கட்டு
உண்பதற்கு உஷ்ணமருந்தை அடிக்கடியே ஈய்ந்தால்
உத்தமனே சுககுணந்தா னுண்டாம் பாரு
பேணிவரும் ரோகியைத்தான் படுக்க வைத்து
பின்னலே குளிர்ந்தஜலம் தன்னை யப்பா
கோணுமல் சிரசின்மேல் மார்பின் மேலும்
கொப்பெனவே தாரையாய் விடுவாய் நீயே. (419)

விட்டபின்பு ஜலத்துடனே சாராயஞ் சேர்த்து
  விரிவான துணியைத்தான் நனைத்துக் கொண்டு
சிட்டமுடன் சிரசின்மேல் போட்டு வைப்பாய்
  சிறப்பான நாடிதா னடங்கி நின்ருல்
சட்டமுடன் சரீரந்தான் குளிர்ச்சி யாஞல்
  சதிரான குளிர்ந்த ஜலம் ஊற்றலாகா
திட்டமதாய் அக்கினி குமாரன் ஈந்தால்
  தெளிவு கண்டு ரோகந்தான் தீருந்தானே. (420)

தானுன இந்தநோய்தான் நரம்பை அப்பா
  தான்திருட சீணிக்கச் செய்யா தாகில்
மானுன அந்நரம்பை பெலமே செய்ய
  மகத்தான முன்மருந்தை முதலில் தந்து
தேனுன கல்க்கந்தான் கொடுத்துப் பின்பு
  திறமான நசியங்கள் கொடுத்தால் நன்று
ஊனுன இந்தநோய் தீரு மென்று
  உள்ளபடி யானிதனை உரைத்தேன் பாரே. (421)

## அசதி சன்னி ரோகம்

அல்லது

## உஷ்ண சிரஸ்தாப ரோகம்

அல்லது

## ரத்தம் தலையிலேறிக் கொண்டிருக்கும்.

பாரடா அசதிசன்னி ரோகந் தன்னை
  பாடுகிறேன் நீயறியப் பகரக் கேளாய்
கூறேநீ சடுதியில் தானுணர்ச்சி யெல்லாம்
  கொப்பனவே யற்றுபோத சயங் காணுவதாலே
நேராக அப்போது உணர்ச்சி புத்தி
  நிச்சயமாய் அசவுகெட்டு சுவாசம் நின்று
சீரான இருதயத்தின் நடையுங் கெட்டு
  சிறப்பான மூளையது அழுந்த லற்றுப்போமே. (422)

போமடா போதசயங் காணும் போது
பொங்கமுடன் மூன்றுவிதமாய்க் காணும் பாரு
ஆமடா படிப்படியாய்த் தணிந்து போகும்
அப்பனே பூர்த்தியாய் நிவர்த்தியாகா மல்தான்
ஓமடா புத்திக்குச் சபல முண்டாகி
அப்பனே கால்கைகள் எதிலே யேனும்
தாமடா ஸ்தப்ப வாதங் காணும்
தட்சணமே மரணமது உண்டாம் பாரே. (423)

உண்டாம் மூளையில்தான் ஒன்றும் சிக்கா
உத்தமனே ஒருவேளை ரத்த மேனும்
நண்டான ரத்தநீர் பக்கப்பள்ளங்களி லேனும்
நலமான சவ்வுக் கடியி லேனும்
திண்டாகக் காணுமடா இந்த நோயைத்
திரிஜாதியாய்ப் பிரித்துச் சொல்வேன் பின்னல்
பண்டாக இதுகாணும் முன்னல் குறியைப்
பகருகிறேன் நீகேளு பண்பாய்த் தானே. (424)

தானன தலைவலியும் மயக்கம்காணும் தயவான
தலைக்கனமும் காதிரைச்சல் காதடைப்புக் காணும்
மானன பார்வைமந்தத் தோடும் கூட
மகத்தான தோற்றமது இரண்டாய்த் தோன்றும்
தேனுக ஒருவேளை ரத்தப்பீனிசமுங் காணும்
தெளிவின்றி மறதியுடன் திமிருங் காணும்
ஊனன உறக்கம் வாயுளறல் மூர்ச்சை
உத்தமனே திரேகத்தில் ஸ்தம்பவாதந் தோன்றும். (425)

தோன்றியே ஓயாமல் வார்த்தை சொல்வான்
தொலையாத அசிரத்தை மிகவுந் தோன்றும்
இன்றியே முகம்இமைகள் இவைகளில் தான்
அப்பனே ஸ்தம்ப வாதங் காணும்
ஊன்றியே மூன்றுவிதந் தன்னி லப்பா
உத்தமனே முதல்விதந்தான் சொல்வேன் கேளு
தான்றியே திடீரென்று ஆள்விழுந்த பின்பு
தட்சணமே உணர்ச்சியுமே அசைவற்றுப் போமே (426)

போமடா அப்போது ஆளைப் பார்த்தால்
பொங்கமுடன் நித்திரைசெய்வான் போலதோணும் பாரு
ஆமடா இரண்டாம்விதம் சொல்லக் கேளு
அப்பனே ஜல்தியில் தலைவலியே காணும்
ஓமடா திரேகம்வெளுத்து குமட்ட லுண்டாய்
உத்தமனே மூர்ச்சைகண்டு வாந்தி காணும்
நாமடா ரோகந்தா னதிகப் பட்டு
நலமான மூளைரத்தங் குறைந்து போமே. (427)

உறைந்துநின்ற மூன்றும்விதம் சொல்லக் கேளு
உத்தமனே ஒருபக்கப் பச்சவாதங் கண்டு
மறந்துநின்ற அறிவுவாக்கு இழந்து போவான்
மகத்தான அறிவுமட்டும் கெடா தப்பா
செறிந்துநின்ற பட்சவாதங் கண்டு மெதுவாய்
அசதி சன்னி தன்னில் சேரும்
பறந்துவந்த ரோகந்தான் சௌக்கியம் கண்டால்
படிப்படியாய் மெதுவாகக் குணந்தான் காணும். (428)

காணுகின்ற வேளையதனில் குறியைக் கேளாய்
கனமான ஜன்னிதான் ஜாமத்துக் குள்ளே
பேணியே தீர்ந்துவிடும் சிலபேர்க்குத் தான்
பலமாக நாள்பட்டுச் சிலருக்குத் தீரும்
ஆணியாய் அப்போது காணு கின்ற
அறியான குறியதனைச் சொல்லக் கேளாய்
பாணியாய் உணர்ச்சிதான் கொஞ்சமேனும்
பத்தியே திரேகத்தி லிருந்தி டாமே. (429)

இருந்திட்ட நாடிதான் பெருத்துக் கொண்டு
இதமாகத் திடமாய் மலின மாய்
பரந்துமே நடக்குமடா அவனுக் கேதான்
பண்பான சுவாசந்தான் மெதுவாய்த் தோன்றும்
கரந்துவரும் சுவாசமது உஷ்ண மாயும்
கனமாக ஒருவேளை குறட்டை தோன்றும்
சொரிந்துமே வாயில்நுரை வெளியே தள்ளும்
சுகமான இக்குறிதான் சாத்திய மாமே. (430)

ஆமடா அசாத்தியத்தின் குறியைக் கேளு
அப்பனே சரீரந்தான் சில்லிட்டுப் போகும்
போமடா பிசுபிசுப்பு வியர்வை காணும்
பொங்கமுடன் முகம்வெளுத்துக் கண் மங்கலாகும்
தாமடா பளபளப்பாய் கண்தாரை விரிந்துகாட்டும்
தக்கபற்கள் தான்கிட்டி கட்டிக் கொள்ளும்
ஓமடா ஜலங்கூட இறங்கா தப்பா
ஒருவேளை இறங்கி னுக்கால் கஷ்டமாகும். (431)

ஆகுமே மலந்தான் கட்டிப் போகும்
அப்பனே ஒருவேளை தெரியாமல் போகும்
போகின்ற மூத்திரந்தா னிறங்கா தப்பா
பொங்கமுடன் மூத்திரப்பை நிறைந்து விட்டால்
ஏகியே துளித்துளியா யிறங்கு மப்பா
இதமாக ரோகிக்கு ஆஸ்வாசங் கண்டால்
வாகான கைகாலில் பக்ஷ வாதம்
வழக்கமாகி வந்துவிடும் வண்மை தானே. (432)

தானுக இதுகேளும் காரணத்தைக் கேளாய்
தனித்துமே அதிகமாய்த் திரித லாலும்
கூனன்போல் குனிந்திருந்து குபிர் என்று
கொப்பனவே நிமிர்ந்து கொள்ளும் காலமேனும்
மானுன மலசலங்கள் விசர்க்கந் தன்னில்
மகத்தான முக்கல்தான் செய்வ தாலும்
ஊனுன அதிசந் தோஷத் தினுலும்
உத்தமனே அதிவிசனங் கொண்டால் காணும். (433)

காணுமடா அதிக கோபம் தீக்ஷண வெய்யில்
கண்டித்து நடக்குதலால் இதுவே காணும்
பூணியே கழுத்தில் பிகு கட்டலாலும்
பொல்லாத ஸ்திரீபோகம் அதிகஞ் செய்வதாலும்
பேணியே பெருந்திண்டி தின்ற லாலும்
பாழான இந்நோய்தான் உண்டாம் பாரு
பாணிதனில் குளித்தபின்பு சையோகம் செய்தால்
பண்பான சுகஜன்னி எய்யும் பாரே. (434)

பாரடா இந்நோய் தீரவேண்டி பக்குவங்கள்
சொல்லு கின்றேன் பண்பாய்க் கேளு
ஆரடா முதலில்தான் பேதிக் கீய்ந்து
அதன் பின்பு ரசகற்ப மீவாய்
தேரடா தலையில்தான் உஷ்ண மான
தெளிந்ததொரு பத்திட்டு தேய்ப்பாய் பின்பு
நாரடா இந்தநோய் தீர்ந்து போகும்
நானுாத்தில் சொன்ன சுன்ன மாமே.. (435)

## ஜல மஸ்தகம்.

ஆமடா ஜலமஸ்தக ரோகந் தன்னை
அறைகிறேன் மானிடர்க்கு அறிவாய்க் கேளு
ஓமடா மூளையில்ஜலம் சேர்ந்து கொள்ளும்
உத்தமனே ரோகமதை ஜலமஸ்தக மென்பர்
நாமடா இதுகுழந் தைகளுக்குத் தான்
நலமான எந்த வயதினிலே காணும்
கோமடா ஜென்மத்தின் வியாதி யாயில்
கொத்தவனே மூளைதான் கிரமமா யில்லை. (436)

இல்லையடா மூளைசவ்வின் தாபத் தினலே
இதமாகக் கண்டாக்கால் தீவிர
தொல்லையுடன் ஜென்மிக்கும் போதே இந்நோய்
தொடர்ந்துமே யிருப்பதுவு முண்டு காணு
அல்லலுடன் திரேகம் அசௌக்கியத் தினலே
அப்பனே மெதுவில்தாகங் காண்ப துண்டு
சல்லியமா யிதற்கு காலீகமஸ்தக மென்பார்
சதிராக இதுதங்கு மிடத்தைக் கேளே. (437)

கேளடா இந்தநோய்தான் வருகும் போது
கெடியான ஜலத்தினுட பிகுவி னலே
நாளடா கபாலரேகை விசால மாகி
நலமான சிரசுதான் பெரிதாய்ப் போகும்
தேளடா ஒருவேளை ஒருபக்கம் மட்டும்
தெளிவான சிரசுதான் பெரிதாகிப் போகும்
பூணடா மூளையிட பக்கம் தன்னில்
முக்கியமாய் பள்ளத்தில் ஜலமே தங்கும். (438)

தங்குவதும் சிலவேளை யுண்டு பாரு
    தக்கதொரு ஜவ்விலும்தான் தங்குவது முண்டு
அங்கு அரைமுக்கால் ஆழாக்கு வீதம்
    அப்பனே படிக்கணக்காய் ஜலமுந் தோன்றும்
சங்கையுள்ள திரேகசௌக்கி யந்தான் அப்பா
    சாதாரணமா யிருக்கும் நோய் தோன்ருது
மங்கிவரும் ஜலமஸ்தக ரோகத் தாலே
    மகத்தான ஜலம்தான் மண்டையில் காணும்பாரே.(439)

பாரடா ஜன்மிக்கும் போதின் நோய்தான்
    பதிவாக இல்லாம லிருக்கு மாகில்
கூறடா இந்நோய் காணு மாகில்
    கொத்தவனே குழந்தைக்கு ஆறுமாதத் திற்குள்
நேராகக் காண்பதுமே வழக்க மாகும்
    நெறியாக குழந்தைதா ஞகாரங் கொண்டாலுந்தான்
தேருமல் உணங்கியே வத்திப் போகும்
    தெளிவான சிரசுதான் பெருத்துக் காணும்பாரே. (440)

காணுமடா முகந்தான் பிதுங்கித் தோன்றும்
    கனமான நெற்றிதான் கீழ்நோக்கும் பாரு
பூணுகின்ற இருகண்ணும் பெரிதாகித் தோன்றும்
    பொலிவான கபாலந்தான் விரிந்து காட்டும்
பேணிவரு மூச்சியுட துவாரந் தானும்
    பெரிதாக யிருக்குமடா இந்நோய்க்குத் தான்
ஆணியுள்ள புத்திக்கு விகல்ப மில்லை
    அப்பனே துர்ப்பலந்தா னுண்டாம் பாரே. (441)

தாஞக இதில்காணுங் குறியைக் கேளு
    தன்மையுள்ள காக்கைவலி ஆயாசங் காணும்
மாஞன கண்ணைத்தான் அழட்டிக் கொள்ளும்
    மக்களுக் கோர் கண்ணுகிப் போகும்
தேஞன இக்குணங்கள் அடிக்கடியே காணும்
    தெளிவான சிரசுதான் சாய்ந்தி ருக்கும்
ஊஞன இதன் காரணத்தைச் சொல்வேன்
    உத்தமனே நீகண்டு உரைப்பாய் பாரே (442)

உரைக்கிறேன் இக்குறிகள் கண்ட மாலை
உறுதியுள்ள மேகத்தின் வியாதி யோர்க்கும்
பிறக்கின்ற குழந்தைகட்கும் இந்த வியாதி
பலமாய்க் காணுமடா பேணிப் பார்க்க
கரைக்கின்ற சீதத்தின் காத்தி னாலும்
கனமான விஷக்காற்றை உட்கொள்ள லாலும்
தருகின்ற போஷணையின் குறைவி னாலும்
தலைமேலே அடிபடுதல் தன்னால் தோன்றும். (443)

தோன்றுமடா சொறிசிரங்கு திடீ ரென்று
தொப்பனவே உள்ளடங்கிப் போவ தாலும்
அன்றுமே பல்முளைத்தல் மலக்கிருமி ரோகம்
அப்பனே மூளையின் சவ்வு மேலே
ஊன்றியே கட்டிகள்தா னுண்டா வதாலும்
உட்காது தனிலிந்து வேதனைபோ வதாலும்
சான்றோர்கள் இந்நோய்தான் வருகு மென்து
சாற்றினார் நூல்தனில் சாற்றி னாரே. (444)

சாற்றினார் இன்னேய்தான் தீர வேண்டி
சதிராகப் பேதிக் கீய்ந்த பின்பு
ஆற்றியே ரசபற்பம் கொடுத்து வந்தால்
அப்பனே வாயிதான் புண்ணுய்ப் போகும்
தேற்றியே அவ்வழியாய் நீர்க ளெல்லாம்
திறமாக இறங்கிவிடும் பத்தியத் தாலே
ஊற்றியே கம்பளியால் குல்லா தைத்து
ஒருக்காலும் விடாமல் போட்டு வையே. (445)

## மூளை ஸ்தாபன ரோகம்.

வையடா மூளைஸ்தா பனத்தின் ரோகம்
வகையாகச் சொல்லுகிறேன் மைந்தா கேளு
பண்படா மூளைக்கும் மூளைச் சவ்வுக்கும்
பண்பாகத் தாபனமே கண்ட தானால்
வெய்யடா சுரமுடனே குமட்டல் வாந்தி
விதமாக சிரந்தன்னில் அதிகவேதனையே செய்யும்
நையடா தீவிரமாய் அக்கிரம நாடிசெல்லும்
நலங்கெட்ட மலபந்தம் உண்டாம் பாரே. (446)

பாரடா வெளிச்சமுடன் சத்தங் கண்டால்
பண்பான நோயாளி சகிக்க மாட்டான்
நேராக நித்திரைதான் வந்தி டாது
நிலையில்லா குரூரதிருஷ்டி சிவந்த நேத்திரம்
காரடா கலவரமும் விகாரந் தோன்றும்
கண்மணியே இக்குறிகள் முதலில் தோன்றும்
கூறடா ஒன்றுரெண்டு நாளைக்குப் பின்
குறிகாட்டும் குணமதனைச் சொல்வேன் கேளே. (447)

கேளடா தளர்ச்சியுடன் மயக்கங் காணும்
கெடிதாக வார்த்தைதான் சொல்வான் பாரு
நாளடா பேச்சுடன் பார்வை கேள்வி
நலங்கெட்டு மந்தத்தை அடைவான் பாரு
வாள்போன்ற கண்தாரை விரிந்து காட்டும்
வளமான ஓர்கண் ரெப்பை தானும்
நீளடா அசைவற்றுப் போகும் பாரு
நிச்சயமாய்க் கொறக்கைவலி காணும் பாரே. (448)

காணுமடா பிரேதம் போல் முகமே
காட்டும் கடிதான யிருபல்லின் ஊத்தை தோன்றும்
பூணுமடா சரீரமுற்றும் வியர்வை தோன்றி
பொல்லாத குளிர்ச்சியுடன் மலஜலங்கள் தானும்
கோணியே போகுமடா கைகால் தன்னில்
பொலிவாக இசிவுதான் நின்றுநின்றே காணும்
பேணியே திரேகந்தான் தம்பித்த பின்பு
பொல்லாத மரணந்தா னுண்டாம் பாரே. (449)

உண்டான வியாதிதான் கண்ட போது
உறுதியாய் வாந்தியுடன் குமட்டல் கண்டால்
நண்டான தாபனந்தான் மூளை நின்று
நலமாக வந்ததென்று கண்டு கொள்ளு
திண்டான இசிவுதான் முதலில் கண்டால்
அதின்மூளைச் சவ்வினின்றுண் டாயிற் றென்று
பண்டான வைத்தியர்தான் சொன்ன ரப்பா
பார்தனில் மரணந்தான் பலிக்குங் கர்ணே. (450)

பலிக்கின்ற ரோகத்தின் காரணத்தைக் கேளாய்
பக்குவமாய் டாக்காலில் தட்டம்மை தன்னில்
ஒலிக்கின்ற காயமுடன் அடிபடுத லோடு
கடிதான காதெலும்பு வியாதி யாலும்
சொரிக்கவே இன்னேய்தான் காணும் பாரு
சுகமாகக் காணுவது முண்டாம் பாரு
கெலிக்கவே இதுதீர மருந்து சொல்வேன்
கெட்டியாக பேதிக்குக் கொடுப்பாய் முன்னே. (451)

முன்னலே பேதிக்குக் கொடுத்த பின்பு
முக்கியமாய்ச் சிரசில்தான் ஈரம் வைப்பாய்
பின்னலே ரசகற்பம் முதலா யுள்ள
பெலமான மருந்துகளைக் கொடுப்பாய் நீயும்
நன்னயமாய் அக்கினி பிளாஸ்திரி செய்து
நாயகனே பிடரியில்தான் வைத்துக் கட்ட
சொன்னேனே அனுகூல மாகு மென்று
சூட்சமமாய் உந்தனுக்குச் சொன்னேன் பாரே. (452)

## காலிகா மூளை தாபன நோய்.

பாரடா காலிகாமூளை தாபனரோகந் தன்னைப்
பாடுகின்றேன் நீயறியப் பண்பாய்க் கேளு
கூறடா மூளைச்சவ்வின் தாபனத்தி லேயேனும்
குபிலென்று தானுகை வரும் பாரு
நேரான அதின்குணத்தைச் சொல்லக் கேளு
நிச்சயமாய் மனஅழலை தளர்ச்சி காணும்
சீரான ரோகிதான் பலவீன மாகி
சித்தம் சிறப்பாக எண்ணியே பேசுவான் பாரே. (453)

பேசுவான் படபடப்பாய் தெத்து வாயாய்
பெலமற்ற தலைநோயும் பசி மந்திக்கும்
கூசியே மலபந்தம் அக்கிரம நாடி
குவலயத்தில் நாட்சென்ருல் மறதி தோன்றும்
தேசியாய்த் தொனியுந்தான் மந்த மாகும்
தெளிவான கைகால்கள் ஸ்தம்பனமே காணும்
வாசியுள்ள திரேகந்தான் தளர்ந்து போகும்
வளமான மூளையின் ஸ்தாபனத் தினலே. (454)

மூலை மிருதுவாகியே போவ துண்டு
முக்கியமாய் உக்கிர தாபனத்தி லப்பா
காலைபோலக் காண்பதுண்டு இந்தநோய் தான்
கனமாக ஓரிடத்தில் காணும்
வாலைபோலக் கண்டாக்கால் அந்த மூலை
வளமையுடன் பசையைப் போலாகி விடும்
பாலைபோலப் பின்னாலே பாலாடையைப் போலே
பண்பாக ஆகிவிடும் பழமை தானே. (455)

தானான இசிவோடு கைகால்கள் தான்
ஸ்தம்பித்து விட்டாலும் அப்பா கேளு
ஊனான காலேனும் கையே யேனும்
உள்ளபடி இரண்டுந்தான் முடக்கி னாலும்
தேனான மூலையுட வியாதி யென்று
தெரிந்துகொள்வாய் நிச்சயமாய்த் தெளிவாகத் தான்
மானாக ஒருவேலை மூலையில் தான்
மகிழ்வுடன் சீக்கட்டிக் கொள்ளும் பாரே. (456)

கொள்ளுகின்ற மூலைக்கு இரத்தவோட்டம் குன்றினாக்கால்
குறிப்பாக மிருதுவாகி வெள்ளைநிறந் தான்காட்டும்
விள்ளுகின்றேன் இன்னேய்தான் வயது சென்றோர்க்கு
விதமாகக் காணு மடா விபரமாக
அள்ளுகிறேன் மூலைக்குத் தாபனமே கண்டால்
அதில் கொஞ்சம் ஓரிடத்தில் கட்டியாகி
கொள்ளியாக நின்று விடும் மாந்தருக்கு
குடிகெடுத்த அந்தஇடம் மெழுகு போலாமே. (457)

ஆமடா மூலையில்தான் மாமிசக்கிரந்தி காணும்
அப்பனே ஜலப்பையுங் கட்டிகளுந் தான்
நாமடா காணுவ துண்டு பாரு
நலங்கெட்ட மூர்க்கநோய் வலுவே மெத்த
ஓமடா இதற்கு வெகு புத்தியாக
உத்தமனே வைத்தியங்களைச் செய்து வந்தால்
கோமான் மெத்தவுந்தான் மெச்சிக் கொண்டு
கொடுப்பார்கள் தண்பதனை கொடுப்பார் காணே (458)

## சுரம் வரலாறு.

காணவே சுரம்வகையைச் சொல்லக் கேளாய்
கனமான சுரத்தொகை இருநூத்தி எழுபத்தாறும்
பேணியே வருங்காலே குணத்தைக் கேளாய்
பக்குவமா யாயாசம் துர்ப்பலமே காணும்
பூணவே குளிர்மந் தாக்கினி காணும்
பொங்கமுடன் நாடிதான் படபடத் தோடும்
காணுவாய் இதெல்லாம் சுரத்துக்குப் பின்னேயென்று
கண்டுநீ தெரிந்திடவே இன்னும் கேளே. (459)

கேளடா சுரவகுப்பைத் தெரிந்து கொள்ள
கெணிதமாய் நால்வகுப்பாய் பிரித்துச் சொல்வேன்
நாளடா சத்தசுரம் சீதசுரம் தானும்
நலமான சந்ததசுரம் விஸ்போடக சுரம்
பிரித்துவிட்டு அதற்குள்ளே தான் பல
பிரிவு இருப்பதை நானுரைப்பேன் கேளு
பாழான வெகுசுரங்கள் இதற்குள் சேரும்
பக்குவமாய் சுரத்திட தன்மை தானே. (460)

தானான சத்தசுரந் தன்னி லப்பா
தப்பாமல் நான்குவித சுரங்க ளுண்டாம்
ஊனான அற்பசுரம் சன்னி பாதம்
உற்பவித்த அதிசார சன்னி பாதம்
தேனான புண்சுரமுங் காணும் பாரு
தெளிவான இதன்குணத்தைப் பின்னால் சொல்வேன்
மானான சீதசுரம் தன்னி லப்பா
மகத்தான மூன்றுசுரங் காணும் பாரே. (461)

பாரடா ஏகாகிக சுரந்தா னென்று
பக்குவமாய் திரியாகீக சுரந்தா னென்று
கூறடா சதுராகீக சுரந்தா னென்று
குறிப்பாக இதுமூன்றும் சீதசுரத்தின் பாகம்
தேரடா சந்தத சுரத்தின் பாகம்
தெளிவான தணிவுசுரம் ஒன்றே யாகும்
வீரடா விஸ்போடக சுரத்தின் பாகம்
விதமாக ஆறுவிதங் கண்டு சொல்லே. (462)

## சின்னம்மை.

சொல்லடா பெரியம்மை கோப சூரி
சுகமான தட் டம்மை யோடு
அல்லல்செய்யும் ரத்தம்மை அக்கினி யோடு
அழகாக ஆறுவித முண்டு பாரு
வெல்லுகிறேன் அதினுடைய குணத்தை யெல்லாம்
விதவிதமாய் நீயறிய விதிப்பேன் கேளாய்
தொல்லுலகில் இச்சுரங்கள் வருகும் போது
தேகத்தில் வெகுகஷ்டம் நேரும் தானே. (463)

நேர்ந்தசுரம் இருநூத்தி எழுபத் தாறில்
நிச்சயமாய் நின்றசுரம் அறுபத்தி னலாம்
கூர்ந்துஅதைப் பார்த்தாக்கால் பதினன் காச்சு
கொப்பனவே அதின்சாதி நான்கே யாகும்
பார்தனிலே மாந்தருக்குச் சுரங்கள் வந்தால்
பலவிதமாய்க் குணங்காணும் விதங்க ளாலே
சேர்ந்தகுணம் ஒவ்வொன்றும் பேரைச் சொல்லி
செப்பினேம் முன்னூலில் பேரைத் தானே. (464)

தானன இரணம்இருமல் விக்கல் காயம்
தான்வருகும் போதிலப்போ சுரமுண் டாகும்
தேனன இச்சுரங்களு பத்திரவத் தாலே
தெரிவிக்கவே வந்ததினல் தனிச்சுரமே யல்லா
மானன வெகுசுரங்கள் மாந்தருக்கு
மகிழ்வுடனே வருவதில்லை தேசந் தன்னில்
ஊனன பலதேசச் சுரங்கள் சேர்ந்து
உள்ளபடி துகை சொன்னேம் நாமே. (465)

## சப்த சுரம்.

ஆமடா சப்தசுரம் தன்னி லப்பா
அடங்கிவதோர் நாலுசுரம் வருகும் நேர்மை
நாமடா விஷக்காத்து தன்னில் வாழும்
நலங்கெட்ட பதார்த்தந்தான் ரத்தத்தில் சேர்ந்து
ஓமடா ரத்தம்கெட்டுப் போன தாலே
உத்தமனே இச்சுரந்தான் வருகு தென்று
நாமடா முன்னேர்கள் சொன்ன பாகம்
நீயறிய நானுனக்கு உரைத்தேன் பாரே. (466)

உரைக்கின்ற நரம்பின் விகற்பத் தாலே
உத்தமனே துர்ப்பலமும் விகாரந் தோன்றி
கரைந்துமே சரீரமது சுஷ்க்க மாகி
கடிதான அன்னத்துவேஷம் மிகவும் கண்டு
திறக்காமல் இரவுபகல் மாருமல் தான்
திறமாக ஒரேவிதமாய்க் காய்வ தாலே
மறைக்காத சுத்தசுரம் யெனப் பேருபெற்று
மாநிலத்தில் மாந்தருக்குத் தோன்றும் பாரே. (467)

## அல்ப சுரக்குணம்

பாரடா சுரம்வந்த நாளே யப்பா
பரிவுடனே விட்டுவிட்டால் அற்பசுரமே யாகும்
நேரடா இதில்வேறு ரோகம் உண்டாகாது
நெறியான அற்பசுரம் ஈரைந்துநா ளிருப்பதுவுமுண்டு
கூறடா இதற்குக் காரணமே தென்னில்
குணமான ஆயாசம் சரீரப்பிரயாசை யாலும்
ஈரடா மனோதுக்கம் இவைக ளாலும்
சிறப்பாக நீரேதுவாய்க் காணும் பாரே. (468)

காணுகின்ற வேளைதன்னில் குணமே தென்னில்
கனமான இச்சையின்மை அன்னத் துவேஷம்
பூணுகின்ற தலைவலியும் முதுகுகைகால் தன்னில்
பொக்கெனவே நறுக்குதுவைத்ததுபோல வேதனைகள் [செய்யும்
பாணிபோல திரேகம் சீதளமே கொள்ளும்
பக்குவமாய் முதுகுநடுக்கல் இவைகள் தோன்றும்
பேணியே குளிர்வந்து திரேகம் முற்றும்
பெலப்படியாய் உஷ்ணந்தான் பிறக்குங் காணே. (469)

பிறக்கின்ற வேதனைதனில் நாடி கேளாய்
பலமாகத் தானேனும் பருத்தே யேனும்
உறக்கமுடன் சிறுத்தேனும் நடக்கும் பாரு
உள்ளபடி தலைவலியும் நித்திரைபங்கங் காட்டும்
சிறப்பாக நாவுலர்ந்து தாகங் காணும்
சின்மயமாய் நாவின்மேல் மாவு தோன்றும்
கறுப்பான மலபந்தங் கண்டு பின்னல்
கொதிப்புடனே மூத்திரங்குன்றி சிவந்திறங்குந் தானே.

தானை கைகாலில் வலியுங் காணும்
தன்மையுள்ள பித்தந்தான் புண்போல் நோகும்
மானை திரேகம்தான் சுட்கித்துக் கொண்டு
மகிழ்வுடனே முகம்வெளுத்து வாடிப் போகும்
தேனை அல்பவிகாரங் காண்ப துண்டு
தெளிவாக சுரம்இராத்திரியில் அதிகங்காண் பதுண்டு
ஊனை சுரந்தான் காலைவிட்டுப் போகும்
உத்தமனே பின்புஅவன் நித்திரைசெய்வான் பாரே. (471)

செய்கின்ற குணங்களெல்லாம் மூனு நாலைந்து
செயலாக அறுநா ளிருந்த பின்பு
மெய்தனிலே இருந்துவரும் நாக்கி லப்போ
மெதுவாக ஈரந்தான் உண்டாம் பாரு
ஐயமில்லை அப்போது வியர்வை தோன்றி
அப்பனே உஷ்ணமுடன் வேதனையும் போகும்
கைகால் விதனமெல்லாம் அற்றுப் பின்பு
கனமான நாடிதான் சரியாய்ப் போமே. (472)

சரியாகப் போனபின்பு சுரமே தொன்ரு
செப்பமுடன் திரேகஸ்திதி நாள்பட் டுண்டாம்
குறியான இச்சுரத்தில் துர்க்குணமே யில்லை
கொப்பனவே இதுதொத்து வியாதி யில்லை
சிறப்பாக இதில்கொஞ்சம் விகாரந் தோன்றி
சிற்பனமாய் பிரலாப சுரமே யென்பார்
குறியான இருமல்தான் தோன்று மாகில்
குடிகெடுத்த காசசுர மென்பார் காணே. (473)

என்கின்ற வாந்திதா னிருக்கு மாகில்
என்மகனே பித்தசுர மென்று சொல்வார்
உண்கின்ற வயிற்றின்மேல் பொருமல் தோன்றில்
உத்தமனே மந்தசுரம் என்று சொல்வார்
சின்மயமாய் குணங்காணும் விதத்தைக் கண்டு
சிற்பனமாய் பலபேரை யதற்கு இட்டு
பலவிதமாய் சுரப்பேரை விஸ்த ரித்துப்
பாடினர் முன்னூலில் பண்பாய்த் தானே. (474)

பண்பான சீதவாய்வு மலபந் தங்கள்
பண்பான அபக்குவ போஜனம் செய்வதாலும்
கண்ணியமாய் வெய்யிலில் திரிவ தாலும்
கதிப்பாக பட்சணங்கள் தின்ப தாலும்
தன்மையுள்ள இச்சுரங்கள் காணும் பாரு
தக்கபடி இதுதீர மருந்து கேளு
பண்டிதனே சுரமென்ற ரத்தக் கொதிப்பைப்
பதிலாக்கு உப்புபேதிக்கு ஈய்வாய் நீயே. (475)

பேதிக்குக் கிடைத்தாக்கால் மலக்கட்டுப் போகும்
பெலமான சுரமெல்லாம் தணிந்து போகும்
ஆதியென்ற அசனத்தைக் குறைக்கச் செய்வாய்
அப்பனே அதினாலே பலங்குன்றி னக்கால்
பாதியென்ற பலங்கொடுக்கும் மருந்தைத் தந்தால்
பளிச்சென்று தாருட்டிய முண்டாம் பாரு
நீதியாய் மருந்துகளைக் கொடுத்தா லப்பா
நிச்சயமாய்ச் சுரமெல்லாம் நின்று போமே. (476)

போமடா ரசபற்பம் அஞ்சனக்கல் பற்பம்
பொங்கமுடன் தான்செய்து இரண்டுஞ் சேர்த்து
நேமமுடன் இரவில்தான் கொடுத்தா யானால்
நிச்சயமாய் மலபந்தம் நீங்கிப் போகும்
ஆமடா பூரபற்பம் தன்னை யப்பா
உத்தமனே தேனில்தான் கொடுக்கும் போது
சாமடா சுரங்கள்தான் கூட்டை விட்டு
சல்தியாய்ப் போகுமடா சடலம் விட்டே. (477)

சடலத்தை விட்டுச்சுரம் போவ தற்குத்
தனியாக இன்னமொன்று சொல்லக் கேளு
வடிவான கால்பலம் பொட்டி லுப்பை
வன்மையுடன் முக்கால்படி சுத்த நீரில்
படியவே கரைத்துவிட்டுத் தேனுஞ் சேர்த்து
பண்பாக இனிப்பேத்தி ரோகி தன்னைக்
குடிக்கவே செய்தாக்கால் சுரந்தா னின்று
சுற்றமுள்ள வியர்வைதான் தோன்றும் பாரே. (478)

பாரடா மூத்திரந்தான் அதிகந் தோன்றும்
பத்தியமாய் லங்கணங்கள் செய்தால் போகும்
கூறடா ரவைக்கஞ்சி கொடுக்க லாகும்
கொப்பனவே புளிஉப்பு நீக்கினுக் கால்
நேரடா துர்ப்பலந்தான் அதிகங் காட்டும்
நிச்சயமாய் புளிஉப்பு நீக்கி விட்டால்
சீரான பெலங்கெட்டுப் போவ தாலே
சரியான ஆகாரம் கொடுத்தி டாதே. (479)

## சன்னி பாத சுரம்.

கொடுத்திட்ட சன்னிபாத சுரவகையைக் கேளாய்
கொடிதான அஸ்திசுரம் எலும்புருக்கி சுரமுந்தானே
அடுத்திட்ட விஷசுரமும் உட்காய்ச்ச லுந்தான்
அப்பனே இதோடு சேரும் பாரு
சடுத்தமுடன் தரித்திரர்க்கும் காற்றுஅடை பட்டோர்க்கும்
சரியாக இந்தசுரம் காணு மென்று
கொடுத்திட்ட நூல்தனிலே சொன்னோம் பாரு
குறிப்பதனைச் சொல்லுகிறேன் குறிப்பாய்க் கேளு (480)

கேளடா விஷக்காற்று சரீரத்திலே தான்
கெணிதமுடன் அனுசரித்து சிலநாள் தங்கி
பாளான சுரந்தா னுள்ளுக்கே தான்
பக்குவமாய்த் தானிருக்கும் வேளை தன்னில்
நாளடா குளிர்குமட்டல் பசியின்மை தாகம்
நலமான ஆயாசம் தலைவலியுங் காணும்
தேளான சுரமதுதான் வெளியே தோன்றில்
திரேகந்தான் உஷ்ணமொடு வறட்சி யாமே. (481)

ஆமடா தாகமொடு மலப்பிடித்த மாகும்
அப்பனே நாடிதான் வேகமாய்ச் செல்லும்
ஓமடா நாவுலர்ந்து ஆயாசத் தோடு
உத்தமனே உடம்பெல்லாம் வலியே காணும்
நாமடா இரவில் சுரமதிக மாகி
நலங்கெடப் படுக்கையில்தான் தூங்க வொட்டா
காமடா இச்சுரத்தில் பேதி யானல்
தக்கதா யுள்ளதொரு குறியைக் கேளே. (482)

பாரடா சரீரத்தில் கொசுக்கடியைப் போல்
பண்பான தழும்புகள்தான் காண்ப துண்டு
நேரடா சுரங்கண்ட அஞ்சா நாளில்
நிச்சயமாய் இருநான்கில் காணும் பாரு
கூருன அத்தழும்பை விரலா லழுத்தில்
கொப்பனவே மறைந்துவிடும் தீரேகந் தன்னில்
சீரடா சிறுசாகச் சரீரத்தில் தான்
சிறப்பாகப் பெரிதாகக் காணும் பாரே. (483)

காணுகின்ற சுரவேகம் போலே யப்பா
கதிப்பாகத் தழுப்புகள்தான் எழும்பும் பாரு
பூணவே முக்கியமாய் மார்புவயிற்றில் காணும்
புனிதமுடன் பின்னாலே கைகால்களிலுங் காணும்
பேணியே சுரமிருக்கும் வரையி லப்பா
பெலமான தழும்புகளும் இருக்கும் பாரு
ஆணியே பெரியோர்க்கு எப்போதும் காணும்
அப்பனே குழந்தைக்கு தோன்று தையா. (484)

அப்பாகேள் சுரங்கண்டு ஒருவாரந் தன்னில்
அப்பனே தலைவலியும் அதிகங் காணும்
மெய்யாக அரோசிகமுங் காணும் பாரு
மெதுவாக வாசனையும் பசி தோன்ருது
பையான பேதியுடன் வாந்தி காணு
பார்நாக்குக் கறுத்துமே வறட்சி காணும்
மெய்யாக சாட்டியஜாட்டிய மதிக மாலுல்
மெத்தனவே நாக்கறுத்து வாய்துர்க்கந்த மாமே. (485)

ஆமடா பற்களில்தான் ஊத்தை ரொம்ப
ஆனதொரு மூத்திரத்தில் விகற்பந் தோன்ரு
நாமடா பலவாரு யிருந்தாலுந்தான் நன்மையுள்ள
பெலன் முற்றும் கெட்டுப் போகும்
ஓமடா படுக்கையில்தான் புரளக் கூட
உத்தமனே சக்தியற்றுப் போவான் பாரு
தேமடா முகம்மெத்த வாடிப் போகும்
தெளிவான முகம்கையில் கொறுக்கைவலி காணுந்
தானே. (486)

தானன விக்கலுந்தான் காணும் பாரு
தன்மையுள்ள ஒருவாரம் விகாரந் தோன்ரு
மானன ரோகிதான் பிதற்றிக் கொண்டு
மெய்மறந்து போய் விடுவான் நோயினலே
தேனன ரோகம் சாத்தியமே மாயாகில்
தெளிவாக ஒருமூன்று யீரிரண்டு நாளிலப்பா
ஊனன விகாரந்தான் நின்று போகும்
உத்தமனே நாடியது மெதுவாய்ப் போமே. (487)

மெதுவான இருதயத்தின் நடை குறைந்தால்
மூர்ச்சையுடன் பெருமுச்சுங் கண்டு நாடி
பதிவாக மந்தகெதி யடையும் பாரு
பக்குவமாய் சுரமதுதான் தொந்தப் பட்டால்
சதியான புப்புசத்தின் வியாதி கண்டு
க்ஷணத்திலே இருமலுந்தான் காணும் பாரு
கொதிப்பான சுரமதுதான் சாத்தியத்துக் கேவந்தால்
கொற்றவனே விகாரந்தான் குறைந்து போமே. (488)

குறைகின்ற வேளையில்தான் தழும்பு பாரு
கொற்றவனே நாவதுவும் சுத்தி யாகும்
மறந்துநின்ற பெலங்களுமே விருத்தி யாகும்
மகத்தான நாடியுந்தான் சமன மாகும்
இறந்துநின்ற போஜனத்தில் இஷ்டந் தோன்றும்
இன்பமாய் இராத்திரியில் நித்திரையும் கொள்ளும்
சிறந்துநின்ற இக்குணங்கள் ஈரைந்து ஈரெட்டுநாளில்
சிப்பாகக் காணுமடா பிழைப் போருக்கே. (489)

பிழைப்போர்க்கு அதிவியர்வை பேதி யேனும்
பெலமாக அதிமூத்திரம் முதலில் கண்டு
தழைப்பதற்கு சாத்திய லட்சணங்கள் பின்னலப்பா
தான்கண்டு சௌக்கியங்கள் அடைவ துண்டு
பிழைக்காத அசாத்தியமே ஆகி விட்டால்
பின்னாலே ஈராறு இருபத்து நாட்குள்ளேதான்
தழைப்பான மரணந்தான் வந்தெய்யும் பாரு
தரணிதலில் இன்னுமொரு மருந்து கேளே. (490)

கேளடா அஸ்திக்ஷீணம் மூத்திர அடைப்பு
கெணிதமாய் தெரியாமல் மலமிரங்கி னுக்கால்
நாளடா படுக்கையுட துணி யுறைந்து
நலமான திரேகத்தில் ரத்தங் கண்டால்
தேளடா நாடிதான் பின்னுக் கேகி
தெளிவான கொறுக்கைவலி பிரேதமுகமுங் கண்டு
வாளடா சுவாசமுடன் உறக்கங் கண்டால்
வண்பான உறக்கமுடன் மரண மாமே. (491)

மரணமாம் சன்னிபாத சுரக்கு மப்பா
மகத்தான அதிசார சன்னிபாத சுரத்துக்கே தான்
விரணமாயி உள்ளதொரு வித்தியாசந் தன்னை
விள்ளுகிறேன் நீயறிய விவர மாக
பூரணமுள்ள சன்னிபாத சுரத்தில் காணும்
புண்தழும்பு கம்பளிப்பூச்சிப் பழநிறமா மிகக்காட்டும்
தருணமாயி ஒரைந்து இருநால் நாளில்
தான்கண்டு சுரம்நீங்கும் வகையில் தானே. (492)

வரையான பேதிதான் காண்ப தில்லை
வலுவான ரத்தபேதி யாக மாட்டா
திரையான குடலில்தான் ரண முண்டாகாது
தினமுடனே எவருக்குங் காண்ப துண்டு
குறைதான சுரம்விட்டால் அப்பா கேளு
குணிதமாய் மறுபடியும் வந்தி டாது
மறையாத ஈரேழுமூவேழு நாள் வரையில்
முக்கியமாய் சுரமிருக்கு முண்மை தானே. (493)

தானன அதிசார சன்னிபாதத்தில் தான்
காணும் தழும்பதனைச் சொல்லக் கேளு
மானன ரோஜாப்புஷ்பம் நிறமாய்ப் புள்ளி
மாந்தருக்குத் தானிருக்கும் மகிமை பாரு
ஊனன எழுமுதல் ஈரேழுநாளைக் குள்ளே
உத்தமனே மார்புமுதுகு வயிற்றில் தோனும் பாரு
தேனன பலவிடத்தில் நிற்கு மப்பா
தெளிவாக ஒருவேளை தோன்று தாமே. (494)

ஆமடா மறைந்துமே மூன்று நாளில்
அப்பனே வேறிடத்தில் தோன்றும் பாரு
நாமடா பேதிதான் காணும் பாரு
நலமான ரத்தபேதி காண்பதுவு முண்டு
ஓமடா சிறுகுடலின் கோளங்கள் தானும்
உத்தமனே புண்ணாகிப் போவ தாலும்
தேமடா பெருங்குடலுக்குச் சமீ பத்தில்
திறமான புண்கள் தாலதிக மாமே. (495)

அதிகமாம் யௌவன பருவத்தி லப்பா
அப்பனே இன்னேய்தான் காணும் பாரு
சதிசெய்யும் இச்சுரந்தான் மெத்த துஷ்டன்
சதிராகச் சுரம்விட்டு மறுபடியும் காணும்
நிதியாக ஒருமாதம் வரையி லப்பா
நிச்சயமாய் இச்சுரந்தா னிருக்கும் பாரு
மதியுடனே மருந்துகேள் இன்னேய்க் கப்பா
மாநிலத்தில் கண்டுநீ தெரிந்து கொள்ளே. (496)

கொள்ளவே சச்சிதானந்த மாத்திரை தான்
சொல்வேன் குடிகெடுத்த சுரமதுதான் தீரவேண்டி
அள்ளவே ரசம்கெந்தி நாபி மூன்றும்
அடைவாக ஒரிடையா யெடுத்துக் கொள்வாய்
துள்ளவே ஜாதிக்காய் மூன்று பங்கு
துகையான இனத்துக்கு சமமாகும் பாரு
தெள்ளவே இவையெல்லாம் இஞ்சிச் சாற்றில்
தினமூன்று நாளரைத்துக் குன்றி செய்யே. (497)

செய்தபின்பு நிழலுலர்த்தி மாத்திரை யாக
செயலாகத் தேனில்தான் ஈய்ந்தா யானல்
பையவே சுரம்முற்றும் நீங்கும் பாரு
பரம்பரையாய் நூறுண்டு சென்ற வேம்பின்
நையவே பட்டைதனை இடித்துப் போட்டு
நலமான கஷாயந்தான் செய்து கொண்டு
கொய்யவே குளிகையைநீ நீட்டினுக் கால்
குடிகெடுத்த சுரமெல்லாம் ஓடிப் போமே. (498)

## அதிசார சன்னி பாத சுரம்.

ஓடிவரும் அதிசார சன்னிபாதந் தன்னை
உரைக்கின்றேன் நீயறிய உண்மை யாக
நாடியே புரட்டாசி ஐப்பசி கார்த்திகை
நலமான மாதத்தில் உண்டா கின்ற
வாடையாய் வீசுகின்ற சாக்கடையின் காற்றும்
வலுவற்ற அழுகல் மாமிசத்தின் காற்றும்
கூடியே உற்பத்தி யாவ தாலே
குடிகெடுத்த சுரமதுதான் வருகும் பாரே. (499)

பாரடா இக்காற்று பட்ட பேர்க்கு
பக்குவமாய் இன்னுய்தான் தாக்கும் பாரு
கூறுவேன் அதின் குணத்தை விபரமாக
கொப்பனவே இந்தச்சுரம் மெதுவில் காணும்
நன்றான சரீரந்தான் ஆயாசத் தோடு
நலமான ஒருவிதமா யிருக்கு மப்பா
கூறவே நோயாளி தெரியான் பாரு
குவலயத்தில் இந்தவிதம் காணும் சொன்னேம்.(500)

சொன்னேமே ஓிரண்டு நாள்தான் சென்று
சுறப்பாக சிலுசிலுப்பு தலைவலியுந் தாகம்
பன்னேமே பசியின்மை கைகால் நோயும்
பக்குவமாய் இதுமுன்னல் தோன்றி பின்பு
அன்னேமே துர்ப்பலமும் வேக நாடி
அப்பனே பேதியுடன் மயக்கம் காணும்
பின்னமாய் இரவில்மெத்த உடம்பு காயும்
பொறி அயர்ந்து தூக்கந்தான் வாராதன்றே. (501)

வாராத தாகந்தான் அதிகம் பாரு
வருத்தமுகக் களைப்புத்தான் மாறிப் போகும்
போறாத வியாகூலமும் நா வுலர்ந்து
பொலிவாக அழுக்கடைந்து வயிறு புண்ணும்
தீராத இக்குறிகள் மெதுவில் வந்து
தினம்பத்தில் திரேகத்தில் சொல்லக் கேளு
மாருத கொசுக்கடி தழும் புண்டாய்
மைந்தனே ரோசாப்பூ நிறந்தான் காணும். (502)

காணுமடா சிறுபுள்ளி மார்புவயிற்றி லப்பா
　　கனமாகக் காணாது வாட்டமாய்த் தோன்றும்
பேணியே அழுத்தினல் மறைந்து போகும்
　　பின்பு இரண்டுநாள் சென்ருல் நூதனமாய்க் காணும்
கோணியே சுரம்நிற்கும் வரையி லப்பா
　　குணமுடனே கண்டுமே மறைந்து கொள்ளும்
ஆணியே பதிமூன்றும் நாளி லப்பா
　　அப்பனே வியர்க்குருபோல் காட்டும் பாரு. (503)

காட்டியே பொறிகள்தான் கழுத்து மார்பு
　　கனமான வயிறுதொடை கவுட்டில் தானும்
பூட்டியே காணுமடா அப்போது கேளு
　　பொங்கமுடன் சரீரம் உஷ்ண மாகும்
நாட்டியே வியர்வைதான் உண்டாம் பாரு
　　நலமான விகாரமுடன் இசிவு விக்கல்
தீட்டியே காதிரைச்சல் செவிடு பலவீனம்
　　திரண்ட சர்வாங்கம் வேதனையோ டின்னங்கேளு. (504)

கேளடா வயிறுபொருமல் அடிவயிற்றில் தான்
　　கெணிதமுடன் வலதுபக்கங் கவுட்டி லேதான்
நாளடா அழுத்தினுக்கால் வேதனையுங் காணும்
　　நலமான ரோகந்தா னதிக மானல்
தேளடா குடலில்தான் வாய்வு சேர்ந்து
　　தெளிவான வயிறுவீர்த்துக் கொள்ளும் பாரு
பாளடா குமட்டலுடன் வாந்தி யுண்டாம்
　　பண்பான இச்சுரத்தின் குண மிதாமே. (505)

ஆமடா பதினலாம் நாளில் அப்பா
　　அப்பனே பேதிதா னதிக மாகும்
ஓமடா இரத்தமுந்தான் காண்ப துண்டு
　　உத்தமனே சிலருக்கு ரத்தக்கழிச்சல் காணும்
நேமடா மூர்ச்சையுடன் மயக்கங் காணும்
　　நெறியான குடல்புண்ணாய் ரத்தந் தோன்றும்
ஊமடா ரணத்தாலே குடல்து வாரமாகி
　　உறுதியாக பேதியால் முகக்களை யற்றுப்போமே. (506)

அற்றபின்பு குமட்டலுடன் வாந்தி கண்டால்
அப்பனே குடலில்தான் துவாரங் கண்டதென்று
ஒப்பிதமாய் நிச்சயமாய் தெரிந்து கொள்ளு
உள்ளபடி இச்சுரத்தில் தானே அப்பா
சிற்பனமாய் மூளை புப்புசந் தன்னில்
சிறப்பாக வியாதிகண்டு கொல்வ துண்டு
அற்புதமாய் ஒருமாதம் வரையி லப்பா
ஆனஇந்தச் சுரந்தா னிருக்கும் பாரே. (507)

இருந்திட்ட சுரந்தான் போன பின்பு
இதமாக மறுபடியும் காண்ப துண்டு
தெரிந்துகொள் இச்சுரந்தான் குடலை யப்பா
தீப்புண்ணைச் செய்வதுவே இன்னேய் நேர்மை
மறந்து அதைப்பார்க்கா விட்டால் மோசம்
மெத்தமருந்து களைவிபரமாய்ச் செய்ய வேணும்
நிறைந்த குரு அருளாலே கைபாகம்
நியறியச் சிகிச்சைதனை சொல்வேன் பாரே. (508)

சொல்லுகிறேன் பதினைந்து நெல்லிடைதான் அப்பா
சுகமான காசுக்கட்டி அதனை வாங்கி
வெல்லுகின்ற சன்னலவுங்கப் பட்டை யப்பா
விதமாகப் பத்து நெல்லிடை தான் வாங்கு
தொல்லைதீர அரைநெல்லிடை அபினி வாங்கு
துகையாகக் கல்வத்தி லிட்டு நீயும்
வல்வினையாய்ப் பொடிசெய்து இரண்டு வேளை.
வகையுடனே தேனில்தான் கொடுப்பாய் நீயே. (509)

கொடுத்திடுவாய் இப்படியே மூன்று நாள்தான்
குணமாகும் பாருநீ அதிசார சன்னிபாதம்
அடுத்திட்ட காம்புநீக்கு வேம்பின் கஷாயம்
அப்பனே முன்போல கொடுப்பா யப்பா
தொடுத்திட்ட பத்தியந்தான் கஞ்சி ஈவாய்
தொலையாத அன்னத்தைக் கொடுத் திடாதே
சடுத்தநோய் தீர்ந்துமே வருமே யாகில்
தான்அன்னங் கொடுப்பாய் வியாதி யோர்க்கே. (510)

## புனராவர்த்தி சுரம்.

கேளடா மறுக்களித்து சுரந் தனக்கு
கெடியான புனராவர்த்திக சுரமே என்பார்
நாளடா சுரம்விட்டு உடல்வலுக் கும்போது
நலங்கெட்ட இந்தசுரம் காணும் பாரு
வாளடா அதின்குணத்தைச் சொல்லக் கேளு
வளமான சுரந்தான் நீரேது வாய்க்காணும்
தேளடா குளிருடனே தலைவலியுங் கண்டு
திரேகத்தில் வேதனையுஞ் சுரமுங் காணும். (511)

காணுகின்ற வேளையிலே சொல்லக் கேளு
கனமான உஷ்ணமுடன் ஏக்கம் வாந்தி
பூணியே குலைவயிற்றில் வேதனையுங் கண்டு
பொல்லாத தாகமுடன் தீவிரநாடி காணும்
பேணியே நாவெளுத்து வெளிச்சம் சத்தம்
பெலமாக சரீரவேதனையும் மெத்தவுங் கண்டு
ஆணியாய் இரவில்தான் சுரம் அதிகமாகி
அப்பனே நித்திரைதான் வரா தன்றே. (512)

அன்றான மலபந்த மாகிப் பின்பு
அப்பனே மூத்திரமும் சிவந்து குன்றும்
நன்றாக ஒருவேளை மஞ்சள் காமாலை
நலமுடனே தளர்ச்சி வந்த சரிக்கும்
குன்றாமல் ஓரைந்து நாளுக்கு மேலும்
குணமான ஓரேழு நாளுக் குள்ளும்
பண்டான சர்வாங்கம் வேர்வை கண்டு
பதறியே சுரம்விட்டு ஓடும் பாரே. (513)

ஓடிவிட்ட தென்றுசொல்லி நோயாளி யப்பா
உள்ளத்தில் எண்ணியே இருக்கும் போது
நாடியே சுரங்கண்ட பதினாலாம் நாளும்
நலமான சுரம்விட்ட ஏழாம் நாளில்
தேடியே மறுபடியும் முன்குறிகள் கண்டு
திறமாகச் சுரந்தான் வருகும் பாரு
வாடியே மூணுநாலு தினத்தி லப்பா
வளமான வியர்வைதான் பிடிக்குங் காணே. (514)

பிறக்குமடா சிலருக்கு இரண்டுமூன்று நாலு
பெலமாக அஞ்சுதரம் காண்ப தூண்டு
உறக்கமாய் துர்ப்பலங்க ளாகி மெத்த
உத்தமனே கால்பாதம் தன்னில் வீக்கம்
செறுக்கியே கட்டிகளும் கண்ணோய் காணும்
சிதறியே இவைகளுங் கண்ட தாலுல்
தீர்க்கமாய்ச் சுரம்விடவே நாள்தான் செல்லும்
தீங்கான இச்சுரந்தான் கொல்வ தில்லை. (515)

இல்லையடா மூர்ச்சை கண்டால் கொல்லும் பாரு
இதமான யகிர்தண்டம் பிலிகமு மப்பா
தொல்லையாய்ப் பருத்துவிடும் இந்நோ யோர்க்கு
தொல்லுலகில் மருந்துதனைச் சொல்லக் கேளு
வல்வினைசெய் மாத்திரைகள் ஒன்று மாகா
வன்பான துர்மலத்தை வெளியே போக்கி
பலவிதமாய் உஷ்ணங்கள் செய்து கொண்டு
பார்அபினி மாத்திரையை ஈய்ந்தால் போமே. (516)

## சீத சுரம்.

போமடா விஷக்காற்றால் குளிருண் டாகி
பொங்கமுடன் நடுக்கலுடன் உஷ்ணங் கண்டு
ஆமடா வியர்வைபின்பு கண்ட தாலுல்
அப்பனே சுரந்தான் விட்டுப் போகும்
ஒமடா மறுபடியும் போராடு கின்ற
உத்தமனே சுரத்திற்கு சீதசுரமே என்பார்
நாமடா இதனுடைய பிரிவு தன்னை
நாட்டுவேன் நீயறிய நாட்டு வேனே. (517)

நாட்டுவேன் இதில்சாதி மூன்றே யுண்டாம்
நலமான ஏகாஹி சுரந்தா னென்று
பூட்டுவேன் திரிமாஹீக சுரந்தா னென்று
பொல்லாத நான்காமுறைச் சுரந்தா னென்று
காட்டுவேன் இதினுடைய குணத்தை முற்றும்
கண்டிதமாய் நீயறியும் விதத்தைக் கேளு
தீட்டுவேன் தினமும் உண்டா கின்ற
தியானசுரந்தான் ஏகாஹிய சுரந்தான் பாரே. (518)

பாரடா ஒன்றைவிட்டு ஒருநா ளப்பா
பகர்ந்துமே வருகின்ற சுரந் தனக்கு
நேரடா மூணுமாரல் சுரமே யென்பார்
நிச்சயமாய் இரண்டு நாள்தான் விட்டு
நாரடா காணுகின்ற சுரந் தனக்கு
நலமான நாலாமாரல் சுரமே என்பார்
கூறடா கிரமந்தப்பி இச்சுரங்கள் தான்
குணமாக வருவதும் உண்டு பாரே. (519)

உண்டான தினத்திற்கு இருமுறையுங் காணும்
உத்தமனே மறுநாள்தான் ஒருமுறைதான் காணும்
நன்றாக ஒருவேளை அஞ்சா ரேழு
நலமான இருநான்கு ஒன்பது பத்தில்
பண்டாக சிலருக்குக் காண்ப துண்டு
பாங்காக மாசத்துக் கொருமுறை தானப்பா
மிண்டாகக் காணுகின்ற பேரு முண்டு
மேலான காரணத்தைச் சொல்லக் கேளே. (520)

கேளடா இதில்சமயம் மூன்றே யுண்டு
கெடிதான சீதஉஷ்ணம் சுவேத மாகும்
நாளடா சீதசமய லட்சணத்தைக் கேளு
நலமான ஆயாசம் நெட்டுருப்பு கொட்டாவி
பாளடா திமிருடனே ஈரல்குழியில் அப்பா
பாங்காகப் பிசைவது போலி ருக்கும்
தேனடா முகம்வாடிப் பின்பு கேளு
தெளிவாக மூத்திரந்தா னிறங்கும் பாரே. (521)

இறங்கியபின் முதுகில் ஜலுப் புண்டாகி
ஈரமாய் தண்ணியை யடிப்பதுபோலே தோணும்
உறங்கியே பற்கள்தா னடித்துக் கொள்ளும்
உள்நடுக்குடனே திரேகம் சுரசுரப் புண்டாகும்
தீங்கியே கரசரணம் உதறும் பாரு
திறமான சிரம்முதுகு இடுப்ப தனில்
நடுங்கியே வேதனையும் மிகஉண் டாகும்
நலமான நகங்கள்தான் கறுத்துப் போமே. (522)

கறுத்தபின்பு மூத்திரந்தா னதிக மாகும்
கனமான நாடிதான் படபடத் தோடும்
தரித்திருக்கும் சுபாவந்தா னதிக மாகும்
தங்காமல் திரேகத்தைக் குலுக்கும் பாரு
பரித்தொரு உஷ்ணசமய லட்சணந் தன்னை
பக்குவமாய்ச் சொல்லுகிறேன் பண்பாய்க் கேளு
குறித்ததொரு முன்குணங்கள் எல்லாம் கண்டு
குபிலென்று உஷ்ணந்தான் பிறக்குந் தானே. (523)

தானான சரீரந்தான் உஷ்ண மாகி
தன்மையுள்ள சிகப்புநிறம் தோன்றும் பாரு
தேனான முகந்தான் மினுமினுப்புக் காட்டும்
தரித்திருக்கும் போர்வைதனைச் சகிக்க மாட்டான்
மானான கண்கள்தான் சிவந்து காட்டும்
மக்த்தான சிரோபாரம் வேதனையு முண்டாம்
ஊனான நாடிதான் படபடத்து ஓடும்
உள்ளபடி தாகந்தா னதிக மாமே. (524)

அதிகமாம் மூத்திரந்தான் சிவந்து குன்றி
அப்பனே இறங்கியே பிதற்றல் காணும்
மதியான சுவேத சமய லட்சணங்கள்
மான்பனே வரும்போது விகற்பம் கேளு
சதியான முன்குணங்கள் கொஞ்சங் கண்டு
சரீரத்தில் வியர்வைதான் காணும் பாரு
பதியாக முகங்கழுத்து தன்னி லப்பா
பக்குவமாய் வேர்வைமுன் தோன்றும் பாரே (525)

தோன்றினபின் திரேகமெல்லாம் வியர்வை தோன்றும்
தொல்லொரு உஷ்ணந்தான் நீங்கிப் போகும்
ஊன்றினதோர் நாடிதான் தணிவாய்ப் போகும்
உத்தமனே சுவாசமுந்தான் மெதுவாய்ப் போகும்
இன்றினதோர் மூத்திரந்தான் புளிப்புக்காணும்
அப்பனே ரோகிதான் சுகித் திருப்பான்
சான்றோர்கள் இன்னேய்தான் உண்டாகும் காலம்
சொன்னபடி நானுனக்குச் சொல்வேன் பாரு. (526)

சொல்லுவேன் தினச்சுரந்தான் காலை தன்னில்
திறமாகக் காணுமடா திறமை பாரு
கொல்லுகின்ற மூன்றுமுறைச் சுரந்தா னப்பா
குவலயத்தில் மத்தியானந் தன்னில் காணும்
நல்லுகிறேன் நான்காமுறைச் சுரமோ வென்னில்
நலமான சாயரட்சை தன்னில் காணும்
தொல்லுலகில் இப்படியே காணு மென்று
சொன்னார்கள் நூல்கள்தான் சுகமாய்த் தானே. (527)

சுரமான சீதசுரந் தன்னி லப்பா
சொல்லுகிறேன் பிலிகந்தான் பெருத்துப் போகும்
இகமதிலே அதற்குத்தான் சுரக்கட்டி யென்பார்
என்மகனே அதனுடைய காரணத்தைக் கேளு
பகையான குளிர்சமயந் தன்னி லப்பா
பண்பான சருமத்தின் ரத்த மப்பா
தொகையான பிலிகத்திற் குள்ளே போய்
தோய்வதாலே கட்டியென்று பேரு மாச்சே. (528)

ஆச்சப்பா இதுதீர மருந்து கேளு
அப்பனே முதலில்தான் பேதிக் கீய்வாய்
காச்சப்பா முன்சொன்ன மருந்து தன்னை
பக்குவமாய்ச் சுரக்கஷாயம் தன்னி லீவாய்
போச்சப்பா காய்ச்சலுடன் கட்டி வந்தால்
களிப்பாக அன்னபேதி செந்தூர மீவாய்
போச்சப்பா சுரம்முதல் யாவு மெல்லாம்
போகுமே உடல்விட்டுப் போகும் பாரே. (529)

பாரடா இச்சுரத்தின் வகையைக் கேளு
பண்பாக ஒருவேளை தணியும் பாரு
நேரடா ஒருவேளை அதிக மாகும்
நிச்சயமா யிதற்குத்தான் சந்ததசுரமே யென்பார்
நேரடா சீதசுரம் போலே தானே
நிச்சயமாய்க் குணங்காணும் நேர்மை தானும்
கூறடா சீதசுரம் விட்டுவிட்டுத் தோன்றும்
கொப்பனவே இச்சுரந்தான் விடா தென்றே. (530)

விடாமல் தணிந்திருக்கும் சுரமீ தப்பா
விட்டாப்போல் காணுமடா மாந் தருக்கு
தடையின்றி மலம்போகும் நீருண் டாகும்
திரேகத்தில் சுரம்ரொம்ப அதிகங் காட்டும்
முடையான மலச்சுர மிதுதா னென்பார்
முக்கியமாய் கானகத்துச் சுரமீ தென்பார்
படையான பலநாமம் இதற்குச் சொல்வார்
பாங்கான இதன்குறியைப் பகரக் கேளே. (531)

கேளடா முதலில்தான் குளிருண் டாகி
கொப்பனவே சுரங்கண்டு திரேகம் மெத்த
நாளடா உஷ்ணமுடன் சிரோவேதனையும் காணும்
நலமான மயக்கமுடன் பிரமையும் தோன்றும்
கேளடா நாடிதான் படபடத் தோடும்
குப்பென்று நாவுலர்ந்து வெள்ளை காட்டும்
தேளடா குமட்டலுடன் வாந்தி காணும்
தெளிவான ஈரல்குழி வேதனைதான் செய்யும். (532)

செய்யுமடா சுவாசமொடு முட்டல் காணும்
சுகமான மார்படைப் பதுபோலே தோன்றும்
கொய்யுமடா இருமலுடன் முகமும் வாடும்
கொப்பனவே மூத்திரந்தான் சிவந்து குன்றி
பையவே இறங்குமடா அதில் தானுப்பு
பண்புடனே அதிகமா யிருக்கும் பாரு
நையவே சுரந்தணியும் போது அப்பா
நலமான மூத்திரந்தா விறங்கும் பாரே. (533)

இறங்கும்போது சுரந்தான் காலையில் தான்
இன்பமாய்த் தானிருந்து மத்தியான மப்பா
திரங்கியே வருமடா மாலை தன்னில்
திறமாக அதிகரித்து இரவில் தானும்
சொரிந்துமே வெகுநேரம் இருக்கும் பாரு
சொல்லுகிறேன் வேதனை பேதிதான் காணும்
பரந்துமே பித்தத்தின் சேட்டை மீறி
பாழான வாந்திதா னதிக மாமே. (534)

ஆமடா இதற்குத்தான் தகுந்த சிகிச்சை
அப்பனே செய்யாவிட்டால் திரேகந் தன்னை
ஓமடா துர்ப்பலமா ஆக்கிப் பின்பு
உத்தமனே காமாலை நீர்க்கோவை காணும்
நாமடா ஆசனத்தில் துவேஷஞ் செய்யும்
நண்பாக உள்ளடங்கி சுரமே நிற்கும்
தேமடா சீதசுரம் சிகிச்சை தன்னை
தீவிரமாய் இதற்குத்தான் செய்வாய் நீயே. (535)

## விஸ்போடக சுரம்.

செய்கின்ற விஸ்போடக சுரந் தன்னை
செப்புகிறேன் நீயறியத் திறமாய்க் கேளு
பெய்கின்ற வசூரிநூல் தன்னைப் பாரு
பெலமாக அதின்குணத்தைத் தனியாய்ச் சொன்னோம்
உய்கின்ற அந்நூலால் அதற்குச் சிகிச்சை
உத்தமனே நீயறிந்து உண்மை சொல்லு
நைகின்ற சுரம்சன்னி தோஷம் யாவும்
நாட்டுவேன் தனிக்குணமாய் இதன்பின் தானே. (536)

## கீல்வாத ரோகம்.

தானான கீல்வாத ரோகம் பேரை
சாற்றுகிறேன் நியறிய விபா மாக
மானான வாய்வுரோகம் வாத ரோகம்
மகத்தான முடக்குவாய்வு முடக்கு வாதம்
தேனான சந்தீக சிலேட்டும ரோகம்
தெளிவான கைகாலில் பிடிப்பு ரோகம்
ஊனான ரசவாதம் சூலைக் கட்டு
உத்தமனே சந்திவாதம் வாதசூலை யாமே. (537)

ஆமென்ற இத்தனையும் அதற்குப் பேராம்
அப்பனே இதுநேரும் வரிசை கேளு
போமேதான் ரச தூஷியத் தினாலே
பொல்லாத இந்தநோய் காணும் பாரு
நாமேதான் முழங்கால்கள் பெரிய கீல்கள்
நன்மையுடன் அதைச்சுற்றி இருக்கும் சவ்வின்
சீமேவும் சவ்வுக்கு வலிகள் கண்டால்
சிறப்பாக இந்தநோய்கள் வருகும் பாரே. (538)

பாரடா இதிலிரண்டு ஜாதி யுண்டு
பக்குவமாய் தீவிரம் சாத்மீகம்என இரண்டேயாகும்
கூறுவேன் தீவிரத்தின் குணத்தைக் கேளு
குடிகெடுத்த நோயதுதான் மேலே செல்லும்
நேரடா கைகால்களில் வேதனைதான் கண்டு
நிச்சயமாய்ப் பிறகு அது அதிகமாகும்
பேரடா பெரியதொரு முட்கள்தான் வீங்கி
பின்னுபசுரம் புண்ணுய் வேதனையுஞ் செய்யும். (539)

செய்கின்ற சுரந்தா னதிகங் காணும்
செயலாக அரட்டலுடன் புரட்டல் காணும்
உய்கின்ற கைகாலை அசைக்க லாகா
உத்தமனே வீக்கந்தா னதிக மாகி
பையவே அதின்பேரில் துணியே பட்டால்
பளிச்சென்று அதிக வேதனையே காட்டும்
நையவே துர்வாசனை யுங் காணும்
நலமான குமரிநாற்றம் வியர்வையுண்டாம் பாரே. (540)

உண்டான வேளைதனில் நாடி தானும்
உறுதியாய் ஓடுமடா கையி லப்பா
திண்டான மலமதுதான் கட்டிக் கொள்ளும்
தீவிரமாய் நாவுமேல் நாவு தோன்றும்
நண்டான உமிழ்நீர்தான் புளியாய்த் தோன்றும்
நலமான மூத்திரந்தான் சிவந்து குன்றும்
பண்டான மூத்திரத்தில் உப்பே மெத்த
பார்மூட்டின் வியாதிதன்னைச் சொல்லக் கேளே. (541)

கேளடா நிமிஷத்தி லிந்த ரோகம்
நிலையான மூட்டைவிட்டு வேறு மூட்டுக்கு
நாளடா போயப்போ வேதனைதான் செய்யும்
நலமுடனே வருவது முண்டு
பாளான மூட்டினுட வாயு வப்பா
பக்குவமா யிருதயத்துக்குச் செல்வது முண்டு
தேளடா அதுமெத்தக் கெட்ட தாகும்
தெளிவாக இதைத்தான் ஒருவாத மென்பார்களே.(543)

காணுகின்ற நோயதுதான் தீர வென்றால்
கண்டிப்பாய் உப்பினுட பேதிக் கீய்வாய்
பூண்டிருக்கும் வேதனையோ டழலை தீர
புண்ணியனே அபினியைத்தான் ஈய்ந்தால் போகும்
பாணியாய் பொட்டிலுப்புச் சுண்ணஞ் செய்து
பக்குவமாய் வேம்பினுட கிஷாயத்தி லீய்ந்தால்
கோணியே போகுமடா இந்த ரோகம்
தொல்லுலகில் மாந்தருக்கு இன்னங் கேளே. (543)

இன்னங்கேள் அசனந்தான் மீதமாய்க் கொள்ளும்
இப்புவியில் பால்கஞ்சி கொள்ள லாகும்
சொன்னதொரு சாராயங் கொடுக்க லாகும்
சுருக்கமான அக்கினிமந்தம் அங்குஷ்ட வாதம்
பின்னமுள்ள கீல்வாதம் ரோகந்தனக்கு நீதான்
பிணியார்க்கு சர்க்கரைதான் சேர்த்தி டாதே
உன்னிதமாய் ரோகியைத்தான் படுக்க வைத்து
உத்தமனே பள்ளந்தான் தேர்ச்சி செய்யே. (544)

தேறினதோர் இருதயத்தில் வியாதி சென்றால்
தெளிவாக அதின்நாடிதான் வேக மாகும்
ஊன்றினதோர் சப்தமுந்தான் விகல்ப மாகும்
உத்தமனே சுரமுடனே சுவாசம்முட்டல் காணும்
பாரிந்த வியாதிகண்டால் மாருக்கே தான்
பண்பான கடுகுபத்து தன்னைப் போடு
நேரான மூத்திரந்தா னெடுகமாக நிச்சயமாய்த்
தானிறங்க மருந்து செய்யே. (545)

செய்கின்ற சாப்தீக்க் கீல்வாத ரோகம்
செய்வதனைச் சொல்லுகிறேன் திறம தாக
உய்கின்ற பிரமேகந் தன்னு லப்பா
உத்தமனே காண்பதுவு முண்டு பாரு
நையவே ராத்திரியில் அதிக மாகும்
நலமான உஷ்ணவாய்வு அதனல் தோன்றும்
பையவே தற்செயலாய்க் காண்பதுவு முண்டு
பணியாக இதில்மூன்று குணங்க ளுண்டே. (546)

விதமாக இடுப்பில்தான் கண்ட தானல்
விரிப்பாக இடுப்பிலொரு பக்கத்தி லேனும்
பதமாக இரண்டு பக்கத்நி லேனும்
பக்குவமா யிருக்கின்ற சுதைக ளப்போ
அதமாக வலிகொடுத்து நோயாளி தன்னை
அப்படியே படுக்கவைக்கும் இந்நோய் அப்பா
சதையான துடையின் பின்புறத்தில் கண்டால்
சத்தியாய் இருத்த ரசிவாத மாமே. (547)

வாதமாம் மார்பினுடை சதைக்கே யேனும்
வடிவுடைய அதனுடைய சவ்வுக் கேனும்
போதமாய் உபத்திரவம் வந்த தானல்
பொல்லாத உரோவாத மென்றும் சொல்வார்
சீதமாம் மூச்சுப்பிடிப்பு என்றும் பேராம்
சிதையாத திரேகந்தா னலுத்த போது
பேதமாய்ச் சதைகள்தான் பச்சைப் புண்ணாய்
நொந்து பெலமாகக்காணுகிற நோய்தா னென்றே.
(548)

நோய்தனக்கு பாகியாய் வாதரோக மென்பார்
நுட்பமுள்ள வாதரோக மென்பதுந் தான்
ஆய்ந்தெடுத்து இதற்குள்ளே அடக்கம் பாரு
அப்பனே குணமதனல் பேருஞ் சொன்னேன்
வாய்வுநோய் தீரவென்றால் கெந்தகபற்பஞ் செய்து
வளமாகக் கொடுத்திட்டால் நோய்கள் போகும்
தேய்ந்திட்ட சந்திரன்போல் திரேகம் வாங்கில்
திறமாக அயமதனைக் கொடுத்துப் பாரே. (549)

## போத க்ஷயம்.

பாரடா போதக்ஷயந் தன்னை நீதான்
பண்பாகத் தானறிய விபரங் கேளு
கூறடா நோயினுட தன்மை யாலும்
குறிப்பாக பெலத்த அடி படுவதாலும்
நேரான நரம்புக்கு வியாதி காணும்
நெறியுடனே அப்போது குணத்தைக் கேளு
தாரான தளர்ச்சியுடன் சோர்வு சோபம்
தயவுடனே களைப்புஇளைப்பு மெய்மறத்த லாமே. (550)

ஆமென்ற இந்நோய்க்குக் காரணத்தைக் கேளு
அப்பனே திரேகத்தில் அடிபடுவ தாலும்
நாமென்ற அதிவிசனம் பயம் சந்தோஷம்
நலமான இரத்தத்தின் பெருக்க லாலும்
ஓமென்ற மூளைஇரைப்பை இருதயத் திற்கு
ஒப்பனவே அடிபட்டுப் போவ தாலும்
பாமென்ற நரம்புக்கு நோய்கள் கண்டு
பண்புடனே தளர்ச்சிதான் காணுந் தானே. (551)

காணுகின்ற வேளைதனில் குணத்தைக் கேளு
கனமான சரீரம் தான் சீதளமாய்
பூணவே சுவாசமுடன் க்ஷீண நாடி
பொல்லாத மயக்கந்தான் வந்து தோன்றும்
நாணிவரும் இருதயத்தில் அடிதான் பட்டால்
நலமுடனே மூர்ச்சைதான் காணும் சொன்னேன்
தோணவே நாடியுடன் சுவாச மொடுங்கிநிற்கும்
தொடுத்ததொரு மூளைக்கு உபத்திரவம் வந்தால் கேளே. (552)

கேளடா வெறிகொண்டு பேசுவான் பார்
கெடியான குமட்டலுடன் வாந்தி விக்கல்
நாளடா மூத்திரந்தா னிறங்கா தப்பா
நன்மையாய்ச் சிலருக்குப் போவதுண்டு
தேளடா போதக்ஷய மதிக மானல்
திரேகந்தான் எமலோகம் போகும் பாரு
வாளடா அல்பமா யிருந்தா லப்பா
வண்மையுடன் சவுக்கியமாய்க் குணம தாமே. (553)

குணந்தரவே மருந்ததனைச் சொல்லக் கேளு
குறிப்பான சரீரந்தான் சலவை கண்டால்
பணம்போன்ற பஞ்சபாஷாண சிந்தூரத் தால்
பறக்குமடா சீதளந்தான் மெய்யை விட்டு
கண்போன்ற ரத்தத்தின் பெருக்கி னலே
கண்டதொரு போதசயந் தனக்குக் கேளு
க்ஷணத்தில்நிற்கும் அபினியுட மருந்தை யீய்ந்து
சீர்மையாய் கடுகுபத்து வயிற்றில் போடே. (554)

போட்டாக்கால் வாந்தியுடன் ரத்த மெல்லாம்
பொங்கி யோடுமடா கடலே புக்கும்
வாட்டமுடன் திரேகத்தில் சூடே கண்டால்
வண்மையுடன் உஷ்ணகாரி மருந்து செய்வாய்
நாட்டமுடன் திரேகத்தில் சூடே கண்டால்
நன்மையுள்ள மருந்தை யெல்லாம் நிறுத்திப்போடு
பாட்டியாய்ச் சொன்னதொரு நூலின் போக்கை
பக்குவமாய் நானுவக்கு அறிவித் தேனே. (555)

## தனுர் வாதம்.

அறிவிப்பேன் தனுர்வாத விபரந் தன்னை
அப்பனே மனதுக்கு ஐக்கிய மாக
தெரிகின்ற சதைதனக்கு இசிவு கண்டு
திரிக்கிரம சன்னிக்கு தனுர்வாத மென்பர்
தரித்திருக்கும் சதைகள் பிருவிடாம லிருப்பதொன்று
தங்கியே தளர்வதும் பிருப்படுவதுந் தானென்று
விரிப்புடனே இந்தவிதமாகக் காணும் நோயின்
விவரமாம் குணந்தனை விளம்பக் கேளே. (556)

விளம்புகிறேன் திடீலென்று காணும் பாரு
விதமான குறியதனைச் சொல்லக்கேளு
பழம்போன்ற கீழ்த்தாடை தொண்டைச்சதைக் கப்பா
பக்குவமாய் முதலில்தா னிசிவு காணும்
சலமுடனே ஜலுப்புக்கண்டு தொண்டை நோகும்
சதிரான பின்கழுத்து இசிவு காணும்
அளவில்லா வேதனைதா னதிக மாகி
அப்பனே நாவடக்கிச் செல்லும் பாரே. (557)

செல்லுகின்ற வேளைதனில் முழுங்கக் கூட
சிற்பனமாய்க் கஷ்டமாய் தோணும் பாரு
பல்லுகள்தான் பிற்பாடு கட்டிக் கொள்ளும்
பாழான வியாதிதான் அதிகரித் தால்
தொல்லையுடன் முகம்உடம்பு கைகால் தன்னில்
சுருக்காக இசிவுதான் காணும் பாரு
அல்லல்செய்து பின்புஅது விடுவ தில்லை
அப்பனே தூக்கத்தில் நிற்குந் தானே. (558)

தானான இசிவுதான் முகூர்த்தத்திற் குள்ளே
    தப்பாமல் ஆறுதரம் வருகும் பாரே
மானான வருத்தமது கொஞ்ச நேரம்
    மகிழ்வுடனே தானிருந்து தீரும் சொன்னேன்
ஊனான முதுகிலுள்ள பஞ்ச சதைக்கப்பா
    உத்தமனே இசிவு கண்டால் முதுகை யப்போ
தேனான வில்லைப்போல் வளைத்து அப்போ
    திறமான சிரசுதான் குதிங்கால் செல்லும் பாரே. (559)

பாரடா உடம்புதான் முன்புறம் வளைவு கண்டால்
    பக்குவமாய் முன்னிசிவு என்று சொல்வார்
தீரடா பின்னுக்கு விளைவு கண்டால்
    திறமான பின்வீச்சு என்று சொல்லு
கூறான பக்கசதை தனக்கு அப்பா
    குறிப்புடனே இசிவுவந்தால் சொல்லக் கேளு
நேரான பக்கத்து இசிவு என்று
    நிச்சயமாய்ச் சொல்லுவாய் சன்னிப் போக்கே. (560)

பொக்கான வாதத்தைக் கண்ட பேர்கள்
    பொங்கமுடன் பயப்பட்டு மயங்கு வார்கள்
தாக்கான முகம்வெளுத்து புருவங் கூடி
    தன்மையுள்ள நெற்றியில்தான் புடைப்புக் காணும்
பாங்கான கண்விழிகள் பிதுங்க லாகும்
    பக்குவமாய் சிலவேளை கண்கலங்கிச் சிவந்து காணும்
தாக்கான நாசியின்தான் சரிந் திருக்கும்
    துடிப்பான வாயோரம் பின்னுக்கிழுக்கும் பாரே. (561)

இழுக்கின்ற வேளைதனில் பற்கள் தோன்றும்
    இன்பமாய் நகைப்பதுபோல் முகமே காணும்
அழுத்தமுடன் சுவாசந்தான் வெளியே தோன்றும்
    அப்பனே வேதனை மேல் தோன்றும்
பழுத்ததொரு மார்பில்தான் வேதனையு முண்டு
    பண்பாகத் தாகந்தா னிருக்கும் பாரு
குளிர்ச்சியுடன் நீர்குடித்தால் வேதனையுங் காட்டும்
    குறிப்பாக நாடிதான் படபடத்து ஓடும். (562)

ஓடுகின்ற நாடிதான் பலமே கெட்டு
உத்தமனே சரீரந்தான் வேர்க்கும் பாரு
நாடியே நித்திரைதான் தோன்ரு தப்பா
நலமாகக் கொஞ்சந்தான் உறங்குவா னப்பா
கூடியே கஷ்டங்கள் இருந்தாலும் தான்
குறிப்பாக புத்திகள்தான் மாரு தப்பா
தேடியே ரோகிகள்தான் கஷ்டத் தாலே
தீர்க்கமாய் இருபதாம்நாள் செல்லுவான் பாரே. (563)

பாரடா இந்நோய்க்கு காரணங் கேளு
பக்குவமாய் நரம்பு சீதளத்தி லுலும்
கூருன காயங்கள் படுவ தாலும்
கொற்றவனே தற்செயலாய்க் காண்ப துண்டு
நேராகத் தற்செயலாய்க் கண்ட தாலுல்
நிச்சயமாய்த் தீருமடா சில பேருக்கு
வாரான காயத்தால் கானு மாகில்
வாராது சௌக்கியம்தான் சொல்லும் பாரே. (564)

சொல்லுகின்ற எட்டியுட கொட்டை தின்ருல்
கனமாக இப்படி உண்டாம் பாரு
வெல்வதற்கு மருந்துவகை சொல்லக் கேளு
வேண்டியே முதலில்தான் பேதிக் கீய்வாய்
தொல்லுலகில் ரசபற்பம் வீரச் சுன்னம்
சுருக்கான நவபாஷாண செந்தூர மீய்ந்தால்
அல்லல்செய்து ஓடிவிடும் இந்நோய் அப்பா
அப்பனே பத்தியந்தான் புளி யாகாதே. (565)

## போத க்ஷயம்.

அன்ருன மானிடரை அணுகிக் கொல்லும்
போத க்ஷயக் குணத்தைக் கேளாய்
நன்ருக அடிக்கடி சரீரத் திற்கு
நலமாக தளர்ச்சிக் கப்பா
பன்ருன போதக்ஷய மென்று பேராம்
பதிவாக இதின்குணத்தைச் சொல்லக் கேளு
கன்ருன சரீரந்தான் சீதளமுங் கண்டு
கடினமாய் ஞாபகமும் அற்றுப் போமே. (566)

போமென்ற நாடிதான் மெதுவாய்த் தோன்றும்
பொங்கமுடன் சுவாசந்தா னதிக மாகும்
நாமென்ற இக்குறிகள் காணும் பாரு
நலமான இருதயத்தில் நோவுண் டாகில்
காமென்ற மூர்ச்சைதான் அதிகங் காணும்
கலமான நாடியுடன் சுவாசம் நிற்கும்
பாமென்ற மூளைக்கு உபத்திரவமே கண்டால்
பண்பாக வெறியனைப்போல் பேசுவான் தானே. (567)

தானான இதுவே குமட்டல் வாந்தி
தக்கவிக்கல் மூத்திரபந்தம் இதுவுங் காணும்
மானான சீக்கிரமாய்ச் சிலருக் கப்பா
மகிழ்வுடனே தீருவது முண்டு பாரு
தேனாக சிலருக்கு இரண்டுநாள் தான்
தெளிவின்றி இருப்பதுவு முண்டு பாரு
ஊனான போதக்ஷயம் அதிக மாகில்
உள்ளபடி ரோகிதான் நிற்பான் காணே. (568)

காணுகின்ற காரணத்தைச் சொல்லக் கேளு
கனமாகத் திரேகத்தி லடிபடுவ தாலும்
பூணுகின்ற அதிலிசனம் சந்தோஷத்தி னாலும்
பொல்லாத பயமுடனே ரத்தப்பெருக் காலும்
பேணியே மூளையுடன் இரைப்பை தனக்குமப்பா
பொங்கமுடன் இருதயந் தனக்கு மப்பா
கோணியே பெலமாக அடி பட்டால்
கொற்றவனே இந்நோய்தான் காணும் பாரே. (569)

## தனுர் வாதம்.

பாரடா தனுர்வாத ரோகந் தன்னை
பக்குவமாய்ச் சொல்கிறேன் பண்பாய்க் கேளு
கூறடா மனதுக்கு ஐக்கிய மான
கொற்றவனே சதைகளுக்கு இசிவு கண்டு
நேராக வருகின்ற ஜன்னிக் கப்பா
நெறியான தனுர்வாத மென்று பேராம்
காரடா இச்சதைதான் பிகுவதும் தளர்வதும் (570)
தானுண்டு பண்பாக இதன்குணத்தைப் பகரக்கேளே.

கேளடா இந்நோய்தான் திடீ ரென்று
குப்பெனவே காணுகின்ற தன்மை யுண்டு
நாளடா அவ்வேளை குணத்தைக் கேளாய்
நலமான கீழ்த்தாடை தொண்டைக் கப்பா
பாளடா சதைகளுக்கு இசிவுண் டாகும்
பண்பான குளிர்ச்சியுடன் தொண்டை நோவும்
வாளடா பின்கழுத்து இசிவு தோன்றும்
வளமான வேதனைதான் அதிக மாமே. (571)

அதிகமாய் நாவினிட அடிக்கிச் சென்று
அப்பனே விழுங்குவது கஷ்ட மாகும்
விதியாகப் பற்களைத்தான் கிட்டிக் கொண்டு
வியாதிதா னதிகரிக்கும் வேளை தன்னில்
மதியான முகம்உடம்பு கைகால் தன்னில்
மகத்தான இசிவுதான் காணும் பாரு
சரியான இசிவுதான் சுத்த மாக
சரீரத்தில் விடுவதில்லை தன்மை பாரே. (572)

பாரடா தூக்கத்தில் ஒருவேளை யப்பா
பக்குவமாய் விடுவதுண்டு கொஞ்ச நேரம்
நேராக நாழிகைக்கு இரண்டு வேளை
நிச்சயமாய் வந்துபின்பு தணிந்து போகும்
வாரடா முதுகினது பெருஞ்சதைக் கப்பா
வலுவான இசிவுகண்டா லப்போ கேளு
சீரடா முதுகைத்தான் வில்லைப் போலே
சிறப்பாக வளைத்துப்பின்னல் சிரசைத் தானே. (573)

தானான சிரசைத்தான் குதிங்கால் மேலே
தன்மையாய் நிற்குமடா அப்போ பாரு
மானான இதற்குத்தான் பிறவீச் சென்பார்
மகத்தான முன்புறந்தான் வளைந்த தென்றால்
தேனான முன்வீச்சு என்று பேராம்
தெளிவான பக்கத்தின் சதைக்குக் கண்டால்
ஊனான பக்கவீச்சு என்றும் பேராம்
உள்ளபடி இதின்குணத்தை இன்னுங் கேளே. (574)

இன்னும்கேள் இதின் குணத்தை இன்பமாக
இயல்பாகப் பார்ப்பதற்குப் பயமாய்த் தோன்றும்
பன்னுகின்ற முகம்வெளுத்து புருவ மப்பா
பக்குவமாய்ச் சுருங்கிவிடும் நெற்றி தன்னில்
பன்னியே மடிப்புகள்தான் காணும் சொன்னேன்
மகத்தான கண்தான் பிதுங்கலாய்த் தோன்றும்
உன்னிதமாய்ச் சிலவேளை கண்கலங்கிக் கொண்டு
உத்தமனே கண்ணுரெண்டும் சிவந்து போமே. (575)

சிவந்தபின்பு நாசியிதழ் விரிந்து நிற்கும்
சிற்பனமாய் வரையோரம் பின்னுக்கே செல்லும்
தவிர்ந்த பற்கள் வெளிப்பட்டு நகைப்பது போல்
காண்பிக்கும் முகந்தான் கண்டு கூறு
குவிந்ததொரு சுவாசம்விடக் கஷ்ட மாகும்
கொப்பனவே மார்பில்தான் வேதனையே காட்டும்
தவிக்கின்ற தாகந்தான் மிகவு முண்டு
தண்ணீர்தான் விழுங்கிடவே கஷ்ட மாமே. (576)

கஷ்டமது படுகின்ற வேளை தன்னில்
கனமான நாடிதான் பலவீனத் தோடு
புஷ்டியாய் படபடென ஓடும் பாரு
பொல்லாத வியர்வைதான் தோன்று மப்போ
சட்டமாய் நித்திரைதான் வாரா தப்பா
சாங்கமாய் ஒருவேளை வந்தாலுந் தான்
மட்டாக உறங்குவான் கொஞ்ச நேரம்
மகத்தான கஷ்டத்தால் இன்னங் கேளே. (577)

கேளடா அவனுக்கு புத்தி தானும்
கொஞ்ச மேனுந் தவரு தப்பா
வாளடா முடிவிலிந்த ரோகி தானும்
வளமான ஆயாசத்தி னலு மப்பா
தேளடா கஷ்ட சுவாசத்தி னலும்
தெளிவாக ஒருமூன்று ஓரேழுநாளில் தானும்
நாளடா மூவேழு நாளில் தானும்
நலமான ஜீவன்தான் போகுந் தானே. (578)

தானன இக்கொடிய ரோகத் திற்கு
    தக்கதொரு காரணத்தைச் சாற்றக் கேளு
ஊனன சீதளம் ஈரத்தி னலும்
    உள்ளபெருங் காயத்தால் காணும் பாரு
தேனன காயத்தால் கண்ட தானல்
    தீராது ரோகிக்கு ஒருநாளுந் தான்
மாருக மற்றபடி கண்ட தானல்
    மக்களுக்கு ஒருவேளை தீரும் பாரே. (579)

பாரடா பல்முளைத்தல் தீவிப் பையின்
    பண்பான கொதிப்புனுட காரணத்தி னலும்
நேரடா கருப்பையின் வியாதி யாலும்
    நிலையான சிற்சிலதானங் காயப்படுத லாலும்
நேரடா மூத்திரப்பை கற்க ளாலும்
    நிச்சயமாய் வலிஇசிவு சன்னி தோன்றும்
கூறடா இந்தநோய் தோன்றும் வேளை
    குபிலென்று சன்னிவந்து தோன்றுங் காணே. (580)

## பிரமேக சுரம்.

காணவே பிரமேக சுரத்தைக் கேளு
    கண்டிப்பாய் நாள்ப்பட்ட ரோகத் தோர்க்கும்
போமடா துர்ப்பலங் கொண்ட பேர்க்கும்
    பொல்லாத சீழ்வடிதல் கொண்ட பேருக்கும்
வாளடா இச்சுரந்தான் காணும் பாரு
    வளமான விப்புருதி சீழ்த்தா னப்பா
நாளடா ரத்தத்தில் கலக்கும் பாரு
    நலமாக இதன்குணத்தை நாட்டக்கேளே. (581)

நாட்டுகிறேன் சரீரந்தான் இளைத்த பின்பு
    நலமான தாருட்டியங் குன்றிப் போய்
பூட்டுகிறேன் நிறம்மாறி கண்குளிர்ந்து போகும்
    புகலுகிறேன் பிரதிதினமும் சாய ரட்சை
வாட்டி குளிர்கண்டு சுரமுங் காணும்
    வளமான தாகமுடன் நித்திரை தோன்றும்
பூட்டியே புளிப்புவேர்வை கண்ட தானல்
    பொங்குமுடன் தூக்கந்தான் வருகுந் தானே. (582)

தானன நாக்குத்தான் சிவந்து போகும்
    தணிவாக பேதையுந்தான் காண்ப துண்டு
மானன நாடிதான் தீவிரமாய்ப் போகும்
    மகத்தான குளிர்நடுக்கல் கண்ட தானல்
தேனன புண்ணிலப்பா சீயுண் டாக
    சிறப்பான குறியென்று தெரிந்து கொள்ளு
ஊனன இரத்தத்தில் சீஇருக்கு தென்று
    உள்ளபடி தெரிந்துகொள்ளக் குறியி தாமே. (583)

ஆமடா இதுதீர மருந்து கேளாய்
    அப்பனே சீயைத்தான் முன்பு போக்கு
ஓமடா நல்ல போஜனமுந் தந்து
    உள்ளபடி பால்முதலாய்க் கொடுக்கச் செய்வாய்
நாமடா புடம்நூறு போட்டு வைத்த
    நல்லஅயச் சிந்தூரம் கொடுப்பாய் நித்தம்
தேமடா கெந்தகத் திராவகத்தைப் பின்பு
    தெளிவாக ஈய்ந்தாக்கால் வியர்வை போமே. (584)

## அக்கி.

ஆய்ந்துவரும் அக்கி ரோகத்தைக் கேளாய்
    அப்பனே இதுதோல்மேல் தோன்றும் ரோகம்
உயர்ந்துமே பரவுகின்ற குணமு முண்டு
    முக்கியமாய் தோல்க்கடியில் இருக்குஞ் சவ்வை
நயந்துமே அனுசரித் துண்டாம் பாரு
    நலங்கெட்ட விஷந்தான் உடம்பி லுள்ளே
தோய்ந்துமே ரத்தத்தில் சென்று பின்பு
    துடிப்பான ரோகந்தா னுண்டாம் பாரே. (585)

உண்டாகும் விதமதனைச் சொல்லக் கேளாய்
    உத்தமனே தற்செயலாய்க் காண்ப துண்டு
கண்டான காயத்தால் காண்பதுண்டு பண்பான
    ரத்ததூஷியத்தினலே பக்குவமாய் மூக்குசிரசு தன்னில்
நண்டான காயத்தால் காணு மாகில் [காணும்
    நலங்கெட்டு எவ்விடமும் காணும் பாரு
துண்டான இதன்குறியைச் சொல்லக் கேளு
    துப்புரவே முதல்நாள் குளிர் உண்டாமே. (586)

குளிர்கண்டு சுரமுடனே விகாரங் கண்டு
கொப்பனவே சிலருக்கு பேதி காணும்
திரளாக மூன்றுநாள் சென்றதானல் தானகத்
தோலின்மேல் சிவப்புடனே வீக்கங் காணும்
புளிங்கா சிரசில்தான் முன்பு காணில்
பக்குவமாய் முக்கோரம் கண்டு பின்பு
தளிராக முகமெங்கும் பரவிப் பின்பு
தானுச்சி கழுத்து தோள்களில் பரவுந்தானே. (587)

பரவியே உதடுபின்பு வீங்கும் பாரு
பக்குவமாய்க் கன்னங்கள் தகிப்புக் காணும்
காந்துமே கண்ணிமைகள் தடித்துக் கொண்டு
கண்களைத்தான் மூடிவிட்டு முகத்தை யப்பா
சுரந்துமே விகாரங்கள் படுத்தி விட்டு
சொல்லுகிறேன் வியாதிகண்ட விடத்தில் காணும்
சிறந்துமே இருக்கின்ற சிவப்பை அப்பா
சிறுவிரலால் அழுத்திடில் மங்க லாமே. (588)

மங்கலுடன் அவ்விடத்தில் எரிச்சல் காணும்
மகத்தான நாலுநாள் சென்ற தானல்
தங்கிநின்ற சிவப்புநிறம் மாறிப் போமே
தாகமுடன் விடமுந்தான் மாறிப் போகும்
பொங்கியே தோலுரியு மப்பா கேளு
பொல்லாத அக்கியுட வீரம் போச்சு
பொங்கியே சருமத்தின் கீழிருக் கின்ற
சவ்வைத்தான் பத்திவரும் அக்கியைக் கேளே. (589)

கேளடா சீக்காணும் அழிரண முண்டாம்
கெடிதாக பிரமாதங்கள் செய்யும் பாரு
நாளடா சீழ்தான் செல்லுஞ் சொன்னேன்
நலமான வியாதிதான் மூளைக் கேறும்
வாளடா அதினுடைய சவ்வுக் கேனும்
வளமாகப் பரவியே போதசய முண்டாகி
தேளடா சுவாசத்தின் குழலில் சென்று
தெளிவான ஆளைத்தான் கொல்லும் பாரே. (590)

பாரடா இதுதீர மருந்து கேளாய்
    பக்குவமாய் முன்னாலே பேதிநீ ஈய்வாய்
நேரடா பத்தியந்தான் லகுவாய்ச் செய்து
    நிச்சயமாய் குளிர்ந்தஜலம் பானம் செய்வாய்
தேரடா தெளிவான காத்தில்தான் படுக்கச் செய்து
    திரேகந்தான் துர்ப்பலமாய்ப் போவதாலே
நாரடா ஒருவாரந் தன்னி லப்பா
    நலமான அயத்திராவக மீய்வாய் நீயே. (591)

ஈய்ந்தபின்பு பால்க்கஞ்சி குடிக்கச் செய்வாய்
    என்மகனே மலக்கிரமத்தை சரிசெய்து கொண்டு
வாய்த்த அயத்திராவகத்தை தினமு மப்பா
    வளமாக நாலுதரங் குடிக்கச் செய்வாய்
தோய்ந்த போஸ்தக்காய்போட்டு வெந்நீர் காய்ச்சி
    தொக்கனவே ஒத்தனங்கள் செய்த பின்பு
வாய்ந்த அரிசிமாவைநீ மேலேத் தூவ
    வளமான எரிச்சலுடன் நமைச்சல் போமே. (592)

நமைச்சலுடன் தோலின் அடிச்சவ்வை யப்பா
    நலமாக அனுசரித்துவந்த நோய் தான்
நமைச்சலாய் சீழ்கண்டு விட்ட தாலே
    கனமாக அவ்விடத்தில் கீறி விட்டு
நமைச்சலுடன் சீயதையும் வெளியே போக்கி
    தப்பாமல் முன்போலே செய்த பின்பு
அமைச்சலுடன் நல்ல போஜனமுந் தந்து
    அப்பனே ரத்தத்தை விருத்தி செய்யே. (593)

செய்யடா இதைவிட்டு வெருபே ரப்பா
    செயற்ற குயவனிடம் சென்றுமே தான்
உய்திடவே உப்புடனே மிளகுந் தந்து
    உள்ளபடி தாம்பூலம் கொடுத்த பின்பு
நைந்திடவே அக்கியான மேல்சிங்கத்தைக் கீறி
    நலமாக விட்டுட்டால் தீருமோ சொல்
பையவே இதுவந்த வகை தோன்ருமல்
    பார்ஜனங்கள் மயங்கிவிட்டார் பண்மை கெட்டே. (594)

## ஆனைக்கால் விபரம்.

கேட்டேதான் சொல்லுகிறேன் ஆனைக் காலின்
கெடியான குணமதனை விள்வேன் கேளு
முட்டான சவ்வுடனே எலும்புந் தோலும்
முக்கியமாய்த் தான்படுத்து நீர்தாங் கொண்டு
மட்டாக இதுவருகும் வேளை தன்னில்
மகத்தான குளிருடனே காய்ச்சல் காணும்
திட்டமான வேதனையும் விக்கலுங் காணும்
தீயான சோஷன கிரந்தி வீங்கும் பாரே. (595)

பாரடா நோவெடுக்கும் பின்னால் கேளு
பக்குவமாய்க் குறிகள் சிலநாள் கண்டு
கூறடா முடிவில்தான் வியாதி யுண்டாம்
குணிதமுள்ள காலுதான் ஆனைக்கால் போல்
நேரடா பெருத்துமே ரூபங் கெட்டு
நிச்சயமாய்ச் சிலருக்கு இரண்டு முண்டாகும்
வீரடா அதிலிருந்து நீர்தான் தோன்றும்
வண்மையுள்ள ஆனைக்கால் வகையி தாமே. (596)

## நேத்திர நோயின் துகையுங் குணமும்.

ஆமா மானிடருக்கு வந்த நோயில்
அழகான நேத்திரநோய் தொண்ணூற் றுறில்
தாமடா ஒவ்வொன்றி லித்தனைதா னென்று
தன்மையுடன் அதின்துகையை உரைப்பேன் கேளு
நேமடா அதின்குணமுந் தெரிய வேண்டி
நிச்சயமாய் நீயறிய நிகழ்த்தக் கேளு
ஓமடா மருந்தினுட விவரந் தானும்
உள்ளபடி சொல்லுகிறேன் உண்மை தானே. (597)

தானான நோயிந் தானறிய வேணும்
தன்மையுள்ள சாஸ்திரங்கள் பார்க்க வேணும்
மானான குருமுறையுந் தெரிய வேணும்
மகத்தான செய்பாகம் அறிய வேணும்
கோனான அனுபோகந் தன்னா லப்பா
குறிப்பாக நோய்களைத்தான் அறிய லாகா
தேனான சாத்திரத்தை குருமுன் னாகத்
தெரிந்தபின்பு வைத்தியங்கள் செய்வாய் நீயே. (598)

செய்தாக்கால் மருந்தோன்றும் தப்பா தப்பா
　　செயலற்ற அனுபோகி தன்னைக் கேட்டு
கைப்பாகந் தெரியாமல் செய்து வந்த
　　களங்கமுள்ள மருந்துகள் தானேது செய்யும்
மெய்யாக ஒரிடத்தில் செய்தோ மென்று
　　மெத்தவுந்தான் மவுனமாய்த் திரிவான் பாரு
மெய்யாகப் போகுமடா மருந்து முற்றும்
　　பெரியோ ரனுபோக வைத்தியந் தானே. (599)

அனுபோகத்தால் நோயை ஜெயிக்க லாமோ
　　அந்நோயே அனைவருக்கும் வருமோ சொல்வாய்
தனுவான குணங்களெல்லாம் ஒன்ருய்த் தோணும்
　　தாரணியில் அதுகண்ட நேர்மை வேரும்
மனுவான யூகத் தினலு மப்பா
　　பண்பான சாத்திரத்தி னலு மப்பா
குருவாக் கியமே வேணு மல்லால்
　　கொற்றவனே அனுபோகத்தால் தோன்ரு தன்றே(600)

## கண் நோய் விபரம்.

அன்ருன மானிடருக்கு அளித்த கண்ணேய்
　　அதினுடைய விபரமதை அறையக் கேளாய்
கன்ருன கருவிழியும் வெள்விழியி னேடு
　　கருவான இமையுடனே கடைக்கண் ணென்றும்
நன்ருக இந்நான்கில் காணும் நோய்கள்
　　நலமாகத் தொண்ணூற்ருறு விதந்தா னுண்டு
பன்ருக அதினுடைய விதங்க ளெல்லாம்
　　பகருவேன் நீயறியப் பண்பாய்த் தானே. (601)

தானன கருவிழியில் காணும் நோய்கேள்
　　தருவான காசமுடன் படலங் குமுதம்
பானன விழியூர்தல் நெரிசல் குந்தம்
　　மகத்தான விரியுடனே சுக்கிரன் பூவும்
தேனக இப்பத்தில் காணும்நோய் கேள்
　　தெளிவான நாற்பத்தியஞ்சு விதமே யாகும்
ஊனன வெளிவிழியி லுண்டாம் நோய்கேள்
　　உள்ளபடி எழுச்சியுடன் அறியு மாமே. (602)

ஆமடா படாத்தி நெரிசல் புத்து
அப்பனே குழிழமுடன் நாலு மப்பா
ஓமடா வெள்விழியின் நோய்தா னென்று
உத்தமனே அதன்வகுப்பு இருபதுமே யாகும்
நாமடா இமைதன்னில் வருகும்நோய் கேள்
நலமான பில்லமுடன் தடிப்பு கழலை
தேமடா நீர்பாய்ச்சல் பற்ப மென்றும்
தெளிவான அஞ்சுடன் பதினைச்சே. (603)

ஆச்சடா கடைக்கண்ணில் காணும்நோய் கேள்
அழகான படாத்தியுடன் பூசாந்திர மோடு
போச்சவிழி வாதம் நீர்க்குவை யோடு
பொல்லாத விரண பருவத்திருதி யப்பா
காச்சடா இமைக்குருவும் குமிழும் கண்ணோய்
கனமான நட்சத்திரவாயுவும் இவைபதி னென்றும்
கூப்பிடுவதற்குள்ளே மூவைந்து விதந்தாம் பாரு
கொற்றவனே கடைக்கண்ணின் நோவி தாமே. (604)

கண்ணுன கருவிழியில் காசந் தன்னில்
கதிப்பாக உண்டாகும் நோயைக் கேளு
புண்ணுன வாதபித்தம் சிலேஷ்ம காசம்
பொலிவாத மந்தார காசமுடன் நீலகாசம்
தண்ணுன விரணகாசம் கர்ப்ப காசம்
தருவான எட்டுவித குணமுஞ் சொன்னேன்
எண்ணுன வாதகாச குணமே தென்னில்
என்மகனே கண்மணியில் வண்டைப் போலே. (605)

போலேதான் கருமைநிறம் தான்உண் டாகும்
பொல்லாத கருத்தஜலம் அதில்தான் தோன்றும்
மேலான பித்தகாச குணமே தென்னில்
மிதமாம் மஞ்சள்நிற ஜலம் உண்டாகும்
செயலான சேட்டும காசகுணமே தென்னில்
செப்புகிறேன் சுத்தஜலம் கடைக்கண்ணில் வடியும்பாரு
மாவான வாலக் குணமே தென்னில் [606]
மகத்தான கருவிழியில் புகைபோலே தோன்றும்பாரே.

பாரடா நீலகாச குணமே தென்னில்
பருவான கருவிழியில் கருவின்பூப் போலே
கூருக நிறத்தைத்தான் உண்டாக்கும் பாரு
கொத்தவனே மந்தார காசங் கேளாய்
நேராகக் கருவிழியில் செம்பஞ்சு மேகம் போலே
நெறியான நிறத்தையே உண்டாக்கும் பாரு
சீரான விரணகாசம் நேர்மை கேளு
சிறப்பான கருவிழியில் முத்தைப் போலே. (607)

முத்தைப்போல் தானப்பா நிறத்தைக் காட்டும்
முடிவான கர்ப்பகாச குணமே தென்னில்
சுத்தமுள்ள கருவிழியில் கருப்புநிறத்தைக் காட்டும்
சுகமான எட்டுவித காசந் தீர
வித்தையுள்ள வில்வவேர் சந்த ஞதி
விதமான தைலமுடன் சங்கு மாத்தி
ரையுமாம் கையாந்தகரைக் குழம்பு மையால்
கனமான இந்நோய்தான் தீரும் பாரே. (608)

## படல ரோகம்.

தீருகின்ற படல ரோகத்தின் நேர்மை
செப்புகிறேன் நீயறிய விபர மாக
ஊருகின்ற சதைப்படலம் ரத்தப் படலம்
உள்ளநீர்ப் படலமுடன் வரிப்படல மப்பா
தேருகின்ற கருநாகப் படல மொடு
தெளிவான மாமிசப்படலம் பசுவிழிப்படல மென்று
வருகின்ற ஏழுவித மிதற்குள் ளுண்டு
வண்மையுடன் அதின்குணத்தின் வரிசை கேளே. (609)

கேளடா சதைப்படலக் குணமே தென்னில்
கெடியான கருவிழியில் குத்த லுண்டாய்
நாளடா நோவுடனே வளமான கண்ணுதறும் புலயம்
நலமான சிவந்தசதை வளரும் பாரு
தேளடா ரத்தப்படலங் குணமே தென்னில்
தெளிவான மண்மணியில் கருத்த லுண்டாய்
வாளடா குமுறலுடன் காந்த லுண்டாய்
வளமான கண்ணுதறும் பீளைசாரும் பாரே. (610)

சாருமே எரிதலுடன் ரத்தம் காட்டும்
சரியான நெரிக்கும் கீழ்ப்புருவம் நெற்றி
ஊருமெ பிடரிஉச்சி முதலா யுள்ள
உத்தஇடந் தன்னிலப்பா குத்தல் உண்டாம்
தேருகின்ற நீர்ப்படலம் வரலா றப்பா
திறமான கருவிழிமேல் கம்ம லுண்டாம்
நாருமே கனத்தலுடன் மிகஜலமு முண்டாம்
நலமான மயக்கமுடன் தலைக்குத்துந் தானே. (611)

காணடா வரிப்படல வகையைக் கேளு
கெனமான கருவிழியின் மீதி லப்பா
பூணவே கயிறுபோல் வரியுண் டாகி
பொல்லாத காந்தலுடன் குத்துண் டாகும்
தோணவே நோவுடனே உறுத்த லுண்டாய்
தொலையாத புகைச்சலுமே உண்டாம் பாரு
ஈணவே கருநாகப் படலம் நேர்மை
அப்பனே சொல்லுகிறேன் அறையக் கேளே. (612)

அறிவான கருவிழியில் தனுவைப் போலே
அப்பனே பலநிறமும் குத்த லுண்டாம்
குறியான உறுத்தலுடன் ஜலம்பெருக்க லுண்டாய்
கொற்றவனே வாதனைகள்தான் செய்யும் பாரு
மறியான மாமிசப்படலத்தின் நேர்மை கேளு
மகத்தான விழிமணியின் முனையி லப்பா
சரியான சதைவளர்ந்து ஊற லுண்டாம்
ஜலம்வடிந்து காய்ச்சலுடன் பிடரி நோகுமே. (613)

நோவான பசுவிழி படலந் தன்னை
நுணுக்கமாய்ச் சொல்லுகிறேன் கருவிழியி லப்பா
மேவியே பசுமைநீர் சதையுண் டாக்கி
மேதினியில் இடித்துடன் குத்த லுண்டாம்
தாவியே பார்வையுந்தான் மந்த மாகும்
தருவான இதின்குணந்தான் கண்டு கொண்டு
ஏவியே படிக்கார மாதியாக உள்ள
நத்தை சிப்பிநெய்யில் மருந்து செய்யே. (614)

## குமுத ரோகம்.

செய்கின்ற குமுத ரோக பேதம்
 செப்புகிறேன் நீயறியத் திறமாய்க் கேளு
உய்கின்ற செங்குமுதம் கருங்குமுத மோடு
 உள்ள வெண்குமுதமுடன் மூன்றே பாரு
தோய்கின்ற செங்குமுத ரோக நேர்மை
 செப்புகிறேன் கருவிழியில் செங்கழுநீர் போல்
செய்துமே சிவந்தசதை யுண்டாகிப் பின்பு
 சிற்பனமாய் தீப்புண்போல் எரிச்ச லாமே. (615)

எரிச்சலுடன் குத்தலுமே மிகவுண் டாகும்
 என்மகனே கருங்குமுதத்தின் நேர்மை கேளு
தெரிச்சலுள்ள விழியில் கருங்குவளை பூப்போல்
 தெளிவான விரணத்தை எழுப்பிப் பின்பு
மரச்சலுடன் பார்வையைத்தான் கம்மல் செய்யும்
 மகத்தான வெண்குமுத ரோகங் கேளு
பரிச்சலுள்ள கண்களில்தான் பஞ்சு போலே
 பாரப்பா வெளுத்தபுள்ளி விழுகும் பாரே. (616)

புள்ளிகள்தான் பரவியே குத்த லுண்டாம்
 பொலிவான பார்வைதான் மழுங்க லாகும்
அள்ளியே நோவுதான் மெத்த வுண்டாம்
 அப்பனே செங்குமுதம் தீரும் பாரு
ஒள்ளியாங் கருங்குமுதம் வெண்குமுதம் ரெண்டும்
 ஒருநாளுந் தீராது மாந்த ருக்கு
தெள்ளியே விழியூந்தல் ரோகந் தன்னை
 தெளிவாகச் சொல்லுகிறேன் தன்மை கேளே. (617)

கேளடா விழியுந்தல் ரோகந் தன்னில்
 தெளிவான செஞ்சதைவிழியுந்தல் வெண்சதைவிழியுந்
நாளடா சர்வநேத்திர விழியுந்த லென்று [தல் இரண்டும்
 நலமாக மூன்றுவித முண்டாம் பாரு.
தேளடா செஞ்சதை விழியூந்தல் தன்னை
 சிறப்பாகச் சொல்லுகிறேன் திறம தாக
கேளடா இதுகுமுத ரோகத் தாலும்
 கொத்தவனே நேத்திர ரோகந் தானே. (618)

தானான கருவிழியார் சிவந்து அப்பா
தருவான சதையைத்தான் படரச் செய்து
தேனான உறுத்தலைத்தான் உண்டாக்கும் பாரு
தெளிவான வெண்சதை விழியூந்தல் கேளு
ஊனான கருவிழியி லப்பா கேளு
உள்ளபடி வெண்சதைதான் படரும் பாரு
கோனான நோவைத்தான் உண்டாக்கும் பாரு
கொற்றவனே சர்வநேத்திர விழியூந்தல் கேளே. (619)

கேளடா கண்முழுதுஞ் சதை தானப்பா
கெடியாக குத்துமே கொள்ளும் பாரு
நாளடா இதுமூன்றும் அசாத்திய மாகும்
நலமான நெரிசல் ரோகபேதம் சொல்லக் கேளு
வாளடா இந்நோய்தான் வருகும் நேர்மை
வளமாகச் சொல்லுகிறேன் வண்மை யாக
தேளடா அதிஉஷ்ணம் சுமைஎடுத்த லாலும்
தெளிவான இந்நோய்தான் பிறக்கும் பாரே. (620)

பாரடா உஷ்ண நெரிசல் ரோகம்
பண்பாகக் கருவிழியில் வெளுப் புண்டாக்கும்.
நாளடா சுரோணித நெரிநூல்ரோக மப்பா
நன்மையுள்ள விழிநடுமே ரத்தநிறத்தைத் தந்து
கூறடா சுடுகையைத்தா னுண்டாக்கும் பாரு
கொற்றவனே நீர்நெரிசல் ரோகங் கேளு
வாரடா விழிநடுவில் மாந்தளிர் போலே
வண்மையுடன் குளிர்ச்சியும் நீர்க்கோவையு மாகும்(621)

## வரி ரோக பேதம்.

ஆகவேதான் வரிரோக பேதந் தன்னில்
அப்பனே மூன்றுவிதம் சொல்வேன் பாரு
நாமேதான் நீர்வரியும் இமைவரியி னோடு
நலமான சொரிவரியு மாகும் பாரு
தாமேதான் நீர்வரியின் தன்மை கேளு
தக்க கருவிழியில் வெளுத்திருக்கும் பாரு
காமேதான் இமைவரியின் நேர்மை
கண்டிப்பாய் பிறைபோலே வளைந்திருக்கும் பாரே.(622)

பாரடா சொரிவரியின் குணமே தென்னில்
பக்குவமா யிரண்டுகடைக் கண்வரைக்கு மப்பா
கூறுன இரத்த நிறத்துடனே தான்
கொப்பனவே படர்ந்திருக்கும் வரிசை பாரு
நேரான இந்த ரோகம் மூன்றில்
நிச்சயமாய் இரத்தகுந்தம் சதைக்குந்த மொடு
பேரான மோர்க்குந்தம் இவைமூன் றப்பா
பொல்லாது மாந்தருக்குப் பொறுத்துப் பாரே. (623)

## திமிர் ரோகம்.

பொருத்தான திமிர்ரோகந் தன்னில் கேளு
பொல்லாத வெள்ளெழுத்து மாலைக்கண் தான்
மருத்தான மந்தாரதிமிரமப்பா வளர் திமிரம்
நீர்திமிரம் சிலேஷ்ம திமிர மப்பா
பொருத்தான மேகத் திமிர மென்றும்
பொலிவாக ஏழுதிமிர முண்டாம் பாரு
திருத்தான இவைகளுட குணத்தைக் கேளாய்
தீங்கான வெள்ளெழுத்தின் குணத்தைக் கேளே. (624)

## இது வெள்ளெழுத்து என்பது.

கேளடா வெள்ளெழுத்தி லிரண்டுவிதமே யுண்டு
கெடியாகக் காலத்தில் காண்ப தொன்று
நாளடா அகாலத்தில் காண்ப தொன்று
நலமாக அதின் குணத்தை நவிலக் கேளு
தேளடா காலத்தில் காணும்நோய் தான்
தெளிவாக வயது நாற் பதில்
நாளடா ஒருப்பட்டஞ் சென்ற பின்பு
வளமான வெள்ளெழுத்துத் தீரும் பாரே. (625)

## வெள்ளெழுத்து விபரம்.

பாரடா அகாலத்தில் காணும் நோய்தான்
பெலமான பித்தரோகந் தன்னு லப்பா
நேரடா கண்டுமே விழியைத் தானும்
நிச்சயமாய் மறைக்குமடா நீர்மேகம் போல்
கூறடா இந்நோய்தான் தைலத் தாலே
கொத்தவனே தீருமடா குவல யத்தில்
வாரான மாலைக்கண் விபரங் கேளு
வண்மையுடன் இரவுதனில் பார்வை தோன்றுதே. (626)

தோன்ருத மந்தார திமிர் ரோகம்
சொல்லுகிறேன் கருமணியில் பஞ்சு போலே
ஊன்றியே புகைஎழும்பி அந்தி நேரம்
ஒளிதான் மங்குமடா பின்னுங் கேளு
தாண்டியே ஒருஜாம மான பின்பு
தானுகத் தெரியுமடா பார்வை யப்பா
வான்றியே வளர்திமிர் ரோக மப்பா
வளமான கருவிழியில்மந்தம் தோன்றும் பாரே. (627)

மந்தமுடன் நடுநரம்பில் குத்தலுண் டாம்
மகத்தான பீளையுடன் ஜலமுமுண் டாம்
மந்தமுள்ள கபாலத்தின் மூளையில் தான்
பெலமாகப் பித்தவறட்சி யுண்டாகும் போது
தொந்தமுள்ள இந்நோய்தான் உண்டாம் பாரு
தொந்தமுள்ள நீர்த்திமிரம் சொல்லக் கேளு
பந்தமுடன் இதுநாசி செவிகண் நாவில்
பற்றியே விரணத்தை யுண்டாக்கும் பாரே. (628)

உண்டாக்கிக் கருவிழியின் பக்கந் தன்னில்
உறுத்தலுடன் குத்தலையும் புகைச்சலையுங் காட்டும்
பண்டான சிலேத்துமத்தின் திமிர ரோகம்
பருவான கருவிழியை வெளுப்பே யாக்கி
நன்ருன பார்வையுந்தான் அப்படியே தோற்றும்
நலமான மேகத்தின் திமிர் ரோகம்
உண்டான வேளையில்தான் கருவிழியி லப்பா
உத்தமனே மேகம் போலிருண் டாமே. (629)

இருளான ரோகத்தில் தீரும்நோய் கேள்
இனமுள்ள வெள்ளெழுத்தும் மாலைக் கண்ணும்
மருளான மந்தார திமிர் மூன்றும்
மாநிலத்தில் தீருமடா மாந்த ருக்கே
திரளான மற்றதெல்லாம் தீரா தப்பா
தேறினதோர் கருவிழியின் ரோகந் தன்னில்
பிரிவான சுக்கிர ரோகத்தின் பேதம்
பின்னாலே சொல்லுகிறேன் பிரிவாய்த் தானே. (630)

தானான சுக்கிர ரோகந் தன்னில்
தனியான விரணசுக்கிரன் கருஞ்சுக்கிர னோடு
மானான விழுவிழுங்கி சுக்கிரந் தானும்
மகத்தான வெண்சுக்கிரன் கனல்சுக்கிர னோடு
தேனான ஐந்துவித சுக்கிர னுக்கும்
தெளிவாகக் குணமதனை உரைக்கக் கேளு
கோனான விரணசுக்கிரன் குணமே தென்னில்
கொற்றவனே கருவிழியில் விரண மாமே. (631)

ஆமடா கருஞ்சுக்கிரன் குணமே தென்னில்
அப்பனே விழியைச்சுற்றி உளுந்து போலே
நாமடா துவாரத்தை உண்டாக்கும் பாரு
நலமான விழிவிழுங்கி சுக்கிர னப்பா
தேனான கருவிழியின் கீழ்ச்சந்தில் நின்று
தெளிவான வெள்ளெழுச்சிபோலே படர்ந்துகொண்டு
ஊனான விழியைத்தான் மறைக்கும் பாரே
உத்தமனே எரிச்சலுடன் வேதனையு மாமே. (632)

வேதனை செய்வோன் சுக்கிரன்குணமே தென்னில்
விதமான குழந்தைகளின் கருவிழியை விட்டு
வாதை செய்யும் அதினுட நிறம்போல் காட்டும்
பக்குவமாய் கனல்சுக்கிரன் குணத்தைக் கேளு
தீதில்லா விழியில்தான் நோவுண் டாகி
தீங்காக உள்ளுக்கு அனல்போ லப்பா
காந்தலைத்தான் உண்டாக்கும் இந்நோய் தான்
கெனமான சுக்கிரனில் முன்மூன்றுந் தானே. (633)

## பூரோக விபரம்.

காணடா பூரோகஞ் சொல்லக் கேளு
கனமான வைசூரியின் ரோகத் தாலும்
வீணான உஷ்ண ரோகத்தி னாலும்
விளைந்தமிகு நீர்க்கோவை ரோகத் தாலும்
காணுகின்ற கருவிழியி லப்போ தப்பா
கனமான ஆணிகுந்தம் புகைதா னென்றும்
மூணான பூவுண்டாய் அதற்கு ளப்பா
முக்கியமாய்த் தீராது புகைரோகந் தானே. (634)

தானான மற்றிரண்டு தீரும் பாரு
தன்மையுள்ள வெள்விழியின் ரோக பேதம்
ஊனான எழுச்சிபுற்று ரெரிச லென்றும்
உண்மையுள்ள வரியுடனே படாத்தி யாலும்
தேனான இதற்குள்ளே உண்டாம் ரோகம்
தெளிவான இரண்டு படாத்தியாலும் உண்டாம் பாரு
கோனான எழுச்சியுட பிரிவு தன்னை
கொற்றவனே சொல்லுகிறேன் குணமாய்க் கேளே(635)

கேளடா எழுச்சியுட ரோகந் தன்னில்
கனமான வரிஎழுச்சி விரணஎழுச்சி என்றும்
நாரடா வீரெழுச்சி குவைஎழுச்சி என்றும்
நலமற்ற உந்தெழுச்சி என்று ஐந்தாம்
வாரடா வரி எழுச்சி குணமே தென்னில்
வண்மையுள்ள வெள்விழியில் தேமல் போல
தாளடா வட்டமாய் சதையைத் தானே
தான்பரவச் செய்யுமடா தன்மை தானே. (636)

தானான ரணஎழுச்சி விபரங் கேளு
தன்மையுள்ள வெள்விழியில் கருங்குன்றி போல
ஊனான மாமிசத்தை உண்டு செய்யும்
உத்தமனே குவைஎழுச்சி குணமே தென்னில்
தேனான உளுந்தைப்போல் சதைஉண் டாக்கும்
தெளிவற்ற நீரெழுச்சி விபரம் பாரு
மானான நீர்த்துளியைப் போலே யப்பா
மகத்தான சதையைத்தா னுண்டாக்கும் பாரே.(637)

பாரடா உந்தெழுச்சி குணமே தென்னில்
பக்குவமாய்ப் பருத்திக்காய் தன்னைப் போலே
கூரான சதையைத்தான் வளரப் பண்ணும்
கொற்றவனே படாத்தி ரோகங் கேளு
சீரான சதைப்படாத்தி வரிப் படாத்தி
சிறந்த சொறிப்படாத்தி என்று மூன்றும்
தேரான சதைப்படாத்தி குணமே தென்னில்
திறந்த விழிச்சதையைத் தடிக்கச்செய்யும் பாரே. (638)

செய்கின்ற வரிப்படாத்தி குணத்தைக் கேளு
செயலற்ற வெண்விழியில் வலைக்கண் போலே
பையவே மாமிசத்தை உண்டு செய்யும்
பாரினில் சொறிப்படாத்தி குணத்தைப் பாரு
நையவே வெள்விழியில் ரத்தம் போல
நலமாகச் சதையைத்தான் வளரப் பண்ணும்
தொய்யவே நிரிசலிட ரோக பேதம்
தொகுப்பாக மூன்றுவிதம் சொல்வேன் கேளு. (639)

கேளடா துளிஉந்து விரணம் என்றும்
தொகுப்பான மூன்றுக்கும் குணத்தைக் கேளு
நாளடா துளிகாணும் போதுபார்த் தால்
நலமான வெள்விழியில் துளியைப் போலே
மூளடா சதையைத்தான் உண்டு செய்யும்
முக்கியமாய் உந்துதான் துர்மாமிசத்தை யுண்டு
தேளடா விரணத்தின் குணமே தென்னில் [செய்யும்
தெளிவான விழியில்தான் ரணமுண் டாமே. (640)

உண்டான புத்தினத்தின் ரோக பேதம்
உத்தமனே நாலுவிதம் உண்டு பாரு
நண்டான சதைப்புற்று நீர்ப்புற் றேடு
நலமான அனல்புத்து கோவைப் புத்தாம்
பண்டான சதைப்புத்தின் குணமே தென்னில்
பரிவான வெள்விழியில் சதை யுண்டாக்கும்
உண்டான மூன்றுபுத்தும் சதை யுண்டாக்கி
முக்கியமாய்த் தீராது உலகத் தோர்க்கே. (641)

தீராத குமிழ்ரோகந் தன்னி லப்பா
திறமாக மூன்றுவிதம் சொல்லக் கேளு
மாருத சதைக்குமிளம் ரத்தக் குமிளம்
மகத்தான நீர்க்குமிளம் என்று மூன்றும்
ஆருத சதைக்குமிளம் வெள்விழியி லப்பா
அப்பனே கருங்கொப்பளம் போலே காணும்
தேருத ரத்தக்குமிளம் குணந்தா னப்பா
செங்குன்றி மணிபோலே கொப்புள மாமே. (642)

ஆமடா நீர்க்குமிள குணமே தென்னில்
அப்பனே வெள்விழியில் சங்கம் பழம்போல்
ஓமடா கொப்புளங்கள் உண்டாம் பாரு
உத்தமனே பின்னிரண்டும் தீரும் பாரு
நாமடா இரத்தக்குமிளம் தீரா தப்பா
நலமான வரிரோக பேதந் தன்னை
தாமடா சொல்லுகிறேன் தரணி யோர்க்கு
தன்மையுடன் கேட்டுப்பின் தெரிந்து கொள்ளே. (643)

கொள்ளடா வெள்ளையுடன் இரத்தம் நீலம்
குணமான மூன்றுவரி யுண்டாம் பாரு
அள்ளவே வெள்ளைவரி குணமே தென்னில்
அப்பனே வெள்விழியில் மீன்சிலாம்பு போல
மெள்ளவே வரியைத்தான் உண்டாக்கும் பாரு
மிதமான நீலவரி குணத்தைக் கேளு
தள்ளவே பசுங்கொடிபோல வரையுண்டாக்கு மப்பா
தப்பாது இரத்தவரி செகப்புவரை காட்டுங்காணே(644)

## இமை ரோகம்.

காணேநீ இமைரோக நேர்மை தன்னை
கண்டுநீ யறியவே கருத்தாய்க் கேளு
பூணேநீ பில்லமுடன் தடிப்பு பத்மம்
பொல்லாத கழலைநீர்ப் பாச்ச லென்றும்
பேணியே அஞ்சுவிதம் தனக்குள் ளப்பா
பிரிவான பதினாறு ரோகமுண் டாம்
ஆணியாம் பில்லாரோகந் தனக்குள் ளப்பா
அழகான மூன்றுவிதம் பிறக்குங் காணே. (645)

பிறக்கின்ற நீர்ப்பில்லம் அமரப் பில்லம்
பெலமான இடர்ப்பில்லம் என்று மூன்றும்
பறக்கின்ற நீர்ப்பில்லம் குணமே தென்னில்
பண்பான இமைமுழைத்தல் கனத்த லோடு
கறக்கின்ற கண்ணில் மிகுஜலமுந் தோன்றும்
கடினமப்பாக கண்புருவம் உச்சி சுற்றி
திறக்கின்ற திமிருடனே சில்லிட்டு நோகும்
தீராது இந்நோய்தான் எவருக்குந் தானே. (646)

தானான அமரபில்லங் கண்ட தானால்
தடிக்குமடா இமைதான் இரத்தம் போலே
ஊனான கீழிமைதான் ஒட்டிக் கொள்ளும்
உத்தமனே கண்ணொளிதான் மங்கும் பாரு
தேனாக அதிகஜலம் வடியும் பாரு
தெளிவாக இடர்ப்பில்லங் குணத்தைக் கேளு
மானான இமையடியின் புருவம்மத்தி நரம்புதானும்
மஞ்சள் நிறமாகிப் பின்தடிக்கும் பாரே. (647)

தடிக்கின்ற தடிப்புரோகம் தன்னில் அப்பா
தாளாத இமைதடித்தல் முடமயிர் தானும்
படிக்கின்ற இளிச்சக் கண்ணென்றும் மூன்றும்
பாங்கான இமைதடிப்பின் குணமே தென்னில்
முடிக்கின்ற கண்ணில்தான் பரபரப் பாக
மொங்கான தினவுடனே தும்மல் காணும்
மடக்கின்ற இமையில்தான் விறுவிறுப்புத் திமிரம்
மகத்தான விம்மலுடன் கனக்கும் பாரே. (648)

கனக்கின்ற இளிச்சக்கண் குணமே தென்னில்
கனமான இமைவிழும்பில் தடிப்புக் காணும்
வினைப்பயனால் விரணமுடன் ஜலக்கோர்வை கண்டு
வீக்கமூடன் கண்கூசல் விதன முண்டாம்
முளைக்கின்ற முடமயிர்தான் காணும் போது
முக்கியமாய் இரண்டிமை சரிவு கொண்டு
களைக்கின்ற நீர்ப்பெருக்கால் விரணங் காணில்
கடினமாய் இமைமயிர்தான் உறுத்தும் பாரே. (649)

உறுத்துகின்ற வேளைதனில் வேதனைதான் கண்டு
கூறியே கருமணிதான் வெளிரல் காணும்
சுத்தியே அதில்திமிரம் நோவுண் டாகும்
சுகமத்த கடலையுட ரோக பேதம்
ரத்தமுள்ள கழலையொன்று சதைக்கழலைதா னென்று
நேரான நீர்க்கழலை என்று மூன்றே
இத்தனையும் கட்டியைப்போ லெழும்பு மப்பா
இதெல்லாம் சாத்தியமாய் தீருங் காணே. (650)

தீருகின்ற நீர்ப்பாச்சல் ரோக மப்பா
திறமாக நாலுவித முண்டு பாரு
ஊறுகின்ற புழுவெட்டு இமை இறைச்சி
உத்தமனே இமைநீர்ப்பாச்சல் சுத்துக்குலைவு நான்காம்
தேருகின்ற இந்நோய்க்குத் திமிரம் வீக்கம்
திறமான விரண முதல் சாரல்
மாறுகின்ற மயிருதிர்தல் அனல்போல் காந்தல்
மகத்தான உஷ்ணம்வரில் இந்நோய்காட்டும் பாரே (651)

காட்டுகின்ற பதும ரோகத்தின் பேதம்
கனமாக மூன்றுவித முண்டு பாரு
பூட்டுகின்ற நீர்ப்பதுமம் ரத்தப் பதுமம்
பொல்லாத சதைப்பதும மென்று மூன்றும்
தாட்டுகின்ற இந்நோய்தான் இமைக்குள் தோன்றி
தருவான நீர்ச்சுரப்பு ரத்தநீ ரோட்டம்
கொட்டிதஞ்செய் துர்மாமிசத்தை உண்டு செய்து
கொடியதொரு வருத்தத்தை வருவிக்கும் பாரே. (652)

## கடைக்கண் ரோக பேதம்.

வருவிக்கும் கடைக்கண்ணின் ரோக பேதம்
வளமாகப் பதினைந்து விதந்தா னுண்டு
தருவிக்கும் கண்ணெடுப்புப் பூசாந்திர மென்றும்
தயவான படர்த்திருவை விழிவாத மென்றும்
பருவிக்கும் விரணபருவத் திருதியி னோடு
பாங்கான இமைக்குரு கண்ணோ வென்றும்
பெருவிதமாய் குமிழமுடன் நீர்க்குவை ரத்தக்குவை யென்றும்
பெலமான சதைக்குவை எனபதினைந் தாச்சே. (653)

ஆச்சடா இதினுடைய குணங்க ளெல்லாம்
அப்பனே முன்சொன்ன குணங்கள் போலே
நீச்சடை கடைக்கண்ணில் தோன்றும் பாரு
நிசமாக மாமிசமும் கட்டிமுதலாய்க் காணும்
போச்சடா இதற்குத்தான் கண்ணின் நேர்மை
பொலிவுடனே நீயறியப் புகலுவேன் கேள்
காச்சடா கண்ணினுட விவர மெல்லாம்
கைகாட்டும் விபரமாய்ச் சொல்வேன் கேளு. (654)

## கண் விபரம்.

கேளடா கண் குமிழிக்குள் ளிருக்கும்
கடிதான உருண்டைக்கு விழியென்றே பேர்
நாளடா விழியைத்தான் சதையும் கொழுப்பும்
நலமான நரம்புகளும் ரத்தநரம்புஞ் சேர்ந்து
மூளடா சூழ்ந்துகொண்டே இருக்கு தப்பா
முக்கியமாய் விழிமத்தியில் ஆறுசதைதா னுண்டு
தேளடா அவையெல்லாம் விழியைத் தானே (655)
தேவையுள்ளபடி யெல்லாம் அசையச்செய்யும் பாரே.

பாரடா விழியேதான் புரைமூன் றாறே
பண்பாக உருவாகி இருக்கு மப்பா
கூறுவேன் அப்புறையின் பேரைக் கேளு
புனிதமுள்ள வெள்ளைச்சவ்வு கருத்த சவ்வாம்
நேரான ரூப உற்பத்திச் சவ்வு
நிலையான மூன்றுசவ்வு மிருக்கு தப்பா
வாரான அதின்விபரம் சொல்லக் கேளு
வண்மையுள்ள குருசொன்ன படிக்கு நானே. (656)

சொன்னபடி சொல்லுகிறேன் இன்னுங் கேளாய்
சூட்சமுள்ள வெள்ளைச் சவ்வின் நேர்மை
அன்னவளே வெண்மையுடன் உறுதி யாக
அழகாக விழிப்பக்க மிருக்கும் பாரு
பின்னமிலாக் கருஞ்சவ்வின் நேர்மை சொல்வேன்
பிலமான விழியினுட நடுப்புறை தனக்கு
மன்னவனே ரத்தத்தின் நரம்பு தன்னால்
மருத்துவமாய் ஏற்பட்டுக் கருத்திருக்கும் பாரே. (657)

கருப்புக்குப் பின்னாலே கரும்பசை தானப்பா
கனமாக ஒட்டிக் கொண்டிருக்கும் பாரு
விருப்பமுள்ள அதின்குணந்தான் ஏதோ வென்னில்
விபரமுள்ள கண்ணுக்குள் செல்லு கின்ற
பருத்ததொரு கிரணத்தை இழுத்துக் கொள்ளும்
பாங்கான அப்பசைதா னில்லாவிட் டால்
குறித்ததொரு பார்வைமுற்றும் சிதறிப் போகும்
குணமான கரும்பசையின் நேர்மை தானே. (658)

நேர்மையுள்ள கரும்பசைதான் வெண்குட்டரோகிக் கப்பா
நிர்மலமாய் வெளுத்திருக்கும் நேர்மை சொன்னேன்
கூர்மையாய் அவர்கள்தான் வெளிச்சந் தன்னை
குறிப்பாகப் பாரார் உலகின் மீதே
ஊர்மையுள்ள ரூபஉற்பத்திச் சவ்வின் நேர்மை
உள்படி துல்லியமாய் இருக்கும் பாரு
பார்வையுள்ள விழிக்கிது உள்புரையே யாகும்
பண்பான பார்வையுடன் நரம்பு பாரே. (659)

நரம்பினுட விரிவாலே இந்தச் சவ்வு
நன்மையுடன் ஏற்பட்டு இருக்கு தப்பா
திறமாக வெளியில்தான சுக்கிலமண்டல மென்றும்
சுகமாகக் கருவிழிதான் இருக்கும் பாரு
உறமாக இதுவிழியின் முன்புறத்தி லப்பா
உத்தமனே வளைந்துதா னிருக்கும் பாரே. (660)

காணடா வட்டமுடன் வெள்ளை யாவும்
கடினமாய்க் கண்ணுடி போல தோன்றும்
பேணியே இதற்குப்பின் கருஞ்சவ்வு மிருப்பதாலே
பெலமாக இதுவுந்தான் கறுப்பாகத் தோன்றும்
ஆணியாஞ் சவ்வுமிது வெள்ளைச் சவ்வோடு
அப்பனே ஒட்டிக்கொண் டிருக்கும் பாரு
வாணியாம் கண்சவ்வு ரெப்பைக் குள்ளே
வளமாக இருக்குதடா வண்மை பாரே. (661)

வண்மையுள்ள இச்சவ்வு விழிக்கு மேலே
வண்மையுடன் மூடியே இருக்கு மப்பா
பண்மையுள்ள கிருஷ்ண மண்டலத்தின் மேர்வை
பாடுகிறேன் நீயறிய பண்பாய்க் கேளு
தளதளப்பாய் உள்ளசுக்கில மண்டலத்துக் கப்பால்
தான்கிருஷ்ண மண்டலந்தா னிருக்கும் பாரு
பளபளப்பாய் கறுத்துஇது மத்தியில் கேளு
பாங்கான துவாரமது இருக்கும் பாரே. (662)

பாரடா இதற்குத்தான் கண்தாரை என்றும்
பக்குவமாய் கிருஷ்ணமண்டலத்தின் துவார மென்றும்
கூறடா இதற்குத்தான் பாவை என்றும்
கொத்தவனே சொல்வார்கள் உலகத் தோர்கள்
நேரடா இத்துவாரம் வெளிச்சத் துக்கு
நின்றவுடன் சுருக்கமுடன் விரிவு மாகும்
வாரான கிருஷ்ணமண்டலத்தின் நிறந்தா னப்பா
வன்மையுடன் பலவிதமாய் இருக்கும் பாரே. (663)

பலவிதமாய்ச் சிலருக்குக் கறுத்து மப்பா
பாங்காகச் சிலருக்கு நீல மாயும்
சிலவிதமாய்ச் சிலருக்கு ஊதர வாயும்
நிறத்துக்குத் தக்கபடி விழியைச் சொல்வார்
கலகலக்குங் கண்தாரை தனக்குப் பின்னல்
கருங்குன்றி மணியைப் போல் வெள்ளையாக
உலகருக்கு ஒருமணிதா னிருக்கும் பாரு (664)
உத்தமனே அதற்குத்தான் கண்மணியென்றும் பாரே.

## கண்ணறையின் விபரம்.

பேரான கண்ணறையின் விபரங் கேளு
பெலமான சுக்கிலமுடன் கிருஷ்ணமண்டலந் தானப்பா
வாரான இதனடுவில் தோன்று கின்ற
வண்மையுள்ள சிறுசந்து முன்னறையே ஆகும்
காரான கிருஷ்ண மண்டலத்துக்கு இன்னும்
கண்மணிக்கு முன்னுமாய் தோன்றுஞ் சந்து
கூறுக இதற்குத்தான் பின்னறையென்னும் பேராம் (665)
கொத்தவனே இவ்வறையில் சுத்தநீர் இருக்கும் காணே.

சுத்தமுள்ள விழிக்குள்ளே பின்புற மாய்
முட்டை சுகமான வெண்கருப்போல் குழகுழப்பான
சுத்தமுள்ள நீர்மோரு சவ்வு முண்டு
தனியாக இதற்கோர் பைதானு முண்டு
மெத்தவிது விழியினுட முக்கால் பங்கு
முன்னீர்தான் அப்பையில் நிறைந்து கொண்டு
பத்தியுள்ள கண்சவ்வை விரிவாய்த் தானே
பாங்காக வைத்திருக்கும் பாரி னோர்க்கே. (666)

பாரினேர்க்கு இந்நீர்தான் போய் விட்டால்
பார்வையொன்றும் தெரியாது நொள்ளை யாவார்
காக்கின்ற கண்ணீர் கோளமப்பா கனமான
கண்குழிக்கு மேலே கேளு
ஆர்க்கின்ற வெளிப்புற மாயமைந் திருக்கும்
அப்பனே அதற்குத்தான் குழைகள் உண்டு
தார்க்கின்ற அக்குழையின் வழி யதாக
தண்மையுள்ள கண்ணீர்தான் இறங்கும் பாரே. (667)

இறங்கியே விழிக்கு ஊர்த்துவ முகமாக
என்மகனே கண்சவ்வு மேலே பாயும்
உறங்கியே கண்ணீரால் கண் தானப்பா
உத்தமனே எப்போது மீரந் தோன்றும்
சுருங்கிடில் வறட்சியுடன் வேதனையுந் தோன்றும்
சுக்காக மூக்கினுட பக்க மாக
நெருங்கியே கண்ரெப்பை முனைகளில் தான்
மொக்குப்போல் நீளசிறிய பிதுக்கங்கள் கொடுக்கும் பாரே. (668)

பிதுக்கத்தின் மேலாகத் துவார முண்டு
பின்பந்தத் துவாரத்தில் கண்ணீர் தங்கி
ஒதுக்கின்ற நாசியுட அடியில் அப்பா
ஒகோகோ அந்நீர்தான் போய் விழும்
செதுக்கின்ற புருவங்கள் கண்களுக்குச்
செயலாக அதிவெளிச்சஞ் தோன்ருெட் டாமல்
ஒதுக்கியே வியர்வைதனைத் தள்ளி வைக்கும்
ஒருவருக்கும் தெரியாது உண்மை தானே. (669)

## கண் வறட்சி.

உண்மையுள்ள கண்வறட்சி ரோகங் கேளாய்
உண்மையுள்ள கண்ணினுட நீரு தானே
தண்மையாய்ச் சுரப்புலர்ந்து போனல்
தாரணியில் வறட்சி யுண்டாம் பாரு
வண்மையுடன் இதுதீர வேணு மென்ருல்
வகையான ஆமணக்கின் எண்ணெய் தந்து
எண்ணியே கண்ணில்நீ விட்டுவிட்டு வந்தால்
எப்போதும் வாராது நோய்தான் போமே. (670)

போமேதான் கண்ணீர் தானதிக மாக
புகழாக வடிந்துமே கன்னம் மீது
ஆமேதான் இருப்பதற்கு நீர்ப்பெருக்க மேன்பார்
அப்பனே இதுதீர வேணு மென்ருல்
காமேநீ கண்ணீநீ பார்வை யிட்டு
கதிராக ரோமந்தான் முளைத் திருந்தால்
நாமேநீ பிடுங்கிஅதை விட்டா யாஞல்
நலமாகத் தண்ணீர்தான் ஒழிந்து போமே. (671)

ஒழிந்துபோம் சரீர விகல்பத் தாலே
உத்தமனே இந்நோய்தான் காணு மாகில்
அழியாத அயம்நிலவேம்பு முதலா யுள்ள
அப்பனே மருந்துகளைக் கொடுத்துக் கொண்டு
பழியில்லா திரேகத்தை வலுக்கச் செய்து
பக்குவமாய்த் தைலமொன்று பகரக் கேளு
செழிப்பான நந்தியாவட்டம்பூ முருங்கைப் பூவும்
செயலான பூவரசம்பூ முலைப்பால் ஆவின்நெய்யே(672)

நெய்யான வகைவகைக்கும் பலம்கால் கொண்டு
நிச்சயமாய் சந்தனமும் மரமஞ்சள் இரண்டும்
பையாக வகைக்குத்தான் விராகன் ஒன்றேயாகும்
பாங்காக இவையெல்லாம் ஒன்ருய்ச் சேர்த்து
கைபாகந் தவருமல் பதமாய்க் காய்ச்சி
கணக்காகக் கண்ணிலிட்டு முழுகி வந்தால்
பையவே சவுக்கியங்கள் மிகவுண் டாகும்
பக்குவாம யின்னமொரு வியாதி கேளே. (673)

கேளடா சிலருக்கு அப்பாசொல் வேன்
கெடியாக கண்ணுக்கும் நாசிக்குந் தானே
நாளடா இருக்கின்ற துவரா மப்பா
நலமாக அடைத்துவிட்டா லப்பா கேளு
பாழான கண்ணீர்தான் பெருக்குண் டாகும்
பக்குவமாய் அதுதீர வகையைக் கேளு
வளமாக ஆயுதத்தால் சிகிச்சை செய்தால்
வண்மையுள்ள பண்டிதனே தீரும் பாரே. (674)

தீருகின்ற ரந்திரத்தி னடைப்பு நோயை
திறமாகச் சொல்லுகிறேன் திண்மை யாக
ஊறுகின்ற பிறவியாலே இந்நோய் வந்தால்
உத்தமனே தீராது உறுதி மெத்த
மாறுகின்ற தாபத்தால் இந்நோய் வந்தால்
மாந்தருக்கு கண்ணீர்தான் கன்னம் மீது
சீறியே வடிந்துகொண் டிருக்கும் பாரு
செப்புகிறேன் அதைத்தீர்க்க வகைதான் பாரே. (675)

தானன ரந்திரத்தை விசால மாக்க
தன்மையுள்ள சிறுதங்க ஊசி செய்து
மானன ரந்திரத்தை விசாலஞ் செய்து
மகத்தான அதன்வழியாய் கண்ணில் செல்லும்
தேனன குழலுக்குள் அடிக்கடிதான் விட்டு
தெளிவான சோதனையை விடும்போ தப்பா
ஊனன மேல்துவாரந் தனக்கு மேலே
உத்தமனே நேராக விடுவாய் நீயே (676)

விடுவாய்நீ கீழ்துவாரந் தனக்கு அப்பா
விரிவாக கீழுக்கு நேராக விட்டுப்
படுவாய்பின் உள்பக்கம் போகச் செய்து
பக்குவமாய் வளைத்துமே போகச் செய்வாய்
நாளடைவாய் இப்படியே செய்து வந்தால்
நன்மைகள் தான் கொடுக்கு மடா
மாந்தருக்கு நடுவான இன்னமொரு ரோகங் கேளு
நாட்டிலுள்ள மாந்தருக்கு நாடுங் காலே. (677)

## நாசிக்குச் செல்லும் கண்ணீர் குழலடைப்பு.

நாடுகின்ற நாசிக்குச் செல்லும் கண்ணீர்
நலமான குழலடைப்பின் நோயின் நேர்மை
வாடுகின்ற இக்குழலின் உட்சவ்வு தானும்
வளமாகத் தடித்துமே போவ தாலே
தேடியே இந்நோய்தான் காணும் பாரு
தெளிவான திரேகத்தின் சவுக்கியமே தான்
கூடியே இதற்குக் காரணமே யாகும்
கொத்தவனே கண்கூச்சம் கொடுக்கும் பாரே. (678)

கூச்சமுடன் நீருதான் வடியும் பாரு
கொப்பனவே அப்பக்கம் நாசித் துவாரம்
காய்ச்சலாய் உலர்ந்திருக்கும் மூக்கடியில் தோன்றும்
கனமான பையில்தான் நிறவேறும் பாரு
பூச்சியாய் புடைத்துமே கட்டியாய்க் காணும்
பொங்கமாய் அதைமூக்கில் நீருஞ் சீயும்
வறட்சியாய் ரந்திர வழியாய்த் தானே
வகையாக வெளிப்பட்டு வருகும் பாரே. (679)

வெளிப்பட்டு வருகுந்தான் ஒருவேளை யப்பா
வராமல் கீழிறங்கி நாசி தன்னில்
பளிச்சென்று துவாரத்தில் செல்லும் பாரு
பாங்கான இந்நோய்தான் முடிவி லப்பா
புளிச்சென்று புரையைத்தான் வைக்கும் பாரு
பொல்லாத ரோகந்தான் தீரவென் றால்
நளினமாய் ஆயுதத்தால் வேலை செய்தால்
நலமாகும் நாளடைவில் நாட்டி னோர்க்கே. (680)

## கண்ணோய்.

நாட்டோர்க்கும் காணுகின்ற கண்ணோய் நேர்மை
நண்பனே சொல்லுகிறேன் நாடிப் பாரு
வாட்டமில்லாக் கண்ணிமையின் உள்பக்கந் தனில்
வளமான கண்விழியின் முன்பக்கம் தனில்
மூட்டியே மூடிக்கொண் டிருக்கின்ற கஞ்சம்
கடைவாயென்றும்
...............
............... (681)

பேரான இதற்குத்தான் குறியைக் கேளு
பொங்கமுடன் கண்களில்தான் காந்த லுண்டாம்
கூருன சூடுடனே வறட்சி கொள்ளும்
கொற்றவனே கண்ணுரெண்டும் மருவும் பாரு
ஊனுன ரத்தம்போல் கண்சிவக்கும் அப்பா
உத்தமனே அச்சிவப்பு மேலாகத் தானே
காராக இருப்பதினுல் சவ்வை யப்போ
கைபிடித்து அசைத்தாக்கால் சொல்லக் கேளு. (682)

கேளடா நரம்பெல்லாம் சுருண்டி ருக்கும்
கொத்தவனே தாளசையும் குறிப்பாய் பாரு
வாளடா வெளிச்சத்தைப் பார்க்கவொட் டாமல்
வளமாக நீர்கள்தான் வடியும் பாரு
தேளடா அந்நீர்தான் சீயைப் போல்
தெளிவாக இருந்தபின்பு வியாதிகோபித் தாக்கால்
வாளடா தளமாகி ஒட்டிக் கொள்ளும்
வண்மையுடன் வருங்குறிதான் சொல்வேன் பாரு.(691)

சொல்லுகிறேன் கண்ணுக்குள் கல்மண் சென்றால்
கொடிதா யின்னோய்தான் வருகும் பாரு
பல்லுகின்ற சீரணஉறுப்பு விகற்பத் தாலும்
மகத்தான குளிர்காற்று தன்னாலு மப்பா
கெல்லுகின்ற இன்னோய்தான் காணும் பாரு
கெணிதமுட விதுதீர மருந்து சொல்வேன்
துல்லிதமாய் செந்நீர்தான் ஊற்றி வந்தால்
கண்ணோய் தான் சொன்னோம் பாரு. (692)

## சீழைப் பற்றிய கண்ணோய்.

சொன்னதொரு கண்ணோயில் சீழ்க் கண்ணோய்
நேர்மையை சுருக்கமாய்ச் சொல்லுகிறேன் நுணுக்கமாக
அன்னவனே இன்னோய்தான் பெலத்த ரோகம்
அப்பனே இதனுடைய குணத்தைக் கேளு
சென்மித்த நாலைந்து நாளைக் குள்ளே
சிசுவுக்கு இன்னோய்தான் வருவ துண்டு
கண்ணீர்தான் சீப்போலே வடியும் பாரு
கண்டிதமாய் இதுசாரும் விதத்தைக் கேளு. (693)

கேளப்பா தாயுக்கு மேகவெள்ளை காணில்
கணிதமுடன் சிசுவுக்கு இன்னோய் காணும்
நாளடா தந்தைக்குப் பிரமேகமுண் டாகில்
நலமான சிசுவுக்கு இன்னோய் காணும்
வாளடா விஷநீர்தான் கண்ணில் பட்டு
வண்மையுள்ள இமைகள்தான் தடித்துப் போகும்
கேளடா கண்சவ்வு தடித்து மெத்த (694)
தெளிவில்லா சிவப்புடனே கண்மூடிக்கொள்ளும் பாரே.

காணடா கஞ்சங் கடவா யென்றும்
கண்சவ்வு தடித்துமெத்த சிவந்தி ருக்கும்
பூணடா கண்ணீர்தான் சீப்போல் வடியும்
பொல்லாத சுரமுந்தா னனுசரிக்கும் பாரு
வாணடா நித்திரைதான் வாராது கண்டாய்
வளமான ஆணிச்சவ்வு மங்க லாகும்
கோணடா அதில்விரணம் காண்ப துண்டு
கொற்றவனே பின்புஅது அழுகிப் போகும் (695)

அழுகிப்போகும் வியாதிக்கு மருந்து கேளாய்
அப்பனே கண்களைத்தான் கழுவச் செய்வாய்
பழகினதோர் படிக்காரம் பணவிடை தானென்று
பாங்கான அரைக்கால்படி தண்ணீரில் போட்டு
செழிப்பான அந்நீரால் கண்ணைத் தானே
தினமும்நீ கழுவிவரச் செய்வாய் அப்பா
முழுப்பான இமைஇரண்டும் ஒட்டாமல் தான்
முக்கியமாய் விளக்கெண்ணெய் தடவச் செய்வாய்(696)

தடவியே சாக்கிரதையாய் கண்ணை நீக்கி
தக்கதொரு மருந்தீய்ந்து மலத்தைப் போக்கு
கிடைதனிலே இருக்கின்ற ஆளுக் கப்பா
கெணிதமுடன் பலவர்க்க மருந்தை ஈவாய்
கடிதாக பெரியோர்க்கு இன்னோய் காணில்
கஞ்சங் கடவாயென்று சவ்வு மெத்த
தடையின்றி சிவந்துமே தடித் திருக்கும்
தன்மையுள்ள கண்ணீரில் சீழ்வடியும் பாரே. (697)

பாரடா அவ்வேளை கண்க ளப்பா
பரிவாக எரிச்சலுடன் வேதனையுங் காணும்
நாரடா தலைவலியும் சுரமும் கண்டு
நலமான துர்ப்பலமும் கண்டு அப்போ
வாரடா இமைதடித்துப் பிதுவாய்ப் போகும்
வண்மையுள்ள கண்திறக்க சக்தி யில்லை
ஆரடா ஆணிச்சவ்வு புண்ணாய்ப் போகும்
அப்பனே இதுதீர மருந்து கேளு. (698)

மருந்துகேள் கண்ணைத்தான் சுத்தி செய்து
மகத்தான காடிக்காரத் தண்ணீ ரப்பா
அருந்தியே கண்ணில்நீ விட்டு வந்தால்
அப்பனே ரணமதுதான் ஆறிப் போகும்
வருந்தியே ரசக்காரச் செந்தூரக் களிம்பை
வளமாகக் கண்ணிமையில் ஓரந் தன்னில்
திறந்துமே தீட்டியே வந்தா யானல்
திறமாகும் பிலத்துக்கும் மருந்து செய்யே. (699)

## பிரமேகக் கண்ணோய்.

செய்யடா பிரமேகக் கணணோய் நேர்மை
செப்புகிறேன் பிரமேகச் சீழ்தா னப்பா
பையவே கண்ணில்தான் பட்டு இந்நோய்
பாரோர்க்குப் பிறக்குமடா பிலம தாக
உய்யவே விழிஊந்தல் மெத்தக் காணும்
உத்தமனே கண்ணீர்தான் தடித்து விழும்
பையவே சுரமுந்தான் அணுகும் பாரு
பார்வையப்போ விகல்பமாய் போகும் பாரே. (700)

உண்டான வேளையில்தான் சிகிச்சை கேளு
உத்தமனே தாருட்டிய மருந்து செய்வாய்
பண்டான போசனமும் கொடுக்கச் செய்வாய்
பாரோர்க்கு சுகுணங்கள் உண்டாம் பாரு
நண்டான விழிஊந்தல் அதிக மாகில்
நலமான அந்தச்சவ்வை நடுவில் கீறி
சுண்டியதோர் வெந்நீர்தான் ஒத்தடங்கள் செய்து
சுகமாகப் படிக்காரத் தண்ணீர் பீச்சுவாயே. (701)

பீச்சிசுத்தி செய்தபின்பு சொல்லக் கேளாய்
பிலமான காடிக்காரத் தண்ணீ ரப்பா
சூட்சுமமாய் கண்ணில்நீ விட்டு வந்தால்
சுகமாகும் கண்கள்தா னப்போ தப்பா
பாச்சுகின்ற ஏழுச்சி கண்ணோய் முற்றும்
பாடுகிறேன் நீயறியப் பண்பாகக் கேளு
தாட்சண்யம் இல்லாத கண்ட மாலை
தான்வருரும் பேருக்கு இந்நோய் காணுமென்றே. (702)

என்றான குழந்தைகளுக் கின்னே யப்பா
எப்போதும் காணுமடா வழக்க மாக
பன்றான பெரியோர்க்கும் காண்ப துண்டு
பார்வை மெத்தக் கூசுமடா அந்தவேளை
குன்றாத வெளிச்சத்தை பார்க்க வொட்டாது
கூடிய இமைகள் இருக்கும் பாரு
குன்றாகச் சுருங்கியே இருக்கும் பாரு
கூரான கஞ்சங்கடை வாய்ச்சவ்வைப் பாரு. (703)

பாரடா சவ்வோரம் வேர்க்குருவைப் போல்
பதறியே சிறிய கொப்புளங்கள் காணும்
கூறவே இந்நோய்தான் தீர வப்பா
குவலயத்தில் நான்சொல்லும் ரோகிக் கப்பா
நேராக இதுதீர வேணு மென்றால்
நிச்சயமாய் முன்சொன்ன மருந்தைத் தானே
சீராக உள்ளுக்கும் வெளியில் தானே
சிறப்பாகச் செய்துவந்தால் தீரும் தானே. (704)

## அமரம்.

தானான அமரத்தின் நேர்மை கேளு
தனித்தொரு கண்ரப்பை உள்புறந்தா னப்பா
மானாகச் சிவந்துமே தடித்துக் கொண்டு
மகத்தான சதைவளர்ச்சி போலே காணும்
ஊனாக இதற்குத்தான் அமரம் என்பார்
உத்தமனே இந்நோய்தான் நாள்சென்று விட்டால்
மானாகக் கருவிழிதான் மங்கல் ஆகும்
மக்களுக்கு மருந்தொன்று சொல்வேன் கேளே. (705)

கேளப்பா துருசைத்தான் தினந்தோறும் அப்பா
கெடிதாக சதைவளர்ச்சி மேலே தேய்ப்பாய்
வாளடா எரிச்சலுடன் நமைச்சல் தீர
வளமான விளக்கெண்ணெய் தடவச் செய்வாய்
தேளடா நாள்பட்டு ஆறிப் போகும்
தெளிவாக வீக்கமுதல் யாவும் தீரும்
கேளடா படிக்காரப் பத்துப் போட்டால்
பொங்கமுடன் வீக்கங்கள் வற்றிப் போமே. (706)

## சதைப்படர்த்தி.

வத்திடு சதைப்படர்த்தி ரோகங் கேளு
வகையான கடைக்கண்கள் பக்கத்தி லப்பா
நத்தியே யிருக்கின்ற கண்சவ் வப்போ
நலமாகத் தடிப்புடனே சிவந்து போகும்
பத்தியே சதைபோலே வளர்ந்து காட்டும்
பாங்கான முளையப்போ கருவிழி ஓரமாக
சத்தியே வளர்ந்துமே செல்லுகின்ற சுகமாகும்
வியாதிக்குச் சதைவளர்ச்சி என்னும் பேரே. (707)

பேரான இந்நோயால் வருத்த மில்லை
பிலமான சவ்வுதான் கருவிழிமேலே நோக்கில்
கூரான பார்வைதான் மந்த மாகும்
கொற்றவனே கருவிழியின் மேலே கேளாய்
தூரான தூர்மாமிசம் வராமல் தான்
துப்புரவா யிருக்குமட்டும் பயமே யில்லை
மாறுகச் சிகிச்சையுந்தான் தேவை யில்லை
மகத்தான மாங்கிஷந்தான் மேல்நோக்கக் கேளே. (708)

நோக்கியே மாமிசந்தான் விழிமேல் நோக்கில்
நுணுக்கமுள்ள சதையைத்தான் பத்தித் தள்ளி
தாக்கியே துண்டித்து விட்டால் கேளு
தண்மையுள்ள சதைதான் மேல்நோக் காது
தூக்கியே சதைகரையக் காடிக் காரம்
துருசுடனே இவையொன்று தேய்த்து வந்தால்
போக்கியமா யனுகூலம் ஆகும் பாரு
பொல்லாத சதைரோக நேர்மை தானே. (709)

## ஆணிச் சவ்வின் தாபிதம்.

நேர்மையுள்ள ஆணிச் சவ்வின் நோயை
நீயறிய வேணுமென்றால் இன்னும் கேளு
கூர்மையுள்ள அச்சவ்வில் நோயே கண்டால்
கொற்றவனே கருவிழிதான் சிவந்து மங்கும்
கூர்மையாய் சுற்றியிருக்கும் வெள்விழியின் சவ்வில்
குனிதரெத்த நரம்புந்தான் பெருத்து மெத்த
ஓர்மையாய்ப் பரவியே இருக்கும் பாரு
உள்ளதொரு ஆணிச்சவ்வின் புரையில் தானே. (710)

புரையினுட மத்தியிலே சீகொள்வ துண்டு
பொங்கமுடன் அச்சவ்வின் ரணமுங் காணும்
குறைந்து தான் தீர வேண்டில்
கொற்றவனே முன்னலே அட்டை விட்டு
நிறைந்த ரசபற்பத்தை உள்ளுக் கீய்ந்து
நிச்சயமாய் ஒத்தடங்கள் கொடுக்கச் செய்வாய்
விரைந்தஉஷ்ண மருந்துகளைக் கண்ணில் தாக்காமல்
விருப்பமுடன் லகுவான மருந்தைச் செய்யே. (711)

## கண்பூவின் விபரம்.

செய்யடா கண்பூவின் விபரங் கேளு
செயலான கண்பூவில் இரண்டு உண்டு
பையனே ஆணிச்சவ்வின் புரைமத்தியில் கேளு
பக்குவமாய் பசைசுரந்து அப்புரை தன்னில்
ஐயனே ஒட்டிக் கொள்ளுவதாலே இந்த
ஆணியாம் ரோகந்தான் காணும் பாரு
பையவே இதில்காணும் ரோகம் முழுதும்
பக்குவமாய்க் கருவிழியில்மங்கல் காணும் கேளே. (712)

காணுகின்ற மங்கலது அல்ப மாயும்
கனமாகப் பரவியுமே இருந்தால் கேளு
பூணுகின்ற நீர்ப்படலம் என்று பேராம்
பொல்லாத மங்கலப்பா தடித்து மெத்த
ஆணிபோ லுறுதியாய் இருந்தா லப்போ
அய்யனே சுக்கிலப் படல மென்பார்
கோணியே சிலவேளைப் படலந் தன்னில்
கொற்றவனே நரம்புகள்தான் படர்ந்து கேளே. (713)

கேளடா ஆணிச்சவ் வப்போ தப்பா
கெட்டியாய்ச் சதையைப் போலாகும் பாரு
நாளடா அதற்குத்தான் சதைப்படல மென்பார்
நலமான ஆணிச்சவ்வில் ரணந்தான் கண்டு
வாளடா சோஸ்தமாய் விட்டா லப்போ
வண்மையுடன் வடிவுகள்தான் காணும் பாரு
தேளடா அதற்குத்தான் ஆணிப்பூஎன்று சொல்வார்
தெளிவான பெரியம்மை தன்னிற் கேளே. (714)

பெரியம்மை தான்வருகும் வேளை தன்னில்
பெலமான குத்துகள்தான் கண்ணில் கண்டால்
அரிதான இந்நோய்தான் காணும் பாரு
அப்பனே இதற்குத்தான் மருந்து கேளு
உரிதான முதல்சாதி கஷ்ட சாத்தியம்
உத்தமனே மருந்துக்கு வசமு மாகும்
கரியான மற்றொன்று அசாத்தியமே யாகும்
கணணிற்பூ வருவதற்கு மருந்து பாரே. (715)

பாரடா உடம்புதேற உள்ளுக் கப்பா
பண்பான நன்னாரி அயமுதலா யுள்ள
கூரான மருந்துகள்தான் ஈய்வாய் அப்பா
கொற்றவனே கண்ணில்விட மருந்து கேளாய்
சீரான சிற்று மணக்கு முத்தை
செயலாக முலைப்பாலில் இழைத்துப் போட்டால்
வாராகக் கண்புகைச்சல் மாறும் பாரு
வண்மையுடன் இன்னமொரு மருந்து கேளே. (716)

மருந்தான நந்தியாவட்டப்பூ ரசந்தா னென்று
வண்மையுள்ள கிளாப்பூ ரசந்தா னென்று
வருந்தியே ஏதேனு மொன்றை யப்பா
வண்மையுடன் கண்ணில்நீ விட்டுப் பாரு
பொருந்தியே ரசபற்பம் தன்னை யப்பா
பொலிவாகக் கண்ணில் தானூற்றி வந்தால்
பொருந்தியே அனுகூலம் ஆகும் பாரு
பொல்லாத கண்ரோகம் நேருங் காலே. (717)

## க்ஷத சுக்கிலம்.

காலான ஆணிச்சவ்வில் ரணமே கண்டால்
அதற்கு க்ஷத சுக்கில மென்பார்
மாலாக அதற்குத்தான் வழக்கம் போல்
வண்மையுள்ள மருந்துசெய்தால் குணமே யாகும்
தோலான குந்தத்தின் குணமே தென்னில்
தோல்விழியின் முன்புறம் மூன்றுக் கப்பா
செயலாகத் தள்ளிவிடும் சதைக்குத் தான்
செயலான குந்தமென்று சொல்லு வாரே. (718)

சொல்லுவார் வார்த்திக சுக்கில மப்பா
செயலான ஆணிச்சவ்வை சுற்றி யப்பா
துல்லியமாய்க் காணுகின்ற வெள்ளைக்குத் தானே
சுகமான வார்த்திக சுக்கிலமென்று பேராம்
பலவிதமாய் வயதுசென்ற வர்களுக்கே தான்
பாருலுகலிது காணும் வழக்க மப்பா
எல்லையுள்ள வெள்விழியின் ரோகம் நேர்மை
இன்பமுடன் சொல்லுகிறேன் இன்னங் கேளே. (719)

கேளடா கண்ணில்தான் சிவப்பு முண்டு
கெடிதான வேதனையும் மெத்த வாகும்
நாளடா எலும்புதான் குடையும் பாரு
நலமான சுரமுந்தா னுண்டாய்த் தீரும்
வாளடா சிவந்துதான் தோன்று கின்ற
வளமான நரம்புகள்தான் ஆணிச்சவ்வுள்ளும் பாயும்
கேளடா இதுதீர வேணு மென்றால்
கொற்றவனே சொல்லுகிறேன் குறியாய்க் கேளே.(720)

## கிருஷ்ண மண்டல ரோகம்.

குறிப்பாக அட்டைவிட்டு பேதிக் கீவாய்
குணமான இரசபற்பம் கொடுப்பாய் நித்தம்
அரிப்பில்லா இறவுமத்த ஒத்தணமும் செய்வாய்
அய்யனே உறுதியாய்த் தீரும் பாரு
தெறிப்பான கிருஷ்ணமண்டல சவ்வின் ரோகம்
தெளிவாகச் சொல்லுகிறேன் தெரிந்து கொள்வாய்
சிறப்பான வேதனைதான் உள்ளுக்கே தோன்றும்
இருகிருஷ்ண மண்டலச் சவ்வுயிரு பாரே. (721)

மாரியே கிருஷ்ணமண்டலத் துவார மப்பா
மங்கியே விருப்ப மாகத் தோன்றும்
சீரியே பார்வைதான் மந்த மாகும்
சிறப்பாக இதுதீர விபரங் கேளு
கோரியே ரோகியைத்தான் இருளில் வைத்து
கொடுத்திடுவாய் ரசபற்பம் அபினி சேர்த்து
கூரியே அக்கினி பிளாஸ்திரிதான் செய்து
கொற்றவனே கண்பொட்டில் வைத்துக் கட்டே. (722)

கட்டியபின் நீராக வடியும் பாரு
    கடுமையுள்ள சிவப்புமுதல் யாவும் தீரும்
ஒட்டியே பத்தியந்தான் வைப்பாய் நீயும்
    உள்ளபடி தீர்ந்தபின்பு சொல்லுவேன் கேள்
பட்டியே நயனசஞ்சீவி தைலந் தன்னை
    பதருமல் வாரத்துக்கு மூன்றுதரமே யப்பா
கெட்டியாய்த் தப்பாமல் முழுகி வந்தால்
    சிறப்பாகத் தீருமடா திண்ணந் தானே. (723)

## கிருஷ்ண மணி ரோகம்.

திண்ணமாய்க் கிருஷ்ணமணி தன்னி லப்பா
    திரமாக நாலுவித முண்டு பாரு
................ ................ வெண்காரம் இரண்டும்
    தப்பாமல் திறமும் வெண்படலம் இரண்டாம்
உண்மையுள்ள கிருஷ்ணமணி தான் அப்பா
    உத்தமனே மங்கலுடன் வெள்ளை யாமே
பண்டிதனே போகின்ற ரோகத்துக்குத் தானே
    பக்குவமாய்க் காசமென்று சொல்ல லாமே. (724)

சொல்லலாம் இதில்பார்வை தெரியா தப்பா
    சுகமான ரோகந்தான் மெதுவில் தோன்றும்
அல்லல்செய்து முதலில் தானப்பா கேளு
    அரிதான கண்தாரை அதற்குப் பின்னுல்
பல்விதமாய் நீலவர்ணம் தோன்றும் பாரு
    பாழான நோய்தனக்கு கண்முன் னுகச்
செல்லுகின்ற திரைகட்டிக் கொண்டாப் போலே
    சிறப்பாகத் தோன்றுமடா திறமை தானே. (725)

தானுன உபகாசந் தன்னில்
    தரிப்பான பார்வைதான் செம்மை யாக
மானுகத் தோன்றுமடா வியாதி முற்றின்
    மங்கலா யிருக்கின்ற மனித னப்பா
ஊனுன வெள்ளை நிறமாகத் தோன்றும்
    உத்தமனே பார்வைதான் தோன்ரு தப்பா
தேனுன பகலிரவு மட்டுந் தோன்றும்
    தெளிவான வேருென்றும் காணு தன்றே. (726)

காணாத பார்வைக்கு மருந்து கேளாய்
 கடிதான மருந்துகள்தான் உதவா தப்பா
பூணாத காசத்தை சஸ்திரப் பிரயோகத்தால்
 பொங்கமுடன் தானெடுத்தால் பார்வை தோன்றும்
வீணாகப் பலவிதமாய் மருந்து செய்தால்
 விருதாவாய்ப் போகுமடா மருந்து முற்றும்
கோணாமல் நயன சஞ்சீவி மாத்திரை
 குறிப்புடனே செய்துநீ யோட்டு வாயே. (727)

## கண் கூசுதல்.

போடுகின்ற கண்கூசல் நேர்மை கேளு
 பொங்கமுடன் கண்முன்னால் மின்மினிப் பூச்சிபோலே
ஆடியே பறப்பதுபோல் தோன்றும் பாரு
 அய்யனே பார்வை யுந்தான் மந்தமாகும்
ஆடியே வெளிச்சத்தை பார்க்க வொட்டாது
 அய்யனே சிறியதொரு எழுத்தைப் பார்த்தால்
வாடியே கண்கலங்கிச் சிறுத்துக் கொள்ளும்
 வளமான இக்குறிகள் காணும் பாரே. (728)

பாரடா இந்நோய்தான் உண்டாகும் நேர்மைகேளு
 பக்குவமாய் ஸ்திரீபோகம் சிறுஎழுத்தைப் பார்ப்பதாலும்
சீரடா உட்கார்ந்து வெகுநேரந் தானும்
 சிறப்பாக எழுதுவதி னாலு மப்பா
கூரடா சிறுஎழுத்தை எக்காலந் தன்னில்
 குறிப்பாகப் பார்ப்பதி னாலு மப்பா
நேராக இந்நோய்தான் பிறக்கு தென்று
 நிச்சயமாய் நீயறியச் சொன்னேன் பாரே. (729)

சொன்னேன் பார் வியாதியது அற்பமாக
 சுருக்காகத் தோன்றிட்டால் அய்யா கேளு
மன்னவனே ரோகியைத்தான் கொஞ்ச நேரம்
 மகத்தான கண்களைத்தான் மூடிக்கொள்ளச் செய்வாய்
பின்னாலே பார்த்தாக்கால் சரியாய்த் தோன்றும்
 பால்யமுதல் இந்நோய்தான் இருக்கு மாகில்
உன்னிதமாய் மருந்துகளைக் கொடுத்துப் பின்பு
 உத்தமனே திரேகத்தை வலுக்கச் செய்யே. (730)

செய்தாக்கால் ரோகந்தான் தீரு மப்பா
செயலான சகஸ்திரதாரா அஞ்சனம் செய்துகொண்டு
பையவே கண்களில்தான் தீட்டச் சொல்லு
பக்குவமாய் கண்ணுக்கு குளிர்ந்தசலம் தானப்பா
தொய்யவே தாரைதான் விடுவா யப்பா
தொல்லுலகில் இப்படியே செய்து வந்தால்
ஐயமில்லை ரோகந்தான் தீரும் சொன்னேன்
அப்பனே விழிகள் குருடு கேளே. (731)

## விழி கண் குருடு.

விழியான கண்குருடு சொல்லக் கேளு
விதமான நேத்திரத்தின் நரம்புக் கேனும்
பழியான மூளைதனக் கேனு மப்பா
பின்பாக வியாதி கொண்டிருந்த ரோகம்
செழிப்பாகக் காணும்என்று சொல்வாய் நீயும்
செயலாக இதற்குத்தான் திமிர மென்பார்
சுழியான பார்வைதான் சுத்தமாகத் தோற்ருது
மாந்தருக்குத் தோன்றுங் காலே. (732)

தோற்றுகிற வேளைதனில் கண் தானப்பா
சுகமாக இருப்பதுபோல் தோன்றும் பாரு
ஊன்றியே கண்ணைத்தான் திறந்து கொண்டு
உத்தமனே மேலாகப் பார்ப்பான் பாரு
தான்றியே கண்தாரை விருத் திருக்கும்
தீராது இக்குறிதான் தரணி யோர்க்கு
ஆன்றியே அல்ப காரணத்தால் வந்தால்
அப்பனே அவிழ்தத்தால் குணம தாமே. (733)

ஆமடா சிலருக்கு ரோகங் கண்டு
அப்பனே மருந்துகள்தான் கொடுத்திட் டாலும்
ஓமடா தீராது இந்த ரோகம்
உறுதியாய்ப் போகுமடா திரேகந் தானும்
நாமடா நரம்பு துர்பெலத்தால் கண்டால்
நலமான அயமுதல் சமுத்திரஸ்நானம் செய்தால்
போமடா இந்தநோய் குரு கடாட்சத்தால்
பொங்கமுடன் தீரு மென்று செப்பலாமே. (734)

## மாலைக்கண் விபரம்.

செப்புகிறேன் மாலைக்கண் தன்மை தன்னை
திரமாகப் பகலில்தான் கண் தெரியும்பாரு
கப்பான மாலைதனில் கண் தானப்பா
காணுது சுத்தமாய்த் தெரிந்து கொள்ளு
இப்புவியில் காணுகின்ற திமிர ரோகம்
இதைப்போலத் தானிருக்கு மினிய தாக
ஒப்பாகத் திமிரநோய் தனக்குச் செய்யும்
ஒழுங்காக மருந்துகளைச் செய்தால் போமே. (735)

## கிட்டத்துப் பார்வை.

போமடா கிட்டத்தின் பார்வை ரோகம்
கெணிகமுடன் சொல்லுகிறேன் குரு கடாட்சத்தாலே
ஆமடா ஆணிச் சவ்வான தப்பா
அளவுக்கு மிஞ்சியே அதிக மாக
ஓமடா முன்னுக்கு வளைந் திருந்தால்
உத்தமனே அக்ஷரத்தைக் கிட்டே தானே
நாமடா பார்த்தாக்கால் தெரியு மல்லால்
நலமான தூரத்தில் தெரியா தென்றே. (736)

அன்னை இதுசென்ம வியாதி யாகில்
அப்பனே பால்யமுதல் எழுத்தைத் தானே
நன்றான தூரத்தில் இருந்து பார்க்க
நலமான பழக்கங்கள் செய்து வைப்பாய்
பண்டாக இதற்கோர் உபசமனங் கேளு
பளிங்காக இருபுறமும் பள்ள மாக
நன்றாக இருக்கின்ற கண்ணாடியைத் தானே
நலமாகப் போட்டுவந்தால் தெரியும் பாரே. (737)

## தூரப்பார்வை – சாளேஸ்வரம்.

பாரடா சாளேசுர ரோகங் கேளு
பரிவான கண்ணில்தான் நீர்தான் வற்றி
ஆமடா ஆணிச்சவ் வுள்ளடங்கிப் போவதாலே
அப்பனே இந்தநோய் உண்டாம் பாரு
நாரடா இதுவப்பா நாற்பதுக்கு மேலே
நலமாகத் தோன்றுமென்று குருவே சொன்னர்
கூறடா கிட்டத்தின் பார்வை யப்பா
குறிப்பாகத் தெரியா திவர்க்குத் தானே. (738)

## அடைக் கண்.

தானான அடைக்கண் தன்மை கேளு
    தன்மையுள்ள கண்ணடைகள் ஒன்றோ டொன்று
ஊனாக ஒட்டியே கொண்டிருக் கின்ற
    உள்ளதொரு கண்ணுக்கு அடைக்கண் என்பார்
தேனாக இதுஜன்ம வியாதி யாகில்
    தெரிந்துமே பாகைகளைக்தான் கீறி விட்டு
கோனாக ஆத்தியே விட்டு விட்டால்
    கொத்தவனே குணமாகுங் குறிதான் பாரே. (739)

## நேத்ர வாயு.

குறியான நேத்ரவாய்வு தன்னைக் கேளு
    குணமான கண்ரப்பை அசைவு தானற்று
சரியாகக் கண்ணையே மூடிக் கொண்டு
    செப்பமுடன் திறக்காமல் செய்கின்ற
முறியான ரோகந்தான் நேத்திரவாய் வென்பார்
    முக்கியமாய் சகலருக்கு சன்னி தன்னில்
சரியாக யிருக்குமடா அசைவுதான் அற்று
    சடிதமுடன் தீர்ந்திடவே மருந்து கேளே. (740)

கேளடா தலைநோய் கிறு கிறுப்பு
    கெணிதமுடன் இத்துடனே கலந்து கொண்டால்
நாளடா ரத்தத்தை எடுக்கச் செய்து
    நலமாக வாந்திக்குக் கொடுப்பாய் நீயும்
வாளடா ரசபற்பம் கொடுத்தா யானால்
    வண்மையுள்ள வாயெல்லாம் புண்ணே யாகும்
நீளடா நேத்திரத்தின் வாயு வெல்லாம்
    நிச்சயமாய்த் தீருமடா நேத்திர வாய்வே. (741)

## அரைக் கண்.

வாய்வான அரைக்கண் நோயைச் சொல்லக்கேளு
    வண்மையுள்ள கண்ணைத்தான் வழக்க மாக
பாய்வாக மூடாமல் செய்கின்ற
    பழிகார நோவுக்கு அரைக்கண் என்பார்
சாய்வான இந்நோய்தான் காய்த்தாலும்
    சரியான வியாதியாலும் காணும் பாரு
ஓய்வாக நேத்திரநோய் தனக்குச் செய்யும்
    உள்ளதொரு மருந்தினை யிதற்குச் செய்யே. (742)

செய்யடா இளிச்ச கண்ணதனைக் கேளு
　　செயலான கண்ணிமைதான் வெளிக்கு
பையவே திரும்பி வருதலுக்கு பக்குவமாய்
　　இளிச்ச கண்ணென்று தானப்பா சொல்வார்
தொய்யவே இதுநேரும் விபரங் கேளு
　　தோலான இமையோரம் சுருங்கக் காணில்
அய்யமில்லா கண்மடலின் உட்சவ் வப்பா
　　அடியோடே தடிக்குமடா இன்னங் கேளே. (743)

இன்னங்கேள் இமைமுருந்து சுருக்க மாகில்
　　இன்பமுள்ள இமைமயிரு அதிகமாக
உன்னிதமாய் வளர்ந்திருக்கில் இந்தநோய் தான்
　　உத்தமனே காணுமென் றுறுதி சொல்லு
பன்னயமாய் இதுதீர விபரங் கேளு
　　பண்டிதனே இமையோரம் சுருங்கக் கண்டால்
நன்னயமாய்க் கண்மடலை அதன்மூலை ரண்டில்
　　நலமாக குறுக்கில்தான் வெட்டு வாயே. (744)

வெட்டுவாய் மடலோரந் தன்னை யப்பா
　　வெளியான இமையினுட ரோமத் தோடு
கட்டியே சீவி எடுத்தே யேனும்
　　களங்கமறச் செய்திட்டால் வியாதி போகும்
வட்டமுள்ள உட்சக்கண் மடலின் உட்சவ்வுக்கப்பா
　　வளமான தப்புகள்தான் கண்ட தானல்
சட்டமுடன் இரத்தம்வரக் கீறிப் பின்பு
　　சதிரான துவர்மருந்து கண்ணில் போடே. (745)

கண்ணான கீழ்தளத்தில் கன்னத்தின் தோல்
　　கதிமடிப்பு விழுந்து இந்தரோகங் காணில்
புண்ணான கண்மடலில் உள்ள தோலில்
　　புனிதமுடன் ஒருதுண்டை அலுக்கச் செய்வாய்
ஒன்ருன ஓரங்கள் இரண்டுங் கூட்டி
　　உத்தமனே தைத்து விட்டா லப்போ
திண்ணமாய் தீருமடா இந்த ரோகம்
　　தீருகின்ற இமைரோகத் தன்மை கேளே. (746)

இமைரோகம் உள்ளுக்கு வளர்ந் திருந்தால்
இன்பமுள்ள கண்கஃளத்தான் எரித் தென்னேரம்
தன்மையாய் நீர்வடியச் செய்யும் பாரு
கடினமாய் நாள்பட்டால் சொல்லக் கேளு
சுமையான கருவிழிதான் மங்கலாகி
சுத்தமுள்ள பார்வையுந்தான் மந்தமாகும்
அமைவாக இதுதீர வேணுமென்ருல்
அப்பனே ரோமத்தைப் பிடுங்கச் செய்யே. (747)

பிடுங்கியுந் தீராவிட்டால் சொல்லக் கேளு
பெலமாக அதன்வேரைச் சிறுகத்தி யாலே
கடுமையாய்க் கீறியே எடுத்து விட்டுக்
காடிஎன்ற காரத்தால் தேய்த்து விட்டால்
அடங்கியே போகுமடா இந்த ரோகம்
அப்பனே இதுவிபரம் தெரியாமல் தான்
குடங்குடமாய்த் தைலத்தை வாங்கிக் கொண்டு
கொத்தவனே முழுகுவார் கூட்டித் தானே. (748)

## புழுவெட்டு.

கூடியே புழுவெட்டு நேர்மை கேளு
குணமான கண்ணிமையின் வரம்புக் கப்பா
ஆடியே வருகின்ற ரோமத்துக்கு
அப்பனே புழுவெட்டு என்று சொல்வார்
நாடியே தூக்கத்தில் பிஃள கேளு
நலமாக சுரந்துமே இமைகள் தன்னில்
சாடியே ஒடிக்கொண் டிருக்கும் பாரு
சதிரான கண்இரண்டும் திறக்கொட் டாதே. (749)

திறக்காமல் வியாதி தானதிக மாகில்
திறமாக வேதஃனயு மெரிச்ச லுண்டாம்
பறக்காமல் நமைச்சலுங் காண்ப துண்டு
பண்டிதனே இமையோரம் ரணமே யாகும்
சிற்புடனே ரோமக்கால் நைந்து காயாது
சிலருக்கு வரம்பு வீங்கி உள்ளுக்கேதான்
குறிப்பாக சுருட்டியே கொள்வ துண்டு
கொற்றவனே இதுதீர மருந்து கேளே. (750)

கேளடா முதலில்தான் ரோகிக் கப்பா
கெணிதமுடன் பேதிக்குக் கொடுத்த பின்பு
நாளடா வீரமுடன் பாஷாண மேனும்
நலமுடனே நன்னாரி அயமே யேனும்
வாளடா உள்ளுக்குக் கொடுத்து வந்தால்
வளமான திரேகந்தான் நிவர்த்திக்கும் பாரு
பாளடா பன்றியுட நெய்யைத் தானே
பண்பாக இரவில்தான் சொல்லக் கேளு. (751)

சொல்லுகிறேன் இரவில்தான் தூங்கும் போது
சுகமானமுன் நெய்யை இமையின் மீது
துல்லியமாய்த் தடவியே வந்தா யானால்
தூக்கத்தில் ஒட்டாது குணமே யாகும்
வெல்லுகின்ற படிக்காரத் தண்ணீரைத் தான்
விதமாக வாலையிட்டு வந்தாலுந் தான்
தொல்லையுள்ள இந்தநோய் தீரு மென்றே
தோற்றியே உந்தனுக்கு உரைத்தேன் நானே. (752)

## செவி ரோகம்.

உரைத்தீரே புலத்தியனே எந்தனுக்கு
உள்ளபடி சொல்லுவீர் முகம்பல் நாசி
விரைந்த செவிரோகம் முதல் மற்றுமுள்ள
விரிவான மேகமுதல் ஜன்னி முற்றும்
பரந்த அண்டநோய் முதலாய் மூலரோகம்
பண்பான கோசத்தின் ரோகம் முற்றும்
சிறந்ததொரு திரேகத்தின் அங்க மெல்லாம்
சிறப்பாக நானறிய செப்புவீரே. (753)

செப்புகிறேன் செவியுனுட நேர்மை கேளு
சேலான வெளிக்காது உட்காதென்றும்
ஒப்பாக மூன்றுவிதம் பிரிவே யுண்டு
ஒயிலான காதுமடல் துவாரம் சேர்ந்து
இப்புவியில் வெளிக்காது என்றும்
இயல்பாக இதன்விபரம் சொல்லக் கேளு
மெப்பிதமாய் முருந்தாகுல ஏற்பட்டு வாழும்
மகிமையுட காதுமடல் தன்னைப் பாரே. (754)

பாரடா மேடுபள்ள மாகத் தோன்றும்
    பக்குவமாய் காதினுட மடலின் கீழே
நேராகத் தொங்கிக் கொண் டிருக்கின்ற
    நீமிருதுவான தோல் தனக்குக் கேளு
காரடா சோனைக் காதென்றும் பேராம்
    பக்குவமாய் காதினுட துவார மய்யா
சீராக விரல்கடைதான் சொல்லக் கேளு
    சிறப்பாகக் கொஞ்சம் வளைந்திருக்கும் பாரே. (755)

பாரடா ரோமங்கள் தானும் உண்டு
    பக்குவமாய் குரும்பியும் சுரக்கும் பாரு
கூரான குறும்பையுட ரோகந் தானும்
    குடிகெடுத்த கிருமிமுதல் தூசி முற்றும்
நேராகப் போகாமல் செய்யும் பாரு
    நிச்சயமாய் காதுக்குள் சொல்வேன் பாரு
சீரான அண்ட வடிவான சவ்வு
    சிறப்பான உட்சவ்வாய்த் தோன்றுங் கேளே. (756)

தோன்றுகின்ற நடுக்காது விபரங் கேளாய்
    தொங்குகின்ற காதினுட உட்சவ்வுக்குப் பின்னாலே
ஊன்றியே இருக்கிற ஸ்தானத்திற்கு உள்ளபடி
    நடுக்காது என்றும் பேராம்
ஆளியே இதன்குணத்தைச் சொல்லக் கேள்நீ
    அப்பனே அதில்கீத்துக் கொண்டிருக்கும் பாரு
மூன்றான எலும்புகள் கோர்வை யாக
    முக்கியமாய்ச் சேர்ந்துதான் இருக்கும் தானே. (757)

தானாக அவைகள்தான் சுத்தியல் போல்
    தாங்கியே இருப்பதால் சுத்தியல் எலும்பு என்றும் பேராய்
பானைப் பட்டையைப் போல் இருப்பதற்கு
    பட்டடையின் எலும்பென்றும் சொல்ல லாகும்
ஊனாக அங்கமடி போலிருப்ப தற்கு
    உள்ளதொரு அங்கமடி எலும் பென்றும்
தேனான நடுக்காதுக்குள் ளிருந்தப்பா
    தெளிவாக இரண்டங்குலந்தான் கேளே. (758)

கேளடா பாங்கான பையைப் போலொத்த
குழலொன்று தொண்டைக்குள் செல்லும் பாரு
நாளடா அதன்வழியாய் காத்து தானும்
நலமாகப் போகவர இருக்கும் பாரு
வாளடா வியாதியால் குரல்தான் கேளு
வண்மையுடன் அடைத்துமே போனலப்போ
தேளடா கேள்விதான் கேட்கா தப்பா
திறமான உட்காது விபரங் கேளே. (759)

உட்காதை கவனித்துப் பார்த்தா யானல்
உள்ளபடி ஒருபள்ளம் இருக்கும் பாரு
முட்போலே மூன்றுவளைந்த குரல்தா னுண்டு
முகிந்தநத்தை யோடுபோல் ஒருஎலும்பு காணும்
பட்டியுள்ள பள்ளத்து வழி யென்றும்
பரிவுடனே வளைந்த குழந்தைக்குக் கேளு
திட்டமான திரிதடங்கள் என்றும் பேராம்
திறமான நத்தையுட ஓட்டுக் குள்ளே. (760)

நத்தையுட ஒட்டெலும்பு தனக்கு அப்பா
நலமான கம்புஎன்று சொல்வார் காணு
நத்தையுட ஓட்டுக்குள் ஜலம்தா னப்பா
நலமாக நிறைந்துமே இருக்கும் பாரு
சத்தியமாய் சலத்தின் மீது தானே
சதிராக கேள்வியுட நரம்பு தன்னில்
பத்தியுள்ள கிளைகள்தான் இருந்து கொண்டு
பண்பாக இருக்குதென்று பகர்ந்தேன் பாரே. (761)

பாரே சுந்தரனே சொல்லக் கேளாய்
பண்பான குழந்தைகட்குக் காதில் தானே
சீராகச் சிலதுக்குச் சீவடியும் பாரே
சிறப்பான மாயஅசௌக்கியத்தால் உண்டாம் சொன்னேன்
மாரான காப்புனுட சிரங்கு தானும்
வந்தாக்கால் குழந்தைகள்தான் பெலங்கெட்டுப் போகும்
தேருகக் குழந்தைகட்கு சீக்காதை யப்போ
தெளிவாக வருமென்று செப்பு வேனே. (762)

செப்புகிறேன் இதுதீர மருந்து கேளாய்
செயலான செவிதனை வெந்நீர் தன்னில்
ஒப்பாகக் கழுவியதை படிக்காரத் தண்ணீர்
உள்ளபடி தான்விட்டுக் கொஞ்ச நேரம்
இப்படியாகப் பத்துநாள் செய்து வந்தால்
இன்பமுள்ள காதுதான் தெளியும் பாரு
கெர்ப்புள்ள பூவினத்தின் பழத்தைத் தானே
குணமான நல்லெண்ணெய்விட்டுக் காய்ச்சி ஊத்தே.

## காதெழுச்சி.

ஊத்தடா காதெழுச்சி ரோகங் கேளு
உள்ளபடி காதில்தான் துர்மாமிசம் உண்டாம்
மாத்தாக இதற்குத்தான் காதெழுச்சி என்பார்
மகத்தான சீயுந்தான் வடியும் பாரு
சித்தாக வளருகிற துர் மாமிசத்தை
சிறப்பாகக் குறட்டதனால் பிடுங்கி விட்டு
காத்தான படிக்காரச் சலந் தன்னாலே
கழுவியபின் காடியுட காரந் தானே. (764)

காடிக்காரந் தனையெடுத்து சதையின் வேரின்
கடினமாய் வைத்துநீ தேய்க்கச் செய்வாய்
வாடியே போகுமடா எழுச்சி ரோகம்
வளமாகச் செய்யாவிட்டால் கிளைக்கும் பாரு
தேடியே வளருகின்ற காதின் ரோகம்
தெளிவாக இன்னமொன்று செப்பக் கேளு
ஓடியே போகின்ற குளிர்ச்சி யாலும்
உள்ளபடி பலவந்தம் தன்னால் கேளே. (765)

தன்னாலே காதில்தான் நோய் உண்டாகும்
தனித்ததொரு காதில்தான் குத்துண் டாகும்
முன்னாலே சொன்னபடி சுரமுண் டாகும்
முக்கியமாய்க் காதில்தான் சத்தமுண் டாகும்
பின்னாலே கேள்விதான் மந்த மாகும்
பிரிவான முதல்காது சிவந்து வீங்கி
சொன்னேனே வேதனையோடு வர்த்திக்கும்
சுருக்காகக் காதில்தான் சீயுண்டாமே. (766)

ஆமடா இதுதீர மருந்து கேளாய்
அப்பனே வெந்நீரால் ஒத்தணமே செய்வாய்
நாமடா வாந்திக்குக் கொடுப்பாய் நீயும்
நலமாகச் செய்துவந்தால் தீரும் பாரு
ஓமடா மருள்மஞ்சி தந்து நீயும்
உத்தமனே திருகியதைப் பிழிந்து கொண்டு
போமடா பெருங்காயம் உள்ளே வைத்து
பொங்கமுடன் மூடியதைத் தீயில் வாட்டே. (767)

வாட்டியே வெந்தபின்பு சொல்லக் கேளு
வகையாக நோயாளி காதி லப்பா
ஊட்டியே பிழிந்துதான் படுக்க வைத்து
உள்ளபடி பஞ்சுதனை அடைப்பாய் நீயும்
சாட்டியந்தான் போகுமடா தினமே இரண்டில்
சற்குருவின் கடாட்சத்தால் தீரும் சொன்னேன்
தாஷ்டியமாய் காதுவலி ரோகம் கேளு
தானறியச் சொல்லுகிறேன் தன்மை பாரே. (768)

தன்மையுள்ள காதுவலி வந்த தானல்
சகிக்காத வேதனைதான் செய்யும் பாரு
சென்னிக்கும் முகத்துக்கும் வேதனையே போகும்
சீராகச் சுரமுந்தான் வருகும் பாரு
பன்னிதமாய் சொத்தைப்பல் தன்ற லப்பா
பாரினிலே காதுவலி உண்டாம் பாரு
உன்னிதமாய்ப் பல்லைப் பிடுங்கி விட்டால்
உத்தமனே காதுவலி ஓடிப் போமே. (769)

ஓடியே போவதற்கு மருந்து கேளு
உள்ளபடி சொல்லுகிறேன் வெள்ளைப் பூண்டு
சாடியே ரசம்விட்டுப் பஞ்சால் மூடு
தடித்ததொரு காதுவலி தானே தீரும்
மூடியாம் தேங்காயின் எண்ணெய் தன்னில்
முக்கியமாய் அபினியைப் போட்டுக் காய்ச்சி
ஆட்டியே விட்டுவிட்டால் காதின் நோய்தான்
அப்போதே தீருமடா அவனி யோர்க்கே. (770)

## காது செவிடு.

அவனிதனில் செவி செவிடுரோகம் கேளு
அப்பனே அனேக காரணத்தால்க் காணும்
பவனிபெரும் உட்சவ்வு தடித்துப் போனால்
பாங்கான சவ்வுதான் கிழிந்தே யேனும்
குவலயத்தில் காதில்தான் குறும்பி தானும்
கொப்பனவே அதிகமாய்ச் சேர்ந்தாலுந் தான்
நவரசமும் அறிகின்ற நடுக்காதிலிருந்து கேளு
நன்மையுடன் தொண்டைக்குள் செல்லும்குழல் தான்கேளு. (771)

செல்லுகின்ற குழல்பை கசத்தியத் தாலும்
சிறப்பாக வேறுவித காரணத்தி னாலும்
மெல்லிதமாய் அடைந்துவிட்டால் காது தானும்
மெதுவாகப் போகுமடா உலகத் தோர்க்கு
பல்விதமாய் மூளையுடன் நடுக்காது உள்காது
பல்தனிலே கேள்வியுட நரம்புக் கப்பா
தொல்லையுள்ள நோய்கண்டு இவ்வியாதி வந்தால்
தீராது என்றுநீ திறமாய்ச் சொல்லு. (772)

சொல்லுகிறேன் சிரசினுட நேர்மை முற்றும்
சுருக்கமாய் நீயறியத் திறமாய்க் கேளு
பல்வகையாய் சிரசிற்குன் நரம்பு முண்டு
பார்அவற்றில் மிகச்சிறந்த நரம்பு மூன்றும்
நல்வினைசெய் இந்திரிய நரம்பு ஒன்றும்
நலமான சலனத்தின் நரம்பு ஒன்றும்
தொல்வினைசெய் ஒற்றுணர்வு நரம்பு ஒன்றும்
தோகையர்க்கும் இப்படியே இருக்கு தென்றே. (773)

இருக்கின்ற இந்திரியநரம்பு குணமே தென்னில்
இதமான மெய்வாய்கண் மூக்குச்செவி தானென்றும்
பறக்கின்ற பஞ்சேந்திரியந் தனக்குச் சென்று
சப்தபரிச ரூபரச கந்தசப்த மென்றும்
திறக்கின்ற ஐம்புலனைத் தெரிவிக்கும் பாரு
தெளிவான சலனநரம்பு குணமே தென்னில்
பறக்கின்ற சதைகளைத்தான் மனதுக்கு ஏற்றபடியே
மகிழ்ச்சியுடன் ஆட்டிவைக்கும் மகிமை பாரே. (774)

மகிமையுள்ள ஒற்றுணர்வு நரம்புக்குணமே தென்னில்
மகத்தான உறுப்புகளை ஒன்றோ டொன்று
முகித்துமே சம்பந்தப் படுத்தி வைக்கும்
மூளைக்குள் தானித்து முக்கிய மாகச்
சகிக்கின்ற நவசதையின் நரம்பு அப்பா
சனிக்குதடா அனைவர்க்கும் உண்மையாக
பகுத்தறிய ஒவ்வொன்றின் பேரைக் கேளு
பக்குவமாம் வாசனையின் நரம்பு ஒன்றும். (775)

ஒன்றான பார்வையுட நரம்பு ஒன்றும்
உத்தமனே கண்ணினுட குழிக்குச் செல்லும்
பன்றான நரம்புகள் தானிரண்டே யாகும்
பார்தனிலே சிரசுநீள நரம்புக் குள்ளே
அன்றாகப் பெருநரம்பு இருக்கு தப்பா
அப்பனே அதற்குத்தான் கிளைகள் மூன்றும்
கன்றான கண்சதைக்குப் பரவும்நரம்பு ஒன்றும்
காதுதனில் செல்லுகின்ற நரம்பு ஒன்றும் (776)

நரம்பப்பா தொண்டை முதல் யாவற்றுக்கும்
நேராகச் செல்லுகின்ற நரம்பொன்றே கேளு
உரமாக ஒவ்வொன்றின் குணத்தை முற்றும்
உள்ளபடி நீயறிய உரைப்பேன் கேளு
சரம்போன்ற வாசனைநரம்பு குணத்தைக் கேளு
சத்குருவின் கடாக்ஷந்தான் சாத்து வேனே. (777)

சாற்றுவேன் ஆக்ராண நாசிநரம்பு அப்பா
சதிரான மூளையில்தான் செனித்த பின்பு
போற்றியே மூன்றுக்கு நாசி மேலே
புகழாக வந்துமே கிளைகளாக
ஆற்றியே பிரிந்துமே அக்கிளைக ளப்பா
அழகான சல்லடையிக் கண்களில் சென்று
ஊற்றியே சளிஊறும் சவ்வின் மேலே
உள்ளபடி வியாபித்து ஓடும் பாரே. (778)

ஓடுகின்ற பார்வை நரம்பின் தன்மை
உள்ளபடி சொல்லுகிறேன் உறுதியாக
நாடுகின்ற அந்நரம்பு மூளை தன்னில்
நலமாகச் செனித்துமே முன்னதாக
வாடியேவந்து அவ்வவ் வெலும்பு மீது
வலநரம்பு இடமாகச் செல்லும் பாரு
தேடியே இடநரம்பு வலமதாக
திறமாக மாறியே சென்று கேளே. (779)

மாறியே நேத்திரத்தின் நரம்பு துவாரத்தின்
வழியாக நேத்திரக்குழிக் குள்ளேசென்று பின்னால்
ஊறியே விழிக்குள்ளே புகுந்துமே தான்
உத்தமனே மலர்ந்து வரும் உறுதியாக
தேறியே மலர்ந்ததொரு சவ்வுக் கப்பா
தெளிவாக ரூபஉற்பதி சவ்வு என்றும்
கோரியே போதற்குச் சொல்வார் பாரு
கொத்தவனே அதற்குஇன்னும் சொல்லக் கேளே (780)

கேளடா மூளைக்குள் தானிருந்து
கெணிதமுடன் இருநரம்புந் தோற்றமாகி
நாளடா அவைகள்தான் முன்னே வந்து
நலமாக ஓர்நரம்பு கண்குறிக்குட் சென்று
வாளடா சதைக்குள்தான் பரவிக் கொள்ளும்
வகையான மற்றொரு நரம்பு கேளு
தேளடா முன்னரம்பு வழியாய்ச் சென்று
தெளிவாக இதுவும் கண்சதைக்குப் போமே. (781)

போமடா சிரசினுட பெருநரம்பு தான்
பொங்கமுடன் மூன்றுகிளையாய்ப் பிரிந்தி ருக்கும்
நாமடா அதனின்றுதான் ஓர் நரம்பு
நலமாக முன்னுக்கு வந்த பின்பு
ஓமடா கண்குழிக்குள் செல்லும் கேளு
உத்தமனே புருவத்தின் உள்முனை வழியாய்
நேமடா நெற்றிவரை ஏறிக் கொண்டு
நிர்மலமாய்ப் பரவிவிடும் நிசமதாமே. (782)

நிசமாக மற்ருென்று பெருநரம்பில் உண்டாய்
நிச்சயமாய் கண்குழிக்கு அடியில் தோன்றும்
கிசமாக நீண்டிருக்கும் துவாரந் தன்னில்
கீழாக ஓடியே முகந் தனக்கு
துசமாக வந்துமே மேல்வாய் பற்கள்
துய்ய அண்ணம்கன்னம் மேலுதடு என்றும்
கசமாக கண்ணின் கீழ்ரப்பை மற்றும்
கண்டத்தில் வியாபித்து ஓடும் பாரே. (783)

ஓடிய தலைநரம்பின் பெருநரம்பில் தான்
உள்ளபடி இன்னுமொரு நரம்பு தோன்றி
நாடியே கீழ்வாய்ப் பற்களுக்கும் இன்னும்
நலமான ஈறுமுகம் காது நாக்கு
தேடியே மெல்லுகின்ற கீழ் தாடைக்கும்
தெளிவாகச் சதைகள்முதல் போய்ப் பரவி
ஆடியே இக்கிளையில் இரண்டு பிரிவுண்டு
அப்பனே அதன்விபரம் அறைகு வேனே. (784)

அறைகிறேன் ஒன்று கீழ்தாடைக்குள்
அப்பனே ஓடியேதான் உள்ளே சென்று
சிறையான முகரைக்கு அருகில் தானே
சிற்பனமா யிருக்கின்ற துவாரந் தன்னில்
நிறையாக வந்துமே வெளியே தோன்றும்
நிச்சயமாய் அதன்கிளைகள் பல்லுக்கும் ஈறுக்கும்
பறையான மற்ருென்று நாக்கில் சென்று
பக்குவமாய் வேலைசெய்து வாழும் பாரே. (785)

பாரடா கண்சதைக்குப் பாவுகின்ற
பக்குவமாய் உள்ளஒரு நரம்பே யுண்டாம்
நேரடா காதுக்குச் செல்லுகின்ற
நிசமான நரம்பிரண்டு சொல்லக் கேளு
நாரடா ஒருநரம்பு காதினுள் சென்று
நலமாக உள்ளுக்கு வந்தே தான்
வாரடா இரந்திர மார்க்க மாக
வகையாக வெளிக்குமே வந்து கேளே. (786)

வெளிவந்து முகத்திடம் பரவும் பாரு
 வேறான கேள்வியுட நரம்பு கேளாய்
துளியாக காதுக்குள் சென்று பல
 துய்யகிளை களாய்ப்பிரிந்து அவ்விடந் தன்னில்
பளியான அறைகளுக் குள்ளிருக் கின்ற
 பாரோட்டின் நீர்மீது மிதந்து கொண்டு
சுளிவான கேள்விகளை கேட்கச் செய்யும்
 சுத்தமுடன் இன்னமொரு விபரங் கேளே. (787)

விபரமுடன் இன்னமொரு நரம்பு கேளு
 வீரான அந்தர்க்கத நாளஞ் செல்லும்
துவாரத்தின் வழியாக வெளிக்கு வந்து
 தொண்டையுடன் நாவுக்குச் செல்லும் பாரு
தவம்செய்யும் மயில்வேக நரம்பு அப்பா
 தப்பாமல் முன்துவாரம் வழியாய் வந்து
சிவமான கண்டத்தின் நாடிநாளம் சேர்ந்துமே
 நெஞ்சறைக்கும் செல்லும் பாரே. (788)

நெஞ்சறையில் தானிறங்கி புப்புசம் தொண்டை
 நிசமான குரல்வளைக்கு சுவாசக் குழலுக்குந்தான்
தஞ்சமுள்ள இருதயம் தீனிப் பைக்கும்
 தானாகச் செல்லுமடா தன்மையாக
வஞ்சமிலா மற்றொரு நரம்பு அப்பா
 வகையாகப் பிடரியின் சதை தனக்கு
துஞ்சாக வியாபித்துத் தேகந் தன்னை
 துப்புரவாய் வளர்க்குமடா நேர்மை தானே. (789)

## மூளை.

தானான மூளையுட விபரங் கேளு
 தனியாகச் சிரசுக்குள் நிறைந்து வாழும்
மானான மூளையுட நிறந்தா னப்பா
 மகத்தான வெளிப்புறத்தில் ஊதா வாயும்
தேனான உள்புறத்தில் வெள்ளை யாயும்
 தெளிவாக இருக்குதடா கண்டு பாரு
ஊனான மூளையில்தான் மூன்றுபிரிவா யுண்டு
 உள்ளபடி சொல்லுகிறேன் உண்மை கேளே. (790)

கேளடா பெரியமூளை சின்னமூளை
　　கெணிதமுள்ள முள்ளந்தண்டு கொடி சிகரம்
நாளடா மூன்றுவிதம் சொன்னேன் பாரு
　　நலமான மூளைதான் மூன்று சவ்வால்
தேளடா மூடிக்கொண் டிருக்கும் பாரு
　　தெளிவான ஆணுக்கு மூளை தான்
வாளடா பலம்பத்து இருக்கும் பாரு
　　வளமான பெண்ணுக்குச் சொல்வேன் கேளே. (791)

பெண்ணுக்குத் தானப்பா மூளை கொஞ்சம்
　　பிரிவாக இருக்குமடா குறைவதாக
கண்மணியே சொல்லுகிறேன் அறிவுள் ளோர்க்கு
　　கன்மான மூளைதான் பூவாய்த் தோன்றும்
உண்மையாய்த் தலைஒட்டை நீக்கிப் பார்த்தால்
　　உள்ளபடி மூளையுட மேல்சவ்வு தோன்றும்
கண்ணியமாய் இச்சவ்வு முள்ளந் தண்டு
　　கண்குழலின் துவாரத்தில் இறங்கிக் கேளே. (792)

இறங்கியே கொடியைச் சுற்றிக் கொள்ளும்
　　இன்பமாய்ச் சவ்வினின்று உட்புறமாய்ப் பாரு
நிறைந்துமே சவ்வுகள்தான் இளைத் திருக்கும்
　　நிச்சயமாய் ஒன்று அரிவாளைப் போலே
விறைப்பாக வளைந்துமே மூளைச் சவ்வில்
　　விரிவாக அமர்ந்து இருக்கும் நேர்மைபாரு
சிரம்நெற்றி எலும்போடு இருக்கும் மூளை
　　சிறுத்துமே இருக்குதென்று தெரிந்து கொள்ளே. (793)

கொள்ளடா பிடரியினுட எலும்பி னேடு
　　கொத்தாக ஒட்டிக்கொண் டிருக்கின்ற தாம்
அள்ளடா மூளையது அகண்டு இருக்கும்
　　அழகாக மற்றென்று சின்னமூளையைப் பற்றி
மெள்ளவே மூடிக்கொண் டிருக்கும் பாரு
　　மிதமான பெரிய மூளையின் பாரம்
தள்ளவே யிருக்கச் செய்யும் தண்ணீரை
　　தன்மையுடன் இன்னும்கேள் சொல்வேன் பாரே. (794)

சொல்லுவேன் பிடரியுட எலும்பில் தானே
சகமாக ஓடிக் கொண்டிருக் கின்ற
சில்போன்ற சிறுமூளைப் பின்னு லப்பா
சிறப்பாகவே சவ்வுக் கிளைதா னுண்டு
வல்லியமாய் உள்சவ்வில் புரைகள் உண்டாய்
வளமாகக் குழாய்போல் ஆகும் சொன்னேன்
தொல்வினையில் கெட்டரத்தம் அதன் வழிதானே
தோன்றியே போகுமடா திண்ணம் தானே. (795)

திண்ணமாய் இன்னம்ஒன்று சொல்லக் கேளு
திறமான குழந்தையுட உச்சந் தலையில்
உன்னிதமாய் அடிக்கின்ற நரம்பின் நேர்மை
ஓடுகின்ற முன்னரம்பில் தேர்ந்த தாகும்
பண்ணிவைத்த நாசிகா பீடந் தன்னில்
பாரித்து இதுகிளம்பி உச்சி வழியாய்
கண்ணியமாய் ஓடியபின் பிடரி தன்னில்
கெணிதமுடன் இருக்கின்ற எலும்பி னூடே. (796)

எலும்பினுட மத்தியில்தான் வந்து அய்யா
இதமாக இரண்டாகப் பிரிந்து கொள்ளும்
சிலும்பாகப் பக்கத்துக் கொன்று யப்பா
சுகமாக வளைந்து கீழிறங்கும் பாரு
அல்பமாய் வெளிவந்து அந்தர்க்கதகண்ட நாளங்களாகி
அப்பனே இதற்குத்தான் சிரோமத்திய நாளமென்பார்
சிலுப்பாயே முன்சொன்ன சவ்வுக்கு அடியிலுந்தான்
சிறப்பான மூளையுடசவ்வு மூன்றுக்குத் தானே. (797)

மூன்றுக்கும் மத்தியமாய் இருக்கும் பாரு
முக்கியமாய்ச் சிலந்திக் கூட்டைப் போலே
ஆன்றியே இலையாகக் காணும் பாரு
அப்பனே மூளையைத்தான் சுற்றிக் கொண்டு
ஊன்றியே பின்கொடிக்குத் தானிறங்கும் பாரு
உத்தமனே இன்னுமொன்று மூளைப் பக்கம்
ஆன்றியே அடுத்திருக்கும் ரத்த நரம்பில்
ஆதரிக்கும் மூளையைத்தான் சுற்றிக் கொண்டே. (798)

## பெரிய மூளை.

கொண்டேதான் மேல்புறமாய்த் தோன்று கின்ற
கொடும்பெரிய மூளையைப் பார்வை யிட்டால்
அண்டேதான் அதன்மேலே சுருண்டி ருக்கும்
அப்பனே மத்தியில்தான் பிளப்பே யுண்டு
கண்டேதான் இருகூறாய் இருக்கும் நாளம்
கப்பான பிரிவுக்குத்தான் அர்த்தகோளம் என்பார்
துண்டேதான் ஒவ்வொன்றின் அடியில் தானே
துடிப்பான மேடுகள் மூன்று உண்டே. (799)

மேடான அர்த்தகோளம் இரட்டையுந் தான்
மெதுவாக மத்தியில்நீ நோக்கிப் பார்த்தால்
பண்டான வெள்ளையொன்று கிட்டும் பாரு
பண்பாக அதன்மீதில் நடுவிலே தான்
கோடான நெடியாகித் தோன்றும் பாரு
கொற்றவனே அதற்குத்தான் ரேகை என்பர்
காடான ரேகைக்கு ரெண்டு பக்கம்
கொற்றவனே கீறி நீபார்க்கக் கேளே. (800)

பார்த்தாக்கால் பள்ளங்கள் தோன்றும் பாரு
பக்குவமாய் அதைப்பக்கப் பள்ள மென்பார்
கோர்த்தசிறு மூளையுட விபரங் கேளு
கொடும்பெரிய மூளைக்கு எண்பாகம் குன்றும்
வார்த்த பெருமூளைக்குப் பின்னால் அப்பா
வளமாக அடியில்தான் இருக்கும் பாரு
கார்த்த இதுஇரண்டாகப் பிளந் திருக்கும்
கடுமையாய் அறுத்துப் பார்த்தால் கேளே. (801)

கேளடா கிளையுடைய செடியைப் போல
குறிப்பாக அங்கேதான் தோன்றும் பாரு
வாளடா அதற்குத்தான் பிராணவிருக்ஷம் என்பார்
வகையான முகுளத்தின் விபரங் கேளு
பாளடா முகுளந்தான் அங்குமே நீண்டு
பக்குவமாய் மொக்குள்போல் தோன்றும் பாரு
நீளடா மேலேதான் நீண்டரேகை தோன்றும்
நிச்சயமாய்ப் பிடரி எலும்பைப் பாரே. (802)

எலும்பிலுள்ள பாசலரின் பிதுக்கந் தன்னில்
இன்பமாய் மேலாய்ப் படுத்திருக்கும்
சிலும்பினர்க்கும் முள்ளந்தண்டுக் கொடியே அப்பா
சிறப்பாக மூளை நின்று ஆரம்பிக்கும்
கலப்பான கபாலத்தின் மூலத் துவாரம்
கண்வழியாய் வெளிப்பட்டு முள்ளந் தண்டின்
குலப்பான குழலில்தான் அமைந் திருக்கும்
குறிய வெள்ளையாயிருக்கும் நிறந்தான் பாரே. (803)

நிறமுடனே பதினெட்டு அங்குலந் தானுண்டு
நிச்சயமாய்க் கையினுட விரல் பருமனுகை
புறமாக இருக்குதடா மூளை தன்னில்
ஒருமூன்று சவ்வுகளும் இதைத்தான் கேளு
திறமாகச் சுத்திக்கொண் டிருக்கும் பாரு
இக்கொடியின் முன்பின்னும் ரேகை தோன்றும்
முறமான முள்ளந்தண்டு கொடிமூளை தான்
முக்கியமாய்ச் சல்லிவேர்போல் காணும் பாரே. (804)

காணுமடா சிலும்பலாய் அனேக மாக
கடுநரம்பாய்ப் பிரிந்திருக்கும் அதற்குத் தானே
பேணியே பேரதற்கு குதிரை வாலாம்
பிரியமுடன் சொன்னேனே இந்த பாகம்
ஆணியாய் மனதில்த்தான் ஓர்மை வைத்து
அப்பனே பார்த்து நீ வந்தாயானல்
ஊணியே தோணுமடா உந்தனுக்கு
உள்ளபடி இதன்நேர்மை உரைத்தேன் பாரு. (805)

## முள்ளந் தண்டுக் கொடி.

பாரடா முள்ளந்தண்டின் கொடியின் நேர்மை
பக்குவமாய்ச் சொல்லுகிறேன் பரிவதாக
கூரான முள்ளந்தண்டுக் கொடியி லப்பா
கொத்தவனே ஜனிக்கின்ற நரம்ப னேகம்
சீராக அவற்றில்தான் முக்கியமாக
சிறப்பான சதைநரம்பு முப்பத்தைந் தாம்
பேராக ஒவ்வொன்றுக் கிரண்டு வேர்கள்
பெரிதாகத் தானுண்டு முன்புறம் வேருக்கு. (806)

முன்புறமாய் இருக்கின்ற வேருக் கப்பா
முக்கியமாய்ச் சலனகுணம் உண்டு பாரு
பின்புறமாய்ச் செல்லுகின்ற வேருக் கப்பா
பரிசகுணம் உண்டென்று பகர்ந்தேன் பாரு
இன்னும்தான் நரம்புகள் எத்தனை இருக்கினும்
இதமான வேர்களில்த் தானிருக்கும் பொருள்
சொன்னதொரு வேறுவேருன பொருள்களைத் தான்
சுகமாகக் காணலாம் சுருதி கேளே. (807)

சுருதியாம் அக்குனி நரம்புக் கூட்டம்
சுகமாக இருக்கின்ற இட மிருந்தப்பா
பருதியோர் பெருநரம்பு புஜ நாடியோடு
பக்குவமாய்ச் சேர்ந்துமே ஓடும் பாரு
குருதியாம் நரம்புக்கு நடுநரம்பு என்பார்
கொத்தவனே முழங்கையின் உள்முகிழ் மேலே
கருதியே சிறுநரம்பு ஓடும் பாரு
கணக்கதனைச் சொல்லுகிறேன் கருத்தாய்க் கேளே. (808)

கருத்தான முதுகுக்கு நரம்பு கேளு
கண்டிப்பாய் பதினைந்து சதைக ளாகும்
பருத்த பதினைந்தும் முதுகுச் சதையினேடு
பண்பான பழுவெலும்பு சதையும் சேர்ந்து
குருத்தான தோளுக்கும் போகும் சொன்னேன்
குன்ருத இடுப்பினுட நரம்பு கேளாய்
திருத்தமுள்ள ஆறுசதைகள் இருக்கும் பாரு
திறமாக இதுசெல்லும் இடந்தான் கேளே. (809)

இடமான அடிவயிற்றுச் சதைக்குச் செல்லும்
இன்பமுள்ள தோளுக்கும் தொடைக்கும் போகும்
திடமான பிஜங்கள் முதலாய்ச் செல்லும்
திரிஸ்தான மதனிற்செல்லும் நரம்பு கேளாய்
சடமான அஞ்சுசதை நரம்பு கேளு
சதிரான பிருஷ்டம் தொடை யோனியென்றும்
குடமான மூத்திரப்பை முழங்கால் பாதம்
கொற்றவனே மார்புமுதல் எல்லாம் போமே. (810)

போமென்ற நரம்புக்கூட்டங் தன்னில் நின்று
பொலிவான பெருநரம்பு ஒன்று தோன்றி
ஓமென்ற தொண்டையின் பின்புற மதாக
ஒப்பாகக் கீழிறங்கிச் செல்லும் பாரு
நாமென்ற நரம்புக்குள் இதுதா னப்பா
நன்மையுடன் பெரிதாக இருக்கும் பாரு
தாமென்ற ஒற்றுணர்வு நரம்பு நேர்மை
தன்மையுடன் சொல்லுகிறேன் தரணி யோர்க்கே (811)

தரணியோர் தனக்கெல்லாம் முள்ளந் தண்டின்
தக்கயிரு புறந்தனிலும் மணிக் கோர்வையாக
கிரணமுள்ள சிரசிருந்து மூலமான
கீழான ஆசனத்தின் வரையி லப்பா
சாடாக நீண்டுபின் சரீரத் தோடு
சரியான நரம்புடனே சம்பந்த மாகி
பிரியான நரம்புக்கு இருப்பிடத்தைக் கேளாய்
பிலத்ததொரு இரைப்பைக்குப் பின்புறம் தான்பாரே. (812)

பாரடா திருப்தியாய் உண்ட பின்பு
பக்குவமாய் ஈரல்குழியில் அடியே பட்டால்
கூரான அபாயங்கள் வந்து நேரும்
கொற்றவனே அப்படியும் இறந்தோரும் உண்டு
பேரான நாடியுட விபரந் தன்னை
பிலமாக நீயறிய விபரமாக
சீராக ஒவ்வொன்றின் குணங்கள் தன்னை
சிறப்பாக உந்தனுக்கு விளம்பு வேனே. (813)

## நாடி.

விளம்புவேன் நாடியுட விவரங் கேளு
விருப்பமுள்ள இருதயந்தனி லிருந்து
தளமாக ஓடுகின்ற ரத்தந் தன்னை
தானுகத் தேகத்தில் கொண்டு செல்லும்
உளமான குழலுக்கு நாடி யென்பர்
உள்ளதொரு பிராணன்தான் போன பின்பு
பளமான குழாய்தன்னில் ரத்தம் தோன்று
பண்டிதனே அதற்குஒரு விவரங் கேளே. (814)

கேளடா அக்குழலில் பிராண வாய்வு
பிரியமுடன் இருக்கிற தேன்று நினைத்திடாதே
நாளடா பிராணன்தான் போன பின்பு
நன்மையுள்ள வாயுவுந்தான் போச்சு தென்று
மூளடா எண்ணத்தை எப்போதுந் தான்
முக்கியமாய்க் கொள்ளாதே அப்பா கேளு
தேளடா அக்குழலில் ரத்தந் தானும்
திறமாக ஓடுதென்று மனதில் வையே. (815)

மனமான நாடியது இருதயத்தின்
மக்களுட இடதுபக்கந் தன்னில் தோன்றி
கனமாக வருவதினல் அதற்குத் தானே
கண்டிப்பாய் பெருநாடி என்று சொல்லு
சினமான பெருநாடி தன்னி லப்பா
சிறப்பாக எழுபத் தீராயிரந் தான்
இனமாக திரேகமெங்கும் பிரிந்து கொண்டு
இன்பத்தை விளைவித்து எங்குந் தானே. (816)

எங்குமே ஓடுகின்ற நாடிக் குள்ளே
இதமாக ஓடுகின்ற ரத்த மப்பா
பொங்கியே இந்திர கோபந்தனைப் போலே
புகழாகச் சிவந்திருக்கும் புதுமை பாரு
தங்கிருக்கும் நாடிகள்தான் ஒன்ரு டொன்று
தான்சேர்ந்து போவதுவும் உண்டு பாரு
இங்கிதமாய் நாடிகள்தான் போகப் போக
இதமாகச் சன்னமாய் இருக்குங் காணே. (817)

காணடா சன்னமாய்ப் போன பின்பு
கடிதான நாளத்தில் சேர்ந்து கொள்ளும்
பூணடா நாடிக்கும் நாளத்துக்கும்
புகழாக மத்தியிலோர் சிறுநரம் புண்டு
நாளடா அதற்குத்தான் தந்தி என்பர்
நலமான அத்தந்தி தேக மெங்கும்
வீணடா திரேகத்தை வளர்க்கச் செய்யும்
விருப்பமுள்ள முன்குழலில் புரைமூன் றுண்டே. (818)

## பெரு நாடி.

புரையான பெருநாடி விபரங் கேளாய்
　　புதுமையுள்ள பெருநாடி இருதயத்தின்
கறையான இடப்பக்கம் தன்னில் தோன்றி
　　கனமாக மேலுக்கு ஏறிப் பின்பு
சிறையான இடப்பக்கம் வளைந்து அய்யா
　　சீரான முள்ளந் தண்டோர மாக
துறையாக இறங்கியே இடுப்பில் தோன்றும்
　　துய்யமுள் ளெலும்புக்குச் செல்லும் பாரே. (819)

பாரடா இரண்டாகப் பிரிந்து கொண்டு
　　பக்குவமாய்க் கால்ரெண்டும் செல்லும் பாரு
கூறடா பெருநாடிக் காரம்பத்தில்
　　கொப்பனவே மூன்று கதவுக ளுண்டு
பேரடா அவைகட்கு பிறைக்கதவு என்று
　　பின்பதன் செய்தொழில் தன்னைப் பகரக்கேளு
சீரடா பெருநாடி தன்னில் ஓடும்
　　சிறப்பான ரத்தத்தை வெளியோட்டுந் தானே. (820)

தானான இரத்தத்தை வரவொட் டாமல்
　　தடுத்துமே காத்துக்கொண் டிருக்கும் பாரு
ஊனான ரத்தம் பின்னோடும் போது
　　உத்தமனே கதவுகள் விரிந்து கொண்டு
தேனான வாயில்தனை அடைத்துக் கொள்ளும்
　　தெளிவான பெருநாடி வளைவி லப்பா
மானான மூன்றுகிளை யுண்டு பாரே
　　மகத்தான் முதல்கிளைக்கு பேரு பாரே. (821)

முதல்கிளைக்கு சூனியநாடி என்று பேரு
　　முடிவில் இரண்டங்குல நீளமாகும்
சிதலமா யதற்குத்தான் கிளைகள் ரெண்டு
　　சீராக அதிலொன்று கண்டம் மீது
குதிகொண்டு வலப்பக்கம் ஏறும் சொன்னேன்
　　கொற்றவனே மற்றொன்று வலது தோளின்
இதமான மார்க்கமாய் வந்து பின்பு
　　இன்பமுடன் வலக்கைக்கு இறங்கிப் போமே. (822)

இறங்கியதோர் வலதுகண்டம் நாடி யப்பா
இதமாகக் கழுத்தினுட வலது பக்கம்
பறந்துமே ஒடியே செல்வ தாலே
பக்குவமாய் வலக்கண்ட நாடி யென்பார்
சிறந்தந்த நாடியடா சுவாச மோடும்
சிறப்பான குழாய் தனக்கு ஒரமாக
துறந்துமே மேலுக்குச் சென்று கேளு
துய்யகுர வளையின்மேல் புறமே ஒடும். (823)

ஒடியே சமானமாய்ப் போகும் போது
உத்தமனே இரண்டுகிளை யாகத் தோன்ற
மூடியே ஓடுகின்ற கிளைக ளுள்ளே
முன்புறமாய் இருக்கின்ற கிளைக் கேளு
பாடியே பகிர்தகண்ட நாடி யென்பர்
பக்குவமாய் அதில்தோன்றும் கிளைக ளப்பா
தேடியே வலப்பக்கம் கழுத்து காது
தெளிவான பிடரிமுகம் நாக்கு பாரே. (824)

நாக்கான கன்னமுதல் சிரசு முற்றும்
நகர்ந்துமே வியாபித்துச் செல்லும் பாரு
வாக்காக உள்ளிருக்கும் கிளைக்குத் தானே
வளமான அந்தர்க்கத நாடி என்பார்
தூக்கான தொண்டையொடு சேர்ந்து கொண்டு
துப்புரவாய் அவ்வழியாய் சென்று கேளு
தாக்கான காதெலும்பின் துவாரத்திற் குள்ளே
தான்சென்று சிரசுக்குள் செல்லும் பாரே. (825)

செல்லுமே பற்பலமாங் கிளைகளாக
சிறப்பாகப் பிரிந்துமே மூளை தன்னை
நல்வினையாய் வளர்ப்பிக்கும் ரத்தத் தாலே
நலமான இடதுகண்ட நாடி கேளாய்
பல்விதமாய்ப் பெருநாடி வளவில் தோன்றும்
பிரிவான இரண்டாங் கிளைக்குத் தானே
சொல்லுவார் இடதுகண்ட நாடி யென்று
சொன்னபடி நானுனக்கு உரைத்தேன் பாரே. (826)

பாரடா இந்நாடி இடப்பக்க மாக
பக்குவமாய் வலதுகண்ட நாடி போலே
கூறுகச் சென்றுமே அந்தியத்தில்
கோப்புடனே ஒன்றேடொன்று கூடும் பாரே
நேராக இடதுதோள் நாடி யப்பா
நிச்சயமாய்ப் பெருநாடி வளவில் தோன்றும்
சீரான மூன்றுங்கிளை தானப்பா
செப்புவேன் இடதுதோள் நாடி யென்றே. (827)

நாடியது இடக்கையில் இறங்கிப் பின்பு
நன்றாகத் தான்பரவிக் கொள்ளும் பாரு
கூடியதோர் கன்னப் பொரியின் நாடி
குறிப்பான அகிர்தகண்ட நாடி தன்னில்
ஓடியே வருகின்ற கிளைதா னப்பா
உள்ளபடி கன்னப்பொரி மார்க்க மாக
தேடியே மேல்பக்க மாக ஓடி
தெளிவான நெற்றிஉச்சந் தலைக்குப் போமே. (828)

தலையான முகத்தினுட நாடி கேளு
தன்மையுள்ள பகிர்தகண்ட நாடி தன்னில்
வலையாக ஓடிவரும் ஓர்கிளை தான்
வன்மையுள்ள கீழ்த்தாடை எலும்பின் மேலே
கலையாமல் ஓடியே கன்னந் தன்னில்
கலந்துமே காத்துக்கொண் டிருக்கும் பாரு
தொலையாத தோள்நாடி விவரங் கேளு
தொல்லுலகில் நீயறியச் சொன்னேன் பாரு. (829)

பாரடா வலப்பக்கம் சூன்ய நாடி
பக்குவமாய் இடப்பக்கம் பெரு நாடி
சீராகக் கிளைத்துத் தோள்மார்க்க மாக
சென்றுமே அக்குளுக்குள் போகும் பாரு
கூராக அக்குளுட நாடி கேளு
கொத்தவனே இதுதோளு நாடி தன்னில்
நேராகத் தோன்றியே அக்குள் தன்னில்
நின்றுமே போய்விடுமே நிலைமை தானே. (830)

நிலைமையுள்ள புஜநாடி விபரங் கேளு
நிச்சயமாப் புப்புசத்துக் குள்பக்கம் ஓடி
தலைமையுள்ள முழங்கையில் இறங்கிப் பின்பு
போகுமே அவ்விடத்தில் இரண்டாய்த் தோன்றி
கிளைக்கின்ற கிளைக்குப்பெரு நாடி என்றும்
கண்டிப்பாய் மற்றுமொரு கிளைக்குக் கேளு
சிலையான சுண்டுவிரல் நாடி என்பர்
சீரான பெருவிரலின் நாடி கேளே. (831)

கேளடா முழங்கையில் இருந்து அப்பா
கெணிதமுட அரையினுள்ள எலும்பு மேலே
வாளடா வருவிரல் பக்கம் ஓடி
வள்மான பெருவிரலைச் சுற்றிக் கொண்டு
நாளடா உள்ளங்கை தனக்குச் சென்று
நலமான சுண்டுவிரல் நாடி யோடும்
தேளடா சம்பந்தப் பட்டே யாகும்
தெளிவாக வாதபித்த சிலேத்துமந் தானே. (832)

தானான சுண்டுவிரல் நாடி கேளு
தன்மையுள்ள முழங்கைதனில் தான் தோன்றி
ஊனான ரதளியின் எலும்பின் மேலே
உள்ளபடி சுண்டுவிரல் பக்க மோடி
தேனாக வளைந்துமே உள்ளுக்கே தான்
தெளிவான உள்ளங்கை பெருவிரல் நாடியுடன்
மானாகச் சம்பந்தப் பட்டே யோடி
மகிழ்வாக இருக்கின்ற மகிமை பாரே. (833)

மகிமையுள்ள மார்புபெரு நாடி கேளாய்
மகத்தான மார்புக்குள் ளிருந்து வாழும்
சிகரமுள்ள பெருநாடி சிகர மப்பா
சிக்காத இருதயத்தில் க்வசந் தன்னில்
சுகமாக சுவாசம்வரும் குழாயின் கிளைகள்
சுரையான இறைக்குழல் விலாஎலும் போடு
தகமையய் இதுகளுக்கு சென்று மெய்யைத்
தப்பாமல் வளர்க்குமடா தரணி யோர்க்கே. (834)

வளர்க்கின்ற வயிற்றின் பெருநாடி நேர்மை
வளமாக வயிற்றுக்குள் வாழுகின்ற
தளமான பெருநாடி தன்னில் நின்று
தான்கிளைக்கும் கிளைகள்தான் சொல்லக் கேளு
உளமான ஈரல்தாங்கி இரைப்பை பீலிகம்
உள்ளபகிர்த கண்டமுடன் குடல்கள் பீசம்
பலமான இவ்வுறுப்பு களுக்குச் சென்று
பக்குவமாய் வளர்ப்பிக்கும் பாரு பாரே. (835)

பாரடா அந்நாடி இரண்டாய்த் தோன்றி
பரிவான கால்இரண்டும் செல்லும் சொன்னேன்
சீரான தொடையில்தான் செல்லும் போது
சிறப்பான தொடைநாடி என்று பேராம்
பேரான முழங்காலில் செல்லும் போது
பிரிவான முழங்கால்மடிப்பு நாடி என்றும்
காரான காலில்தான் ஓடும் போது
கனமான முன்னங்கால் நாடி யென்றே. (836)

நாடியது கெண்டைச் சதைக்கு ளப்பா
நலமாக ஓடுகிற பாகத்துக்கு
சாடியே பின்னங்கால் நாடி என்பார்
சதிரான புப்புசத்தின் நாடி கேளு
கூடியே வலதுபக்கந் தன்னில் தோன்றி
குறிப்பான நுரையீரல் தனக்கு அப்பா
தேடியே ஓடுகிற குழாய்க்குத் தானே
தெளிவான புப்புசம் என்று சொல்லே. (837)

## நாளங்கள்.

சொல்லுகிறேன் சிவந்தரத்தம் கருத்து அய்யா
சீரு கெட்டுப் போன பின்பு
வல்வினைசெய் இருதயத்தின் வலது பக்கம்
வளமாகக் கொண்டுசெல்லும் குழல்தனக்கே தான்
செல்லுகின்ற நாளங்கள் என்று பேராம்
சிறப்பான நாடிதனை மார்பிலுந் தான்
தொல்லையுள்ள நாளத்தின் புரைகள் மெத்த
தோன்றியே சன்னமாய் தளத்தியாய் இருக்குமே. (838)

இருக்கின்ற நாளங்கள் அப்பா கேளு
இதமான தந்துக்கள் தன்னில் தோன்றி
முறுக்கியே ஒன்றேடொன்று சேர்ந்து கொண்டு
முக்கியமாய்ப் பெருத்துமே முடிவில் கேளு
பருகிய இரண்டு பெரு நாளமாகி
பக்குவமாய் இருதயத்தில் சொல்லக் கேளு
நெருங்கியே மேலாக ஒன்று செல்லும்
நிச்சயமாய்க் கீழாக ஒன்று போமே. (839)

## நெத்தி நாளம்.

போமடா நெற்றியுட நாளங் கேளு
புகழான நெற்றியுட நடுவே தான்
ஆமடா இரண்டு நாளங் கண்டு
அப்பனே அவைகள்தான் கீழே நோக்கி
நாமடா அந்தர்க்கத நாளமொடு
நலமாகச் சேர்ந்துமே போகும் பாரு
ஓமடா சிரோநாள விபரஞ் சொல்வேன்
உத்தமனே அதனுடைய உண்மை பாரே. (840)

உண்மையுள்ள சிரசுக்குள் இருக்கும் சவ்வில்
உத்தமனே ஒருசவ்வு பிரிந்து போகும்
தன்மையுடன் அதற்குத்தான் சிரோநாள மென்பர்
தனியாக அதன்வழியில் மூளை தன்னில்
உண்மையா யுண்டாகும் கெட்ட இரத்தம்
ஓடிவந்து அந்தர்க்கத நாளத்திற்கு
கண்ணியமாய்ச் செல்லுமடா என்று சொல்லு
கேளடா இன்னமொன்று சொல்லக் கேளு. (841)

கேளடா பகிர்த நாள மப்பா
கெடியான கழுத்தில் மூல வட்டமாக
நாளடா மேலிருந்து கீழே வந்து
நலமான தோள்நாளம் தன்னில் சேரும்
வாளடா அக்கரபாக கண்ட நாளம்
வளமாக கழுத்தினுட மத்தியத்தில்
தேளடா கீழுக்கு இறங்கிப் போகும்
தெளிவான அந்தர்க்கத நாளம் பாரே. (842)

பாரடா இந்நாளம் வலம்இடம் தன்னில்
பக்குவமா யிருக்கின்ற கண்டநாடி யோடு
சீராகத் தோன்றியே கீழே நோக்கி
சிறப்பான தோள்நாளம் தன்னில் சேர்ந்து
நேராக ஒன்றேதான் நாள மாகும்
நெறியான நாமசூன்ய நாள மென்பார்
பேராக வலதுஇடது பக்கம் தோன்றும்
பெரிதான நாமசூன்ய நாளம் இரண்டே. (843)

நாளங்கள் இரண்டுமே ஒன்றாய்ச் சேர்ந்து
நலமாகப் போவதினுல் அதற்குக் கேளு
கோளங்கள் பதித்த ஊர்த்தபிரக நாளம்
கொற்றவனே என்றிதற்குப் பேரதாம்
ஆழமுள்ள அந்தர்க்கத புஜநாளங் கேள்
அப்பனே இடப்புறத்தின் உள்புற மாக
மேளம்போல் மேலுக்கு ஏறிப் போகும்
மேலான கைமூல நாள மாமே. (844)

ஆமடா முன்சொன்ன நாடி போலே
அப்பனே நாளங்கள் உண்டு பாரு
ஓமடா அவைகள்தா னென்றே டொன்று
உத்தமனே சம்பந்தம் உண்டு பாரு
நாமடா அதன்குணம் உபநாடி போலே
நலமாகத் தோன்றுமடா நரகத் தோர்க்கு
போமடா தீவினையால் வந்த தெல்லாம்
பொங்கமுடன் இன்னதென்று சொல்லக் கேளு. (845)

## நெஞ்சறை.

கேளடா நெஞ்சறையின் விபரங் கேளாய்.
கெணிதமுடன் அடிகுவிந்து நுனிவிரிந்து இருக்கும்
நாளடா முன்புறத்தில் மாரெலும்பும்
நலமான விலாஎலும்பும் பின்முருந்துங் கூடி
தேளடா சதைகளுந்தான் நிறைந் திருக்கும்
தெளிவான பின்புறத்தில் சொல்லக் கேளு
வாளடா முதுகுத்தண் டெலும்பி னேடு
வளமான சதைகளுந் தானிருக்கு தென்றே. (846)

இருக்கின்ற மேல்புறத்தில் சொல்லக் கேளு
இதமாக முதலில்தான் பழு வெலும்பும்
பரக்கின்ற சவ்வுகளும் இருக்கும் பாரு
பாங்கான அடிப்புறத்தில் ஈரல் தங்கி
செருக்கியே இருக்குதென்று தெரிந்து கொள்ளு
கூர்ந்திருக்கும் நெஞ்சறைக்குள் ளிருந்து வாழும்
பருக்கின்ற நுரையீரல் அன்ன வாகி
பரிவான பெருநரம்பு புப்புசமுந் தானே. (847)

தானான புப்புசமும் இதயமும் அய்யா
தனித்தனியாய் இருக்குதென்று தெளிவாய்ச் சொன் [னேம்
மானான இதயத்தின் விபரங் கேளு
மகத்தான இதயந்தான் மார்புக் குள்ளே
தேனான நுரையீரல் இரண்டுக்குந் தான்
தெளிவான நடுவினில்தான் இருக்கும் சவ்வில்
ஊனான பையுக்குள் அடங்கித் தானே
உத்தமனே இருக்குதென்று உறுதி பாரே. (848)

பாரடா இதயகோச மென்பர் அதை
பண்பான இதயத்தின் நாடி யப்பா
நேரான வலதுபுஜம் தன்னை நோக்கி
நிச்சயமாய் நுனியப்பா கீழே நோக்கி
காரடா இடதுபக்கம் ஆறும் ஏழும்
கனமான பழுவெலும்பு மத்தி யத்தில்
ஊரியே கீழ்புறந்தான் தட்டை யாக
உள்ளதுதான் உரந்தாங்கி மேலே கேளே. (849)

மேலேகேள் படுத்துக்கொண் டிருக்கும் பாரு
மேல்புறமாய் உப்பலா யிருக்கும் சொன்னேன்
சாலவே அதன்நீளம் சொல்லக் கேளு
சதிரான ஆறுஅங்குலம் தானு முண்டு
ஏலவே அதனகலம் அங்குலம்தான் நாலு
இதமான மந்தந்தான் மூன்றங்குல மாம்
மேலான இதயந்தான் ஆடவருக் கய்யா
மேன்மையுடன் பலம்பத்து இருக்கும் காணே (850)

காணடா மகளிருக்கு சொல்வேன் பாரு
கனமான இதயந்தான் பலம் எட்டாகும்
பூணடா இதயந்தான் சதைக ளாலே
பொங்கமுடன் ஏற்பட்டு தாமரை மொட்டென
ஊணடா சேர்ந்துதான் இருக்கும் பாரு
உள்ளேதான் நான்குவிதம் அறைக ளுண்டு
கேளடா மேலிரண்டு கீழிரண் டாக
கனதியாய் இருக்குதென்று கணிதம் சொன்னேன் (851)

கணிதமுள்ள மேலறைக்குப் பேரு கேளு
கடிதான சிரவங்கள் என்று பேராம்
அணியான கீழறைக்கு சடரங்க ளென
அப்பனே அதற்குத்தான் பேரு முண்டு
மணியாக வலதுபக்கம் ரத்த மப்பா
மாறியே கறுத்திருக்கும் மகிழ்ந்து பாரு
தனியாக இடதுபாகம் ரத்த மப்பா
தப்பாமல் சிவந்திருக்கும் தன்மை தானே. (852)

தன்மையுள்ள அறைகளுக்குள் திரைச்சீலை போல
தக்கதொரு சவ்வுகளுந் தானு முண்டு
இன்மையா யவைகட்கே கவாட மென்பார்
இதமான கவாடங்கள் மூன்றுக்கு ளேகும்
தன்மையுள்ள இரத்தத்தை பின்னுக்கே தான்
தப்பியே வாராமல் தடுக்கும் பாரு
சொன்னவல சடரத்தின் கபாட மப்பா
சுருக்கமுள்ள முப்பிரிவாய் ரூபம் காட்டுந்தானே. (853)

காட்டுகின்ற கபாடந்தான் திரிகபாட மென்பார்
கனமாக அவைவலது சடரந் தன்னில்
தீட்டியே இருக்கின்ற இரத்தந் தன்னை
திரமான சிரவத்திற் சேராமல் செயும்
ஈட்டியாம் இடது சடரத்தி லையா
இரண்டான கவாடங்க ளுண்டு பாரு
மாட்டியே அவைகட்கு துறைகவாட மென்பர்
மகத்தான இதயத்தின் மகிமை பாரே. (854)

இதயத்தின் இடதுபுறம் சடரந் தன்னில்
இதமான பெரியதொரு குழல்தா னுண்டு
கருதியே அதற்குத்தான் பெருநாடி யென்பார்
கண்டிப்பாய் அந்நாடி சொல்லக் கேளு
குருதியாய் பற்பலவாம் கிளையாய்த் தோன்றி
கொத்தவனே தேகமெங்கும் பரவிப் போகும்
பருதியாய் வலது சடரத்தி னின்றும்
பக்குவமாய் வேறுகுழல் தோன்றும் பாரே. (855)

தோன்றியே நுரையீரல் தனக்குப் போகும்
துய்ய வளைகுழலுக்கு புப்புசநாடி யென்பார்
ஊன்றியே பெருநாடி புப்புச நாடி
உள்ள இந்நாடியுட ஆரம் பத்தில்
தோன்றுமடா பிறைபோன்று மூன்று கபாடங்கள்
தொல்லுலகில் அவைகட்கு பிறைக்கபாட மென்பர்
ஆன்றியே யதனுடைய விவர மெல்லாம்
அப்பனே உரைத்திட்டேன் புதுமை கேளு. (856)

## குரல்வளை.

புதுமையுள்ள குரல்வளையின் விவரங் கேளு
பொல்லாத சுவாசக் குழலுக்கு மேலே
இதமான நாக்கினுட அடியில் தோன்றும்
இன்பமுள்ள முருந்து செப்புக்குத் தானே
பதமான குரல்வளைகள் என்று பேராம்
பக்குவமாய் முன்புறந்தான் பிதுங்கிக் கொண்டு
சதமாகக் கூர்மையாய் இருக்கும் பாரு
சரியான சங்கமென்று அதற்குப் பேரே. (857)

பேரான குரல்வளையில் சொல்லக் கேளு
பிரிவான முருந்துடனே சந்தி பந்தனம்
சீரான சதையுடனே இரத்த நரம்பு
சிறப்பான பரிசநரம்பு சவ்வும் கூட
நேராக இருக்குதென்று தெரிந்து கொள்ளு
நிச்சயமாய் நாக்கினுட அடியி லப்பா
கூராக இலையைப்போல் நிமிர்ந் திருக்கின்ற
கொற்றவனே முருந்துதான் இருகபாட மாமே. (858)

ஆமேநாம் முழுங்குகின்ற வேளை தன்னில்
அப்பனே குரல்வளைதான் மேலுக் கேகும்
தாமேதான் அப்போதே அத்துவா ரத்தை
தன்மையுள்ள இருகபாடமும் மூடிக் கொள்ளும்
ஓமேதான் அதுதப்பி குரல்வளைக் குள்ளே
ஓரணுப் பிரமாண மேதேனும் சென்ருல்
நாமேதான் இருமலுடன் விக்கல் காணும்
நன்மையுடன் புரையோடிப் போகும் பாரே. (859)

பாரடா குரல்வளைக்கு இரண்டு பக்கம்
பக்குவமாய்ச் சவ்வுகள்தான் படிந்து கொண்டு
கூரான தந்திகள்போல் இருக்கும் பாரு
கொத்தவனே அதற்குப்பேர் தோணித்தந்தி என்பார்
சீராக பக்கமொவ் வொன்றுக்கே தான்
சிறப்பாக தோணித்தந்தி யிரண்டே யுண்டு
நேராக அவைகளுட மத்தியில் தான்
நிச்சயமாய் துவாரமொன்று இருக்கும் பாரு. (860)

இருக்கின்ற துவாரத்துக் கப்பா கேளு
இன்பமுள்ள கிருகவாயில் என்று பேராம்
பருக்கின்ற அத்துவாரம் அகலம் கேளாய்
பண்பாக விரல்நுழையும் துவார மாமே
நுரைக்கின்ற சுவாசிக்கும் குழலின் நேர்மை
நுணுக்கமாகச் சொல்லுகிறேன் நுண்மை யாக
திறக்கின்ற சுவாசத்தின் குழலுக் கப்பா
திரமான தமரகம் என்று பேராம். (861)

பேரான சுவாசத்தின் குழல்தா னப்பா
பிரியமுள்ள முருந்துகளால் உண்டாய்த் தோன்றும்
சீராக அஞ்சங்குல நீள மாகும்
சிறப்பாகக் குறிக்கிலொரு அங்குல மாமே
நேராகக் கீழிறங்கி நெஞ்சறைக்கு ளேகி
நிச்சயமாய் இருகிளையாய்ப் பிரியும் சொன்னேன்
வாராகச் சுவாசக்குழல் கிளையே யென்பார்
வண்மையுடன் அவைகள்செல்லும் வளமை பாரே (862)

வண்மையுள்ள வலதுஇடது புப்புசங்கள் சென்று
வகையான அனேக சிறுகுழலாய்த் தோன்றி
பண்மையுள்ள முடிவில் மெத்த சன்னமாகி
பரிவாகப் போவதினு லதற்கே கேளு
தளமான சுவாசப்பை கண்ணறையென்று போராம்
தண்மையுள்ள முருந்துகள்தான் செல்லச் சொல்ல
உளமாகக் குறைந்து அதுமுடிவி லப்பா
உள்ளபடி சவ்வாகித் தோன்றும் பாரே. (863)

## நுரையீரல்.

தோன்றியதோர் நுரையீரல் விவரங் கேளாய்
துய்ய நுரையீரல்கள் இரண்டே உண்டு
ஊன்றியே பக்கத்துக் கொன்றுத் தானே
உள்ள தொரு நெஞ்சறைக்குள் இதயத்தை
ஆன்றியே தழுவிக்கொண் டிருக்கும் பாரு
அப்பனே வெளிப்புறந்தா னுப்ப லாயும்
தான்றியே உள்புறந்தான் குடைவாயு மப்பா
தன்மையுடன் இருக்குமடா தரணி யோர்க்கே. (864)

தரணிதனில் மாந்தருக்கு சொல்லக் கேளு
தனியான ஈரலுட நுனிதா னப்பா
முரணைச் சிறுத்துமே குவிந்து கொண்டு
முக்கியமா யடிஅகன்று ஈரல் தாங்கிடுது
பரணிபோல் படிந்திருக்கு மப்பா கேளு
குணமாகப் பின்னுலே முள்ளந் தண்டு
சரணமாய்ச் சமீபம் தன்னில் வாழும்
சதிரான ஓரந்தான் உருண்டு கேளே. (865)

உருண்டுதான் பருத்துமே முன்பாக மப்பா
உள்ளபடி இருக்கின்ற ஓரம் பாரு
சிறுத்துமே கூர்மையாய் இருக்கும் சொன்னேன்
சிறப்பான வலதுபுறம் பிளவு மூன்றும்
இருண்ட தொரு இடதுபக்கம் பிளப்புரண்டாம்
இயல்பாக பகிர்ந்திருக்கும் எல்லாருக்கும் தான்
திரண்ட தொரு இருதயந் தான்
சிறப்பாக இருப்பதால் சொல்லக் கேளு. (866)

கேளடா இடது நுரையீரல் கொஞ்சம்
கடிசாகச் சிறுத்திருக்கும் உண்மை பாரு
நாளடா வெள்ளையுடன் சிவப்பும் சேர்ந்து
நன்மையுள்ள சாயலாய்த்தான் தோன்றும் பாரு
வாளடா அதன்மேலே புள்ளி தோன்றும்
வளமாக ஆருது பலமே யுண்டு
தேளடா வலதுபுறம் சொல்வேன் கேளு
தெளிவாக இரண்டுபலத் தூக்க மாமே. (867)

ஆமடா நுரையீரல் தனக் குள்ளே
அப்பனே சுவாசக்குழல் கிளைகளுந் தான்
நாமடா புப்புசத்தின் நாடிக்கும் தான்
நலமாகப் பிரவேசித் திருக்கும் பாரு
ஓமடா புப்புசத்தின் நாளங்க ளப்பா
உள்ளபடி வெளிப்பட்டுத் தோன்றும் பாரு
போமடா நுரையீரலுக் குள்ளி ருக்கின்ற
பொல்லாத கண்ணறையை ரத்தநரம்புக்குள் பாரே. (868)

## பரி புப்புச விவரம்.

பாரடா பரிபுப்புச விவாங் கேளு
பண்பான நுரையீரலைத்தா னப்பா பாரு
சீராக ஓர்வித சவ்வு அப்பா
கிரமமாக மூடிக்கொண் டிருப்ப தாலே
பாரான பரிபுப்புச மென்று பேராம்
பண்பாகப் பார்த்திட்டால் பைபோல் தோன்றும்
கூருக அதில்கொஞ்சம் சலமு முண்டு
கொத்தவனே சவ்வுவொட்டி யிருக்கும் பாரே. (869)

## வயிறு.

பாரடா வயிற்றுக்கு முன்னு மப்பா
பண்பாகப் பக்கத்தில் சொல்லக் கேளு
சீராக பழுவெலும்பும் சதையு முண்டு
சிறப்பாக முதுகினுட தண்டெலும் போடு
மாருமல் சதைகளுமே யுண்டு சொன்னேன்
மகத்தான மேல்புறமாய் உரந் தாங்கி
சீரான கீழ்ப்புறத்தில் இடைக்குதியு முண்டு
கீழ்வயிற்றுக் குள்ளிருக்கும் உறுப்பு கேளு. (870)

கீழடா தீனிப்பைக் குழல் தன்னோடு
    கணிதமுள்ள பகிர்தகண்டம் பீலித்தமு முண்டு
நாளடா மூத்திரக் குண்டிக்கா யிக்குள்
    நலமாக இவற்றில்தான் பிரிவைக் கேளு
பழான மேல்வயிற்றின் விவரங் கேளாய்
    பண்பான மேல்வயிற்றின் மத்தியத்துக் கேதான்
வாளான இலைவயிறு ஆமாசயத் தானம்
    வண்மையுள்ள இரைக்குழி ஈரல்குலை என்றும்பேரே. (871)

பேரான நடுவயிறு விபரங் கேளாய்
    பிலமான நடுவயிற்றின் மத்திக்கே தான்
சீரான உந்திதொப்புள் நாபித் தானம்
    சிறப்பான இதுகளுக்கு நடுவயி றென்பார்
கூரான வலதுஇட பக்க மாக
    கொப்பான மூத்திரக் குண்டிக் காய்கள்
நேராக இருக்குதப்பா இன்னங் கேளு
    நிச்சயமாய் நடுவயிற்றில் சொல்லக் கேளே. (872)

சொல்லுகிறேன் நடுவயிற்றின் பெருங்குடல் சிறுகுடலோடு
    சிறப்பான மஞ்சையுடன் மூத்திரக் குண்டிக்காய்கள்
வல்வினையா யிருக்குதென்று அறிந்து கொள்ளு
    வளமான அடிவயிறு விவரங் கேளாய்
எல்லையுள்ள அடிவயிற்றின் மத்திக்கே தான்
    இதமான அஸ்தியென்று சொல்ல லாகும்
பல்விதமாய் அதற்குள் இருக்கின்ற
    பாங்கான உறுப்புகளைச் சொல்லக் கேளே. (873)

உறுப்பான சிறுகுடல் சீகம்
    உரியதொரு மூத்திரத்தின் குழாயு முண்டு
மறுப்பான பெருங்குடல்கள் தானு முண்டு
    மாண்பனே இன்னமொன்று சொல்லக் கேளு
தெறிப்பான கவுட்டி விவரம் சொல்வேன்
    தெளிவான தோரமைப்பு தனக்கு அப்பா
குறிப்பாக அரைப்பூட்டு என்று பேராம்
    கொத்தவனே குடல்சவ்வு விவரங் கேளே. (874)

சவ்வான குடல்சவ்வு விவரங் கேளு
சாதமாய் வயிற்றுக்குள் இருக் கின்ற
மவ்வான உறுப்புடனே சதையு மப்பா
மறைத்துமே மூடிக்கொண் டிருக்கும் பாரு
அவ்வான வாயைப்போ லிருக்கும் பாரு
துப்புரவாய் அதற்குள்ளே சலமு முண்டு
இவ்வாருஞ் சவ்வப்பா மடித்துக் கொண்டு
ஈரண்டு புரைகளாய்தா விருக்கும் பாரே. (875)

இருக்குமடா திரணையைப்போல் குடலுக்கு முன்னுல்
இன்பமாய்த் தொங்கிக்கொண் டிருக்கும் பாரு
திறக்கின்ற அப்பைக்கு பேரு கேளு
சுகமான தொஞ்சை யென்றும் பேரென்பார்
பறக்கின்ற குடல்சவ்வில் கொழுப்பு முண்டு
பண்பான தூலஉதர முடையோர்க் கப்பா
சிறப்பான கொழுப்புத்தான் அதிகம் தோன்றும்
சீரான சிறுகுடலை யெல்லாம் கேளே. (876)

சிறுகுடலை முற்றுமே சேர்ந்து கொண்டு
சிறப்பாக முன்புறமாய் முள்ளந் தண்டு
பெருகியதோர் சவ்வுடனே ஒருசவ்வை யப்பா
மக்களுக்குப் பற்றியிருக்கும் மகிமை பாரு
குறுவான அதற்குத்தான் பேரு சொல்வேன்
கொற்றவனே மணிக்குடல்கள் என்று சொல்வார்
தெறுவான பத்தியாந்திரம் என்றும் பேராம்
தெளிவான இரைக்குழல் விவரங் கேளே. (877)

இரைக்குழல் விவரமதைச் சொல்லக் கேளு
இதமான வாய்முதலாய் ஆழம்வரையி லப்பா
குறைவன்றி நின்றிருக்கும் குழலுக்கே தான்
கூறுன இரைக்குழல் என்று பேராம்
திரையான தானங்கள் ஒவ்வொன் றுக்கும்
தக்கபடி ரூபங்கள் விகல்ப மாகும்
சிறையான வாய்தொண்டை அன்ன வாகி
சிறப்பான இரைப் பெருங்குடலு மாமே. (878)

ஆமேதான் சிறுகுழல்கள் என்றும் பேராம்
அப்பனே அந்தந்த தாளம் தன்னில்
சீமேவிப் போகின்ற வேளை தன்னில்
சிறப்பான முன்பேர்கள் சொன்னேம் பாரு
பாமேவும் வாயினும் விவரங் கேளு
பண்பான நாபற்கள் உதடு கன்னம்
பூமேவும் அண்ணம்ஈர் இவைகள் சேர்ந்து
புண்ணியனே வாயென்று பேரு மாச்சே. (879)

ஆச்சே கடை வாயின் பற்களுக்கு
அப்பனே பின்னுக இரு பக்கத்தில்
காச்சடா கோளங்கள் உண்டு பாரு
கனமான உதட்டினுட விபரங் கேளு
நீச்சடா உதடுதான் சதை களாலே
நிர்மலமாய் ஏற்பட்டு வெளியில் தோன்றும்
கூச்சடா உள்பக்கம் சிலேத்துமச் சவ்வு
கூடிகுணமாக மூடிக்கொண் டிருக்கும் பாரே. (880)

கேளடா கீழுதடு மேலுத்டுங் கேளு
பண்பாக மத்தியில்தான் எலும்புடன் சேர்ந்து
சீராக ஒட்டிக்கொண் டிருப்ப தாலே
சிறப்பாக அதற்குத்தான் பெரிணம் என்பார்
கூறுன கன்னத்தின் விபரங் கேளு
கொற்றவனே கன்னங்கள் சதைசருமத் தோடு
நேராக உண்டாயின பின்பு கேளு
நிச்சயமாய் அதிலொரு விவரங் கேளே. (881)

கேளடா கன்னத்தில் மேல்வாய் மத்தியத்தில்
கெடிதான கடைவாயின் பல் ஓரமாக
நாளடா ஓர்சிறிய குழல்தா லுண்டு
நலமாக அதிலிருந்து உமிழ்நீர் தோன்றும்
மூளடா ஈரினுட விவரங் கேளு
முக்கியமாய் சவ்வுதான் தடித்தே காணும்
நாளடா நாக்கினுட விவரங் கேளு
நிச்சயமாய் சதைப்பத்தால் இருக்கும் பாரே. (882)

இருக்கின்ற நாக்குத்தான் சதைக ளாலே
இதமாக ஏற்பட்டுப் போன பின்பு
பறக்கின்ற சேத்துமத்தின் சவ்வு அப்பா
பண்பாக நாக்கைத்தான் மூடிக் கொள்ளும்
துறக்கின்ற நாக்குக்கு அப்பா கேளு
துடிப்பான அடிச்சவ்வு மடிப்புக்கே தான்
நிற்கின்ற பிரிணமென்று சொல்வோர் மேலோர்
நிர்மலமாய் யிருபக்கம் குழல்தா னுண்டே. (883)

உண்டான குழலினின்று உமிழ்நீ ரப்பா
உத்தமனே வடியுமென் றுறுதி சொன்னேன்
கன்றான உள்நாக்கு விபரங் கேளு
நலமான சதைகளால் உண்டாம் பாரு
முண்டான பதார்த்தத்தை விழுங்கும் போது
நலமான அண்ணத்தின் சதைக ளப்பா
தண்டான நாசியின்பின் துவாரந் தன்னை
தான்மூடிக் கொள்ளுமடா தன்மை பாரே. (884)

தன்மையா யப்போது மத்தியத்தில் தான்
கொஞ்சம் சந்திருக்கும் தகவலாக
உண்மை யதைத்தானே உண்ணுக் கென்பார்
உத்தமனே மூடிக்கொண் டிருக்கும் பாரு
பண்ணினதோர் பதார்த்தங்கள் அப்பா கேளு
பண்பான நாசிகாத் துவாரந் தன்னில்
மூடிக்கொண் டிருப்பதாலே மூக்கில் தான்
போகாது முதுமை யோர்க்கே. (885)

முதுமையுள்ள தொண்டைதொடை இருபக்கந் தன்னில்
முக்கியமாய் நாக்கினுட சமீபத்தில்
பதுமைபோல் கோளங்கள் உண்டு பாரு
பண்பான அக்கோளம் வீங்கிக் கொண்டால்
கதுமையாய்ச் சைத்தியக் கட்டி யென்பார்
கதிப்பாக இந்நோய்தான் யிருந்த தானல்
இதமாக இந்நோய்தான் வருகு மென்று
இப்புவியில் நானுரைத்தேன் உனக்குத் தானே. (886)

தானான உமிழ்நீர்க் கோளங் கேளு
தன்மையுள்ள கோளங்கள் பக்கம் மூன்றாய்
தேனான ஆறுஉமிழ்நீர் கோளங்க ளுண்டு
தெளிவான காதுக்கு முன்பு கேளு
மானான ஒருகோளம் உண்டு பாரு
அப்பனே அதற்குத்தான் செவியிடிக் கோளமென்பர்
ஊனான கோளங்கள் தனக்கே யிந்த
உத்தமனே கோளந்தான் பெரிதாம் பாரே. (887)

பெரிதான கோளத்தின் இடமாய்த் தோன்றி
பிரிந்துமே வருகிற குழலைப் பார்த்தால்
கரியான கன்னத்தில் குறுக்கா யோடி
கடிதான மேல்வாயின் கோளஞ் செல்லும்
கரியான தாடையுட உட்கோள மப்பா
கீழ்த்தாடை எலும்பினுட உட்புறந் தன்னில்
பிரிவாக ஓடியே நாவுக்கடியில் தோன்றும்
பின்சவ்வும் அடியினுட பக்கங் கேளே. (888)

## தொண்டை.

போமடா தொண்டையுட விவரங் கேளு
பொல்லாத சதைகளும் சவ்வுங் கூடி
நாமடா பையைப் போலிருக்கும் சொன்னேன்
நலமான முன்தண்டின் மேலே சாய்ந்து
ஓமடா குரவளைக்குப் பின்புற மதாக
உத்தமனே நாலங்குல நீள முண்டு
காமடா காதுனுட இருபக்கந் தன்னில்
கதிப்பாக வருகிற குழல்தான் பாரே. (889)

## அன்னவாகி.

குழலினுட முனைவந்து தொண்டை யப்பா
குறிப்பாக முடியுமென்று தெரிந்து கொண்டு
அழகான அன்னவாகி சொல்லக் கேளு
அப்பனே தொண்டையுட அடியில் தோன்றி
பழகினதோர் இரைப்பைக்கு செல்லு கின்ற
பண்பாகத் தடித்ததொரு குழலுக்கே தான்
கிழமான அன்னவாகி என்று பேராம்
கேள்மகனே அதுநிற்கும் இடத்தைக் கேளே. (890)

கேளடா இதுசுவாசக் குழலுக் கப்பா
　　கெடியாக பின்னிருக்கும் உண்மை பாரு
நாளடா இதன்நீளம் சொல்லக் கேளு
　　நலமாக ஓரடிதா னிருக்கும் சொன்னேன்
வாளடா இதன்வழியாய் அன்னம் முற்றும்
　　வளமாகச் சென்றுமே இரைப்பையில் சேர்ந்து
கேளடா சேர்ந்துதான் தேகந் தன்னை
　　கொற்றவனே வளர்க்குமென்று கொழுமை பாரே (891)

கொழுமையுள்ள இரைப்பையின் விவரங் கேளாய்
　　குறிப்பான இரைப்பைதான் துருத்தி போலே
வலுவாகி வளைந்துமே இருக்கும் பாரு
　　வன்மையுள்ள பீலிகா ஸ்தானம் நின்று
பழுவான ஈரல் குழிக்கு மையா
　　பரிவாக ஒட்டியே இருக்கும் பாரு
தெளிவான சதைகளும் சவ்வும் சேர்ந்து
　　தேகத்தில் உண்டாகி இருக்கும் பாரே. (892)

உண்டான இரைப்பைக்கு துவாரம் இரண்டு
　　உத்தமனே இருக்குதடா உறுதி பாரு
நண்டான ஒன்றுதான் அன்னவாகி யோடும்
　　நலமான மற்றொன்று சிறுகுட லோடும்
செண்டாகச் சேர்ந்திருக்கும் அதிலே கேளு
　　செயலான விருத்தசவ்வு மடிப்பொன் றுண்டு
கண்டான கவாடமது ஒன்றுண்டு
　　கடிதான அதன் குணத்தைக் கூறுவேனே. (893)

கழறுவேன் கவாடத்தின் குணமே தென்னில்
　　கண்டிப்பாய் தகிக்காத பதார்த்தந் தன்னை
வளமான குடலுக்கு போகொட் டாமல்
　　உள்ளபடி தடுத்துவிடும் உறுதி பாரு
தளமான இரைப்பைக்கு வளைவு ரெண்டு
　　தானிருக்கு மதிலொன்று சொல்லக் கேளு
மழமாக சிறுத்தொன்று மேல்புற மாயும்
　　பண்பாக மற்றொன்று பெருத்துக் கேளே. (894)

பெருத்துமே கீழ்ப்புறமாய் இருக்கும் பாரு
பிலமான அதன்பருமன் சொல்லக் கேளு
துருத்தியாய் குழாய்க்குள் சலந்தா னப்பா
துப்புரவாய் நாலுஎட்டு படிதான் உண்டு
பெருத்துமே செல்லுகின்ற இடந்தா னுண்டு
பொல்லாத சிலேட்டுமச்சவ்வு நீண்டிருக்கும் பாரு
தரித்துமே அவைகளுக்கு ருஜு என்பார்
தண்மையுடன் இன்னமொன்று சொல்லக் கேளே (895)

கேளடா அவைநின்று அன்னந் தன்னை
கெடிதாகத் தகிக்கின்ற விவாங் கேளு
நாளடா யொருவித புளிப்புதிரவ மப்பா
நன்மையுடன் சனிக்குமடா நரர்க் கெல்லாம்
வாளடா அதற்குத்தான் சடராக்கினி யென்பார்
வளமான தீனிப்பைக்குப்பின் சவ்வுநெளி வென்றும்
கேளடா சவ்வுகள்தா னுண்டு பாரு
கொற்றவனே இதுகேட்டால் குழப்ப மாமே. (896)

## சிறுகுடல் வயிறு பங்கு மூன்று என்று அறியத்தக்கது.

ஆமடா சிறுகுடலின் விவரங் கேளு
அப்பனே சிறுகுடலின் நீளந் தன்னை
ஓமடா சொல்லுகிறேன் உண்மை யாக
உள்ளபடி இருபதடி நீள முண்டு
நாமடா சிலருக்கு அப்பா கேளு
நலமாக இருபத்தைந்தடி நீள முண்டு
தேமடா இதுதான் திரேகத் திற்கு
தெளிவாக ஆறுபங்குநீண் டிருக்கும் பாரே. (897)

பாரடா இதில்மூன்று பிரிவே யுண்டு
பக்குவமா யதற்குத்தான் பேரு சொல்வேன்
கூறுன இலியமுடன் ஜிஜினம் என்றும்
கொற்றவனே டியோடின மென்று முண்டு
சீரான டியோடின மென்று சொல்லும்
சிறப்பான துணைக் குக்ஷியப்பா கேளு
மாருத இரைப்பையைத் தொடர்ந் திருக்கும்
மகிபனே அதன்நீளம் சொல்லக் கேளே. (898)

கேளடா எட்டுபத் தங்குலமே யுண்டு
கெடிதான தினிப் பைக்குப் பின்னால்
வாளடா சேர்ந்துதா னிருக்கும் பாரு
வளமான இதில்சொந்த பித்தப்பைக் குழாயப்பா
நாளடா கணையக் குழலும் சேர்ந்து
நன்றாக முடிந்திருக்கும் நன்மை யாக
தேளடா ஜிஜினக் குடலைக் கேளு
தெளிவான துணைக்குகுழியைத் துடர்ந்திருக்கும் பாரே. (899)

தொடர்ந்திருக்கு மிக்குழலில் அப்பா கேளு
தொல்லுலகில் மாந்தர்கள் இறந்த பின்பு
அடர்ந்துமே ஒன்றுந்தான் இருக்கா தய்யா
அப்பனே இல்லியக் குடலோ பாரு
படர்ந்துமே ஜிஜினக் குடலைத் தானே
பற்றியே பெருங்குடலைப் போய்ச்சேருங் கண்டாய்
கடந்த உந்தித்தான அடிவயிறு மப்பா
கடிதான இடைக்குழியில் நிறைந்திருக்கும் பாரே. (900)

நிறைந்த சிறுகுடலுக்குள் விருத்த மாயும்
நீண்டபிறை போலிருக்கின்ற மடிப்புச் சவ்வும்
பரந்துமே யிருக்குதடா அவையில் பாரு
பண்பான ரசாயனிகள் மணிக்குடலில் சென்று
சிறந்த அன்னரசத்தை கிரகித்து வாழும்
சிறப்பான ரசாயினிகள் மணிக்குடலில் சென்று
கரந்துமே ஒன்றேடொன்று சேர்ந்து கொண்டு
கடிதான ரசதாரை கலந்து போமே. (901)

கலந்துநிற்கும் பெருங்குடலின் வீவரங் கேளாய்
கனமான இதன்நீளம் ஆறடி தானுண்டு
மலர்ந்துவரும் அடிவயிறு வலது பக்கம்
மகத்தான பள்ளத்தி லிருந்து தோன்றி
உலர்ந்துமே மேலேறி உந்தி தன்னில்
உற்பனமாய்க் குறுக்காகச் சென்று பின்பு
அலர்ந்த இடப்பக்கமாய் கீழே தோன்றி
அப்பனே இடது அடிவயிறு கேளே. (902)

வயிற்றினுட பள்ளத்தில் வளைந்து அப்பா
வளமான திரிகஸ்தான எலும்புக் கப்பால்
கயிற்றைப்போல் கீழிறங்கி குதத்தில் போகும்
கனமாக இதுஓடும் இடங்கள் தன்னில்
தயித்தியமுள்ள திரிகஸ்தான எலும்புக்கு முன்னுல்
தானிருக்கும் குடலுக்கு மலக்குட லென்றும்
சயித்தியமுள்ள முடிவுக்கு குதமாசனம் பவனவாய்
என்று சாத்திஞர் எனத்தான் சாத்திஞரே. (903)

சாத்திஞர் இன்னமொன்று சொல்வேன் கேளு
சரியான சிறுகுடலும் பெருங்குடலு மப்பா
போத்தியதோர் சந்திப்புத் தானந் தன்னில்
பொல்லாத கவாடங்க ளிரண்டே யுண்டு
ஆற்றியே பகிர்தகண்ட விவரங் கேளு
அப்பனே மேல்வயிற்றின் வலது பக்கம்
தேற்றியே இருக்கின்ற உறுப்புக் கப்பா
தெளிவான பகிர்தகண்டம் என்றும் பேரே. (904)

பேரான பகிர்தகண்டம் ஈரக்குழியி லப்பா
பிலமாகச் சென்றிருக்கும் பேணிப் பாரு
காரான தேகத்தின் உறுப்புக் குள்ளே
கடினமாய் இதுபெரிது கண்டு தேரே
ஊனுன மேல்புறந் தானுப்ப லாயும்
உள்ளபடி அடிப்புறந்தான் குடைவாய்க் காணும்
சீரான பழுவைத்தான் தூக்கிப் பார்த்தால்
சிறப்பாக நாலுபத்து பலமிருக்கும் பாரே. (905)

பாரடா நீளந்தான் பதினைந்தங்குலமே யாகும்
பண்பாக முன்னோரங் கூர்மையாய்த் தோன்றும்
சீரடா பின்பக்கம் உருண்டிருக்கும் பாரு
சிறப்பான பக்கத் துறுப்புடன் கூடி
கூறடா சவ்வால்தான் கட்டப் பட்டு
கொற்றவனே ஈரலுக்கடியில் நீநோக்கிப் பாரு
ஆரடா ஓரைந்து வெடிப்பே காணும்
அப்பனே ஒன்றில்தான் இன்னங் கேளே. (906)

இன்னங்கேள் பகிர்தகண்டம் வெடிப்பி லப்பா
இதமான பித்தப்பை இருக்கும் பாரு
உன்னிதமாய் பகிர்தகண்டந் தனக்குள் கேளு
உத்தமனே பித்தநீர் சுரப்பிக் கின்ற
பண்ணியதோர் தொழில்கள்தா னதற்கே யுண்டு
மகத்தான கெட்டரத்தந் தன்னில் தோன்றும்
பின்னமுள்ள தோஷத்தை நீக்குந் தன்மை
பிலமான பகிர்தகண்டம் செய்யும் பாரே. (907)

பகிர்தகண்ட குழலுக்குப் பேரு கேளாய்
யேறிவரும் பித்தநீர் தன்னை யப்பா
முகித்துமே கொண்டுசெல்லும் குழலுக் கப்பா
முக்கியமாய் பகிர்தகண்டம் என்றும் பேராம்
தகிக்கின்ற பித்தப்பை விவரங் கேளு
தன்மையுள்ள பித்தாசய மிதுவே யாகும்
இகத்திலிது ஈரலுக்கு கீழே தோன்றும்
இதமான வெடிப்பில்தான் ஒட்டியிருக்கும் பாரே. (908)

ஒட்டியே கூச்சாக இருக்கும் பாரு
ஓயாத அடிவழியில் பிதுங்கிக் காணும்
பட்டியாம் பித்தப்பை குழலுக் கப்பா
பண்பான பகிர்தகண்டங் குழலுள் சேர்ந்து
ஒட்டியே ஒன்றாகச் சேர்ந்து கொண்டு
இதமான பித்தக் குழலாகத் தோன்றும்
கட்டியாய்க் கணைய குழலோடு சேர்ந்தோடி
கனமான துணைக்குகுழி சென்று பாரே. (909)

சென்றுமே உள்ளேதான் பிரவே சித்து
சிறப்பான வொருகுழல் முடிந்து போகும்
ஒன்றான பகிர்தகண்டம் தன்னிலே தோன்றும்
உத்தமனே பித்தநீர் பித்தப் பையில்
சென்றுமே தங்கியிருக்கும் நேர்மை கேளு
சிறப்பாக நாம்வேண்டும் போது பாராய்
கன்றுபால் இறங்கும் நேர்மை போல்
கண்மணியே துளித்துளியாய் இறங்கும் பாரே. (910)

இறங்கியே அன்னத்தின் பாகத் தோடு
இதமாகச் சேர்ந்து விடும் இனிமையாக
துறந்துமே எப்போதும் போகா தப்பா
துய்யதோர் சீரணத்தின் சமயந் தன்னில்
சிறந்ததொரு இந்தநீர் போய்ச் சேரும்
சிறப்பான இந்நீரின் குணத்தைக் கேளாய்
கறந்துமே நாமுண்ணும் உணவை முற்றும்
கண்டிப்பாய் பிரித்துவைக்கும் குணத்தைக் கேளே. (911)

கேளடா ரசம்வேருய்த் திப்பி வேருய்க்
கெணிதமுடன் செய்தபின்பு மலத்தைப் போக்கும்
நாளடா கணையத்தின் விவரங் கேளு
நலமாகத் தட்டையாய் ஆறங்குல நீளமுண்டு
வாளடா அதன்நிறைதான் சொல்வேன் பாரு
வளமான பலம்நாலு இருக்கும்தான் பாரு
ஆளடா அன்னுசயத் துக்குப் பின்னல்
அப்பனே குறுக்காக இருக்கும் பாரே. (912)

குறுக்கான இதன்குழல்தான் பித்தக்குழலே சேர்ந்து
குப்பிஎன்ற துணைக்குகுழி போய்ச் சேரும்
பெறுக்கான இதன்குணந்தான் சொல்வேன் கேளு
பிலமான உமிழ்நீர்போல் திரவந் தன்னை
சுரப்பிக்கும் குணந்தானப்பா இதற்கே யுண்டு
சுளுவாக அத்திரவங் கொழுப்பைத் தானே
தீர்க்கமுடன் தகிக்குமென்று சொன்னேன் பாரு
திரமான கணையத்தின் நேர்மை தானே. (913)

## பீலிகஸ்தான விவரம்.

தானன பீலிகத்தின் நேர்மை கேளு
தண்மை யுள்ள மண்ணீரலைத் தானும்
ஊனன வாவீரல் கருப்புஈர லோடு
உள்ளபடி சுவரொட்டி என்னும் இந்த
தேனன உறுப்புகள்தான் பீலி கத்தில்
தெளிவாக இருக்குதடா திறமை பாரு
மானன அதன்நிறந்தான் சொல்லக் கேளு
மகத்தான சிவப்புடனே நீல மாமே. (914)

ஆமேதான் இதுரண்டுங் கலந்தாப் போலே
அப்பனே அஞ்சங்குல நீள மாயும்
தாமேதான் பலமஞ்சு தூக்க மாயும்
தன்மையுள்ள ரத்தத்தின் நரம்பால் தோன்றி
காமேதான் கடல்பாசி தன்னைப் போல
கடனம் மிருதுவாக இருக்கும் பாரு
போமேநீ அழுத்தியதைத் தொட்டா யானல்
பொங்கமுடன் அதுதான் உடைந்து போமே. (915)

போமடா வெளிப்புறந் தான் உப்பலாயும்
பொங்கமுடன் உட்புறம் குடைவாய்க் காணும்
ஆமடா தீனிப்பையோ டிணைந்திருக்கும் பாரு
அப்பனே தேகந்தான் குளிர்ந்திருக்கும்போது கேளாய்
நாமடா சருமத்தி லிருக்கும் இரத்தம்
நலமாக உள்ளிறங்கி பிலிகத்தில் தங்கும்
ஓமடா சீதசுரங் கண்ட தானல்
உத்தமனே பிலிகந்தான் பெருத்துக் காணும். (916)

காணுகின்ற வேளைதன்னி லப்பா கேளு
கனமான அதற்குத்தான் கட்டி என்பார்
பூணவே மூத்திரக் குண்டிக்காய் தன்னை
புகலுவேன் நீயறிய புதுமை கேளு
ஆணவே மூத்திரப் பிண்டங்கள் தானும்
அழகான பிருகங்களி லிவைக ளப்பா
தோணவே தங்களிட ஸ்தானந் தன்னில்
பொலிவான முள்ளந் தண்டுக்குக் கேளே. (917)

கேளடா இருபக்கம் ஒட்டியிருக்கும் பாரு
கெடிதாக அதன்நீளம் அஞ்சங்குலமே யுண்டு
நாளடா ஆகத்தில் மூணங்குலமே யாகும்
நலமாக ஓரங்குல கனமே காண்பாய்
தேளடா ரூபத்தில் மாம்பருப்பைப்போலே தோன்றும்
தெளிவாக நாலுபலந் தூக்க முண்டு
வாளடா எப்போதுங் கொழுப்பை மேலே
வளமாக ஒட்டிக்கொண் டிருக்கும் பாரே. (918)

பாரடா இவற்றைத்தான் நீளந் தன்னில்
பண்பாக நீயடுத்துப் பார்த்தா யானல்
கூறடா உள்ளேதான் இரண்டுவிதமே தோன்றும்
கொத்தவனே அதன்விவரம் சொல்லக் கேளு
சீரான வெளிப்புறந்தான் ரத்தநரம்பு தன்னல்
சிறப்பாக ஏற்பட்டு சிவந்து காணும்
மாருத அகப்புறந்தான் குழல்கள் தன்னல்
வண்மையுடன் ஏற்பட் டிருக்கும் பாரே. (919)

ஏற்பட்டு மொஜன் போலிருக்கும் பாரு
இதமான மொஜன்முன் உள்ளே நோக்கில்
சீர்பட்ட சிறியதோர் பள்ளந் தன்னில்
சிறப்பாக பிதுங்கியே இருக்கும் பாரு
வார்பட்ட முளைகளைத்தான் பார்வை யிட்டால்
வளமான சிறியதொரு துவாரங்க ளப்பா
தோற்றியே கண்ணுக்குக் காணும் சொன்னேன்
தொல்லுலகில் இன்னமொரு விவரங் கேளே. (920)

விவரமுள்ள துவாரங்கள் தன்னில் நின்று
விவரமுள்ள மூத்திரங்கள் சுரக்கும் பாரு
பவளமுள்ள மூத்திரக் குண்டிக்காயி னின்று
பண்பாகச் சவ்வுக்குழலொன்று பிறக்கும் பாரு
கவலைபோல் கீழுக் கிறங்கி யப்பா
கண்டிதமாய் மூத்திரப் பையி னேடு
திவலைபோல் சம்மந்தப் பட்டிருக்கும் சொன்னேன்
அதற்குத்தான் மூத்திரக்குண்டிக்காய்க ளென்று பேரே. (921)

## இடைக்குழி விவரம்.

பேரான இடைக்குழியில் சொல்லக் கேளு
பிலமான மூத்திரப்பை மலக்குடல் ரெண்டு
சீராக இருக்குதடா கண்டு சொன்னேன்
சிறப்பான மூத்திரப்பை விவரங் கேளு
கூருன சதைகளுஞ் சவ்வுஞ் சேர்ந்து
கொத்தவனே இருக்குதடா குறிப்பாய்ச் சொன்னேன்
சீரான மூத்திரந்தான் நிறைந்தால் பாரு
சிறப்பான அண்டாசாரமா யிருக்கும் பாரே. (922)

அண்டா சாரமாய் மர்ம ஸ்தானம்
அப்பனே எலும்புக்குப் பின்னால் கேளு
திண்டாக இணைந்து கொண்டிருக்கும் சொன்னேன்
தீராத மலக்குடல்மேல் பாலித்துக் காணும்
ஒன்றாக அங்குமிங்கு நழுவ வொட்டாமல்
உத்தமனே சவ்வுகளால் பக்கத்தில் தோன்றும்
பண்டான உறுப்புடனே கட்டியிருக்கும் பாரு
பாரினிலதற்குத்தான் பந்தகங்க ளென்று பேரே. (923)

கோளான மூத்திரப்பை சிகர நின்று
கொற்ற ஒருநரம்பு மேலுக்கே தான்
நீளமாய் ஓடியே உந்தி தன்னில்
நிச்சயமாய் ஒட்டியிருக்கும் நிலைமை பாரு
தேனான குழந்தையில் அந்நரம்பு கேளாய்
தெளிவான நாபிநின்று வயிற்றுக் குள்ளே
வாளாகச் செல்லுகின்ற ரத்தநரம்பு தன்னில்
வளமான விகர்ப்ப மென்று வளமை பாரே. (924)

## இந்திரியக் கமலங்கள்.

வண்மையுள்ள இந்திரியக் கமல நேர்மை
வளமாகச் சொல்லுகிறேன் வடிவமாய்க் கேளு
தன்மையுள்ள மூத்திரப்பை கட்டில்லா தளமாக
முகுளாகாரமாய் பக்கத்துக்கொன்றாய் கண்ணிய மாகி
கண்ணியமாய் உறுப்புக்கண்டு ஒட்டிக் கொண்டு
கனமாக ஒவ்வொன்று யிருக்கும் பாரு
பண்டிதனே அவைகட்கு இந்திரியகமலங்க ளென்று
பாடினார் முன்னோர்கள் பாடினாரே. (925)

பாடினார் அதன்நீளம் சொல்லக் கேளு
பக்குவமாய் இரண்டங்குல நீள முண்டு
தேடியே மலப்பையோடு இணைந்து இருக்கும்
தெளிவான முக்காலங்குலக் குழலொன் றுண்டு
வாடியே அக்குழல்தான் இந்திரியக்கமல குழலாகும்
வளமாக நீர்த்தாரை ஆரம்பந் தன்னில்
ஓடியே இருக்கின்ற குமிழில் போயி
உத்தமனே சேர்ந்துவிடும் உறுதி தானே. (926)

## நாக்கு.

தானான நாக்கினிட விவரங் கேளு
    தன்மையுள்ள நாக்கய்யா சதைகள் தன்னால்
ஊனாக ஏற்பட்டு நாக்கெ லும்போடு
    உள்ளபடி ஒட்டிக்கொண் டிருக்கும் பாரு
தேனான நாக்கினுட அடியி லப்பா
    தெரியுமே சவ்வுதான் படிந்திருக்கும் பாரு
ஊனாக அதன் ரெண்டுபக்கந் தன்னில்
    உமிழ்நீர் கோளத்தின் குழல்தான் பாரே. (927)

பாரடா துவாரங்கள் இருக்கும் பாரு
    பக்குவமாய் நாக்குமேல் தோன்று கின்ற
சீரான முள்ளுக்கு நாக்கடுளன்று பேராம்
    சிறப்பான அடிநாவில் முள்பெரிதாய் தோன்றும்
பாரான சுரம்வந்தால் அப்போ பாரு
    பண்பாக அவைகள் நீண்டு காணும்
கூறான புளிபட்டால் முட்கள் நீளும்
    கொற்றவனே நாக்குக்கு நரம்பு முண்டு. (928)

மூன்றான நரம்புகள் தானப்பா கேளு
    முடிந்துவிடும் நாக்கினுட உள்ளுக் குள்ளே
தோன்றாத சர்மத்தின் விவரங் கேளு
    துப்புரவாய் சரீரத்தை மூடிக் கொண்டு
ஊன்றியே இருக்கின்ற தோலுக் கப்பா
    உள்ளபடி புரைரெண்டு இருக்கும் பாரு
ஆறியே மேல்தோலுக்கு பீத்தோ லென்றும்
    அப்பனே அடிக்குத்தான் உட்தோலென்றும் பேரே. (929)

தோலான உள்ளங்கை உள்ளங்கா லப்பா
    தோல்மெத்த கனமா யிருக்கும் பாரு
வாலான கண்ரப்பை ஆண்குறியி னோடு
    வளமான அண்டகோசம் தன்னில் காணும்
சீரான தோல்கள்தான் மிருது வாக
    சிறப்பாகத் தோன்றுமடா மாந்தர்க் கெல்லாம்
கோலான மேல்தோல் உள் தோலுக்கு
    கொற்றவனே மத்தியிலோர் பதார்த்த முண்டே. (930)

உண்டான பதார்த்தந் தனக்கு அப்பா
உத்தமனே சருமமத்திய பதார்த்த மென்பர்
இரண்டான சரீரத்தின் நிறத்தைக் காட்டும்
நலமான உஷ்ணமுள்ள தேசந் தன்னில்
பண்டான அதிகநிறம் பலவிதமாய்க் காட்டும்
பரிவான சீதள தேசத் தோர்க்கு
வெண்டான வெண்மைநிறம் காட்டும் பாரு
வேறான தோல்ப்பசையின் குணத்தைப் பாரே. (931)

குணமான உட்தோல்தான் நரம்பா லப்பா
கொற்றவனே பரிசத்தின் நரம்பால் தோன்றும்
பண்பாக ஏற்பட்டு சருமந் தன்னில்
பக்குவமாய் வேர்க்குருபோல் காணும் பாரு
கணியான இவைகளில்தான் பரிசநரம்பே யுண்டு
கண்மணியே ஊசிநாட இடமில் லாமல்
அணியாக நெருக்கமுடன் ரத்தநரம்புகள் தானும்
அப்பனே பரிசத்தின் நரம்பு முண்டே. (932)

நரம்பான தோலுக்கு அடியில் அப்பா
நன்மையுள்ள கொழுப்புகள்தான் இருக்கும் சொன்னேன்
புறம்பாக அதில்தானே சுவேத கோளம்
புதைந்துதா னிருக்குடா புதுமை யாக
நிரம்பியே அதினின்று உண்டாம் வேர்வை
நிச்சயமாய் சருமத்தின் துவாரந் தன்னில்
பரம்பியே வந்துவிடும் வெளியி லப்பா
பண்பாக இன்னமொன்று சொல்லக் கேளே. (933)

கேளடா சருமத்தின் கீழே பாரு
கெடிதான நீளகோணந் தெரியும் பாரு
நாளடா அவைகள்தான் ரோமக் காலில்
நலமாக ஒட்டிக்கொண்டிருக்கும் பாரு
வாளடா அவைநின்று உண்டா கின்ற
வலயெண்ணெய் பசையினுட வலிமை பாரு
தேளடா ரோமக்கால் வழியே போகும்
தெளிவான தோல்தான் மிருதுவாய்ப் போமே. (934)

## நகம், உரோமம்.

போமடா நகத்தினுட விவரங் கேளு
பொல்லாத வெளித்தோலில் உண்டாம் பாரு
நாமடா நகத்துக்கும் வெளித் தோலுக்கும்
நலமான வித்தியாசம் ஒன்று மில்லை
ஓமடா ரோமத்தின் விவரங் கேளு
உத்தமனே ரோமந்தான் வெளித்தோல் தன்னில்
தாமடா உண்டாகி வெளியே வந்து
தனித்தனியாத் தோன்றுமடா தரணி யோர்க்கே. (935)

தரணிதனில் ரோமந்தான் சில பாகத்தில்
தக்கபடி குறுகலா யிருக்கும் பாரு
சிரந்தனில் ரோமந்தான் நீண்டு போகும்
சிறப்பான மீசைமுதல் தாடி தன்னில்
திரமாக ரோமங்கள் தளமாய்க் காணும்
துப்புரவாய்ப் பார்த்தாக்கால் துவாரந் தோன்றும்
உரமாக அதில் யெண்ணெய்ப் பசைதான் காணும்
உத்தமனே அதன்நிறமே கறுப்பா யிருக்கும். (936)

## மாமிச விவரம்.

ஆமடா மானிட திரேகந் தன்னில்
அப்பனே இருக்கின்ற சிவந்த மாமிசங்கள்
தாமடா அடுக்கடுக்காய் அமைந் திருக்கும்
தன்மையுடன் சிலது தான் அகலமாயும்
நேமடா சிலதுதான் நீண்டிருக்கும் பாரு
நீபாரு அனேக சிறுகிளைகள் சேர்ந்து
ஓமடா ஒவ்வொரு மாமிசங்க ளப்பா
உத்தமனே ஏற்பட்டு இருக்கும் பாரே. (937)

பாரடா கிளைகளையும் மாமிசத்தை யப்பா
பண்பாக ஒன்றேடொன்று சேர வேண்டி
சீரான வலைபோன்ற சவ்வால் கட்டி
சிறப்பாக இருக்குதடா தெரிந்து கொள்ளு
நேரான எலும்போடு ஒட்டி இருக்கும்
நிசமான மாமிசமுகம் வெளுத்துக் கேளு
பாரான பலரூபமாகக் கடைக் கூட்டும்
பண்பான அகலமுடன் நீண்டுகாட்டும் பாரே. (938)

காட்டுகின்ற மாமிசத்தின் முனைக்கே யப்பா
கனமான மாமிசத்தின் தந்தி யென்பார்
கூட்டுகின்ற சதையினுட மத்தி யத்திற்கு
கொற்றவனே உடலென்று சொல்வார் மேலோர்
வாட்டமுள்ள சரீரத்தின் சதைக்குள்ளே தான்
வளமாக இரண்டுஜாதி உண்டு பாரு
தேட்டமுடன் ஒருஜாதி மனதுக்கேற்றபடி அசையுஞ்சொன்னேன்
தெளிவான அதற்குப்பேர் மனதுக்கினிய சதையாமே. (939)

சதையான மற்றொரு ஜாதி கேளாய்
சதிராகச் செயலாய் அசையும் பாரு
சிதையாத அச்சதைதான் மனதுக் கப்பா
சிறப்புற்ற ஐக்கியமில்லாச் சதையே யென்பார்
பதையாத இரைப்பைக்குடல் இருதயந் தன்னில்
பண்பாக இருக்கின்ற சதைக ளெல்லாம்
இதமாகத் தற்செயலாய் நடக்கும் நேர்மை
இன்பமுடன் அவைகளுக் குண்டு பாரே. (940)

உண்டான சதைகள்தான் மனதுக் கப்பா
உத்தமனே ஒருநாளும் வசப் படாது
பண்டான யோகிஎன்றால் ஒவ்வொன்றுந் தான்
பக்குவமாய் அவனுக்கு வசமே யாகும்
செண்டான திரேகந்தான் வசப்பட் டாக்கால்
சுரூபத்தின் நீ யறிய லாகும்
பண்டிதனே அதற்குவகை தெரிய வென்றால்
பாரேநீ யோகநூல் தன்னைப் பாரே. (941)

தன்னைத்தான் அறிந்தாக்கால் அப்பா கேளு
தாளான முனைவாசல் திறக்கும் பாரு
உன்னித்தான் பார்த்தாக்கால் திரேக நேர்மை
உனக்குள்ளே தெரியுமடா ரூப மெல்லாம்
பின்னைஒன்றால் தெரியாது மனித திரேகம்
பிலமாக வெரிந்த இடங்கள் முற்றும்
வன்விகர்ப்ப முண்டவர்கள் சொல்வார் சொல்வார்
வகையான மனிதனுட திரேகம் கேளே. (942)

கேளடா மனிதனின் திரேகந் தன்னில்
கெடியாக அனேகவித சதைக ளுண்டு
நாளடா அவற்றுக்குள் நானூற் றைந்து
நலமான சதைகள் தானிருக்கும் பாரு
தேளடா மாமிசத்தின் சலனத் தாலே
தெளிவான திரேகத்தின் வியாபாரம் முற்றும்
கேளடா நடுக்குதென்று தெரிந்து கொள்ளு
கொற்றவனே இன்னுந்தான் சொல்வேன் கேளே.(943)

மாமிசத்தின் தொழிலை நன்றாய் சுகமாக
நீயறிய சொல்வேன் பாரு
நல்வினைசெய் நெற்றியுட சதைத்தான் ஐயா
நலமாக சுருங்கிடுகில் புருவம் தானும்
வில்போலே மேலுக்குப் போகும் பாரு
விதமான கண்குழிப்பைச் சுற்றிக் கொண்டு
பலவிதமா யிருக்கின்ற சதைகள் தானும்
பக்குவமாய் சுருங்கினல் சொல்வேன் பாரு. (944)

பாரான கண்கள்தான் மூடிக் கொள்ளும்
பரிவான மூக்கின் அடியில் தோன்றும்
சீரான சதைகள்தான் சுருங்கி னுக்கால்
சிறப்பாக மேலுதடு உயரப் போகும்
ஊராத உதடுசதை சுருக்கங் கொண்டால்
உத்தமனே வாய் மூடும் உறுதியாக
கோராத முகரைசதை சுருங்கி னுக்கால்
கொற்றவனே கீழுதடு இறங்கிப் போமே. (945)

போமடா கழுத்தினுட முன்புறத்தில் தோன்றும்
பொல்லாத சதைகளுக்கு சுருக்கங் காணில்
ஆமடா தலையைத்தான் அப்போ பாரு
அப்பனே முன்னுக்கு வளையுஞ் சொன்னேன்
ஓமடா பிடரிசதை சுருக்கங் காணில்
உத்தமனே தலையைத்தா னிமிரச் செய்யும்
நாமடா சரீரத்தின் முன்புறத்தில் தோன்றும்
நலமான சதைகள்தான் சுருங்கிடாமல் கேளே. (946)

சுருங்கிவரும் வேளைதனில் அப்பா கேளு
சுகமான உடம்புதான் முன்னுக்கு வளைந்து
திருகியே விலாவெலும்பு கீழே நோக்கும்
தீராத முதுகுசதை சுருக்கங் கண்டால்
முருங்கியே முதுகும்தான் நிமிரும் சொன்னேன்
முக்கியமுள்ள மார்சதை சுருக்கங் கொள்ளில்
சுருங்கியே தோள்கள்தான் மார்போ டய்யா
சிறப்பாக அணைந்துவிடும் திண்ணம் தானே. (947)

தானான முதுகினுட மேல்புறமே தோன்றும்
தன்மையுள்ள சதைகளுக்கு சுருக்கங்காணில்
ஊனான தோள்கள்தான் பின்னுக்கே போகும்
உத்தமனே புஜத்துக்கு முன்னே தோன்றும்
தேனான சதைகள்தான் சுருங்கி னுக்கால்
தெளிவான முழங்கைதான் முடங்கும் பாரு
மாறான புஜத்தின் பின்புறத்தில் தோன்றும்
மாங்கிஷத்தின் சதைசுருங்கில் மகிமை கேளே. (948)

மகிமையுள்ள முழங்கைதான் நிமிரும் சொன்னேன்
மக்களுட முன்கையின் முன்புறச்சதையே யப்பா
அகிலமெலாங் காட்டுகின்ற விரல் தன்னோடு
அழகான மணிக்கட்டும் முடங்கும் பாரு
மகிதலத்தில் முழங்கையின் பின்புறச்சதையே யப்பா
மக்களுக்கு சுருக்கிடாம லப்பா கேளு
இகமதிலே மணிக்கட்டு பின்னுக்கே வளையும்பாரு
இதமான விரல்கள்தான் நிமிருங் காணே. (949)

நிமிருகின்ற பீடத்தின் சதைக ளப்பா
நிச்சயமாய்ச் சுருங்கிடுகில் சொல்லக் கேளு
அமர்ந்திருக்கும் தொடையினுட வெளிப்புறந்தான் பாரு
அப்பனே புரண்டுமே பின்னுக்கே போகும்
சுமந்ததுடை முன்புறத்து சதைக்கே கேளு
சுருக்கங்கள் வந்திடுகில் முழங்கால் நீளும்
சுமந்ததுடை பின்புறத்துச்சதை சுருக்கங் காணில்
கண்டிப்பாய் முழங்கால்தான் முடங்கிப் போமே. (950)

முடக்கமுள்ள முழங்காலுக்கு கீழு மய்யா
முக்கியமுள்ள காலின்முன்புற சதைக்கே தானும்
இடக்கமுள்ள சுருக்கங்கள் வந்த தாலுல்
கீழான புறங்கால்தான் முன்னுக்குத் தோன்றிப்
படுக்கவைத்து விரல்களைத்தான் நிமிரச் செய்யும்
பாங்கான கெண்டைசதை சுருங்கி ளுக்கால்
நடக்கஉள்ள பாதந்தான் வளைந்து கொண்டு
நலமான விரல்களுந்தான் வளைந்து போமே. (951)

## அஸ்தி பந்தங்கள்.

போமென்ற அஸ்தி பந்தனங்கள் தன்னை
புகலுவேன் எலும்பினுட விவர முற்றும்
ஆமென்ற எலும்புகளை ஒன்றோ டொன்று
அப்பனே சேர்ந்துதான் கூட்டி வைக்கும்
நாமென்ற வெள்ளையுட சவ்வுக்கே தான்
நலமான அஸ்திபந்தனமே யென்று பேராம்
ஓமென்ற முட்டுகளுட விவரங் கேளு
உள்ளபடி சொல்லுகிறேன் உறுதி பாரே. (952)

பாரடா சீலுடனே அஸ்தி சந்தி
பண்பான கொலுசுடனே குழைச்சு மய்யா
நேரடா பொருத்தமுடன் முட்டு தானும்
நிசமான சந்தகம் என்று சொல்லும்
கூரான எலும்புக்குள்தான் சேர்ந் திருக்கின்ற
கொற்றவனே ஸ்தானத்துக்கு மூட்டு என்பார்
தீராத மூட்டுகளில் சிலது சும்மா
திரமாக அசையாம லிருக்கும் பாரே. (953)

இருக்கின்ற மூட்டுகளில் சிலது கொஞ்சம்
இதமாக அசைந்து வரும் இன்மையாக
துரப்பான மூட்டுகளில் சிலது கேளு
துப்புரவாய் நமக்குவந்தால் அசையும் பாரு
சிறக்கின்ற மண்டையுட ஓடு மப்பா
சீரான பற்களுந்தான் அசைவில் லாமல்
குரைக்கின்ற கடலைப்போல் அசைவில் லாமல்
கொப்பனவே ஓரிடமே இருக்குங் காணே. (954)

காணடா முன்னெலும்பும் திரிகஸ்தான எலும்பும்
கண்டிப்பாய் கொஞ்சமாய் உழலும் பாரு
பூணடா புஜவெலும்பு துடையெலும்பு ரெண்டும்
பொதுவாக மெத்தவுந்தா னசையும் பாரு
நாணடா முழங்கை கணிக்கட் டோடு
நலமான விரல்களுடன் முழந்தாள் தானும்
மூணடா கணுக்காலும் விரல்கள் தானும்
முன்னுக்கும் பின்னுக்கும் அசையும் பாரே. (955)

பாரடா தோளுடனே துடைகள் இரண்டும்
பக்குவமாய் செக்கைப்போல் சுற்றும் பாரு
கூறுன முருந்துக்கு விவரங் கேளு
கொற்றவனே மூட்டுகளில் கூடி நிற்கும்
சீரான எலும்புகளின் முனேக ளப்பா
தேய்ந்துதான் போகாமல் அவைகளின் மீது
தாராக ஓடியே மழமழ வென்று
தன்மையுள்ள பசைக்குத்தான் முருந்தென் பாரே. (956)

## கொழுப்பு.

என்கின்ற கொழுப்பினுட விவரங் கேளு
இதமான சவ்வுக்கு ளடங்கி யப்பா
இன்பமயமாய் மாயமுட்டைபொல தோற்று கின்ற
சிறப்பான எண்ணெய்க்கு கொழுப்பு என்பார்
ஜென்மிக்கும் மனிதனுட திரேகந் தன்னில்
சதிராக பள்ளமாய் தோற்று கின்ற
உன்மித்த இடங்களைத்தான் துத்துக் கொண்டு
ஊறுமடா கொழுப்பு நீ உறுதி பாரே. (957)

உறுதியாய் சருமத்திற் கடியி லப்பா
உத்தமனே கொளுப்புகள்தா னிருக்கும் பாரு
பருதியாய் வாழுகின்ற குழந்தைக்குங் கேளு
பண்பான வாலிபர்க்கும் கொழுப்பு அப்பா
குருதிபோல் அதிகமா யிருக்கும் பாரு
கொத்தவனே அத்தூலம் திரண்டுபருத்துக் காணும்
அறுதியாய் வயதுசென் றவர்க்கே கேளு
அப்பனே கொழுப்புத்தான் குறைந்து போமே. (958)

குறைந்ததொரு கொழுப்பினுட குணமே தென்னில்
கொப்பனவே வியாதிகண்டு அன்னத் துவேஷம்
சிறந்துமே மாறி சரீரந் தன்னை
சிறப்பான கொழுப்புத்தான் ரத்த மாக
பரந்துமே மாறி சரீரந் தன்னை
பக்குவமாய் போஷித்து வருகும் பாரு
மறைந்ததொரு திரேகந்தா னிளைத்துப் போயி
மாமிசமும் இளைத்து விடும் பாரே. (959)

## கீல் சவ்வு.

மகிமையுள்ள கீல்சவ்வின் விவரங் கேளு
மகத்தான எலும்பினுட சந்திப்பு தன்னில்
முசிந்ததொரு முருந்தைப்போல் முடக்கங் கொண்டு
முக்கியமாய் இருக்கின்ற சவ்வுக் கப்பாக
பசிந்ததொரு கீல்சவ்வு என்று பேராம்
பக்குவமாய் இச்சவ்வில் எண்ணெய்உண்டாம் பாரு
சகிந்ததொரு சந்திக்கிலேற்றும் சவ்வு என்று
சதிராக அதற்குத்தான் பேரு மாச்சே. (960)

ஆச்சா வண்டிக்கு சக்கரம் போல்
அளவாக இலகுவாக சொல்லக் கேளு
சூட்சமமாய் சுழலவே யோடு கின்ற
சுழலெண்ணெய் போலவே இச்சவ் வப்பா
காச்சடா கீலுக்கு வழுவழுப்புத் தந்து
கனமாக நடக்கவே ஓடச் செய்யும்
வீச்சடா இதுவெல்லா திரேகந் தன்னில்
விதமாக உண்டாகும் பசைகள் தானே. (961)

## கீல்கள்.

தானான தாடையுட கீலைக் கேளு
தன்மையுள்ள கீழ்த்தாடை எலும்பின் முட்டு
மானான மூடிகள்தான் காதெலும்பிற் தோன்றும்
மகத்தான கிளிக்காவடி என்னும் பள்ளம்
ஊனாக அதிலமைந்து தாடைக் கட்டு
உள்ளபடி ஏற்பட்டு இருக்கும் பாரு
தேனாக கீழ்த்தாடை எலும்பு தாழ்ந்தால்
தெளிவான கண்தான் திறப்பான் பாரே. (962)

திறக்கின்ற பூட்டுகள்தா னுயர்ந்தா லப்பா
தீராத வாய்கள்தான் மூடிக் கொள்ளும்
உரைக்கின்ற பூட்டுகள் முன்னே நோக்கில்
உத்தமனே முகரைதான் பிதுங்கியே போகும்
சிறக்கவே இதற்குத்தான் பக்கவாடந் தன்னில்
சிறப்பாக அசைக்கின்ற குணமே யுண்டு
துறக்கின்ற தோள்முட்டு விவரங் கேளு
முப்புவாய் இன்றுந்தான் சொல்லக் கேளு. (963)

கேளடா தோள்மூட்டு விவரந் தன்னை
கெடிதான தோள்பை எலும்பில் தோன்றும்
நாளடா கிளிக்காவடி பள்ளந் தன்னில்
நலமான புஜவெலும்பு முடியுஞ் சேர்ந்து
வாளடா தோள்மூட்டு உண்டாச் சப்பா
வளமான முட்டுக்குச் சொல்லக் கேளு
தேளடா நீட்டலுடன் முடக்கல் தானும்
தெளிவாக அணைக்கீல் சுக்கீல் அகக்கீலுண்டே. (964)

உண்டான முழங்கையின் விவரங் கேளு
உத்தமனே புஜவெலும்பு தன்னோ டப்பா
முண்டான முன்னங்கை இரண்டெலும்புஞ் சேர்ந்து
முக்கியமாய் முழங்கை தானுச்சு பாரு
செண்டான மூட்டுக்கு முடங்கல் நீட்டல்
சிறப்பாக இரண்டுவித அசைவே யுண்டு
பண்டான அருா எலும்பின் சிகரமய்யா
பாங்கான இரத்தினி எலும்போடு சேர்ந்து கேளே (965)

சேர்ந்துதான் உருளுவதால் கைதிரும்ப லாச்சு
திறமான உள்ளங்கை கீழே நீக்கி
ஊர்ந்துமே திருப்பலுக்கு வித்தலுக்கு கவுத்தலென்றும்
உள்ளதொரு மேல்நோக்கும் திருப்பலுக்கு
ஆர்ந்துமே மலர்த்தலென்றுஞ் சொல்வார் மேலோர்
அப்பனே முழங்கையின் தன்மை தன்னை
தேர்ந்துமே உந்தனுக்குச் சொன்னேன் நானும்
தெளிவான மணிக்கட்டு விபரங் கேளே. (966)

## மணிக்கட்டு.

மணிக்கட்டு விவரமதைச் சொல்வேன் கேளு
மகத்தான மூன்றெலும்பும் ஒன்றுய்ச் சேர்ந்து
மணிக்கட்டு ஏற்பட்டு இருக்கு தப்பா
மகத்தான கட்டுக்கு முடக்கல் தாழ்த்தல்
மணிக்கட்டு நிமிர்த்தலுடன் உயர்த்தல் சுற்றல்
அழகான ஐந்துவித ஆட்ட முண்டு
மணிக்கட்டு அசைவற்று நின்ருல் அப்போ
மனிதனுட ஆட்டம்தான் மாண்டு போச்சே. (967)

## துடைச் சந்து.

போய்ச்சடா துடைச்சந்து விவரங் கேளு
பொல்லாத துடையெலும்பின் விவர மப்பா
ஆய்ச்சடா அவ்விடத்தில் தோன்று கின்ற
அழகான குழிசெறிந்து துடைச்சந் துண்டாய்
வீய்ச்சடா இதற்குத்தான் மணிக்கட்டைப் போல்
விதமான குணங்களெல்லாம் உண்டு பாரு
காய்ச்சடா முழங்காலின் விவரந் தன்னை
கழறுவேன் நீயறியக் கழறு வேனே. (968)

## முழங்கால்.

கழறுவேன் முழங்கால்தான் தொடையி லப்பா
கனமான எலும்பின் கீழ்முனையி னேடு
குணமான குதிரைமுக எலும்பி னுச்சிக்
கொப்பாக சேர்ந்துமே முழங்கால் தோன்றும்
அலமான இக்கீல்தான் பதின்மூன் றப்பா
அப்பனே பந்தனத்தா லுறுதி யாக
தலமாகக் கட்டியே யிருக்கும் பாரு
தன்மையுள்ள முழங்காலின் தன்மை தானே. (969)

## கணுக்கால்.

தானன கணுக்கால்தான் சொல்லக் கேளு
தன்மையுள்ள நாளத்தின் கீழ்முனையி னேடு
ஊனன சரவெலும்பின் கீழ்முனையும் கூடி
உள்ளபடி சாரிஎன்ற எலும்புடனே சேர்ந்து
மானன முழங்கால்தான் உண்டாச் சப்பா
மகத்தான மூட்டுக்கு முடக்கல் நீட்டல்
தேனன இரண்டுவித ஆட்ட முண்டு
தெளிவாக பக்கவாட்டம் கொஞ்ச முண்டு (970)

## பாத எலும்புகள்.

உண்டான ஒவ்வொரு பாதந் தன்னில்
உத்தமனே இருபத்தேழு எலும்புகள் உண்டு
பண்டான குதிங்காலில் எலும்போ ஏழு
பாங்கான உள்ளங்கால் தன்னி லப்பா
அண்டான அஞ்சுவித எலும்பே யுண்டு
அழகான கால்விரலில் பதினைந் தாகும்
சென்டான பாதந்தான் இப்பேர்க் கொத்த
சிறியதொரு எலும்புகளா லிருக்குந் தானே. (971)

பாரடா உள்ளங்கா லெலும் பஞ்சும்
பண்பாக நீண்டுமே இருபுறமுங் கேளு
சீராக அடங்கியே இருக்கும் பாரு
சிறப்பான அடியப்பா சதுர மாயும்
கூரான குழைகள்தாம் உருண்டிருக்கும் பாரு
கொற்றவனே கால்விரலின் எலும்பு நேர்மை
காருன காலினுட பெருவிரலில் தானும்
கண்டிதமாய் இரண்டுபெரு எலும்பு முண்டே. (972)

எலும்புகள்தான் மற்றவிரல் தன்னில் கேளே
இதமாக ஒவ்வொன்றில் மும்மூன் றுகும்
சிலும்பான நாலுவிரல் தன்னி லப்பா
சிறப்பாக பனிரண் டெலும்பே யுண்டு
தலப்பான கைகால்களுடன் கைப்பெருவிரலின் சில்லே
கண்டிப்பாய் சிறியதோர் எலும்பே யுண்டு
சிலும்பான ஒவ்வொரு கீலுக் கப்பா
சிறப்பாகி இரண்டாய் கீல்நாலு முண்டே. (973)

## கால் விவரம்.

உண்டான கால்விவரம் சொல்லக் கேளு
உத்தமனே காலில்தான் பிரிவா றுண்டு
நண்டான தொடை முழங்கால் கெண்டைக்கால்
நலமான கணுக்கால்கள் பாத மென்றும்
பண்டான விரல்களுடன் ஆறு மாச்சு
பரிவான தொடையெலும்பு சொல்லக் கேளு
கண்டான திரேகத்தில் இருந்து வாழும்
கனமான எலும்புக்கு விவரங் கேளே. (974)

கேளடா தொடையெலும்பு பெரிது கேளாய்
கெடிதான அதன்சிகரம் உருண்டு பாரே
நாளடா பந்தைப்போ லிருக்கும் பாரு
நலமான சரீரத்தி லுற்பத்தி யாகி
வாளடா சரீரத்தைத் தாங்கிக் கொண்டு
வளமான சிகரத்தின் மத்தி தன்னில்
தேளடா பள்ளமொன் றிருக்கும் பாரு
தெளிவாக அதிலுருண்ட சந்திபந்தன மிருக்கும் பாரே. (975)

இருக்கின்ற பந்தனத்தி லப்பா கேளு
இதமான கீல்தானம் சிகர மய்யா
சுருங்கியே இருப்பதற்கும் கழுத்து என்பார்
சுகமான கழுத்தடியில் இரண்டுபிதுக்க முண்டு
திருங்கியே சதைகள்தான் ஒட்டிக் கொண்டு
தீராத எலும்பின் பின்புறத்தில் பாரு
நெருங்கியே நீண்டதொரு நரம்பு காணும்
நிச்சயமாய் தொடைஎலும்பின் கீழ்முனைக்குள் பாரே. (976)

கீழான பிரிவில்தான் இரண்டுபிரிவே யுண்டு
கெட்டியாய் உட்புறந்தான் நீண்டிருக்கும் பாரு
பாளான வெளிப்புறந்தான் அகல மாயும்
பண்பான முழங்காலின் சில்லி கேளு
கூழான முழங்கால் சில்லியெலும்பே யப்பா
கொற்றவனே வேறுவொரு எலும்பி னோடு
சேராமல் தனியாக இருக்கும் பாரு
செப்புகிறேன் உள்ளாணிக்குள் அப்பக்கந் தானே. (977)

தானான திரேகத்தில் இன்னு முள்ள
தனிஎலும்பு கூட்டெலும்பு தன்மை யெல்லாம்
மானேகேள் பின்னாலே உந்தனுக்கு
பட்சமுடன் சொல்லுகிறேன் மகிமை பாரு
தேனான திரேகத்தில் தோனு கின்ற
தெளிவான ரோகங்கள் அனேக முண்டு
ஊனான ரோகத்தில் உந்தனுக்கு
உள்ளபடி வேண்டியதை உரைசெய் வாயே. (978)

## சன்னி ரோகம்.

உண்டான ரோகத்தில் சன்னி ரோகம்
உற்பத்தி யாகின்ற விதங்கள் முற்றும்
கண்டான தோஷமுதல் மற்று முள்ள
பலவிதமாய் விளைகின்ற ரோக பேதம்
செண்டாக நானறியச் சொல்வீ ரப்பா
ஜெகந்தனிலே அதுகாணும் விதங்கள் தன்னை
கண்டிதமாய் ஒவ்வொன்றின் குணங்க ளோடு
காட்டுவீர் துகையுடனே காட்டு வீரே. (979)

காட்டுவேன் புலத்தியனே சொல்லக் கேளாய்
கனமான சன்னியது பதின்மூன் றப்பா
பூட்டுகின்ற தோஷந்தான் ஏழே உண்டு
புகழான அதனுடைய நாள்கள் முற்றும்
தீட்டுவேன் அதனுடைய குணங்கள் முற்றும்
திரமான சாத்தியமும் அசாத்தியமுந் தானும்
நாட்டியே நீயறியச் சொல்வேன் பாரு
நன்மையற்ற சன்னியைத்தான் முன்பு கேளே. (980)

கேளடா சுரமதுதான் அதிக மானல்
கெடிதான இரத்தந்தான் சூடே மிஞ்சி
பாழான சன்னிமுதல் தோஷம் முற்றும்
பண்பான திரேகத்தில் தோன்றும் பாரு
வாளடா அதுகாணும் வேளை தன்னில்
வளமான கைநாடி வாத பித்தம்
தேளடா இருக்கின்ற வகையைத் தானே
தெளிவான சன்னிக்கு முன்பு கேளே. (981)

முன்னாடி கையை நீ பார்த்தா யாகில்
முழிப்பான வாதபித்தம் பதறி ஓடும்
பின்னாலே அதுஓடும் விதத்தைக் கேளு
பிரிவான சன்னி பதிமூன்றும் கேளே
ஒன்றான கண்டகுப்சம் சந்திகத்தி னோடு
ஒளியாத தாந்திரீகம்புக்க நேத்திரமுந் தானும்
கன்றான ருத்திராங்கன் சிம்மகத்தி னோடு
களிப்பான பிரலாப சன்னி தானே. (982)

தானான அந்தகனும் சீதாங்கன் கூட
    தனியான சித்தவிப்பிரமன் ரக்திஷ்டி யென்றும்
மானான கர்னிகா சன்னி யென்றும்
    மகத்தான அபின்னியாசம் கரன்யாசம் என்றும்
தேனான தாகபூர்வ சன்னி யென்றும்
    தெளிவான சீதபூர்வ சன்னி யென்றும்
ஊனான சுகசன்னி ஒன்றே யுண்டு
    உத்தமனே இதனுடைய சாத்திய அசாத்தியங்களே. (983)

கேளடா அந்தகனும் புக்க நேத்திரம்
    கெடிதான ருத்திராங்கன் கண்ட குப்சம்
நாளடா ரக்திஷ்டி சீதாங்கத் தோடு
    நலமான அபின்னியாசம் இவ்வேழு மப்பா
பாளடா அசாத்தியந்தான் என்றே சொல்லு
    பண்பான மற்றஆறும் சாத்தியந்தான் பாரு
நீளடா இதனுடைய நாளைச் சொல்வேன்
    நிச்சயமாய் சந்தாகத்துக்கு ஏழ்நாள் தானே. (984)

தானான அந்தகன்தான் நாள் பத்தாகும்
    தனியான ருத்திராங்கன் நாளைந்தே நாளாம்
ஊனான ருத்திராங்கன் மூவைந்து நாளாம்
    உள்ள சித்தவிப் பிரமன்தான் முவ்வாறு நாளாம்
தேனான தாந்திரீகன் அஞ்சஞ்சு நாளாம்
    தெளியாத கண்டகுப்சம் நாள்பதி மூன்றுகும்
கானான கர்னீகந்தான் மூன்று திங்கள்
    கனமான புக்கநேத்திரம் நாள் எட்டாமே. (985)

ஆமேதான் ரக்திஷ்டி நாள் பத்தாகும்
    அடைவான பிரலாபன் வாரம் ரெண்டாம்
போமென்ற ஜிம்மத்துக் கீரெட்டு நாளாம்
    புகழான அபின்னியாஸம் மூவைந்து நாளாம்
ஓமென்ற சிலசன்னி உடனே கொல்லும்
    உத்தமனே முன்சொன்ன நாளுக் குள்ளே
தாமதமாய் தீருமடா சன்னி யெல்லாம்
    தற்காலம் நாடியுட நேர்மை பாரே. (986)

பாரடா வாதபித்தம் அதிக மாகி
    பண்பான சேத்துமந்தான் குறையு மாகில்
கூறடா கண்டகுப்சம் வந்த தென்று
    கொப்பனவே உரைத்திடுவாய் புவியினோர்க்கு
சீரான வாதசிலேட்டும மதிக மாகி
    சிறப்பான பித்தந்தான் குறைந்து நிற்கில்
நேரான சந்திகந்தான் தோன்றும் சொன்னேன்
    நிச்சயமாய் இன்னமொன்று சொல்லக் கேளே. (987)

சொல்லுகிறேன் சேட்டுமமும் பித்தந் தானும்
    சுருக்காக அதிகரித்து வாதங் குன்றில்
மல்லுகின்ற தாந்திரீகம் வந்து தோன்றும்
    வகையாக இம்மூன்றும் ஒருகூடிப் பார்
தொல்லுலகில் வாதந்தான் அதிக மாக
    தொகுப்பான பித்தமுடன் சேத்துமந் தானும்
அல்லல்செய்து குறைந்துமே போகு மாகில்
    அப்பனே புக்கநேத்திரம் தோன்றும் பாரே. (988)

தோன்றுகின்ற பித்தந்தான் அதிக மாகி
    தொல்லுலகில் வாதமுடன் சேத்துமங் குன்றி
உள்ளதிலே தோணிடுகில் ருத்தி ராங்கன்
    உள்ளபடி தோன்றிடுமே உலகத் தோர்க்கு
ஆன்றியே சிலேட்டுமந்தான் அதிக மாகி
    அப்பனே வாதபித்தம் குறையு மாகில்
சான்றோர்கள் சொன்னார்கள் ஜிம்மகந் தான்
    சடுதியில் தோன்று மென்று சாற்றினரே. (989)

சாற்றியதோர் வாதமது அதிக மாகி
    சற்றேதான் பித்தமது குறைந்து நின்று
போற்றியே சிலேத்துமந்தான் மிகுதி யாக
    பொங்கமுடன் குறைந்தாக்கால் பிரலாபந் தோன்றும்
தேற்றியே வாதமது அதிக மாகி
    தெளிவான சிலேட்டுமந்தான் கொஞ்சங் குன்றி
ஆற்றியே பித்தந்தான் மிகுதி யாக
    அப்பனே குன்றிடுகில் அந்தகன் வருகுங் காணே. (990)

காணுகின்ற பித்தந்தான் அதிக மாகி
கனமான வாதந்தான் கொஞ்சம் குன்றி
பூணுகின்ற சேத்துமந்தான் அதிக மாக
போக்கிலே குறைந்திடுகில் ரக்திஷ்டி காணும்
தோணுகின்ற பித்தந்தான் அதிக மாகி
தொல்லுலகில் வாதந்தான் மிகக் குன்றி
பாணியாம் சேத்துமந்தான் சற்றே குன்றில்
பலமாக சித்தவிப்ரமம் தோணும் பாரே. (991)

பாரடா சேத்துமந்தான் அதிக மாகி
பாங்கான வாதந்தான் மிகவே குன்றி
கூறுன பித்தமது சற்றே குன்றி
குறிப்பாகத் தோன்றிடுகில் சீதாங்கன் காணும்
நேரான சேத்துமந்தான் அதிக மாகி
நிச்சயமாய் பித்தமது மிகவே குன்றி
வாரான வாதமது சற்றே குன்றில்
வருகுமடா கரன்யாசம்தான் வருகும் தானே. (992)

தானுன வாதபித்தம் சேத்துமம் மூன்றும்
தடையின்றி சமமாக அதிக மாக
போனுக்கால் அபின்யாசம் வந்த தென்று
பொருத்து நீ செய்திடுவாய் மருந்து தன்னை
ஊனுன நாடிகள்தான் முன்பு சொன்ன
உள்ளபடி தோன்றியே பின்னுக்கு மாகில்
வாரான நாள்தான் முடிந்த தென்று (993)
எண்ணிக்கொள்வாய் வண்மையுள்ள குணந்தன்மை சொல்லே.

## கண்ட குப்ச சன்னி.

சொல்லுகிறேன் கண்டகுப்சசன்னி குணத்தைக் கேளு
சுகமான கண்டந்தான் குறைந்து போகும்
மல்லுகின்ற பிதற்றல்தான் அதிகம் உண்டு
மகத்தான தாகந்தான் சொல்ல லாகா
தொல்லுலகில் பிரம்மையுடன் அதிக காங்கை
தொகுப்பான திரேகந்தான் கனத்துக் காணும்
அல்லல்செய்து அலறியே எழுந்தோடி வீழ்வான்
அப்பனே நடுக்கலோடு மூர்ச்சை யாமே. (994)

ஆமேதான் சிரசுடனே மார்பு நோவு
அப்பனே வாயில்தான் ரத்தம் தோன்றும்
ஓமேதான் வாந்தியுடன் இருமல் விக்கல்
பொல்லாத நாள்பிடிப்பு எரிச்ச லுண்டாம்
காமேதான் இந்நோய்தான் கண்டத்தை யப்பா
கனமாக பிடிப்பதனுல் கண்டகுப்ச மென்று
ஓமேதான் பெயரிட்டார் இதற்கு அப்பா
உள்ளபடி வெகுகஷ்டம் அசாத்திய மாமே. (995)

## சந்திக சன்னி.

சாத்தியமாம் கீல்களெல்லாம் நோகு மப்பா
சங்கையெல்லாம் கபந்தான் வருகும் பாரு
வாத்தியம்போல் இருமலுடன் வயிற்றுவலியும் காணும்
வளமான ஆயாசம் எரிச்சல் தாகம்
போத்தியே பிரமைகொஞ்சம் தோணு மப்போ
பொங்கமுள்ள விக்கலுடன் வியர்வை தோன்றும்
தாத்தியே இரவில்தான் நித்திரைதான் தோன்ரு
தொலையாத துர்ப்பலந்தான் மிக வுண்டாமே. (996)

உண்டாகும் வேளைதனில் ரோக மப்பா
உப்பலுடன் பாரித்து சீதளமே காணும்
நண்டாகும் நெற்றியில்தான் குத்த லுண்டாம்
நலமான வேதனைதான் அதிக முண்டு
முண்டான வாதந்தான் அதிகம் காட்டும்
முக்கியமாய் கீல்களெல்லாம் வலியே காட்டும்
ரெண்டான கீல்களெல்லாம் நோவ தாலே
நெறியே சந்தகமென்று பேரு மாச்சே. (997)

## தாந்திரீக சன்னி.

ஆய்ச்சப்பா தாந்திரீகம் சொல்லக் கேளு
அசதியுடன் பெருமூச்சு எரிச்சல் தோன்றும்
காய்ச்சப்பா பேதியுடன் ஆயாசம் தோன்றும்
கண்டத்தில் காரலுடன் காது கேளா
வீய்ச்சப்பா நாவுதான் முள்ளு போலே
விரிவாகக் கறுத்துமே காட்டும் பாரு
கூய்ச்சப்பா சரீரத்தில் அதிக காங்கை
கொற்றவனே அரோசிகமும் காணுந் தானே. (998)

தாஞன கண்கள்தான் கனத்து உப்பி
தன்மையுள்ள கண்களில்தான் சலமே தோன்றும்
ஊஞன திரேகத்தில் தினவு கொள்ளும்
உத்தமனே காதுதான் நோவும் பாரு
தேஞன சுரமுடனே கபமும் தோன்றும்
தெளிவான நாவுதான் தடிப்புடன் மரத்துப்போமே
கோஞன தேகத்தில் பலத்தை முற்றும்
கொற்றவனே குறைப்பதற்கு தாந்திரீகம் என்றுபேரு. (999)

## புக்ன நேத்திர சன்னி.

பேரான புக்னநேத்திரம் சொல்லக் கேளு
புகழான கண்கள்தான் கம்ம லோடு
சீராகக் கலங்கியே சிவந்து மெத்த
சிக்கனவே இருகண்கள் பிடித்துக் கொள்ளும்
கூருன சிரசுமுதல் கீல்கள் எல்லாம்
கொற்றவனே துடைச்சதையும் விலாவெலும்புங் கூட
நேரான நடுக்கலுடன் பிரமை தோன்றும்
நிச்சயமாய் பிதற்றலுடன் இன்னங் கேளே. (1000)

கேளடா சுரமுந்தா னதிகங் காட்டும்
கெடியான கண்களைத்தான் சிமிட்டா னப்பா
வாளடா புத்திதான் தெளிவே யில்லை
வளமான பாவைதான் தோன்ரு தப்பா
தேளடா சர்வாங்கமுஞ் சீதளமே கண்டு
தெளிவில்லாக் கூச்சலுந்தான் போடுவா னப்பா
நாளடா இந்நோய் தான் நேத்திரத்தை (1001)
நணுங்கியே நெருங்குவதால் புக்னநேத்ரமென் றுரைத்தார்காணே.

## ருத்திராங்க சன்னி:

காணடா ருத்திராங்கன் குணத்தைக் கேளு
கனமான திரேகந்தான் மிகுநோ வுண்டாகும்
ஊணடா காங்கையுடன் பிரமை சோர்வு
உடம்பெரிச்சல் கண்டுமே கழுத்துக்குள் நோவாம்
பேணடா தாகமுட னதிக பேதி
பிரலாபப் பேச்சுடனே சொல்ப பேதி
கோணடா கழுத்துக்குள் தினவே காணும்
கொற்றவனே இன்னும் சிலகுணத்தைப் பாரே. (1002)

பாரடா இருமலுட னிரைப்புக் காணும்
 பண்பான தாழ்வாய்க்கீல் பிடித்து நோகும்
கூறடா உடம்பெல்லாம் குத்த லுண்டாம்
 கொற்றவனே நடுக்கலுடன் வியர்வை தோன்றும்
சீரடா பிதற்றலுடன் கண்ட பேரை
 தெளிவாகக் கண்டுமே முறையிடுவான் பாரு
தேரடா திரேகமுற்றும் எரிச்சல் நோவு
 தோன்றியே வருவதால் ருத்திராங்க ஞச்சே. (1003)

## ஜிம்மக சன்னி.

ஆச்சப்பா ஜிம்மகத்தின் குணத்தைக் கேளு
 அழகான நாவுதான் குவிந்து போகும்
நீச்சப்பா நாவுக்குள் முள்ளுந் தோன்றும்
 நிசமாக இரைப்புஇருமல் துர்ப்பலமுங் காணும்
காச்சப்பா கழுத்துக்குள் அடைப்புத் தோன்றும்
 கனமான காதுதான் மத்திபமே யாகும்
போச்சப்பா வாய்தான் பேச மாட்டான்
 பொங்கமுடன் கைகால்கள் போச்செ லாமே. (1004)

ஆமடா உடம்பெல்லாம் நோவு கொள்ளும்
 அப்பனே கண்களைத்தான் மூடிக் கொள்வான்
தாமடா வாயில்தான் நுரையே தோன்றும்
 தாங்காமல் பெருமூச்சு உண்டாகும் பாரு
வேமடா அம்மூச்சில் அனலே வீசும்
 விக்கலுடன் நாக்குத்து வெடிக்கும் பாரு
ஓமடா சுரமுடனே தாகந் தோன்றும்
 உள்ள ஜிம்மகத்தின் குண மிதாமே. (1005)

## பிரலாப சன்னி.

குணமான பிரலாப சன்னி நேர்மை
 குறிப்பான மனேசிந்தை முன்கால் வீங்கும்
கனமான நடுக்காலுடன் சிந்தை தானும்
 கதிப்பான புத்தியது தானய்ப் பேசும்
பண்பான உடம்பெல்லாம் பச்சைப் புண்ணய்
 பண்பாக நொந்துமே காங்கை தோன்றும்
குணமான மனக்கெடுதி மிகுந்த வார்த்தை
 கொற்றவனே இருமலுடன் இன்னங் கேளே. (1006)

கேளடா முகம்வாடி கிறுகிறுப்பே தோன்றும்
கெடிதான விக்கல்தா னடிக்கடியே தோன்றும்
நாளடா மூர்ச்சையுடன் அலறி யோடும்
நலமான தாபசுரம் வாதந் தோன்றும்
வாளடா கபந்தா னதிக மாகும்
வளமாகப் பலவிதமாய் வேதனையே காட்டும்
பாளடா பலவிதமாய்ப் பித்தத் தாலே
பண்பான பிரலாப மென்று காணே. (1007)

## அந்தக சன்னி.

என்றின்னுஞ் சொல்லுகிறேன் அந்தச் சன்னி
எரிச்சலுடன் தாகமும் தலைநோ வுண்டாம்
நன்றாக விக்கலுடன் சோர்வு உதறல்
நலமான இரைப்புடனே உப்புசமே காணும்
கன்றான மலபந்தம் அக்கினமந்த முண்டாம்
கனமான தலைதான் நடுக்க லுண்டாம்
பன்றான இருமலுடன் பொய்யே சொல்வான்
பாழான பிரமையுடன் சுர முண்டாமே. (1008)

உண்டாகும் வேளைதனில் சொல்லக் கேளாய்
உத்தமனே திரேகந்தான் பாதி யாகும்
பண்டான குணமுந்தான் சுழ லுண்டாகும்
பாரினிலே இதுசெய்யும் சேட்டை மெத்த
செண்டான திரேகத்தை முடக்க வந்த
செயலான சன்னியது அப்பா கேளு
முண்டான கொடூரத்தைச் செய்வ தாலே
முக்கியமாய் அந்தகனென்று உரைத்தார் தானே (1009)

## இரக்திஷ்டி சன்னி.

தானான ரக்திஷ்டி காணும் போது
தாகமுடன் ரத்தந்தான் கக்குவான் பார்
மானான வாந்தியுடன் பிரமை பேதி
மகத்தான விக்கலுடன் அற்ப சுவாசம்
ஊனான திரேகத்தில் அதிக காங்கை
உள்ளதொரு ஞாபகந்தான் பங்க மாகும்
தேனான திரேகத்தில் கருந்தடிப்புக் காணும்
தெளிவாக இன்னுஞ் சிலகுணத்தைக் கேளு (1010)

கேளடா எரிச்சலுடன் வயிற்றுப்பசமே காணும்
கெடிதான திரேகந்தான் மஞ்சள்நிறமே யாகும்
நாளடா தலைசுற்றி காது மந்தமாகும்
நலமான வாயுளறும் தயக்க முண்டாகும்
வாளடா உதடுதான் வெடிப்புடனே கறுத்துக்காணும்
வளமான மறதியுடன் மிகுசுவாச முண்டாகும்
தேளடா இதுரத்த கோழையைத் தானே
தெளிவுடனே தருவதினல் ரக்திஷ்டி யாச்சே. (1011)

## சித்த விப்ரம சன்னி.

ஆச்சப்பா சித்தவிப்ரமத்தின் குணத்தைக் கேளு
ஆவலுடன் பாடல்செய்து பிதற்றுவான் பார்
போச்சப்பா பரியாசம் பிதற்றல் பிரமை
பொல்லாத கீல்களெல்லாம் முறிவதுபோலே தோன்றும்
நீச்சப்பா சரீரமுற்றும் நோவே காணும்
நிச்சயமாய் இடுப்பைத்தான் பார்த்துக் கொள்வான்
காய்ச்சப்பா பாபத்துடனே பூந்திருப்பான் பாரு
கனமான பித்தமதம் அதிகரிக்கும் பாரே. (1012)

பாரடா அப்போது கையைப் பார்க்கில்
பண்பான வாதந்தான் அற்ப மாகும்
சீரான புருவந்தான் முறுக்கிக் கொள்ளும்
சிறப்பாக பூரணமாகி சுரமே தோன்றும்
பேரான இரைப்புடனே மேல்சுவாசந் தோன்றும்
பலமாக இடம்விட்டு ஓடுவான் பாரே
தேரடா சித்தத்தை மயக்கஞ் செய்து
தெளிவைத்தான் மறப்பதினல் சித்தவிப்ர மாச்சே. (1013)

## சீதாங்க சன்னி.

ஆச்சப்பா சீதாங்கன் குணத்தைத் கேளு
ஆச்சரியம் ஆச்சரியம் என்ன சொல்வேன்
காச்சப்பா குரல்கம்மல் ஒக்காளம் பேதி
கனமானவிக்கலுடன் இரைப்பை பலவீனம் தோன்றும்
வீச்சான சரீரம் முழுது மப்பா
விஷம்போன்ற சீதளத் துடனே நோவு
மூச்சான வாந்தியுடன் வாய்நீர் ஊரல்
முக்கியமாய் எரிச்சலுடன் புலம்ப லாமே. (1014)

புலம்பலுடன் பிதற்றியே அதிக வார்த்தை
பொல்லாத மூர்ச்சையுடன் அழுவான் பாரு
சிலும்பியே திரேகந்தான் பதைக்குஞ் சொன்னேன்
சீராக உள்ஒக்காளம் காணும் பாரு
அலம்பலாய் இதுமெத்த அசாத்திய மப்பா
அப்பனே இதுதிரேகத்தைச் சொல்லக் கேளு
சிலும்பியே சர்வாங்கம் சீதளத்தைத் தானே
சிறப்பாகத் தருவதினால் சீதங்க னச்சே. (1015)

## கர்னிகா சன்னி.

சீதாங்கன் சொன்னபின்பு கர்னீகத்தைக் கேளு
சிறப்பான காதினுட மூலத்தில் தானே
ஊதியே வீக்கமுண்டு சத்தங் கேளே
உள்ளதொரு வாய்திறக்க கூடாமலே தான்
பாதியாம் கண்டத்தைப் பிடித்ததுபோலே தோன்றும்
பண்பான எரிச்சலுடன் நடுக்கல் நோவு
சோதியாய் இருமலுடன் இரைப்புக் காணும்
சுகமான மார்புஇடித்தல் பிதற்ற லாமே. (1016)

ஆமடா விக்கலுடன் தண்ணீர் தாகம்
அப்பனே நாவெடித்துக் கறுத்துக் காணும்
தாமடா காதினுட் பக்கத்தி லப்பா
தற்செயலாய் கட்டிகண்டு வீக்கங் காட்டி
ஓமடா சத்தந்தான் கேளா தப்பா
உள்ளபடி தலைநோவு கோட்டு வாயுண்டாம்
நாமடா இதுகாதைப் பற்றிக் கொண்டு
நலமாக வருவதினால் கர்னீகமென்று சொல்லே. (1017)

## அபின்னியாச சன்னி.

சொல்லுகிறேன் அபின்னியாசம் அப்பா கேளு
சுகமான பசிநீங்கி முகத்தில்பளபளப்பே தோன்றும்
வெல்லுகின்ற பேச்சற்று துர்ப்பலமே காணும்
விதமான பஞ்சேந்திரியம் குளிர்ந்து போகும்
செல்லுகின்ற தூக்கந்தான் மயங்கிக் காணும்
சீரான அறிவின்மை உடம்பு நோவு
மல்லுகின்ற இருமலுடன் சுவாசம் தூக்கம்
மகத்தான அலறிக்கையுடன் வியர்வை காணும்பாரே. (1018)

பாரடா நாவுதான் பலநிறமே காட்டும்
பண்பான சுரமுடனே வேதனையே செய்யும்
கூறடா இருமலுடன் சுவாசங் காணும்
கொற்றவனே மிருதுக்கம் வேதனையே செய்யும்
நேரடா உடம்பெல்லாம் நோவே காணும்
நிச்சயமாய் வியர்வையுடன் வறட்சி காணும்
தேரடா இது திரேக வியாபாரத்தை
தெளிவாக நீக்குவதால் அபின்னியாச மாச்சே. (1019)

ஆச்சடா இச்சன்னி மாதர் கட்கு
அப்பனே சூதகத்தின் காலங் தன்னில்
வீச்சாக கண்டாக்கால் சூதகசன்னி யென்பார்
விதமான கர்ப்பகாலத்தில் கண்டால் கேளு
காச்சடா கர்ப்பசன்னி யென்று சொல்வார்
கனமாகப் பிரசவித்தபின் கண்டால் கேளு
பேச்சடா மாதவ சன்னி யென்பார்
பலமான விரணத்தில் கண்டால் கேளே. (1020)

கேளடா விரணத்தின் சன்னி யென்பார்
களியான முகத்தில் விகாரங் கண்டால்
நாளடா முகசன்னி யென்று சொல்வார்
நலமான கைகாலில் உதறல் கண்டால்
வாளடா உதறுசன்னி என்று சொல்வார்
வளமான வாதபித்த சேத்துமத் தின்
பாளடா அதிகத்தால் உண்டான நோயை
பக்குவமாய் அதன்பேரைச் சொல்வாய் நீயே. (1021)

சொல்லுவாய் தொந்தத்தில் சன்னி கண்டால்
சுகமான தொந்தசன்னி என்று சொல்வார்
மல்லுவாய் அலறியே எழுந்தி ருந்தால்
மகத்தான அலறுசன்னி என்று சொல்லு
புல்லுவாய் திரிதோட குணத் தினலே
புகழான சன்னியது தோன்று மாகில்
வெல்லுவாய் திரிதோட சன்னி யென்று
விவரமாய் தாகபூர்வ சன்னி கேளே. (1022)

### தாக பூர்வ சன்னி.

சன்னிக்குள் தாகபூர்வ விவரங் கேளு
சரியான ஆயாசம் வாந்தி யோடு
உன்னிப்பார் அசதியுடன் சோம்பல் காணும்
உள்ளபடி காறியே உமிழ்வான் பாரு
பின்னியே எழுதலில்தான் தோன்றும் போது
பிரிவாக எரிச்சலைத்தான் தருத லாலே
சொன்னார்கள் தாகபூர்வ சன்னி யென்று
சுகமான சீதபூர்வ சன்னி கேளே. (1023)

### சீத பூர்வ சன்னி.

சீதபூர்வ சன்னியடா விவரங் கேளு
சிறப்பான பித்தத்தால் கபந்தான் பாரு
உதியே கரைந்துமே நாச மாகும்
உள்ளபடி யிதுகுணத்துக்கு வரும்போ தப்பா
பேதியாம் புளியேப்பம் மூர்ச்சை தாகம்
பலமாகக் காணுமடா அப்போ தய்யா
ஆதியாம் முதலில்தான் சீதளத்தை யப்பா
அப்பனே தருவதினல் சீதபூர்வ சன்னியாச்சே. (1024)

### சுக சன்னி

ஆச்சடா சுகசன்னி விவரங் கேளு
அப்பனே திரேகந்தா னயாசம் கொண்டு
வீச்சாக இருக்கின்ற வேளை தன்னில்
விதமான தைலமிட்டு ஸ்நானஞ் செய்து
காச்சடா அத்துடனே மந்தஞ் சேர்ந்து
கனமான தயிரன்னம் புசித்த பின்பு
பேச்சான சையோகஞ் செய்தா னனல்
பலமான சுகசன்னி தோன்றும் பாரே. (1025)

தோன்றுகின்ற வேளைதனில் குணத்தைக் கேளு
துடியான கண்களிரண்டுஞ் சிவந்து காணும்
ஊன்றியே சுரமுடனே அன்னத் துவேஷம்
ஊட்டியே உடம்பெல்லாம் வியர்வை தோன்றும்
ஆன்றியே அப்படியே யில்லா விட்டால்
அப்பனே கண்டத்தில் வியர்வை தோன்றும்
சான்றியே சையோகந் தன்ன லப்பா
சடுதியில் தோன்றுவதால் சுகசன்னி யாச்சே. (1026)

சுகசன்னி தீருதற்கு மருந்து கேளு
சுகமாக வெளிப்புறத்தி லிருந்து வாழும்
கனமான எருக்கம்வேர்ப் பட்டை தன்னை
மகனேநீ நறுக்கியதை வைத்துக் கொண்டு
தகையான தாம்பூலம் போடச் சொல்லி
தக்ஷணமே பட்டையைநீ மெல்லச் சொல்லு
முகையான ரசந்தான் உள்ளுக்குச் செல்ல
முக்கியமாய்க் கண்சிவப் புடனே போகும். (1027)

போமடா இடுப்புவலி வியர்வை யெல்லாம்
பொங்க முடன் சீத முற்றும்
ஆமடா இப்படியே மூன்று வேளை
அப்பனே தந்தாக்கால் சுகசன்னி போச்சு
ஓமடா இதற்குப் புளியே ஆகா
உள்ளபடி கஞ்சிதான் குடிக்கச் சொல்லு
நாமடா தோஷவகை யெல்லாம் போக
நாட்டுவேன் நீயறிய நாட்டு வேனே. (1028)

## தோஷம் உண்டாகக் காரணம்.

நாட்டுவேன் தோஷந்தா னுண்டாகு நேர்மை
நலமாகச் சுரம்வந்த ஒன்பது நாளுக்குள்ளே
கூட்டுவேன் குளிர்சலம் புளிப்பு காரம்
குடிகெடுத்த கசப்புடனே நெய்யெண்ணெய் வெல்லம்
சாட்டுவேன் சயித்தியபண்டம் தாம்பூலம் புதியவஸ்திரம்
சதிரான சிவந்தவஸ்திரம் சுகந்த புட்பம்
பூட்டியே சந்தனமும் பச்சைக் கற்பூரம்
போல்லாத பரிமள திரவியங் கேளே. (1029)

திரவியங்கள் தன்னுடனே மாதர் தன்னை
திரமாக இருப்பதுடன் பார்த்திட் டாலும்
மறந்துமே யவர்களைத்தான் பரிசித் தாலும்
மண்டியே சையோகம் செய்திட் டாலும்
பரந்துமே யதிகமாய்ப் படிப்ப தாலும்
பண்பாக யானையுடன் குதிரை தன்னை
சிறந்துமே ஏறியே போவ தாலும்
சிறப்பான திரேகந்தா னதிர்ச்சி யாமே. (1030)

அதிர்ச்சியாய் அதிகதூரம் நடப்ப தாலும்
அப்பனே கோபமுடன் எழுத லாலும்
முதிர்ச்சியாய் இச்செய்கை நடப்ப தாலே
கொற்றவனே வாதாதி கனப்புங் கேளு
மதிர்ச்சியாய் நாபியைத்தான் பற்றிக் கொண்டு
மகத்தான நாடியைத்தான் குடிலஞ் செய்து
முதிர்ச்சியாய் முகங்கள் கண்நாசி நாவு
முக்கியமாய் நோக்கிட்டால் தோஷம்வரும் பாரே(1031)

## தோஷ வகை.

தோஷந்தான் எழுவிதம் சொல்வேன் கேளு
தொகுப்பான அபத்தியதோஷம் விஷமதோஷத் தோடு
மாஷமாம் சங்கமத்தின் தோஷமென்றே யாகும்
மகத்தான விஷமசீத தோஷமொன்றே யாகும்
பாஷையாம் பீதஜிம்மக தொஷ மொன்றும்
பண்பான ரத்தஜிம்மக தோஷமொன்றே யாகும்
தோஷமாம் கிருஷ்ணஜிம்மக தோஷ மொன்றும்
தொகுப்பான எழுவித தோஷ மாச்சே. (1032)

## அபத்திய தோஷம்.

ஆச்சடா அபத்தியதோஷம் சொல்லக் கேளு
அழகான சோம்பலுடன் மூர்ச்சை தாகம்
போச்சடா பிரமையுடன் மார்பு நோவு
பொல்லாத பிரலாபம் செய்வான் பாரு
காச்சடா இதற்குத்தான் சொல்லக் கேளு
கனமான லங்கணங்கள் செய்த பின்பு
வீச்சடா திரிகடுகு கியாழ மீய்ந்தால்
விதமான தோஷந்தான் தீருந் தானே. (1033)

## சங்கம தோஷம்.

தானான சங்கம தோஷங் கேளாய்
தனியான சையோகத் தாலே தோன்றி
ஊனான சர்வாங்கம் நோவு கண்டு
உள்ளபடி நடுக்கலுடன் பொய்யும் பேசும்
தேனான உள்ளங்கை உள்ளங்கால் குளிர்ச்சி காணும்
தெளிவற்ற பிரமையுடன் அடிக்கடியே யோடும்
மானான இத்தோஷம் தீர்வ தற்கு
மகிமையுள்ள சுகசன்னி மருந்து செய்யே. (1034)

## விஷம தோஷம்.

செய்கின்ற விஷமதோஷ குணமே தென்னில்
　　சுகமான சுரமெரிச்சல் அதிக தாகம்
உய்கின்ற நாடிதான் குடிலத் தோடு
　　உள்ளபடி தீவிரமாய் நடக்கும் பாரு
தொய்கின்ற வயிறெரிச்சல் வியர்வை தோன்றும்
　　தொகுப்பான இக்குணங்கள் காணும் சொன்னேன்
மையவே இதுதீர வேணு மென்றால்
　　பிலமான வைரவமாத்திரையால் தீருந் தானே. (1035)

## விஷம சீத தோஷம்.

பாரடா விஷமசீததோஷ குணமே தென்னில்
　　பாங்கான தினமோன சுரமே யய்யா
கூறுக இரண்டு மூன்று தினமே
　　குளிரோடே சுரந்தான் வருகுஞ் சொன்னேன்
சீரான தாகமுடன் தலைநோ யுண்டாம்
　　சித்தப்பிரமை தன்னுடனே நாவுமுள்போல் தோன்றும்
காரான பிரலாபம் காணுஞ் சொன்னேன்
　　கண்டிதமாய்க் கோரோசனை மாத்திரைதா னுண்ணே. (1036)

## பீத ஜிம்மக தோஷம்.

உண்கின்ற பீதஜிம்மக தோஷங் கேளு
　　நாக்கு மஞ்சள் நிறமாய்த் தோன்றி
பண்டிதனே வெளுத்துமே ஈர மின்றி
　　பக்குவமாய் முள்போலே தோன்றுஞ் சொன்னேன்
கண்டிதமாய் சுரமுடனே வேர்வை மூர்ச்சை
　　கதிப்பான பிரமையுடன் தொண்டைக் கம்மல்
பண்மையுள்ள நடுக்கலுந்தான் வருகும் பாரு
　　வளமான அக்கினிகுமரன் மாத்திரையால் தீரும்பாரே. (1037)

## இரத்த ஜிம்மக தோஷம்.

தீருகின்ற இரத்தஜிம்மக தோஷங் கேளாய்
　　திரமான நாக்குத்தான் சிவந்து கொஞ்சம்
ஊறியே நீண்டுமே முள்போல் தோன்றும்
　　உள்ளபடி சுரந்தாகம் எரிச்சல் காணும்
தேறியே போவதற்கு மருந்து கேளு
　　தெளிவான ஆயிரத்தில் சென்ன மாத்திரை
ஆறியே அதற்குத்தான் உத்தமாக்கினி என்பார்
　　அப்பனே அம்மருந்தைச் செலுத்திப் போடே. (1038)

## கிருஷ்ண ஜிம்மக தோஷம்.

போடுகின்ற கிருஷ்ணஜிம்மக தோஷங் கேளாய்
பொலிவான நாக்கறுத்து வறண்டு முன்போல்
ஆடியே அடிக்கடிதான் எழுந்திருப்பான் பாரு
அப்பனே பிரமையுடன் வயிற்றுப்பசமே காணும்
பாடியே வியர்வையுடன் தாகம் சோம்பல்
பலமான தினவுடனே அழலை தோன்றும்
கூடியே துடிப்புடனே கையுங் காலும்
கொற்றவனே அசதியுடன் சரீரம்கறுக்கும் பாரே. (1039)

கருதியே இருக்கின்ற தோஷத் திற்கு
கனமான திவ்வியாக்கினி குமாரன் என்றும்
பருக்கமுள்ள மாத்திரை தான் செய்து
மாந்தருக்கு மூன்றுநா ளிவாய் சொன்னேன்
செருக்கியே இத்தோஷ மேழு மப்பா
செயலான எழுநாள் பதினைந்துநாளுக் குள்ளே
முறுக்கியே தீர்ந்தாக்கால் தீருஞ் சொன்னேன்
முக்கியமாய் வலியினுட குணத்தைக் கேளே. (1040)

## வலிப்பு.

கேளடா வலிப்பைத்தான் சொல்லக் கேளு
கெடியான அமரகண்டன் குமரகண்டன்
நாளடா பிரம்மகண்டன் காக்கைவலி யினேடு
நலமான முயல்வலி என்றைந்தாம்
வாளடா இதற்குள்ளே பிரம்ம கண்டன்
வளமாகத் தீராதென்று சொல்லு
தேளடா மற்றதொரு நாலு மப்பா
தெளியுமென்று முன்னோர்கள் சொன்னர் காணே. (1041)

## அமர கண்டன்.

காணடா அமரகண்டன் குணத்தைக் கேளு
கடிதாக வரும்போது திரேகத்தி லப்பா
பூணடா திரேகத்தில் நோவுண் டாகி
பொங்கமுடன் மூர்ச்சையுடன் கையுங் காலும்
நாணடா துவைத்ததுபோல் கிடக்கும் பாரு
நலமான பற்களைத்தான் தெறித்து மூடும்
வாணடா குடைச்சலுடன் வியர்வை தோன்றும்
வண்மையுடன் இன்னுந்தான் சொல்லக் கேளே (1042)

கேளடா தோள்முதுகு நெஞ்சி லப்பா
    கடிதான உதரத்தைப் பற்றிக் கொண்டு
பாளடா உபத்திரவஞ் செய்யும் பாரு
    பண்பாக இதற்குத்தான் குதிரைவலியே என்பார்
வாளடா இந்நோய்தான் மூர்ச்சைரோகம் போல்
    வளமாகக் குணமெல்லாங் காட்டுஞ் சொன்னேன்
ஆளடா அவைகட்கு ஆட்டுக்கால் தைலம்
    அப்பனே ஈய்ந்தாக்கா லொழிந்து போமே. (1043)

## குமர கண்டன்.

போமடா குமரகண்டன் குணமே தன்னில்
    பொலிவான வாதசிலேஷ்பனந் தன்னால் தோன்றி
காமடா முன்கழுத்தை முகத்தை யப்பா
    கனமாக முறுக்கியே தோளில் வைக்கும்
தாமடா தாடைசெவி உதடு கண்கள்
    தப்பாமல் கோணியே போவ தல்லால்
ஓமடா அப்பக்கம் உபத்திரவமே செய்யும்
    உள்ளசன்னி குறியதுபோல் காட்டும் பாரே. (1044)

கட்டியதோர் குறிகள்தான் மாதர்களுக்குக் கண்டாக்கால்
    கனமான கர்ப்பவாயுவைப் போலே வய்யா
கூட்டியே உதிரத்தை வயிற்றில் தானும்
    குணமாகக் கட்டியே பிதுங்க வொட்டாமல்
ஆட்டியே கர்ப்பாசயத்தில் அடக்கிக் கொண்டு
    அப்பனே சிலநாள்தான் பொறுத்த தென்றால்
சாட்டியே சன்னிபாதம் போலே காணும்
    சண்டாள குமரகண்ட வலி யிதாமே. (1045)

## பிரம கண்டன்.

வலிப்பான குமரகண்டன் சொல்லக் கேளாய்
    வண்மையுள்ள கைகால்கள் நீட்டிக் கொண்டு
நலியாகத் துடிக்குமடா அப்போ தப்பா
    நன்மையுள்ள கண்களைத்தான் மேலேநோக்கிக் கொண்டு
சலியாமல் சிமிட்டாமல் பார்ப்பான் பாரு
    சரீரந் தன்னிலப்போ நோவே யுண்டாம்
கலியான சிலேத்துமத்தாலே வருவ தாலே
    கண்டிதமாய் குரக்குவலி என்று பேரே. (1046)

## காக்கை வலி.

பேரான காக்கைவலி குணமே தென்னில்
பெரிதாகக் கண்களைத்தான் முழிப்பான் பாரு
கூறுக அவ்வேளை மலஜலங் கொள்ளும்
கொப்பனவே வந்துவிடும் குறியைப் பாரு
சீரான கால்களைத்தா னுதைத்துக் கொள்ளும்
சிறப்பான நாவுலர்ந்து கோழை காணும்
காரான வாதசிலேத்துமந் தன்னால் தோன்றி
கதிப்பாக இதுதீர மருந்து மீயே. (1047)

## முயல் வலி.

செய்கின்ற முயல்வலிப்புத் தன்னைக் கேளு
செயலான மெய்தனிலே வாய்வு நிரம்பி
பையவே வயிற்றில்தான் நோவுண் டாக்கி
பாங்கான வாயில்தான் நுரையே தள்ளும்
தொய்யவே கைகால்கள் முறைத்துக் கொள்ளும்
தொடுப்பான இந்நோய்தான் தண்ணீரைக் கண்டால்
நையவே அக்கினிதான்கண்டு சுட்டிட் டாலும்
நலமான மூலப்பெருக்கந்தன்னில் காணும் பாரே. (1048)

## மந்த ரோகம்.

பாரேநீ மந்தரோகம் வருகும் நேர்மை
பக்குவமாய்ச் சொல்லுகிறேன் பண்பாய்க் கேளு
கூறேநீ பிரமாணந் தனக்கு அப்பா
கொத்தவனே அதிகமாய்ப் புசிப்ப தாலும்
சீறியே சீக்கிரத்தில் தோஷம்
சிறப்பாக அதிகரிக்கச் செய்யும் பாரு
ஆறியே போனதொரு அபக்குவ மான
அழகற்ற பதார்த்தத்தை புசிக்கக் கேளே. (1049)

புசிக்கின்ற வேளைதன்னில் வாத பித்தம்
பொல்லாத சிலேத்துமம் எல்லாங் கூடி
பிசிக்கியே போகும் பிலமாக
அடிக்கடியே தின்ற பேர்க்கும்
நசிக்கியே மந்தாக்கினி உள்ள வர்க்கும்
நாடியே பதினாலு வேகந் தன்னை
பசிக்கியே அடக்கியே வைத்த வர்க்கும்
பாங்கான ஆமாசய ஸ்தானங் கேளே. (1050)

தானந்தா னவ்வன்னத்தில் அதிகரித் தால்
தக்கதொரு திரிதோஷ மவ்வன்னத் தோடு
ஊனமாய்க் கலந்துகொள்ளும் அப்போ தப்பா
உண்டதொரு அவ்வன்னம் பித்தத்தைப் பாரு
மோனமாய் ஒடுக்கி சேத்துமத் தால்
முக்கியமாய் மறிபட்டு வாய்வு ஞலே
ஈனமாய் அடைபட்டு பிருடை போலே
இவ்விதமாய் மந்தந்தான் காணும் பாரே. (1051)

காணுகின்ற இந்நோய்தான் முதலில் கண்டு
கண்ணடங்கி இருந்ததொரு ஆம சேஷம்
போணியே அதிகரித்து வெளிப்படுவ தாலும்
பலமான சூரியனுட வெப்ப மப்பா
கோணியே அதிகரித்துப் போவ தாலும்
கொத்தவனே வாந்தியுடன் பேதி காணும்
ஆணியால் குத்துவதுபோ லுடம் பெல்லாம்
அப்பனே அப்போது இருக்கும் பாரே. (1052)

இருக்கின்ற ஆகாரம் புசித்த பின்பு
இதமாகச் சீரணிக்கும் முன்பு தானே
செருக்கியே மறுபடியு மாகாரங் கொண்டால்
செயமாகச் சேர்ந்துமே சீரணிக்கா
பருக்கியே மந்தந்தா னதிகப் பட்டு
பக்குவமாய் அக்கினியே தீவிரமும் போயி
திருக்கியே மந்தநோய் வருகும் பாரு
திரமான திரேகத்தின் நிலையைப் பேணே. (1053)

கேளடா திரேகந்தான் சோம்பல் கொள்ளும்
கெடியான தாதுக்குள் கெட்டுப் போகும்
நாளடா ரத்தந்தான் நீராய்ப் போகும்
நலமான மாமிசந்தான் கரைந்து போகும்
வாளடா வயிற்றில்தான் இரைச்ச லுண்டாம்
வளமாக அடிக்கடியே பேதி காணும்
நாளடா அப்பேதி சுத்தசலம் போலே
நன்மையுடன் வாந்தியுந்தான் காணும் பாரே. (1054)

பாரடா அப்போது சொல்லக் கேளு
பண்பான சலத்தைத்தான் தாங்கிக் கொண்டு
ஊறியே இருக்கின்ற நரம்பு தன்னை
உத்தமனே பித்தமுடன் வாந்தி காணும்
தேறியே உலர்த்துவதால் தொண்டை யப்பா
தெளிவாக வறட்சிகண்டு தாகங் காணும்
மாறியே பிசுபிசுப்பாய் வியர்வை யப்பா
மைந்தனே எரிச்சலுடன் நோவு உண்டாமே. (1055)

உண்டான நோவுதான் திரேக மெல்லாம்
உள்ளபடி கண்டுமே சீதளந்தா னப்பா
பண்டான வாழைத் தண்டு போலே
பாரோர்க்குக் காணுமடா இன்னங் கேளு
நாளடா நடுக்கலுடன் கண்குழியே வீழும்
நன்றான நெற்றிதளர்ந்து நிறமே மாறும்
செண்டான தொனிதான் ஈனத்தொனிபோல் தோன்றும்
சிறப்பாக இதற்குக் காரணத்தைக் கேளு. (1056)

கேளடா கீல்களே இருந்து வாழும்
கெடியான சேத்துமப்பசை கரைவ தாலே
நாளடா திரேகந்தான் முழுது மப்பா
நலமான கட்டுவிட்டுப் போவதுபோலே தோன்றும்
வாளடா ஊசியால் குத்துவதுவே போலும்
வளமான குத்தலுடன் புரளல் மூர்ச்சை
தேளடா மயக்கமுடன் ஆயாசந் தோன்றும்
தெளிவாக இன்னமொன்று சொல்லக் கேளே. (1057,

சொல்லுகிறேன் சீதங்கண்டு ஸ்தான மப்பா
சுயங்கெட்டுப் போவதினுல் வயிறுநோ வுண்டாம்
வல்வினையாய் இந்நோய்தான் வாதக் கூறில்
வளமாகக் கண்டாக்கால் குணத்தைக் கேளு
தொல்லுலகில் முதலில்தான் வயிறுபொருமல் காணும்
தொகுப்பான பேதியுடன் நடுக்கல் பிரமை
பல்வினையாம் திரேகந்தான் மரத்துப் போகும்
பாங்கான குத்தலுடன் இன்னம் பாரே. (1058)

இன்னங்கேள் வாதத்தின் நாடி தானும்
இதமாக அதிகரித்துப் போவ தாலே
சின்மயமாய் வயிறிரைச்சல் மனக்கலக்கத் தோடு
சிறப்பான திரேகந்தான் கறுத்துப் போகும்
உன்னிதமாய் கண்களிரண்டும் திறந்தே காட்டும்
உள்ளபடி சுரங்கொஞ்சம் வருகும் பாரு
அன்னக்குடல் குமுறலுடன் புரட்டல் காணும்
அப்பனே கொஞ்ச மசாத்திய மாமே. (1059)

சொல்லுகிறேன் சீதங்கண்டு ஸ்தான மப்பா
சுயங்கெட்டுப் போவதினுல் வயிறுநோ வுண்டாம்
வல்வினையாய் இந்நோய்தான் வாதக் கூற்றில்
வளமாகக் கண்டாக்கால் குணத்தைக் கேளு
தொல்லுலகில் முதலில்தான் வயிறுபொருமல் காணும்
தொகுப்பான பேதியுடன் நடுக்கல் பிரமை
பல்வினையாம் திரேகந்தான் மாத்துப் போகும்
பாங்கான குத்தலுடன் இன்னம் பாரே. (1060)

இன்னங்கேள் வாதத்தின் நாடி தானும்
இதமாக அதிகரித்துப் போவ தாலே
சின்மயமாய் வயிறிரைச்சல் மனக்கலக்கத் தோடு
சிறப்பான திரேகந்தான் கறுத்துப் போகும்
உன்னிதமாய் கண்களிரண்டும் திறந்தே காட்டும்
உள்ளபடி சுரங்கொஞ்சம் வருகும் பாரு
அன்னக்குடல் குமுறலுடன் புரட்டல் காணும்
அப்பனே கொஞ்ச மசாத்திய மாமே. (1061)

## பித்தக் கூறு.

சாத்தியமாம் சுரமுடனே பேதி காணும்
சரியான உள்ளெரிச்சல் தாகம் தோன்றும்
காத்திரமாய்க் கைகால்கள் மரத்துப் போகும்
கனமான திரேகந்தான் குத்தல் காணும்
சூத்திரமாய் பித்தத்தின் நாடி யப்பா
சுகமாக பகல்முழுது மாக்கிர மித்து
கோத்துமே யிழுப்பதினுல் திரேக மப்பா
கொத்தவனே சூம்பலுடன் மூர்ச்சை யாமே. (1062)

## சிலேத்துமக் கூறு.

ஆமடா விக்கலுடன் பிதற்றல் வாந்தி
அழகான மயக்கமுடன் பிரலாபம் காணும்
ஓமடா திரேகந்தான் படுக்கை கொள்ளா
உத்தமனே இந்தநோய் வந்த பேர்க்கு
நாமடா இதுகாட்டமுடன் பட்டாத் தீரும்
நலமான சேத்துமத்தின் குணத்தைக் கேளு
வாமடா வாந்தியுடன் சலமாய்ப் பேதி
வளமான உமிழ்நீரு முண்டாம் பாரு. (1063)

பாரடா தாள்பிடிப்பு முதலில் காணும்
பண்பான உமிழ்நீரு முண்டாம் பாரு
கூறடா உடம்பெல்லாங் குத்தல் காணும்
குணமான கைநாடி அடங்கிப் போகும்
தேமடா புரளலுடன் மேல்நோக்கிப் பார்வை
தெளிவான திரேகந்தான் வெளுத்துக் காட்டும்
நாரடா இந்நோய்க்கு மருந்து இல்லை
நலமான இன்னமொரு குணத்தைக் கேளே. (1064)

## கொம்பன்.

ஒருபுறந்தான் பேதியது மாந்தருக் கப்பா
உள்ளபடி கண்டவுடன் மைந்தா கேளு
மருவியே மயக்கமுடன் ஆயாசங் கண்டால்
மைந்தனுக்குத் தீராது மாநிலத்தில்
திருகியே அம்பலந்தா னெரியும் பாரு
திரேகந்தான் சடுதியிலே கலைப்புண் டாகும்
முருகியே இந்நோய்க்குக் கொம்ப னென்பார்
முக்கியமா யிதைத் தீர்க்க முருகனுமே. (1065)

முருகனுர் கிருபையப்பா மாந்த ருக்கு
முக்கியமா யிருந்தாக்கா லப்பா கேளு
மருவியே வாரா திந்த ரோகம்
மாநிலத்தில் அவன்கிருபை தப்பி னோர்க்கு
செருகியே வருமென்று சொல்வாய் நீதான்
சிறப்பான குடல்படுவன் விதமே தென்னில்
குறுகியே தங்காத பேதி காணும்
குறிப்பாக மூத்திரந்தான் வாரா தன்றே. (1066)

## குடல் படுவன்.

அன்றான குடல்படுவன் மயக்கம் மூர்ச்சை
அழகாகக் காணுவது முண்டு பாரு
நன்றாக மூன்றுநாள் போவ துண்டு
நலமாக ஒருநாளில் கொல்வ துண்டு
பன்றான குறட்டுவலி மிகவே காணும்
பாங்கான திரேகந்தான் வத்திப் போகும்
ஒன்றான ஐந்துநா ளாகி விட்டால்
உள்ளதொரு திரேகந்தா னழியா தென்றே. (1067)

## அக்கரம்.

அழியாத அக்கரந்தான் மந்த பேதி
அதினாலே மாந்தருக்கு அழிவு வாரா
பழியான அக்கரந்தான் வந்த பின்பு
பாங்கான குடல்படுவன் கொம்பன் ரெண்டும்
செழுப்பாகச் சேர்ந்துமே கொல்வ துண்டு
செயலாக இதைத்தான் ஊழிக்காற்றென்று சொல்வார்
விழியான காளியென்று சொல்வார் வெகுபேர்
விதமறியா வியாதிக்கு மருந்து கேளே. (1068)

கேளடா இந்நோய்தான் சீதாங்கசன்னி போலே
கெட்டகுணம் தன்னைத்தான் தருகும் பாரே
நாளடா இதுதீர பிரளயகாலாக்கினி ருத்திரனென்னும்
நலமான மாத்திரைதான் செய்து ஈவாய்
பாரடா பிரசண்ட மாருத மென்றும்
பண்பான கருக்கொன்று செய்து கொண்டு
தேளடா ஈந்துநீ வந்தா யானால்
தெளியுமடா இந்நோய்தான் தெளியும் தானே. (1069)

தானான இன்னமொரு மருந்து கேளு
தனியான அருக்கநாள் தன்னி லப்பா
மானான யெட்டிமரந் தன்னைப் பார்த்து
மைந்தனே வடமுகமாய்ப் போகும் வேர்க்கு
ஊனான நூல்இழையால் காப்புக் கட்டி
உள்ளதொரு சாம்பிராணி தூபந் தந்து
தேனான மற்றாநாள் வேரின் பட்டை
தெளிவாகக் கொண்டுவர செய்வாய் நீயே. (1070)

செய்தபின்பு இன்னமொரு சூட்சமங் கேளு
　　செயலான தலைப்பிள்ளை நஞ்சுகொடியே யப்பா
பையயவே கொண்டுவந்து பாளைச் சாற்றில்
　　பாங்கான சுன்னமே செய்து கொண்டு
ஐயமில்லாச் சுன்னத்தின் இடைக்கே அப்பா
　　அப்பனே எட்டியுட பட்டை தன்னை
உய்யவே சமமாக வைத்துக் கொண்டு
　　உள்ளதொரு சம்பழச்சாறு தன்னு லாட்டே. (1071)

ஆட்டியே மைனமா யெடுத்துக் கொண்டு
　　அப்பனே சுண்டைக்கா யளவ தாக
திரட்டியே குளிகைதான் செய்து கொண்டு
　　திரமான கியாழம் சொல்லக் கேளு
மாட்டியே மேனிவேர் பலந்தா னென்றும்
　　மகத்தான தும்பைவேர் பலந்தா னென்று
கூட்டியே இதுரண்டும் ஒன்றுய்த் தட்டி
　　கொஞ்சம் நீவெதுப்பிடுவாய் பின்பு கேளே. (1072)

பின்புநீ சுக்குடனே மிளகு மல்லி
　　பிலமாக முன்போலே வெதுப்பிக் கொண்டு
அன்பாகச் சட்டிக்குள் இட்டு நீயும்
　　அழகாக ரெண்டுபடி நீரை வாரு
தென்பாக பொங்கிவரும் வேளை தன்னில்
　　திரமான கற்பூரக் கட்டி ஒன்றை
இன்பமுடன் வைத்துநீ போட்ட பின்பு
　　இதமாக எட்டொன்ருய் குறுக்கச் செய்யே. (1073)

குறுக்கியதோர் கஷாயத்தில் நாலி லொன்று
　　குணமாகத் தானெடுத்து குளிகை ஒன்றை
பருக்கியே யுரைத்துமே கொடுத்துப் பாரு
　　பாங்கான பேதியெல்லாங் கட்டுஞ் சொன்னேன்
செருக்கியே மூன்றுதரம் ஈய்ந்தா யானல்
　　செயலான பேதி யெல்லாம் தீரும் பாரு
மருக்கியே பத்தியந்தான் கஞ்சி யாகும்
　　மக்களுக்கு வேறென்று மாகா தென்றே. (1074)

ஆகாத பேதிக்கு இன்ன மொன்று
அழகான மருந்தொன்று அறையக் கேளு
போகாத வெண்மிளகு விராக னென்று
பொல்லாத சூடனுந்தான் விராக னிரண்டு
வேகாத அபினிதான் விராகன் கால்தான்
விதமாகக் கட்டினதோர் லிங்க மப்பா
பாகாத விராகன் அரையே யாகும்
பண்பான விடையந்தான் கால்தான் காணே. (1075)

காணுகின்ற வெங்காரச் சுண்ண மப்பா
கணக்காக விராகனிடை யரையே யாகும்
பூணுகின்ற மருந்தையெல்லாம் கல்வந் தன்னில்
பொங்கமுடன் தான்போட் டாட்டிக் கொண்டு
பேணுகின்ற கொம்புத்தேன் தன்னை விட்டு
பிலமாகத் தானறையாய் சாமம் ரெண்டு
தோணுகின்ற பேதிக்கு சிறுகழற்சிக்காய் வீதம்
தெளிவாகத் தேன்தனிலே கொடுத்துப் பாரே. (1076)

பார்த்துநீ கொடுத்துமே வந்தா யானல்
பாழான பேதியெல்லாம் கட்டிப் போகும்
மூத்திரந்தான் இறங்கியே தெளியும் பாரு
முக்கியமாய் சீதந்தான் அணுகா தப்பா
பார்த்துமே மூன்றுதரம் கொஞ்சம் கொஞ்சம்
பண்பாக ஈய்ந்தாக்கால் நோயே போகும்
ஆர்த்துமே சாஸ்திரத்தில் சொன்ன மார்க்கம்
அப்பனே உந்தனுக்கு அறைந்திட் டேனே. (1077)

அறைந்திட்டே னின்னமொன்று சொல்லக் கேளு
அப்பனே மிளகுடனே பெருங்காய மப்பா
விரித்திட்ட அபினியுடன் மூன்றுஞ் சேர்த்து
விவரமாய் மூன்றுமொரு இடையாய் வாங்கி
வரந்திட்ட கல்வத்தில் வைத்து நீயும்
வளமாக அறைத்துமே குளிகை செய்து
மறந்திட்ட குண்டுமணி அளவாய் செய்து
பாங்கான மூன்றுதரம் ஈய்ந்து கேளே. (1078)

## பிரமேகம்.

கேளடா பிரமேக உற்பத்தி தன்னை
கெணிதமுடன் சொல்லுகின்றேன் நன்ருய்க் கேளு
நாளடா ஸ்திரீபோகம் அதிகரித் தாலும்
நன்மையுடன் மோகமுடன் பட்டினி யாலும்
வாளடா ஸ்தம்பனங்கள் செய்வ தாலும்
வளமான காரமுடன் துவர்ப்பு உப்பு
பாழடா அதிகமாய் புசிப்ப தாலே
பாங்கான பிரமேகந் தோணும் பாரே. (1079)

தோணுகின்ற வேளைதனில் சொல்லக் கேளு
தொகுப்பான முதுகினுட தண்டெலும்பு தன்னை
ஊணியே வரிசையாய் பற்றிக் கொண்டு
உள்ளபடி பின்ளுலே நாபி தன்னை
பேணியே சாற்றிக் கொள்ளு மப்பா
பிலமான மூலாதாரம் தன்னைப் பற்றி
பாணியாம் நரம்புடனே எலும்பை யப்பா
பண்பாகச் சுரோணிதத்தில் செல்லும் பாரே. (1080)

செல்லுகின்ற வேளைதன்னி லடிவயிற்றில் தானும்
செயலாக வேதனையை யுண்டாக்கும் பாரு
மல்லுகின்ற ஆணுக்கு நீர்தாரையி னின்றும்
மகத்தான பெண்ணுக்கு ஜனன இந்திரியந் தன்னில்
தொல்லுலகில் சீப்போலே வெளுத்த நீராய்
தொப்பனவே வடிகின்ற மேக நீருக்கு
அல்லல்செய்யும் வெள்ளையென்றும் சொல்வார் மேலோர்
அதனுடைய குணமதனை அறையக் கேளே. (1081)

அறைகிறேன் ஆரம்பந் தன்னி லப்பா
அழகான நீர்த்துவாரந் தன்னில் கேளு
நறையான நமைச்சலுடன் சலமே காணும்
நன்மையற்ற சலமதனை உடனே தானே
கறையாக கண்டிக்கா விட்டால் கேளு
கதிப்பான சலமப்பா சீழாய்ப் போகும்
உரைக்கிறேன் அச்சீழ்தான் வெள்ளை பச்சை
உத்தமனே மஞ்சளுடன் சிவப்பு மாமே. (1082)

ஆமேதான் கோசமுடன் மூத்திரத் துவாரத்தின்
அழகான சளிசவ்வு வீங்கிக் கொள்ளும்
தாமேதான் மூத்திரந்தான் சன்னத் தாரையாயி
தருகாமல் இரண்டுபிரிவாய்த் தோணும் பாரு
ஓமேதான் விக்கலுடன் வேதனையே கண்டு
உள்ளபடி நீரிறங்கும் உண்மை சொன்னேன். (1083)

பாரடா இரவுதன்னில் கொஞ்ச மப்பா
பண்பாக விம்மலுற்று வளைந்து கொள்ளும்
கூறடா நோவெடுத்து நித்திரைதான் தோன்று
கொற்றவனே ரோகந்தான் நாள்பட்டு விட்டால்
நேரடா குறிகளெல்லாந் தளர்ந்து போய்
நிச்சயமாய் சளிபோலே வெள்ளை யாகும்
வாரடா அதற்குத் தந்திமேக மென்பார்
வளமாக இன்னமொன்று சொல்லக் கேளே. (1084)

சொல்லுகிறேன் மூத்திரத்தின் துவாரந் தன்னில்
சொகுசாக ரத்தந்தான் வடிந்த தென்றால்
அல்லல்செயு மிரத்தத்தின் பிரமேக மென்பார்
அரையில்தான் வீக்கமுடன் நெறியே கண்டால்
தொல்லுலகில் அரையாப்பு என்று சொல்வார்
தொகுப்பான மோட்டுகளில் வீக்கங் கண்டால்
வல்வினைசெய் மேகத்தின் பிடிப் பென்பார்
வளமாக இன்னமொன்று சொல்லக் கேளே. (1085)

கேளடா சிலருக்கு லிங்கத்தோல் தான்
கடிதாகச் சுருங்கியே போவ துண்டு
நாளடா சிலருக்குப் பீச மப்பா
நன்மையுடன் வீங்கியே போவ துண்டு
தேளடா சிலருக்குச் சொல்லக் கேளு
தெளிவான சீழின்றி இருக்கும் பாரே
பாளடா மூத்திரந்தான் விடும்போ தப்பா
பண்பான எரிவுடனே கடுப்புந் தோன்றும். (1086)

கடுப்புடனே மூத்திரத்தின் துவாரம் வீங்கி
கனமாகச் சிவந்துமே யிருக்கும் பாரு
கடுப்புடனே அதற்குத்தான் வறட்சிமேக மென்பார்
வளமாக வெள்ளைதான் அடிக்கடியே கண்டால்
தொடுப்பான நீரடைப்புக் காணுஞ் சொன்னேன்
தொல்லுலகில் ரோகஸ்திரீ தன்னைச் சேர்ந்து
அடுத்திட்ட நாலைந்து நாளில் தானே
அப்பனே கண்டாக்கால் பிரமேக மாச்சே. (1087)

ஆச்சடா பெண்களுக்குச் சொல்லக் கேளு
அப்பனே நிதம்பகண் யோனி யோடு
காச்சடா கர்ப்பப்பையின் வாயி னின்று
கனமான மேகநீர் சனிக்கும் பாரு
போச்சடா அவர்களுக்கு மெத்தஉபத்திரவம் தோன்று
பொங்கமுடன் நீரெரியும் நடந்தால் பாரு
கூட்டடா வேதனையுங் காட்டுஞ் சொன்னேன்
குனியவே வருத்தங்கள் தோணும் தானே. (1088)

தானான அரையில்தான் நெறிகட்டிக் கொள்ளும்
தன்மையுள்ள சிறுஉறுப்பு வீங்கும் பாரு
ஊனான சீயுடனே சளியுஞ் சேர்ந்து
உள்ளபடி மேகநீர் வடியும் பாரு
தேனான பிரமேகம் இருபத் தொன்றும்
தெரிந்திடவே பேர்தனைச் சொல்வேன் பாரு
மானான அவைகட்கு முன்கூ றெல்லாம்
மக்களுக்கு உண்டென்று மகிழ்ந்து கொள்ளே. (1089)

கொள்ளவே வாதபித்த சிலேத்தும மென்றும்
குணமான பிரமேகம் மூன்றே யாகும்
மெள்ளவே வாதபித்த மேக மென்றும்
மேலான பித்திசிலேத்தும பிரமேக மென்றும்
குள்ளவே தொந்தத்தின் பிரமேக மென்றும்
தனியான கட்டிப்பிரமேகம் சலப்பிரமேக மென்றும்
தெள்ளவே தந்திப் பிரமேக மென்றும்
தெளிவான சீப்பிரமேகம் ஒழுக்குப்பிரமேக மாமே. (1090)

ஆமடா அரித்திரபிரமேகம் மூத்திரக்கிரிச்சிரப்பிரமேக மென்றும்
அழகான கரப்பான்கள் பிரமேக மென்றும்
ஓமடா தந்துப்பிரமேகம் நீச்சுப்பிரமேக மென்றும்
உள்ள மலினப்பிரமேகம் மதுப்பிரமேக மென்றும்
நாமடா விரணத்தின் பிரமேக மென்று
நாமமடா இதற்குத்தான் சொல்வான் பாரு
தேமடா ஒவ்வொன்றின் குணத்தைத் தானே
தெளிவாக நீயறியச் சொல்வேன் கேளே. (1091)

## வாதப் பிரமேகம்.

கேளடா வாதப்பிரமேக நேர்மை கேளாய்
கோமூத்திரம் போலவே நீரிறங்குஞ் சொன்னேன்
நாளடா கோசத்தி னடியே நோகும்
நலமாக வெளுத்துமே கட்டி யாகும்
பாளடா சீவடியும் பின்பு பாரு
பாங்கான பீசம்தான் நோகும் பாரு
நீளடா சரீரந்தான் வாட்ட மாகும்
நிச்சயமாய் கனகனப்பு வேதனையு மாமே. (1092)

## பித்தப் பிரமேகம்.

பாரடா பித்தத்தின் பிரமேக நேர்மை
பாங்கான திரேகந்தான் வாட்ட முண்டாம்
கூறடா தயக்கமுடன் கைகால் நோவும்
கொப்பனவே திரேகந்தான் கனத்துக் காணும்
சீரான எரிச்சலுடன் குத்தல் நோவு
சிறப்பாக மஞ்ச ளாகத் தானே
பேரான சீவடிந்து கைகாலோய்ச்ச லப்போ
வேகமுள்ள கோசந்தான் விம்மலோடு நோகுந்தானே. (1093)

## சிலேத்தும பித்தம்.

தானன சிலேத்தும பித்த நேர்மை
தக்கதொரு கோசத்தில் நோவு கண்டு
ஊனுகக் கடுப்புடனே வெண்மை யாக
உள்ளபடி நீரிறங்கி திரேகம் பாரு
தேனுகப் பழுத்தநிறங் காட்டுஞ் சொன்னேன்
தெளிவான உஷ்ணம் காணுவாய் கைதன்னில்
மானுக ரத்தந்தா னில்லாமல் போகும்
மகத்தான வாதபித்த பிரமேகங் கேளே. (1094)

## வாத பித்தம்.

மேகமடா கண்டவர்க்கு சர்வாங்கம் நோவு
மேலான கோசத்தி னுள்ளே யப்பா
பாகமுள்ள ஆணியைத்தான் சொருகினாப் போல்
பக்குவமாய் வேதனைதான் காணும் பாரு
மோகமுள்ள நீரப்பா மாக்கரைத்தாப் போலே
முக்கியமாய் சுருக்குடனே இறங்கும் பாரு
வேகமுள்ள மலமப்பா இறுகிப் போகும்
விதமான பித்தசிலேத்தும பிரமேகம் பாரே. (1075)

## பித்த சிலேத்துமம்.

பாரடா வாய்கசக்கும் அடிவயிற்றி லப்பா
பாங்கான பொருமலுடன் இசிவு காணும்
கூரான கோசந்தான் சுருங்கிப் போகும்
கொத்தவனே நீரப்பா வெண்மை மஞ்சள்
நேராக இறங்குமென்று சொல்வாய் நீயும்
நிச்சயமாய் கீல்நோவு பகல்நித்திரையே காணும்
ஊனை பசியின்மை சீர முதல்
உள்ள தொந்தப்பிரமேக நேர்மை கேளே. (1096)

## தொந்தம்.

நேர்மைபார் சரீரத்தில் தினவு உண்டாகும்
நிச்சயமாய் புழுஊரும் விதம்போல் காணும்
கூர்மையுள்ள அடிவயிறு சுரப்புண் டாகும்
கொப்பனவே கோசந்தான் கறுத்துக் காட்டும்
கூர்மையுட னடிக்கடிதான் கறுத்துக் கொண்டு
கனமான நீரிறங்கும் பிடித்துப் பாரு
நேர்மையுடன் பலநிறமாய்த் தோய்ந்து காட்டும்
நிச்சயமாய்க் கவிச்சிதான் அடிக்குங் காணே. (1097)

## கட்டி.

காணடா கட்டிப் பிரமேக நேர்மை
கனமான திரேகத்தில் நோவுண் டாக்கி
தோணவே கட்டிகள் தானெழும்புஞ் சொன்னேன்
தொகுப்பான கோசத்தில் தினவே காணும்
பூணவே பருக்கைபோல் சீவடியும் பாரு
பொல்லாத பீசத்தில் நீர்கசிவு காட்டும்
ஆணவே திரேகந்தான் வாட்டங் காணும்
அப்பனே சலப்பிரமேக ரோகங் காணே. (1098)

## சலப் பிரமேகம்.

ரோகந்தான் காண்பவர்க்கு திரேகந் தான்
நொந்துமே வாய்கசந்து வாந்தி யாகும்
மோகமுள்ள மயக்கமுடன் மூத்திரம்கசியும் பாரு
முக்கியமாய் வெளுத்த நீரிறங்குஞ் சொன்னேன்
பாகமுள்ள அடிவயிறு பிடுங்கல் காணும்
பலமாக மலத்தில்தான் சீதங் காணும்
வேகமுள்ள அரையாப்புக் கட்டி காணும்
விதமான தந்தியுட பிரமேகங் கேளே. (1099)

## தந்திப் பிரமேகம்.

கேளடா இந்நொய்தான் கண்ட போது
கெடியான அடிவயிறு புண்போல் நோகும்
வீளடா தண்டினுட அடியி லப்பா
விருவிருப்புத் தட்டியே விம்மல் காணும்
பாளடா நீரிறங்கி உடனே மாறும்
பாங்கான தந்திபோல் மேகந் தொங்கும்
நாளடா வெள்ளைகண்டு அடிக்கடியே யப்பா
நலமான சீலைநனைந்து கைகாலெரி வுண்டாமே (1100)

## இரத்தப் பிரமேகம்.

உண்டான இரத்தப்பிரமேகக் கூறைச் சொல்வேன்
உத்தமனே சரீரந்தான் பஞ்சுபோல் மெதுவாய்ப்போகும்
நண்டான தயக்கமுடன் அடிக்கடி வேதனையே காணும்
நலமான நீரப்பா ரத்தம்போ லிறங்கும் பாரு
பாங்கான சரீரந்தா னிளைத்துப் போகும்
உண்டான சீப்பிரமேக நேர்மை
முக்கியமாய்ச் சொல்லுகிறேன் முகிந்து காணே. (1101)

## சீழ்ப் பிரமேகம்.

சொல்லுகிறேன் சீழ்ப் பிரமேக மப்பா
சொகுசான கோசத்தின் நாளத்தி லப்பா
கெல்லுகின்ற கறுப்புடனே சீழைப் போலே
கெடிதான வெள்ளைகண் டரையாப்புக் காணும்
மல்லுகின்ற நாபியில்தான் விரணங் கண்டு
மகத்தான கணுக்காலில் குடைச்சல் காணும்
தொல்லுலகில் அடிக்கடிதான் நீரிறங்கும் பாரு
தொகுப்பான குளிருடனே சுரநோ வுண்டாமே (1102)

## ஒழுக்குப் பிரமேகம்.

உண்டான ஒழுக்குப் பிரமேகங் கேளு
உத்தமனே கோசத்தின் துவாரந் தன்னில்
நண்டான சீழ்ரத்தம் சலமென்று சொல்லும்
நலமான மேகநீர் ஒழுகும் பாரு
பண்டான சரீரத்தில் கடுமை யுள்ள
பாங்கான முளைகட்டி சரீர முற்றும்
கண்டிதமாய் எழுப்பியே விரண மாகி
கனமான எரிச்சலுடன் குடைச்ச லாமே. (1103)

## அரித்திரப் பிரமேகம்.

ஆமேதான் அரித்திர பிரமேக ரோகம்
அப்பனே சொல்லுகிறேன் அறிவாய்க் கேளு
தாமேதான் மஞ்சள் நிறமான வெள்ளை
தணியாத சூடுடனே நீரிறங்கும் பாரு
ஓமேதான் அவ்விடத்தில் தீ பட்டாப் போல்
உள்ளபடி எரிச்சலுடன் கடுப்புத் தோன்றும்
நாமேதான் நாவில் கசப்புத் தோன்றி
நலமாக முகமஞ்சள் நிறமாகும் பாரே. (1104)

## மூத்திரக் கிரிச்சரம்.

கேளடா மூத்திரக்கிரிச்சரப் பிரமேகந் தன்னை
பகருவேன் மூத்திரந்தான் மஞ்சள்நிறமாகத் தோன்றி
சீரடா குத்தலுடன் நீர்க்கட்டுங் கண்டு
சிறப்பான சரீரந்தான் உளைச்சல் காணும்
கூறடா நித்திரைதான் பங்கப் பட்டு
குறிப்பாக அன்னந்தான் செல்லா தப்பா
நேரான மனதுக்குச் சஞ்சலமே காணும்
நிச்சயமாய் கரப்பான் பிரமேகங் கேளே. (1105)

## கரப்பான் பிரமேகம்.

கேளடா வயிற்றுளைச்சல் சீதங் காணும்
கெடிதான நீர்தான் கறுத்துப் போகும்
நாளடா ஒருவேளை சுண்ணும்புத்தண்ணீர் போலும்
நலமான அழலையுடன் கைகா லோயும்
வளடா உடம்பெல்லாம் பெருக்குஞ்சொரியோ கண்டு
வளமான வாட்டமுடன் இளைப்புத் தோன்றும்
தேளடா நீர்த்துவாரம் புண்ணைப் போகும்
தெளிவான கல்லுப் பிரமேகங் கேளே. (1106)

## கல்லுப் பிரமேகம்.

கல்லான கல்லுப் பிரமேக நேர்மை
கனமான கோசத்தில் கல்லுப் போலே
தொல்லுலகில் மேகநீர் கசியும் பாரு
தொகுப்பான தேகத்தில் கத்நாளைநாற்றம் வீசும்
வல்வினைசெய் வயிற்றில் கல்லுப் போலே
மூத்திரம் வண்மையுடன் சிக்கியே
விருவிருப்புத்தட்டி பலவிதமாய் உப்பசங்கள்செய்யும் பாரு
பாங்கான தந்துப் பிரமேகங் கேளே. (1107)

## தந்துப் பிரமேகம்.

மேகமென்ற தந்துப் பிரமேக நேர்மை
மேலான கோசத்தில் சிலந்திநூலைப் போலே
பாகமாய்த் தொங்கியே வெள்ளைரத்தங் காணும்
பலமான கோசத்தில் கிருமி சேரும்
மோகமுள்ள மூத்திரந்தான் துளித்துளியாய்ப் போகும்
முக்கியமாய் விலாவில்தான் குத்த லுண்டாம்
யூகமென்ற கோசமடா வலியே காணும்
உச்சிதமாய் நீச்சுப் பிரமேகங் கேளே. (1108)

## நீச்சுப் பிரமேகம்.

நீச்சுமென்ற பிரமேக மப்பா கேளு
நிசமாக தண்ணீப்போல் நீரிறங்கும் சொன்னேன்
வாச்சென்ற வெள்ளைசீழ் வடியும் பாரு
வடிவான கோசம்தாரை குத்த லுண்டாம்
காச்சென்ற சூலைகுளிர் விருவிருப்புக் காணும்
கனமான நரம்புகள்தான் சுருங்கும் பாரு
போச்சென்ற அடிவயிற்றில் சூலைகுளிர் உண்டாகும்
பொல்லாத மலினப் பிரமேகங் கேளே. (1109)

## மலினப் பிரமேகம்.

தேளடா குய்யமுடன் குதஸ்தானம் ரண்டில்
குணமாக வளர்கின்ற அடிநரம்பு அய்யா
நாளடா அடிக்கடி நோவே காணும்
நலமான காந்திமங்கி மயக்க முண்டாம்
வாளடா நாவுகைத்து புறங்கால்திமிரே காணும்
நலமான வெள்ளைகண்டு துர்மாமிசம் காணும்
பாளடா மதுப்பிரமேகந் தன்னைப் பாடுகிறேன்
நீயறியப் பாடுகிறேன் பண்பாய்த் தானே. (1110)

## மதுப் பிரமேகம்.

தானென ஆண்குறியில் நோவே கண்டு
　　தக்கநல்ல தேன்போலே நீரிறங்கும் பாரு
ஊனென அந்நீரில் எறும்புமொய்க்கும் சொன்னேன்
　　உள்ளதொரு நாளத்தில் விரணங் காணும்
தேனென உடலில்தான் நாத்தங் கண்டு
　　தெளிவான நாவுதான் வறட்சி யுண்டாம்
மானென மயக்கமுடன் அருசி காணும்
　　மகத்தான விரணப் பிரமேகங் காணும். (1111,

## விரணப் பிரமேகம்.

விரணமென்ற பிரமேகம் வந்த போது
　　விரிவான சரீர முற்று மப்பா
புரணமுடன் வலித்துமே விரண முண்டாம்
　　முக்கியமாய் ஆண்குறிதான் கனத்துப் போகும்
விரணமுடன் சீயுடனே ரத்தங் காணும்
　　விதமான கோசத்தி னடியி லப்பா
கரடுகட்டி நோவுடனே கடுப்புக் கண்டு
　　கனமான சரீரந்தான் வெதும்ப லாமே. (1112)

ஆமேதான் இந்நோய்க்கு மருந்து கேளு
　　அப்பனே கருவங்கச் செந்தூரந் தன்னை
ஓமேதான் பத்துநாள் கொடுத்தா யானல்
　　உள்ளபடி தீருமடா உறுதியாக
நாமேதான் துவர்ப்புடனே பிசுனம் கூட்டின
　　நன்மையுள்ள மருந்துகளைச் செய்து கொண்டு
சீமேவு மாந்தர்கட்கு ஈய்ந்து வந்தால்
　　சிறப்பாகத் தீருமடா திண்ணந் தானே. (1113)

தானென இந்நோய் கண்ட போது
　　தக்கநல்ல மருந்துகளைத்தான் உடனே செய்வாய்
மானென மாந்தருக்குக் கண்ட போது
　　மைந்தனே பேதிக்குக் கொடுப்பாய் முன்னே
தேனென வால்மிளகைச் சூரணமே செய்து
　　தெளிவான குங்கிலியத் தைலஞ் சேர்த்து
ஊனென தினத்திற்கு நான்கு வேளை
　　உள்ளபடி கொடுத்திடுவாய் சுண்டைக்காய் தானே. (1114)

சுண்டைக்கா யளவப்பா நாள்மூன்றே தான்
சுகமாகக் கொண்டாக்கால் சொல்லக் கேளு
பண்டிதனே எரிச்சலுடன் நமைச்சல் தீரும்
பாங்கான புளிப்புடனே கார மாகா
கண்டிதமாய் ரோகியைத் திரியவொட் டாமல்
காப்பாத்தி வைத்திரு நீஒருவாரந் தானும்
பண்டிதனே கோசத்தில் சீவடியு மாளுல்
பண்பான துவர்மருந்து கொடுத்துப் பாரே. (1115)

பாரடா இன்னமொன்று சொல்லக் கேளு
பழியான கோசந்தான் விம்மல் கண்டால்
கூறடா ஈரத் துணியைத் தானெடுத்து
குணமாகச் சுத்தியே தண்ணீர் தன்னை
சீராக ஊத்தியே வந்தா யாளுல்
சிறப்பாகத் தீருமடா பின்பு கேளு
நேராகப் பூவில்தான் ரணமே காணில்
நிச்சயமாய் விளக்கெண்ணெய் பூசுவாயே. (1116)

பூசிநீ வந்தாக்கால் சொல்லக் கேளு
பொல்லாத புண்களெல்லாம் மாறிப் போகும்
தோசியென்ற நீரெரிச்சல் தீர வென்றுல்
கூரான விளாம்பழத்தைத் தந்து நீயும்
தேசியே நன்னீரில் போட்டுப் பின்பு
தெளிவாகக் குழம்பாகக் கரைத்துக் கொண்டு
வாசியுள்ள திரேகத்தில் குடித்து வந்தால்
வழுவழுப்பாய் எரிச்சல்தா னடங்கிப் போகும். (1117)

போமடா இன்னமொன்று சொல்லக் கேளு
பொல்லாத வெடியுப்பு பலங் காலப்பா
ஆமடா படியொன்று கஞ்சிக் குள்ளே
அப்பனே உப்பைத்தான் கரைத்துக் கொள்வாய்
நாமடா அடிக்கடியே குடித்து வந்தால்
நன்மையற்ற எரிச்சலடா அடங்கிப் போகும்
தாமடா ஆனையென்ற நெருஞ்சில் சாற்றை
தான்குடிக்கில் எரிச்சலப்பா அடங்கிப் போமே. (1118)

அடங்கிநிற்கும் ராக்காலந் தன்னி லப்பா
அழகான கோசந்தான் விம்மல் கண்டால்
தொடர்ந்து நின்று ஈரத்துணி தன்னைச் சுற்றி
துப்புரவாய் வைத்திடுவாய் பின்பு கேளு
அடர்ந்துநின்ற அபினியுடன் கர்ப்பூரஞ் சேர்த்து
அப்பனே மாத்திரையாகச் செய்து கொண்டு
படர்ந்திருக்கும் ராத்திரி கால மப்பா
படுத்துறங்கும் போதுநீ கொடுத்துப் பாரே. (1119)

கொடுத்தபின்பு அக்குளிகை தன்னி லொன்றை
குறிப்பாக ஆசனத்தில் வைத்துப் பாரு
அடுத்துநின்ற உபத்திரவம் தணிந்து போகும்
அப்பனே கோசத்திற் கடியிற் கேளு
படுத்ததொரு ரசக்களிம்பு தடவி வந்தால்
கோசந் தான் தணியுஞ் சொன்னேன்
சடுத்தமுள்ள தந்தியென்ற மேகந் தீர
சாற்றுகிறேன் மருந்தொன்று சாற்றக் கேளே. (1120)

கேளடா தந்தியென்ற யேகத் தோடு
கெடியான நாள்சென்ற பிரமேகத் துக்கு
வாளடா அபினிஜலம் படிக்காரத் தண்ணீர்
வளமான மூத்திரத் துவாரந் தன்னில்
தேளடா ரெண்டுநாளைக் கொருதரமே அய்யா
தெளிவாகப் பாய்ச்சியே வந்தா யானல்
பாளடா வந்த தந்திமேக மெல்லாம்
பளிச்சென்று தீருமடா பண்மை தானே. (1121)

பண்மையுள்ள நீர்தனைத்தான் பீச்சும் போது
பாங்கான மூத்திரப்பை தன்னி லப்பா
சளமாக இறங்காமல் செய்ய வேணும்
சடுதியாய் பீசத்திற் கடியிற் தோன்றும்
இளமைத் தண்டைத்தான் அழுத்திக் கொண்டு
இன்பமாய் நீரடித்தால் நோயே தீரும்
முழுமையுள்ள மூத்திரப்பை தனி லப்பா
கொதிப்பான நீர்போனல் வேதனை யுண்டாமே. (1122)

உண்டான நோயாளி திரேக மப்பா
உள்ளபடி மெலிவுற்றுப் போகு மாகில்
கண்டான அயந்நந்து பலத்தை யூட்டு
பாங்கான சத்துள்ள போசனமே செய்வாய்
தொண்டான ஸ்திரிகளுக்கு இந்நோய் காணில்
தொகுப்பான பன்றிநெய் தடவச் செய்து
பண்டான முன்பரிகாரஞ் செய்தாக் கால்
பறக்குமடா இந்நோய்தான் பறக்கும் பாரே. (1123)

பறக்கின்ற ரோகஸ்திரீ தன்னைச் சேர்ந்து
பண்பான ஆண்குறிமேல் தோன்று கின்ற
திறக்கின்ற ரணத்திற்கு மேகரணமென்று பேராம்
திகழான ரணமப்பா மலரின்பேரி லேனும்
சிறக்கின்ற மலருக்கு அடியில் தோன்றும்
சீரான சவ்வினது மடியி லேனும்
உறக்கவே மலத்தைத்தான் மூடிக் கொண்டு
உறுதியுள்ள தோலுக்கு உள்ளே தானே. (1124)

தானான உள்ளூர ரணந்தா னப்பா
தப்பாமல் காணுமடா தன்மை பாரு
தேனான சையோகஞ் செய்யும் போது
தெளிவான அல்குலில்தான் இருந்து வாழும்
மானான மேகரணம் விஷநீ ரப்பா
மறைந்திட்ட கோசத்தி னிடமே தானும்
ஊனான நீரப்பா பட்ட தென்றால்
உள்ளபடி மேகரணம் உண்டாம் பாரே. (1125)

பாரடா இந்தரணம் முன்வந்து நாளில்
பக்குவமாய் வெளிப்பட்டுத் தோன்றுஞ் சொன்னேன்
கூறுக இந்தரணம் நாலுவிதமே யுண்டு
குறிப்பாகச் சொல்லுகிறேன் குறியைக் கேளு
பேரான ஒருரணந்தான் தோன்றிப் பின்பு
நிச்சயமாய் அதற்கடியில் கல்லுப்போலே காணும்
சீரான மற்றதொரு சாதி யப்பா
சிறப்பாக பிகுவா யிருக்கும் பாரே. (1126)

இருக்கின்ற இன்னமொரு சாதி கேளு
இதமாக வெகுசுருக்காய் பரவிப் போகும்
பறக்கின்ற இன்னமொரு ரணந்தா னப்பா
பண்பாக அழுகியே துர்மாமிசமே காணும்
சிறக்கின்ற பெண்களுக்கு ரணத்தால் கேளு
சீறிமெத்த உபத்திரவம் தோன்றி டாது
குறைக்கின்ற மூத்திரந்தான் பெண்களுக்கு
கொப்பனவே ரணமேலே விழுகும் பாரே. (1227)

விழுகின்ற வேளைதனில் ரணந்தா னப்பா
விரியாமல் பசையாக இருக்கும் பாரு
அழுகின்ற நோவப்பா அவளுக் கில்லை
அப்பனே ஆணுக்கு மெத்த வுண்டு
பழுவான மேகரணங் கண்ட பின்பு
பக்குவமாய் துவாரத்தில் காரம் வைத்து
கழுவியே எடுக்காட்டால் பின்பு அப்பா
கனமான திரேகத்தில் ஏறுங் காணே. (1128)

ஏறியபின் மேகபடை மேக ஊரல்
எரிவான மேகசொறி மேக காங்கை
ஊறியே வருகுமடா மாந்தர்க் கெல்லாம்
உள்ளபடி தோன்றியபின் அடிக்கடியே கேளு
மாறியே மேகரணம் கண்ட தாலல்
மகத்தான கொடுமைதான் செய்யா தப்பா
தேறியே போனதொரு தேகத் திற்கு
தெளிவான புண்களுந்தான் உண்டாம் பாரே. (1129)

உண்டான வேளைதனில் சொல்லக் கேளு
உத்தமனே வேம்பினுட பட்டை தந்து
பண்டான பாத்திரத்தில் கியாழம் போட்டு
பதிவான சவ்வீரம் கட்டி கொண்டு
செண்டான கியாழத்தில் கட்டைக் கொஞ்சம்
செப்பமுடன் தானுரைத்துக் கொடுத்து வந்தால்
பண்டான வியாதியெல்லாம் ஓடிப் போகும்
பாங்காக இன்னமொன்று சொல்லக் கேளே. (1130)

கேளடா மேகவியாதி தன்னு லப்பா
கெடியான தொண்டைக்குள் ரணமே கண்டால்
நாளடா அதற்குவகை சொல்லக் கேளு
நலமான வெங்காரம் ஒன்ரும்
பாளடா தேன்பல மொன்றே யாகும்
பக்குவமுள்ள பன்னீர்தான் பலமொன் ருகும்
தேளடா ஆழாக்குத் தண்ணீ ரோடு
தெளிவாகக் கலந்துமே கொப்புளிப் பாயே. (1131)

கொப்புளித்துத் தான்வந்தால் அப்பா பாரு
குடிகெடுத்த தொண்டைரண மாறிப் போகும்
இப்புவியில் குரோசாணி ஓமம் வாங்கி
இயல்பாக நோயாளி தனக்குத் தந்து
தப்பில்லா நித்திரையை வருகச் செய்வாய்
தாரணியில் இன்னமொரு மருந்து கேளு
செப்பியதோர் வல்லாரைச் சூரணமே தந்தால்
செயலான ரோகந்தான் மாறிப் போமே. (1132)

போமடா புருஷனுட மேக வியாதி
பொலிகின்ற பெண்சாதி தனக்குக் கேடு
ஆமடா மத்தியே இருக்கும் போது
அவளுக்குக் கருத்தரித்தால் அப்போ பாரு
வேமடா நாலைந்து மாதந் தன்னில்
விதியாக வயிற்றில்தான் மரித்துப் பின்பு
நாமடா வெளிப்பட்டுப் போகுஞ் சொன்னேன்
நன்மையுள்ள இன்னும்வெகு குணத்தைக் கேளே. (1133)

குணமுள்ள மாதருக்குக் கருத்தா னப்பா
கொப்பனவே அடிக்கடிதான் கருவழியும் பாரு
பணம்போலே ஒருவேளை சிசுதான் கேளு
பண்பாகச் சீவித்து இருந்தாலுந் தான்
கணைநோவு கொண்டதுபோல் துர்ப்பலம தாயும்
கதிப்பான திரேகந்தான் மெலிவுற்றுப் போகும்
இனமான ஆசனமும் அல்குல் தானும்
தாம் ரண மாகுந் தானே. (1134)

தானன வாயில்தான் துத்திரோக முண்டாம்
தப்பியே குழந்தைகள்தான் சவுக்கியமாய்க் காணில்
ஊனன ஒருமாத மான பின்பு
உள்ளபடி முன்சொன்ன ரோகங் காணும்
தேனன தாயினுட பெண்குறியில் தானே
தெளிவான மேகரண மிருந்தால் கேளு
மானன சிசுவப்பா பிறந்த பின்பு
மைந்தனே மேகரணம் உண்டாம் பாரு. (1135)

## அரையாப்பு.

பாரடா அரையாப்புக் கட்டி நேர்மை
பருக்கின்ற விதவிதமனைப் பகரக் கேளு
கூறான அரையில்தான் உண்டா கின்ற
குறிப்பான கட்டிகள்தா னிரண்டே யுண்டு
நேரான ஒருகட்டி விவாங் கேளு
நிச்சயமாய் அரையினுட மடிப்புக்கு மேலே
சீரான மேகத்தின் கட்டி காணும்
தெளிவாக அதன்விவரம் தெளியக் கேளே. (1136)

கேளடா அரையாப்பில்தான் ஒரேநெறியைப் பற்றி
கொடிதாகக் காணுகிற கட்டிக் கப்பா
நாளடா அரையாப்புக் கட்டி என்பார்
நலமான அந்நெறியின் மடிப்புக் கீழே
வாளடா இரண்டு மூன்று மாமிசத்தின்
வளமான கிரந்திகள்தான் வீங்கிவலியே கண்டால்
தேளடா நெறியென்று சொல்வார் மேலோர்
தெளிவாக இதுகண்டு மருந்து செய்யே. (1137)

செய்யடா அரையாப்புக் கண்ட பேர்க்கு
செயலாக முதலில்தான் பேதிக் கீவாய்
பையவே கட்டியைத்தான் கரைக்க வேண்டி
பாலகனைக் கடும்பத்தியம் செய்யச் செய்து
நையவே கட்டிக்கு அட்டை விட்டால்
நலமான கெட்டாரத்தம் வெளியே போகும்
பையவே இன்னமொன்று சொல்லக் கேளு
பாங்காக வங்கவில்லை வைத்துக் கட்டே. (1138)

கட்டான வங்கவில்லைத் தன்னை வைத்து
கடுசாக மூன்றுதரம் கட்டினு யானல்
பொட்டனவே அரையாப்புப் போகா விட்டால்
பொங்கமுடன் இன்னமொன்று சொல்லக் கேளு
சித்தான சித்ரமூல வேரின் பட்டை
சிறப்பாக இடித்துமே கட்டி னுக்கால்
பொட்டாக அவிந்துவிடும் அரையாப் பப்பா
பொங்கமுடன் இன்னமொன்று சொல்லக் கேளே. (1139)

சொல்லுகிறேன் இன்னமொரு முறைதா னப்பா
சொகுசான இலுப்பைக் கட்டி யோடு
வெல்லுகின்ற வெள்ளுள்ளி தன்னைச் சேர்த்து
விதமாக இடித்துமே கட்டிக் கொள்வாய்
தொல்லுலகில் மாவிலிங்கப் பட்டை தன்னை
துவைத்துமே கட்டினுக்கால் கட்டி போகும்
அல்லல்செய்யும் விராலியின் தழையைத் தானே
அழகாக வதக்கியே கட்டு வாயே. (1140)

கட்டியபின் கட்டிதான் பழுத்துக் கொண்டு
கனமான இம்சைகள்தான் செய்து வந்தால்
மட்டியென்ற மாவைத்தான் களியாய் செய்து
மானிடர்க்கு வைத்துநீ கட்டிப் பாரு
சிட்டியென்ற கட்டியெல்லாம் பழுத்துப் போயி
சீயப்பா வெளியில்வந்து தோன்றும் பாரு
குட்டியென்ற சிறுத்தி தன்னு லப்பா
குறிப்பாகக் கிண்டுமே சீழைப் போக்கே. (1141)

போக்கியபின் கட்டியப்பா ரணமாகி விட்டால்
பொங்கமுடன் களிம்பொன்று சொல்லக் கேளு
தாக்கியதோர் லிங்கமொன்று சிங்கி யொன்று
தருவான ரசகற்பூரமொன்று காசுக்கட்டி ஒன்றே
பக்குவமாய் வெள்ளைக் குங்கிலிய மொன்று
பழுவான மாசிக்காய் கடுக்காய் ஒன்று
தேக்கியே தான்றிக் காயு மொன்று
தெளிவாக இத்தனையும் வாங்கிக் கொள்ளே. (1142)

வாங்கியே சமனுக எடுத்துக் கொண்டு
வரிசையாய் சரக்குகளை காய வைத்து
தேங்கியே சன்னமாய் பொடியே செய்து
தெளிவாகக் கல்வத்தி லிட்டு நீயும்
வாங்கியே பசுவெண்ணெய் தன்னி லப்பா
வளமாக முச்சாம மாட்டி மைபோல்
பாங்கியாய் வந்தரணம் தனக்கு மப்பா
பரிவாகத் துணியூட்டிப் போட்டுப் பாரே. (1143)

போட்டாக்கா லென்னசொல்வேன் ரணங்க லெல்லாம்
பொறிவிட்டுப் போகுமடா கூட்டை விட்டு
ஊட்டியதோர் சீலைதனை தினமு நீதான்
உள்ளபடி போட்டுமே வந்தா யானல்
தீட்டியதோ ரணங்களெல்லாம் மாறிப் போகும்
திரளான புண்களெல்லாம் ஒடிப் போகும்
மாட்டியதோர் களிம்பதனை மேதிச் சிமிழில்
மைந்தனே பதனமாய் வைத்துக் கொள்ளே. (1144)

## குடல் வாதம்.

கொள்ளவே குடல்வாதம் தன்னைக் கேளு
குணமாக வயிற்றுக் குள்ளிருந்து வாழும்
அள்ளவே குடலேனு மதற்கு மேலே
அப்படியே மூடிக் கொண் டிருக்கின்ற
தள்ளவே சவ்வேனு மப்போ தப்பா
தனியான பீசத்தின் நரம்பு அப்பா
மெள்ளவே பிரவேசிக் கின்ற துவாரம்
மிருதுவாக வழியாகச் சொல்லக் கேளே. (1145)

கேளடா வழியிற்ருன் கீழாய்த் தோன்றி
கெடியான பீசப்பை யதனில் வந்து
நாளடா தோன்று கின்ற ரோகத்துக்கு
நலமான குடல்வாத மென்று பேராம்
வாளடா இதற்குத்தான் காரணமே கேளு
வளமான வயிற்றினுட சதையில் தோன்றும்
தேளடா சுபாவ எந்திரங்க ளப்பா
தெளிவான தளர்ச்சியுற்ற காலந் தானே. (1146)

தானான காலத்தில் பார மான
    தக்கநல்ல சுமைகளைத்தா னெடுப்ப தாலும்
உள்ளுக்கு முக்குவதி னாலு மப்பா
    உள்ளபடி குதித்து விளையாடு வதாலும்
தேனான மிகஇரும லிருப்ப தாலும்
    தெளிவாக இந்நோய்தா னுண்டாம் பாரு
மானான குடலேனும் தொந்தை யேனும்
    மகிழ்ச்சியுடன் பீசத்தி லிறங்கும் பாரே. (1147)

இறங்குகின்ற வேளைதனில் சவ்வு அப்பா
    இதமாக முன்னுக்குத் தள்ளிக் கொள்ளும்
திறங்கியே பையைப்போ லிருக்கும் பாரு
    திறமாக இந்நோயில் மூன்றுவிதமே யுண்டு
முருங்கியே வருகின்ற குடலை யப்பா
    முக்கியமாய் வயிற்றுக்குள் தள்ளுவது தானென்று
திருங்கியே தள்ளிவிடக் கூடாமலுந் தான்
    தீராமல் இறுகிக் கொள்ளாதது தானென்று. (1148)

ஒன்றப்பா இறுகலுற்று உள்ளே தள்ள
    ஒருநாளுங் கூடாமல் போவ தாலே
நன்றப்பா குடலில்தா னிருக் கின்ற
    நலமான மலம்நழுக இடமே யன்றி
அன்றப்பா ரத்தத்தின் ஓட்ட மின்றி
    அடைவாக இருக்கின்ற வியாதி யொன்று
கன்றப்பா இதினுடைய குணத்தைக் கேளு
    கண்டிப்பாய்ச் சொல்லுகிறேன் கடுமை தானே. (1149)

தானாகத் தள்ளிவிடும் குடலிறக்க நோயில்
    தக்கதொரு வீக்கந்தான் மிருதுவாய்க் காட்டும்
மோனாக நிற்பதிலும் இருமுவதிலு மப்பா
    முக்கியமாய் வீக்கந்தா னதிகங் காட்டும்
பானான படுக்கையிலும் அழுத்துவதினாலும் பாரு
    மக்களுட வீக்கந்தான் மறைந்து போகும்
தேனான பையில்தான் குடலே தோன்றில்
    தெளிவாக வீக்கமடா மழமழவென்றிருக்கும் பாரே. (1150)

பாரடா உருண்டுமே சில்லிட்டிருக்கும் பாரு
பண்பாக இரைச்சலுடன் சத்தந் தோன்றும்
கூறடா அமுத்திடிகில் குடகுட வென்ற
குறிப்பான சத்தமுடன் குடல்தான் பாரு
நேரடா குடலப்பா வயிற்றுக் குள்ளே
நிச்சயமாய் ஏறிவிடும் நிலைமை பாரு
சீரடா பையில்தான் சவ்வே தோன்றில்
சிறப்பான வீக்கமடா சொல்லக் கேளு. (1151)

கேளப்பா வீக்கமப்பா தட்டை யாயும்
கெடியாக சில்லிடாம லிருக்குஞ் சொன்னேன்
நாளடா மேடு பள்ளமாகத் தோன்றும்
நலமாக அமுத்திளுக்கால் மெதுவி லப்பா
வாளடா சத்தமின்றி மேலுக் கேறி
வளமாகப் போகுமடா சொன்னேன் பாரு
பாளடா இந்நோய்க்குத் தாம்பிர சுன்னம்
பக்குவமாய் தந்தாக்கால் பறந்து போமே. (1152)

## மூலம்.

போமடா மூலரோகந் தன்னைக் கேளு
புகழாக ஆசனத்தின் ஓர மாக
ஓமடா முளைகளைப்போல் காணு கின்ற
உள்ளதொரு வியாதிக்கு மூல மென்பார்
ஆமடா இதனுடைய விவரங் கேளு
நாளமென்ற ரத்த நரம்பு அப்பா
ஏரடா பெருத்துஅதை சளிசவ்வு தானும்
உள்ளபடி மூடிக்கொண் டிருக்கும் பாரே. (1153)

பாரடா வெளிமூலம் உருண்டு கொண்டு
பக்குவமாய் கெட்டியா யாசனத் தின்
கூறடா ஓரமா யிருக்கும் பாரு
கொத்தவனே இன்னமொரு விதந்தா னுண்டு
சீரடா நீண்ட மேடாய் ஆசனத்தில்
சிறப்பாக வெளியில்தான் தோன்றுஞ் சொன்னேன்
காரடா இதில்ரெண்டு விதமே யுண்டு
கனமான ஒருவிதந்தான் சொல்லக் கேளே. (1154)

சொல்லுகிறேன் மூலத்தின் காத்திரந் தான்
சொகுசாகத் தக்கபடி சங்கடமே காட்டும்
மல்லுகின்ற மலமிறங்கும் போது அப்பா
மகத்தான வேதனையே காட்டும் பாரு
தொல்லுலகில் வெளிக்குவரும் பளுவாய்க் காட்டும்
தோகையர்க்கு மிப்படியே இருக்குஞ் சொன்னேன்
அல்லல்செய்யு மின்னமொரு விதத்தைக் கேளு
அப்பனே நமைச்சலுடன் குத்த லுண்டே. (1155)

உண்டான வேளைதனி லின்னங் கேளு
உத்தமனே உஷ்ணமுடன் வேதனையே செய்யும்
நண்டான அடைப் புண்டாம் ஆசனத்தில்
நலமான ஒருவஸ்து இருப்பதுவே போல்
பண்டாகத் தோன்றுமடா மாந்த ருக்கு
பாரினிமேல் மலமிறங்கும் வேளை தன்னில்
செண்டாக முக்கலுடன் வேதனையே காட்டும்
செயலாக இதற்கொரு உபாயங் கேளே. (1156)

உபாயமடா சொல்லுகிறே னுந்த னுக்கு
உள்ளபடி சிற்றாமணக் கெண்ணெய் தனை
தப்பாமல் பிரதிதினமும் பேதிக் கீய்ந்து
தள்ளிடுவாய் மலந்தன்னை சரியாய்த் தான்
கிபாயத்தாய் நாள்பட்ட ரோகத் திற்கு
கெடியான வால்மிளகு மிளகு லேகியம்
அபாயமின்றி கொடுத்திட்டால் நோயே தீரும்
அப்பனே மூலத்தில் சீவடிந்தால் கேளு. (1157)

வடிந்தாக்கால் சொல்லுகிறேன் அப்பா கேளு
வண்மையுள்ள குங்கிலியத் தைலந் தன்னை
சடத்துக்குள் நாற்பது துளியே தந்தால்
தப்பாமல் மாறுபாடாய் சீய்கள் முற்றும்
விடந்தனில் மூலந்தான் வலியே கண்டால்
விதமான ரசபற்பம் அபினி சேர்த்து
முடந்தனக்கு இரவில்தான் கொடுப்பா யப்பா
முக்கியமாய்க் காலையிலேநீ விளக்கெண்ணெய் ஈயே. (1158)

ஈய்ந்தபின்பு பேதி தானுகும் பாரு
இதமாகப் பத்தியமாய் போசனங்கள் செய்து
மாய்ந்ததோர் மூலத்தில் ஒத்தணமே செய்வாய்
மகத்தான மூலத்திற் சின்னம் கேளு
பாய்ந்ததோர் மூலத்தைச் சுத்தி செய்து
படிக்காரம் மாசிக்காய் சேர்ந்த தண்ணீர்
சாய்ந்தமல மானபின்பு முன்பு நீரை
சரியாக ஆசனத்தி லடிப்பாய் நீயே. (1159)

அடித்தபின்பு பொட்டி லுப்பு திராவகத்தை
அழகாகத் தடவிவிட்டால் வாங்கிப் போகும்
படித்ததொரு ரோகந்தான் தீரா விட்டால்
பாங்கான மூலத்தை அறுத்துப் போடு
சடுத்தமுள்ள சிங்கியுட மோதி ரத்தை
தவருமல் கைதனிலே போட்டுக் கொண்டு
மடித்தமல வாதையடா ஆன பின்பு
மகத்தான மூலத்தில் தேய்க்கப் போமே. (1160)

போமடா இன்னமொன்று சொல்லக் கேளு
பொங்கமுள்ள நவமூலம் தீர வென்ருல்
ஆமடா வெள்வங்க பற்ப மப்பா
அழகான ஆயிரத்தை நூறு பாகம்
ஓமடா செய்துகொண்டு கருணைச் சூரணம்
உள்ளபடி அனுபானம் தன்னில் வைத்து
நாமடா நாற்பதுநாள் தின்ரு யானுல்
நாடாதே போகுமடா மூலந் தானே. (1161)

## இரத்த மூலம்.

தானுன ரத்தமூலம் சொல்லக் கேளு
தனியான உள்மூலந் தன்னில் நின்று
தேனுக வருகின்ற ரத்த மப்பா
தெளிவாக நாளத்தில் நின்று தானும்
ஊனுன நாடிதனில் இருந்து எழும்
உள்ளபடி தோன்றுமடா ரத்தந் தானும்
மானுன இதுதீர வகையைக் கேளு
மக்களுக்குச் சொல்லுகிறேன் மகிழ்ந்து கேளே. (1162)

கேளடா ரத்தந்தான் நிதமா யப்பா
கெணிதமுடன் நாள்தோறும் கண்டாலுந் தான்
நாளடா துர்ப்பலமா யிருந்தாலுந் தான்
நலமான தலைவலியு மடைந்தாலுந் தான்
தேளடா இதற்கொரு உபாயங் கேளு
தெளிவான ரத்தத்தை நிறுத்தாமல் தான்
நாளடா உலகத்துப்படி செய்து கொண்டு
நலமான போசனந்தான் செய்து வையே. (1163)

செய்தபின்பு லகுவாக பேதிக் கீய்ந்து
செயலான ரோகத்தைப் போகச் செய்வாய்
உய்க்கின்ற ரோகிக்கு துர்ப்பலமே கண்டு
உதடுவெள்ளை நாடியுந்தான் மெலின மாகில்
பெய்கின்ற ரத்தத்தை நிறுத்திப் பின்பு
பிலமான மாசிக்காய் கஷா யத்தை
நையவே ஆசனத்தி லடித்தா யானல்
நன்மையுள்ள ரத்தந்தான் மாறிப் போமே. (1164)

போமடா கந்தகத்தின் திராவகமு மப்பா
கெடியாகக் குங்கிலியத் தைலந் தானும்
ஓமடா கொடுத்துவந்தால் தீரும் பாரு
உள்ளதொரு துணியைத்தான் துவர்ப்பு நீரில்
நாமடா துவைத்துத் தான் ஆசனத்தில்
நலமாகத் தள்ளியே அடைத்தா யானல்
தாமடா அதிகமா யோடும் ரத்தம்
தன்மையுடன் நின்றுவிடும் தரணி யோர்க்கு. (1165)

## குதந்திரம்.

தரணிதனில் குதந்திரநோய் சொல்லக் கேளு
ஆசனத்தி னோரமாக
விரணமாய்க் கண்டுமே புரையி னேடு
விரிவாக ஒடுகிற ரணத்திற் கப்பா
கரணியாய் குதந்திர மென்று பேராம்
கண்டிப்பா யாசனந்தா னெங்கோரந் தானும்
பொரணியா யாடிக்கொண் டிருப்ப தாலே
பொல்லாத இந்தரணம் போகா தன்றே. (1166)

அன்றான அவ்விடத்தில் சவ்வு தானும்
அதிகமா யிருப்பதால் புரையே போக
கன்றான புரையோட இடமுண் டாகும்
கடிதாகச் சிலருக்குப் புரைதான் கேளு
நன்றாக குடலேத்தான் உருவி யோடும்
நலமான காற்றுடனே மலமு மப்பா
பன்றாக அவ்வழியாய் வெளியே தோன்றும்
பரிவாகச் சிலருக்குச் சொல்லக் கேளே. (1167)

கேளடா சிலருக்குக் குடலே யப்பா
கடிதாக உருவியே இராது பாரு
நாளடா சிலருக்குக் குடலே உருவி
நலமாக ஆசனத்தின் ஓர மாக
வாளடா கட்டியாய்த் தோன்றும் பாரு
வளமான துவாரந்தா னதற்கோ யில்லை
கேளடா குதத்துக் கோர மாக
கெடிதான கட்டியாய் இந்நோய்காணும் தானே. (1168)

தானான இந்நோய்தான் தீர வேண்டி
தக்கதொரு மருந்துதான் சொல்லக் கேளு
ஊனான விளக்கெண்ணெய் பேதிக் கீய்ந்து
உள்ளபடி மலமிறங்கிய பின்பு கேளு
தேனான மிளகு லேகியத்தி னேடு
தெளிவான குங்கிலயத் தைலம் சேர்த்து
கோனான வெள்வங்கச் சுன்னம் வைத்து
கொடுத்திட்டால் ரோகந்தான் தீரும் பாரே. (1169)

## குதப் பிரம்ச ரோகம்.

பாரடா ஆசனந்தான் வெளியே தோன்ற
பண்பான அடியிறங்கல் ஆசனருடி என்பார்
கூறடா மலக்குடல்தான் ஆசனத்தின் மார்க்கம்
கொப்பனவே வெளிவந்து விடு தற்கு
நாரடா குதப்பிரம்ச ரோக மென்பார்
நலமான குழந்தைகட்கும் பெரியோர்கட்கும்
சீரடா இதுகாணும் சொன்னேன் பாரு
சிறப்பாக இதுகாணும் விதத்தைக் கேளே. (1170)

கேளடா குதத்தின் தாக்க லப்பா
    கெடியாகத் தளர்ந்துமே போவ தாலும்
நாளடா மலபந்தம் மூல மோடு
    நலமான கல்லடைப்பு மூத்திரஅடைப்பு நாலும்
தேளடா இந்நோய்தான் காணும் பாரு
    தெளிவாக இதற்கொரு உபாயங் கேளு
பாளடா வெளிப்பட்டு குடலை யப்பா
    பாங்காகக் கழுவியே சுத்தி செய்யே. (1171)

செய்த பின்பு கையாலே அமுத்தி
    செயலாக தள்ளிவிட்டால் போகுஞ் சொன்னேன்
பையவே தள்ளுவதில் பிரதிகூலப் பட்டால்
    பாங்கான முன்விரலுக் கெண்ணெய் இட்டு
நையவே ஆசனத்தில் செலுத்தி னுக்கால்
    நன்மையுடன் குடல்தானு மேறிப் போகும்
தொய்யவே குழந்தைகட்கு இருபுட்டந் தன்னை
    தெளிவாக நெருக்கியே கட்டி வையே. (1172)

## நீர் கட்டு, நீர் அடைப்பு.

கட்டி நிற்கும் நீரடைப்பு ரோகந் தன்னில்
    கனமான இரண்டுவித முண்டு பாரே
முடிநிற்கும் மூத்திரப்பை தன்னில் தோன்றும்
    மூத்திரந்தான் வெளிப்படாமல் போகும் நோய்க்கு
சட்டமுள்ள நீரடைப்பு என்று பேராம்
    சதிராக இன்னொன்று சொல்லக் கேளு
திட்டமுள்ள மூத்திரந்தான் சுரக்காமல் போகும்
    திரமான நோயொன்று தெரிந்து கொள்ளே. (1173)

தெரிந்துகொள்ளும் நீரடைப்புக் குறியே தென்னில்
    திரமான நீர்த்தாரை சவ்வப்பா
விரிந்துமே நிற்காமல் சுருங்கிப் போவதாலே
    பிரிவாக மூத்திரந்தா னடைப்பு போகும்
பரந்துமே நீர்த்தாரை தன்னி லப்பா
    பாளான துர்மாமிசம் வளர்ந்த தென்றால்
சிறந்ததொரு மூத்திரந்தான் வராமல் தான்
    சிறப்பான வழியைத்தா னடைக்கும் பாரே. (1174)

பாரேநீ இந்தநோ யப்பா கேளு
பக்குவமாய் துர்மாமிச மப்பா கொஞ்சம்
சீராக இருப்பவர்க்கு இந்நோய் காணும்
சிரமமான பிரமேக மூத்திர தோஷம்
வாராக இருப்பவர்க்கே இந்த ரோகம்
வழக்கமாய்க் காணுமடா சொன்னேன் கேளு
கூறுன இந்தநோய் உள்ள பேர்கள்
குறிப்பாக குளிர்ச்சியுடன் ஈரத்தில் தானே. (1175)

தானகத் திரிந்தாலு மிந்நோய் காணும்
தக்கதொரு மதுபானம் கொண்டால் காணும்
ஊனன மூத்திர அடைப்பு அப்பா
உள்ளபடி இரவில்தான் தோன்றும் பாரு
தேனன அதின்குணந்தான் சொல்லக் கேளு
தெளிவாக அடிக்கடியே முக்கி னுக்கால்
மானன மூத்திரந்தான் தோன்று தப்பா
மக்களுக்கு வருத்தந்தான் தோன்றும் பாரு. (1176)

தோனுகின்ற மூத்திரப்பை தன்னி லப்பா
தொகுப்பான மூத்திரந்தான் உடனே சேர்ந்து
பேணியே பெருத்துவிடு மப்போ பாரு
பிலமான அடிவயிற்றைத் தொட்டுப் பார்த்தால்
தோணிபோல் உருண்டதொரு கட்டி போல
கொப்பனவே விரல்தனக்குக் கால்காட்டும் பாரே
ஆணியாம் நீர்த்தாரை சுருக்க மப்பா
அழகாகக் கொஞ்சந்தா னப்போது கேளே. (1177)

தள்ளுகின்ற வேளைதன்னில் துளித் துளியாக
தக்கதொரு மூத்திரந்தா னிறங்கும் பாரு
வளருகின்ற ஆயாசந் தீரா விட்டால்
வளமையுள்ள அவன்முகந்தான் ஏக்கம் கொள்ளும்
புரளுகின்ற நாடிகள்தான் விரைவாய்ப் போகும்
பொல்லாத சரீரந்தான் உஷ்ண மாகும்
பொரளுகின்ற வருத்தத்தைத் தணிக்கா விட்டால்
பிலமான மூத்திரப்பை வெடித்துப் போகும். (1178)

வெடித்துமே போவதினல் சொல்லக் கேளு
விரிவான மூத்திரந்தான் வயிற்றுக் குள்ளே
தடித்துமே சென்றுவிடு மப்பா பாரே
தக்கபடி இன்னென்று சொல்லக் கேளு
படித்ததொரு சுருக்கத்தின் பின்ன லப்பா
பக்குவமாய் மூத்திர தாரை தானும்
வடித்துமே விரிந்து வெடித்துக் கொண்டு
விரிவான பக்கத்தி லிறங்கிப் போமே. (1179)

போமடா இதற்குவகை சொல்லக் கேளு
பொல்லாத உபத்திரவமு மில்லாமலுந் தான்
ஆமடா குளிர்ச்சியினல் கண்ட தாயின்
அப்பனே சதையடைப் பில்லாத தாயும்
ஓமடா இருந்தாக்கால் ரோகி தன்னை
உள்ளபடி வெந்நீரி லுட்கார வைப்பாய்
தாமடா விடாமல்தான் ஒத்தணஞ் செய்து
தயவாக அபினியுந்தான் கொடுப்பாய் நீயே. (1180)

கொடுத்தபின்பு சித்தாமணக்கு எண்ணெய் தன்னை
குடிக்கவே பேதிக்குக் கொடுத்தா யானல்
சடுத்தமுள்ள ரோகந்தான் தீர்ந்து போகும்
சதிராக பேதிக்கு கொடுக்கா வேளை
படுத்தமுள்ள அபினியைத்தா னசனத் தில்
செலுத்தி னக்கால் நீரே தோன்றும்
கடுத்தமுள்ள அயத்தின் திராவ கத்தை
பக்குவமாய் கொடுத்திடுவாய் பரிவாய்த் தானே.(1181)

தாளுக மூத்திரப்பை தன்னி லப்பா
தக்கதொரு மூத்திரந்தா னதிக மாக
மாளுகச் சேர்ந்துவிட்டா லப்போ கேளு
மைந்தருக்கு மருந் தீய்ந்தா லப்போ
தேளுகச் சிலாக்கைத்தான் உள்ளே விட்டு
தெளிவான சதையடைப்பைக் குத்தி விட்டு
ஊளுக நீரைத்தான் வெளியில் போக்கு
உள்ளதொரு மருந்ததனை பின்பு செய்யே. (1182)

செய்கின்ற ரோகந்தான் வந்த பேர்க்கு
திரமாக மூத்திரத்தை உண்டாக்கு கின்ற
உய்கின்ற பதார்த்தத்தை கொடுக்க லாகா
உள்ளதொரு மூத்திரந்தான் குழாய் செய்து
பையவே மருந்ததனை சொல்லக் கேளு
பாங்கான வெடியுப்புச் சுன்னந் தன்னை
நையவே ஐநூத்தில் சொன்னேன் பாரு
நன்மையுள்ள சுன்னத்தால் தீரும் பாரே. (1183)

## பகந்தர விரணம்.

பாரடா பகந்தர விரணந் தன்னை
பக்குவமாய்ச் சொல்லுகிறேன் பண்பாய்க் கேளு
கூறடா பக்கத்துக்கும் ஆசனத் துக்கும்
குறிப்பாக நடுமத்தி தன்னில் தோன்றும்
நேராக இருக்கின்ற பக்கத்தில் கேளு
நிறையான புரைவிரணங் கண்டு பின்பு
சீரடா நீர்த்தாரை கலை சென்று
சிரமமாக நீரிறங்கும் போது கேளே. (1184)

கேளடா அதின் வழியாய் துளித் துளியாக
கெணிதமுடன் இறங்குகிற ரோகத் திற்கு
நாளடா பகந்தர விரண மென்பார்
நலமான நீர்த்தாரை தன்னி லப்பா
கேளடா சீழ்க்கட்டி காண்பது நாலும்
குறிப்பான நீர்க்கட்டில் மூத்திரம் பாரு
வாளடா அத்தலத்தின் சவ்வில் தானே
வளமாக இறங்குவதால் இந்நோய்தீரும் பாரே. (1185)

தோன்றிவிடும் இந்நோய்தான் தீர வேண்டி
தொகுப்பான மூத்திரத் துவாரந் தன்னை
ஆன்றியே மெழுகுத்திரி தன்னை விட்டு
அழகான துவாரத்தை பெருக்கச் செய்து
ஊன்றியே பின்னாலே சொல்லக் கேளு
உத்தமனே காடிக்கார சலத்தை யப்பா
ஊன்றியே புரையிலே நீயடித்து வந்தால்
உள்ளபடி தீருமடா உறுதி தானே. (1186)

தானான சலாக்கைத்நான் விடுவ தாலும்
தக்கபடி அடிகள்தான் படுவதாலும்
ஊனான ரத்தநரம்பு அறுபட்டுப் போவதாலும்
உள்ளதொரு ரத்தத்தின் கொதிப்பி னாலும்
தேனான மூத்திரத்தின் தானந் தன்னில்
தெளிவர்ன ரத்தந்தான் தோன்றுஞ் சொன்னேன்
மானான துவர்நீரை யடித்தா யானல்
மக்களுக்குத் தீருமடா ரத்தந் தானே. (1187)

## அஸ்மரி நோய்.

தானான மூத்திரப்பை தன்னி லப்பா
தனியான கல்லிருந்தால் சொல்லக் கேளே
ஊனான மூத்திரந்தா னடிக்கடியே தானும்
உள்ளபடி இறங்குமடா சொன்னேன் பாரு
தேனான கல்லப்பா தாரை மேலே
தொப்பெனவே விழுவதால் தாரை யப்பா
மானாக விழுவதனாலே நின்று போகும்
மக்களுக்கு இதுதீர சிலாக்கைப் போடே. (1188)

## நீர் அண்டம்.

போடேநீ இன்னமொன்று சொல்லக் கேளு
பொதுவாக நீரண்ட ரோகந் தன்னை
பாடேநான் சொல்லுகின்றேன் பீசந் தன்னை
பற்றியே இருக்கின்ற சவ்வுப் பையில்
நாடேநீர் சரிகிற ரோகத் திற்கு
நலமான நீரண்ட மென்று பேராம்
சாடேநான் சொல்லுகின்றேன் லட்ச ணத்தை
சடுதியில் நீயறியச் சாற்றக் கேளே. (1189)

சாத்துகிறேன் இதில்வீக்க மப்பா கேளு
தன்மையுள்ள தாமரையின் மொக்குப் போலே
பொத்தியே குவிந்துமே வெளிப்புறந் தன்னில்
பொங்கமுடன் பளபளப்பா யிருக்கும் பாரு
பாத்துமே அமுத்தினக்கால் தளிர்ப்புக் காணும்
பங்கமுள்ள நோவுதா னிருக்கா தப்பா
தூத்துமே பளுவாக இருப்ப தாலே
துப்புரவாய் கொஞ்சமடா நோவிருக்கும் பாரே. (1190)

பாரடா பிசப்பைக் கடியில் நீர்தான்
　　பக்குவமாய்த் தோன்றியே மேலுக் கேறும்
கூறடா மெழுகுவத்தி தன்னை யேற்றி
　　குறிப்பாக பிசப்பை ஒருபக்கத்தி லப்பா
நேராக வைத்துநீ பார்வை யிட்டால்
　　நிச்சயமாய் வெளிச்சந்தான் தோன்றும் பாரு
சீரடா விரைவீங்கி யிருந்தால் கேளு
　　சிறப்பான அதின் பளுவினுலுங் கேளு. (1191)

கேளடா கட்டியி னுலு மப்பா
　　கெடிதான வேதனை இருப்பதினுலுந் தான்
நாளடா நீரினுட தளிர்ப்புத் தானும்
　　நன்மையுடன் இல்லாமல் போவதினு லுந்தான்
வாளடா கண்டு கொள்வாய் நீதான்
　　வளமான நீரண்டந் தனக்கு மப்பா
தேளடா குடலிறக்கம் தனக்கு மப்பா
　　விதிப் பிசந் தோன்றுங் காணே. (1192)

## பிள்ளைப் பேறு.

காணவே பிள்ளைப்பேறு நோயின் நேர்மை
　　கண்காண எந்தனுக்கு அய்யா நீர்தான்
தோணவே மவுனமுதல் கருத்தான் தோன்றி
　　தொல்லுலகில் சனிக்கின்ற கூறுகள் முற்றும்
பேணியே அக்காலந் தன்னி லய்யா
　　பிலமான வியாதிமுதல் சிகிச்சை யெல்லாம்
தோணவே எந்தனுக்கு விவரமாக
　　தொகுப்புடனே சொல்லியே அறிவிப்பீரே. (1193)

அறியவே சொல்லுகிறேன் புலத்தியா கேள்
　　அன்பான ஆயுர் வேதந் தன்னில்
பிரிவான மருத்துவத்தின் விவரம் முற்றும்
　　பிலமாக கருத்தோன்றி வளரும் நேர்மை
தெரியவே சொல்லுகிறேன் நன்ருய்க் கேளு
　　தெளிவாக அதனுடைய ரூப மெல்லாம்
சிறிதேனும் விடாமல் சொல்லு கிறேன்
　　சிறப்பான அதனுடைய முறையைக் கேளே. (1194)

முறையான பெண்ணுடனே ஆணு மப்பா
முக்கியமாய்க் கிரீடித்து வருகும் வேளை
கரையில்லாச் சுகமதுதான் தோன்று மாகில்
கண்டிப்பாய் கருவங்கே தரிக்குஞ் சொன்னேன்
விரையான விந்துடவு கிருமி யப்பா
விதமான நாதமுடன் சேர்ந்து கொண்டு
சிறையாக அதை சினைப்பிக்கும் பாரு
சீரான நாதந்தான் சினைப்பட்டால் கேளே. (1195)

சினைப்பட்டால் கருவப்பா தரித்த தென்று
சீரான நாட்டோர்கள் சொல்வார் பாரு
பனைப்பக் கருத்தரித்தது தான் பாரு
பண்பான கருக்குழியில் வந்த பின்பு
கனைத்திட்ட கருவளர்த்தி யோடு மப்பா
கனமான கருப்பையும் வர்த்திக்குஞ் சொன்னேன்
சினைப்பட்ட அதினுடைய ரத்தநரம்பு தானும்
சிறப்பான பரிசநரம்பு பெருக்கும் பாரே. (1196)

பாரடா கருப்பையின் மேற்புறந்தான் முன்னால்
பண்பாகப் பெருத்துமே காட்டும் பாரு
சீரடா பிறகப்பா மத்திய பாகம்
சிறப்பாக கடையில்தான் கழுத்து மப்பா
வாரடா தூலித்து வளரும் பாரு
வளமான கருத்தரித்து நாலு மாதம்
கூறடா இடைக்குழியில் தானே நின்று
கொப்பனவே அடங்கியே இருக்கும் பாரு. (1197)

இருக்கின்ற கருப்பைதான் அப்பா கேளு
இதமான மர்மஸ்தான எலும்புக்குமேலே தோன்றும்
மருக்கின்ற பெண்ணினுட திரேக மப்பா
பாங்குலே உணங்கலா யிருந்தால் கேளு
சிறுக்கின்ற விரல்களுக்கு கருப்பை யப்பா
செம்மையாகப் படுமே சீர்மை சொன்னேன்
தரிக்கின்ற அஞ்சாந் திங்கள் தன்னில்
தக்கதொரு முன்சொன்ன எலும்புக்கும் நாபிக்குந்தானே. (1198)

தானான மத்தியஸ்தானம் தன்னில் தான்
வருகும்வேளை தன்னில் பெண்ணின் தன்மை
ஊனான அடிவயிறு கனக்குஞ் சொன்னேன்
உள்ளதொரு ஆறுந் திங்கள் தன்னில்
தேனான தொப்புளுக்கு நேராய்த் தோன்றும்
தெளிவான தொப்புள்தான் பிதுங்கும் பாரே
மானான ஏழாம் திங்கள் தன்னில்
மகத்தான தொப்புளுக்கு மப்பா கேளே. (1199)

தொப்புளுக்கும் ஈரல் குழிக்கு மப்பா
தொகுப்பான மத்தியில்தான் வருகுஞ் சொன்னேன்
அப்படியே எட்டாந் திங்கள் தன்னில்
அழகான ஈரல்குழி வரையில் வந்து
உப்பியே உயர்ந்துமே வயிற்றை யப்பா
உரமாக நிரப்பியே கொள்ளுஞ் சொன்னேன்
அப்படித்தான் நிரப்பியே போவ தாலே
அழகான குடல்தா னப்போ பாரே. (1200)

பாரடா கர்ப்பா சயத்துக்கு மேலே
பண்பாக பின்புறமா யிருக்கும் பாரு
கூறடா ஒன்பதாம் மாதந் தன்னில்
குறிப்பான கருப்பை வளர்ந்தாலுந் தான்
வாரடா வயிற்றுனுட சதைக ளப்பா
வண்மையுடன் தளர்ச்சியாய்ப் போவ தாலே
சீரடா கருத்தான் தாழ்ந்து போகும்
சிறப்பான ஆண்டவனின் தன்மை தானே. (1201)

## கருப் பிண்டம்.

தன்மையென்ற கருப்பிண்டம் விவரங் கேளு
தனியாகக் கிரீடித்துத் தரித்துக் கொண்ட
வண்மையுள்ள கருவப்பா சிலநாட் சென்று
வழக்கமாய் கருப்பா சயத்தில் தோன்றும்
உண்மையுள்ள பிண்டத்தின் பைக் குள்ளே
உருண்டஅணு ஒன்றுதான் காணும் பாரு
நன்மையுடன் அதுசுருண்டு ரூப மின்றி
தாரணியி லிருக்கின்ற தன்மை பாரே. (1202)

பாரேநீ சிலநாட்கள் சென்ற பின்பு
பக்குவமாய் சிரசுஉடல் என்ற பேதம்
சீராகக் காணுமடா பிண்டத் துக்கு
சிறப்பான கருவுக்கு முன்பு அப்பா
நேராக முள்ளந் தண்டோ டும்
நிச்சயமாய் இரண்டாந் திங்கள் தன்னில்
காரான கைகாலின் சாடை யப்பா
கணக்காகக் காணுமடா கண்டு பாரே. (1203)

கண்டுநீ பார்த்தாக்கால் சொல்லக் கேளு
கால்களுக்கு மத்தியில்தான் முள்ளந் தண்டு
பண்டிதனே வாலைபோலே நீண்டிருக்கும் சொன்னேன்
பக்குவமாய்க் காலந் தன்னி லப்பா
அண்டியே அஸ்திகள்தான் சனிக்கும் பாரு
ஆதாரம் ஆனதொரு சுருண்ட அணுவில்
கொண்ட உள்பக்கத்தில் நின்று அய்யா
கொப்பனவே முகம்இருதயம் தோன்றும் பாரே. (1204)

தோன்றுமடா புப்புசமும் அன்ன சயத்தினேடு
தொலையாத மற்றஉறுப்பு எல்லாந் தோன்றும்
ஊன்றுமா நேத்திரமும் வாய் மூக்கோடு
உள்ளதொரு செவியினுட துவாரந் தோன்றும்
ஆன்றியே இரண்டாந் திங்கள் தன்னில்
அப்பனே ஜனனத்தின் உறுப்புத் தோன்றும்
தோன்ருது அவ்வேளை ஆண்பெண் ரூபம்
தொல்லுலகில் கருவுக்கு இன்னங் கேளே. (1205)

கேளடா ஆண்குறிக்கும் யோனி லிங்கத்துக்கும்
கெடிதான சினைப்பைக்கும் காணும் பாரம்
நாளடா அப்போது தெரிய மாட்டா
நன்மையுள்ள ஏழுஎட்டாம் திங்கள் தன்னில்
வாளடா பீசங்கள் வயிற்றுக் குள்ளே
வளமாகத் தானிருக்கும் வளமை சொன்னேன்
தேளடா மூனுநாலு மாதந் தன்னில்
தெளிவான மூக்குதடு கண்படலங்கள் தானே. (1206)

தானான காதுடனே எல்லா முண்டாம்
தனியான வயிற்றினுட முன்புறந் தானப்பா
தேனான நாபிக்கொடி ஆரம்பத் தில்
தெளிவாகச் சேர்ந்துமே குடலை மூடி
ஊனாக உள்ளேதா னியங்கச் செய்யும்
உள்ளதொரு கைகால்கள் வளர்ந்து பின்பு
மானாக நுனிகளில் விரல்க ளப்பா
மகிழ்ச்சியுடன் தோன்றுமடா மகிமை பாரே. (1207)

பாரடா அஞ்சாந்திங்கள் முடிவி லப்பா
பரிவான பிண்டத்தின் உறுப்பு முற்றும்
கூறடா ஒருவிதமாய்ப் பூரணமே யாகும்
கொப்பனவே அதுமுதலே வளருஞ் சொன்னேன்
நேரடா கண்ணினுட கிருஷ்ணமண்டலத் துவாரத்தை
நெறியான ஓர்சவ்வு அடைத்துக் கொள்ளும்
பாரடா அதுவப்பா வரவரத்தான் கேளு
பக்குவமாய் மறைந்துவிடும் பண்பு தானே. (1208)

பண்பான சிசுவினுட சரீரத்து மேலே
பச்சையாய் ஓர்விதப் பசையே யுண்டு
பண்பான அப்பசைதான் சிசுவின் உடலை
பக்குவமாய்க் காப்பாற்றி சிசு அப்பா
பண்பான யோனியுட துவாரந் தன்னை
படிமையாய் விட்டிறங்கும் போது அப்பா
தாரணிமேல் சுபாவமாய் வெளியே காணத்
தக்கபடி செய்யுமடா அப்பசைதான் பாரே. (1209)

பசையான சிசுவுகள்தான் கனத்தி லப்பா
பண்பாக வித்தியாச மிருக்குஞ் சொன்னேன்
தசையான பூர்ணமாய் கர்ப்பஞ் சென்று
தான்ஜனித்த பிள்ளை கனமே காட்டும்
பசையான கனமப்பா குறைவதுந்தா னுண்டு
மகிமையுள்ள கருப்பாத்திரந் தன்னில் கேளு
இசையான சிசுவப்பா இருக்கும் நேர்மை
இன்னபடி என்றுநான் சொல்வேன் கேளு. (1210)

சொல்லுகிறேன் தலைகீழும் கால்கள் மேலுந்தான்
தொகுசான கைகள் கட்டி மார்போ டப்பா
வல்வினையா யணைந்திருக்கும் வண்மை பாரு
வாகான முழங்கால்கள் முடங்கிக் கொண்டு
தொல்லுலகில் பாதங்கள் ஒன்றின்மே லொன்ருய்
தொகுப்பாக பின்னிக்கொண் டிருக்குஞ் சொன்னேன்
அல்லல்செய்யும் முதுகுடனே சிரசு தானும்
அழகாக முன்னுக்கு வளைந்திருக்கும் பாரே. (1211)

பாரடா மோவாய்க் கட்டை தானும்
பொங்கமுடன் மார்போடே அணைந்திருக்கும் பாரு
கூறடா இவ்விதமாய் உறுப்பு எல்லாம்
குறிப்பான கருக்குளியில் ஒடுங்கிச் சிக்கி
நேரடா சிக்கிக்கொண் டிருக்கும் பாரு
நெறியான பிரசவத்தின் வேளையில் தானும்
வாரடா வருத்தங்கள் மிகவே பட்டு
வளமாக உலகத்தில் பிறக்கும் பாரே. (1212)

பிறந்தபின்பு சிசுவப்பா அழுவும் பாரு
பிலமான ரோதனத்தால் சுவாசப் பைக்குள்
கரந்ததொரு பிராண வாயுவே சென்று
கடிதான சுவாச நிஸ்வாச முண்டாய்
பரந்துநிற்கும் ரத்தமடா சொல்லாமல் நிற்கும்
பரிவான புப்புசத்தில் ரத்தஞ் சென்று
சிறந்துமே பரவுமடா சொன்னேன் பாரு
சீரான இருதயத் துவாரங் கேளே. (1213)

கேளடா துவாரந்தான் மெல்ல மெல்ல
சிறப்பாக சிறுத்துமே அடைத்துப் போகும்
நாளடா குழந்தையின் பால்தான் தோன்றுகின்ற
நலமான வித்தியாச மெல்லாம் மாறி
வாளடா பெரியோர்க் கிருப்பது போல
வளமான ரத்தோட்டம் வந்து சேரும்
கூளடா ஆகாரம் சிரணிக் கும்
குணமான சக்தியுந்தா னுண்டாகும் பாரே. (1214)

பாரடா பித்தத்தின் சுரப்புண் டாகும்
பண்பான மலமூத்திரம் போகும் பாரு
நேரடா பார்வை சத்தம் இவைகளுக்கு
நெறியான உணர்ச்சிகள்தான் உண்டாம் சொன்னேன்
கூறடா ருசிகந்தம் இவைக ளெல்லாம்
குறிப்பாகத் தெரிகின்ற தன்மை யுண்டாம்
வாரடா புத்தியுடன் அறிவு தானும்
வளம்பிறக்க சிலநாட்கள் செல்லுந் தானே: (1215)

செல்லுகின்ற நாளுக்கு நாளே தான்
செயலான அறிவு விருத்தி யாகும்
தொல்லுலகில் முதலில் மந்த மான
தொகுப்பான மூளையடா பின்பு தானும்
மல்லுகின்ற பஞ்சேந்திரிய சேட்டை தன்னை
மகிமையாய்த் தானடைந்து உணரும் பாரு
தொல்லுலகில் சரீரத்தின் விவரத் திற்கு
தொகுப்பான நாயகனாய் ஏற்படுந் தானே. (1216)

காணுகின்ற சிசுவப்பா கருவுக் குள்ளே
கணக்காகத் தானிருக்கும் வேளை தன்னில்
பூணுகின்ற பூர்வஜன்ம நிலையைத் தானே
புகழாகத் தானறிந்து பேசாமற் றான்
பேணியே பையிக்குள் ளடங்கிக் கொண்டு
பராபரத்தைப் போற்றிச் செய்திருக்கும் பாரு
ஆணியாய் உலகில்தான் பிறந்த பின்பு
அஞ்ஞானம் மூடுந் தான் சொன்னேன். (1217)

தானான அஞ்ஞானந் தன்னைப் போக்க
தக்கதொரு மூளைக்கும் சக்தி யுண்டு
ஊனான யோகநிலை தனக் கெல்லாம்
உள்ளதொரு மூளைதான் காரண மாகும்
தேனான புத்தியைத்தான் தெளிய வைக்க
தெளிவான முன்குணமே யுண்டு பாரு
மானான குருவைத்தான் கண்டா யானால்
மைந்தனே அந்தவிதம் சொல்வார் பாரே. (1218)

## கருப்பாசய விவரம்.

சொல்லுகிறேன் கருப்பாசய விவரங் கேளு
சுருக்கான கருப்பந்தான் பெருப்ப தாலே
மல்லுகின்ற கருப்பையின் கழுத்தோ வப்பா
மகத்தான ரூபந்தான் விகார மாகும்
தொல்லுலகி லதுபெருத்து மிருது வாகும்
தொகுப்பான கருப்பையின் வாயி தானும்
எல்லையில்லா ரூபபேத மடைந்து கொண்டு
இதமாக அதைவிரிக்கக் கூடுந் தானே. (1219)

தானான கருப்பையின் கழுத்தில் தோன்றும்
தனியான துவாரந்தா னடைத்திருக்கும் பாரு
மானான மூன்றுதிங்கள் வரையிலு மப்பா
மகத்தான கருப்பையின் வாய்தான் கேளு
போனான யதாஸ்தானத்தை விட்டுக் கொஞ்சம்
முக்கியமாய்த் தளர்ந்து முன்னுக்குத் தோன்றும்
தேனான கருப்பைதான் இடைக்குழியை விட்டுத்
தெளிவாக மேலுக்குப் போகக் கேளே. (1220)

கேளடா கருப்பைதான் பின்னிட்டுத் தோன்றும்
கெடியான அஞ்சாந்திங்கள் தன்னி லப்பா
நாளடா கழுத்துத்தான் குறையும் பாரு
நலமான ஆறுந் திங்கள் தன்னில்
வாளடா கால்பாகம் குறையுஞ் சொன்னேன்
வளமான ஏழாந் திங்கள் தன்னில்
தேளடா அரைப்பாகம் குறையும் பாரு
தெளிவான எட்டாந் திங்கள் தானே. (1221)

திங்கள்தன்னில் முக்கால் வரிசை யப்பா
திரமாகக் குறைந்துவிடும் கழுத்தின் ரூபம்
மங்கிநிற்கும் ஒன்பதாந் திங்கள் தன்னில்
மாறிவிடும் கழுத்தினுட ரூப மெல்லாம்
எங்கள்குரு சொன்னபடி உந்த னுக்கு
இதமாக நானுரைத்தேன் கருப்பாசயத்தின் நேர்மை
மங்கையரின் கருப்பையின் சிலேத்துமச் சவ்வு
மகத்தான ரத்தத்தால் தூலித்துப் போமே. (1222)

போமடா அதின்பேரில் சதைபோ லொத்த
பதார்த்தந்தான் பரந்திருக்கும் பாரு
நாமடா கருவப்பா கருக்குழிக்குத் தானும்
நன்மையுடன் வரும்போது சொல்லக் கேளு
ஓமடா சிறுசவ்வின் பைக் குள்ளே
உத்தமனே கட்டுப்பட் டிருக்குந் தானே
.... .... .... .... .... ....
.... .... .... .... .... .... (1223)

கட்டியிருக்கும் பைக்குள்ளே ஜலந்தா னுண்டு
கனமான சலத்தில்தான் கருத்தான் பாரு
மட்டமாய் மிதந்துகொண் டிருக்குஞ் சொன்னேன்
மகத்தான வெளிச்சவ் வுட்சவ்வுக் குள்ளே
திட்டமா யிருக்கின்ற சலத்துக் கப்பா
திரமான உதயசல மென்று பேராம்
திட்டமுள்ள ஒருசவ்வு கோழிமுட்டைச் சவ்வைப்போலும்
மற்றொன்று சிறுப்பமா யிருக்கும் பாரே. (1224)

## நஞ்சு.

பாரடா கோழிமுட்டைக் குள்ளே தோன்றும்
பாங்கான சவ்வென்ன கருப்பை யோடு
கூரா அணைந்திருக்குந் தானம் தன்னில்
கொப்பனவே அச்சவ்வில் நஞ்சுண்டாகும்
சீராகப் பஞ்சுபோல் மிருது வான
சிறப்பான ரத்தநரம்பு தன்னில் தோன்றி
காரான கருப்பாசயத்துக் குள்ளே யப்பா
கருப்பாக ஒட்டிக்கொண் டிருக்குங் காணே. (1225)

காணடா நஞ்சப்பா கருவுக்கே தான்
கருவான புப்புசத்துக்குச் சமான மாகும்
பூணடா நஞ்சில்த்தான் தோணு கின்ற
பொல்லாத நரம்புகளின் குஞ்ச மப்பா
வாணடா கருப்பையின் நரம்புக் குள்ளே
வளமாக மத்திபமாய்ச் சென்று கொண்டு
நாணடா ரத்தத்தை கிரகிக்கும் பாரு
நலமாக இன்னமொன்று சொல்லக் கேளே (1226)

கேளடா நஞ்சொட்டி யிருக்குந் தானம்
கெணிதமுடன் மாறுபட் டிருக்குஞ் சொன்னேன்
நாளடா அந்நஞ்சு இடப்பக்கந் தனில்
நலமாக ஒட்டிக்கொண் டிருக்கும் பாரு
தேளடா நஞ்சுக்கு அநேக மான
தெளிவான வியாதிகள்தான் சம்ப விக்கும்
பாளடா அதுவாலே பிண்ட மப்பா
பண்புடனே பின்னமாய்ப் போகும் பாரே. (1227)

## நாபிக் கொடி.

பாரடா நாபிக்கொடி விவரங் கேளு
பக்குவமா யிக்கொடி சிசுவுக்கும் நஞ்சுக்கு மப்பா
கூறடா சம்மந்தப்பட் டிருக்குஞ் சொன்னேன்
கொப்பனவே இதுநஞ்சு மத்தியத் தில்
சீரடா ஒட்டிக்கொண் டிருக்கும் பாரு
சிறப்பாக ஒருவேளை ஓரந் தன்னில்
நேராக ஒட்டிக்கொண் டிருப்பதுவு முண்டு
நிலையான அதன்நீளம் சொல்லக் கேளே. (1228)

கேளடா கொடியப்பா பதினெட்டங்குலமே யுண்டு
கடிதாகச் சிலதுக்கு பனிரண்டங்குலமே யாகும்
நாளடா சிலதுக்கு நாற்பதங்குலமே யுண்டு
நலமாக ஐம்பதுஅங்குலம் மேலே போகா
வாளடா கொடியினுடஅளவு இதுவே யாகும்
வண்மையுள்ள சிசுஜனித்து ஒருநாழிகை சென்றால்
தேளடா அதிலிருக்கும் நாடி ஓட்டம்
தெளிவாக நின்றுவிடுந் திண்ணந் தானே. (1229)

தானான தொப்புள்கொடி துண்டித்த பின்பு
தானுலர்ந்து ஆறும்நாள் தன்னி லப்பா
தானாக விழுந்துவிடும் சிசுவுக்கே சொன்னேன்
தனியான அக்கொடிதான் உட்புறத்தில் நிற்கும்
தேனான பைக்குள் ளிருந்து கொண்டு
தெளிவான குழந்தையுட சிரசுக்கு மேலே
பானாகத் தொங்கிக்கொண் டிருக்குஞ் சொன்னேன்
மகிழ்ச்சியுடன் சிலவேளை சொல்லக் கேளே. (1230)

சொல்லுகிறேன் சிலவேளை கொடிதா னப்பா
சிசுவினுட கழுத்தைத்தான் சுற்றிக்கொண்டிருக்கும் பாரு
தொல்லுலகில் இப்படியே செனிக்கு மாகிற்
றேகையர்கள் வெகுகுற்றம் சொல்வா ரப்பா
மல்லுகின்ற கொடியிற்றன் முடியு முண்டு
மகத்தான கொடிதானுஞ் சிரசுக்கடியி லப்பா
வல்வினையாய் வருவது முண்டு சொன்னேன்
வகையாக விதற்குக் காரணந்தான் கேளே. (1231)

கேளடா நீண்டாநீண்ட கொடியாவ தாலும்
கெடியான பனிக்குடநீர் மிகுத்த லாலும்
நாளடா இந்தவித மாகுஞ் சொன்னேன்
நலமான உதயசல விவரங் கேளு
வாளடா உட்புறத்திற் றேன்று கின்ற
வளமான சவ்விின்று பனிநீர் தோன்றும்
தேளடா அதில்சலமு முப்பு முண்டு
தெளிவாக இன்னமொன்று சொல்வேன் பாரே. (1232)

பாரடா மங்கையர்க்கு குறைந்த மாதம்
பாங்காக இருக்கின்ற நாளி லப்பா
கூறடா உடம்புகள் தான் அதிகமாக
கொப்பனவே இருக்குமென்று சொன்னேன் பாரு
சீரான பனிநீரின் அள வப்பா
சிறப்பாக வித்தியாசந் தோன்றுஞ் சொன்னேன்
நேரான இதினுட குணந்தான் சொல்வேன்
நிச்சயமாய்ப் பனிநீரின் விவரங் கேளு. (1233)

கேளடா கரு வளர்த்தி ஆரம்பத்தில்
கெடியான சிசு வினுட போஷணைக்கு
நாளடா ஆதார மாகத் தோன்றும்
நன்மையுள்ள உஷ்ணத்தை சமரசமே செய்யும்
வாளடா சிசுவுக்கு அடி தாக்காமல்
வன்மையாய் தடுத்துக்கொண் டிருக்கும் பாரு
தேளடா இதுமுக்கிய மாகச் செய்யும்
தெளிவான குணத்தைத்தான் இன்னும் கேளே. (1234)

இன்னுங்கேள் பிரசவ காலங் தன்னில்
    இதமான சவ்வுகளை முன்னுக்கே தள்ளி
பன்னியே பையைப்போல் ஏற்பட்டுக் கொண்டு
    பண்பான கர்ப்பா சயத்தின் வாயை
உன்னியே விலாசப் படுத்தும் பாரு
    உள்ளதொரு பனிக்குடத்தின் தன்மை யப்பா
வன்மையுள்ள கடவுளுட செயலி னாலே
    வளமான பிரசவந்தா னாகும் பாரே. (1235)

## கருப்பச் சின்னங்கள்.

ஆகின்ற கர்ப்பத்தின் சின்னங் கேளு
    அழகான ஸ்திரீகளுக்குக் கருத்தான் தோன்றில்
ஆகின்ற குறிகள்தான் அநேக முண்டு
    அதற்குள்ள சிலகுறியை அறையக் கேளு
தாகின்ற மங்கைக்கு உடல் தூலிக்கும்
    தனியான நாடியடா பெருத்துத் தோன்றும்
நாகின்ற நடைகள்தான் தீவிரமாய்ப் போகும்
    நன்மையுள்ள ரத்தந்தா னதிகமாகுந் தானே. (1236)

தானான குணமுடனே நடவடிக்கை பாரு
    தனியாகத் தின்பண்டம் பிரமை கொள்ளும்
மானான மூத்திரந்தான் விகல்ப மாகும்
    மகத்தான சரீந்தான் மேனியாகும்
மோனமா யிக்குணங்கள் கண்ட தானால்
    முக்கியமாய் கருத்தரித்த தென்று சொல்வாய்
தேனான இன்னும் வெகுகுறியைக் கேளு
    தெளிவாகச் சொல்லுகிறேன் மைந்தா கேளு (1237)

பாரடா மங்கையர்க்கு முழுக்கு நிற்கும்
    பண்பான காலையில்தான் வாந்தி யுண்டாம்
சீராக வாயில்தான் உமிழ்நீ ருண்டாம்
    சிறப்பான முலைகள்தான் விம்மிக்கொஞ்ச மப்பா
நேராக வேதனைதான் செய்யுஞ் சொன்னேன்
    முக்கியமாய் முலைக்காம்புக் கடியில் தோன்றும்
கூறான விருத்த வடிவு அதிகமாக
    கொப்பனவே கறுத்துமே போகும் பாரே. (1238)

போகின்ற சிலநாள்தான் சென்ற பின்பு
பொங்கமுடன் மூலையில்தான் பால் உண்டாகும்
ஆகின்ற வயிறுதான் கொஞ்சம் கொஞ்சம்
அப்பனே பெருத்துத்தான் வருகும் பாரு
பாகமுள்ள கையாலே வயிற்றைத் தானும்
பண்பாக அழுத்திநீ பாரு பாரு
வேகமுள்ள கருப்பைதான் கல்லுப் போலே
விரிவாகக் காணுமடா கண்டு கொள்ளே. (1239)

கொள்ளவே பிண்டத்தின் சவ்வு தானும்
குறிப்பாகத் தாய்க்குத் தெரியுஞ் சொன்னேன்
தள்ளவே யோனிக்குள் விரலை விட்டு
தட்டித்தட்டி நீபார்த்தாக்கால் கருவே காணும்
அள்ளவே கர்ப்பஸ்திரீ வயிற்றின் மேலே
அழகான குழாயைநீ வைத்துக் கொண்டு
மெள்ளவே உற்றுநீ கேட்டா யானல்
மெலிவான கருவின் நடைதான் பாரே. (1240)

நடையான இருதயத்தின் நடையே தோன்றும்
நஞ்சினுட ரத்தோட்டச் சத்தங் கேட்கும்
கடையான ஆறுமாத பிண்டம் அப்பா
கண்டுவெளி வந்துவிட்டால் அழிகர்ப்ப மென்பார்கள்
படையான பூரண காலத்துக்கு முன்னல்
பண்பான பிரசவந்தான் ஆனல் கேளு
அடையான அகால பிரசவ மென்பார்
அப்பனே அதற்குத்தான் காரணங் கேளே. (1241)

கேளடா ஒருதடவை கர்ப்பச்சின்னங்கள் கண்டால்
கெணிதமுடன் மறுபடியுங் காணும் பாரு
நாளடா திரேகத்தின் அசௌக்கியத் தினலும்
நலமான கர்ப்பவியாதி துர்ப்பலத்தி னலும்
வாளடா மேகத்தின் வியாதி யாலும்
வளமான பயமுடனே கோபத் தாலும்
தேளடா சந்தோஷ விசனத் தாலும்
தெளிவான வயிற்றின்மே லடிப்பதாலும் பாரே. (1242)

பாரடா இருமலுடன் மிகுபேதி யாவதாலும்
பண்பான சுரமுடனே சீத பேதி
சீரடா தெய்வத்தின் குற்றத் தாலும்
சிறப்பான பெரியோர்கள் சாபத் தாலும்
நாரடா முன்செய்த கருமத் தாலும்
நலமான பெரியோரை நிந்திப்ப தாலும்
வாரடா வந்தகர்ப்பம் அழியும் பாரு
வண்மையுடன் இன்னம்வெகு விதந்தா னுண்டே. (1243)

உண்டான கருவப்பா வெளித்தோன்றுங் காலே
உத்தமனே மாதருக்குக் காணும் நோய்கள்
நண்டான முதலில்தான் அசவுக்கியங் காணும்
நலமான முதுகில்தான் வேதனையே காணும்
பண்டாக பிரசவ வேதனைக்கே யுள்ள
பக்குவமுள்ள குணங்களெல்லாங் காணுஞ் சொன்னேன்
கண்டாக்கால் பிரமிக்கும் படியே யுள்ள
கடிதான ரத்தந்தான் உண்டாங் காணே. (1244)

காணடா நோயப்பா முதுகில் தோன்றி
கனமான இடுப்பைத்தான் சுற்றிக் கொண்டு
பூணடா வயிற்றுக்கு வந்த பின்பு
புகழான துடைக்குத்தான் போகுஞ் சொன்னேன்
நாளடா வேதனைதான் நின்று நின்று
நன்மையாய்க் காணுவது முண்டு சொன்னேன்
வாளடா அந்நோய்தா னதிக ரிக்க
வளமான ஏற்பாடு செய்யும் பாரே. (1245)

செய்கின்ற வேளைதன்னில் வாந்தி காணும்
செயலான நாடிதான் தீவிரமாய்ப் போகும்
பையவே சரீரமெங்கும் உஷ்ண மாகும்
புலமாக முக்கல்கண்டு பிண்டங் தோன்றும்
நையவே கருவழிவு வந்த பேர்க்கு
நன்மையுள்ள உபத்திரவம் இல்லாமல் தான்
தொய்யவே பிண்டந்தான் வெளியே தோன்றும்
தோகையர்க்கு திரேகந்தான் சௌக்கிய மாமே. (1246)

## பிரசவ விதிகள்.

ஆமடா கருப்பையி லிருந்து வாழும்
அப்பனே சிசுமுத லெல்லா முள்ள
நாமடா கருவிகள் வெளியே தோன்றலுக்கு
நன்மையுள்ள பிரசவ மென்று பேராம்
ஓமடா பிரசவத்தின் கருப்பை யப்பா
உள்ளபடி சுருங்கியே சிசுவைத் தானும்
தாமடா வெளிப்படுத்தி வைக்கும் பாரு
தன்மையுள்ள கருப்பைசுருங்கும் போது கேளே (1247)

கேளடா வேதனைதான் பிறக்குஞ் சொன்னேன்
கெடிதான அதற்குத்தான் பேரைக் கேளு
நாளடா பிரசவவாயுவு பிரசூதவாய்வு என்றும்
நலமான இடுப்புவலி பிரசவவேதனைதா னென்றும்
வாளடா உலகத்தில் உள்ளோர் சொல்வார்
வளமாக அதில்சாதி நாலே யுண்டே
தேளடா அதின்விவரஞ் சொல்லக் கேளு
தெளிவாக ஒவ்வொன்றும் சொல்வேன் பாரே. (1248)

சொல்லுகிறேன் கிரமப்பிரசவம் கஷ்டப்பிரசவம் என்றும்
சொகுசான கிரமாதீதப் பிரசவ மென்றும்
மல்லுகின்ற விபரீதப் பிரசவ மென்றும்
மகத்தான பிரசவம் நாலே யுண்டு
தொல்லுலகில் கிரமப் பிரசவங் கேளு
தோகையர்க்கு சரிமாதம் சென்ற பின்பு
அல்லலின்றி சிரசுதா னுதய மாகி
அப்பனே இடுப்புநோ யெடுத்துக் கேளே. (1249)

நோவெடுத்து அறுபது நாழிக்குள்ளே
நோயான தாய்க்கும் பிள்ளைக் கும்
வாவெடுத்து வருத்தமின்றி சிசுதா னப்பா
வளமாக உயிரோடு பிறப்ப தற்கு
நாவகுத்த கிரமப்பிரசவ மென்று பேராம்
நல்மையுள்ள கஷ்டப் பிரசவத்தை நீகேளு
பாவெடுத்த அறுபது நாழிகைக்கு மேலே
பண்பாகப் படுகின்ற வேதனைக்குத் தானே. (1250)

தானான சிசுவினுட தலைதா னுள்ளே
தான்சிக்கிக் கொண்டுமே வெளித்தோன் றுமல்
ஊனான கருவிகொண்டு செய்வ தற்கு
உயர்ந்த கஷ்டப்பிரசவ மென்று சொல்வார்கள்
தேனான கிரமாதீத பிரசவங் கேளு
தெளிவான சிரசப்பா உதய மின்றி
மானான பிருஷ்டம் கைகால்கள லப்பா
மகிபனே காண்பதற்கு கிரமாதீதப்பிரசவமென்று பேரே. (1251)

பேரான விபரீதப் பிரசவங் கேளு
பிரிவான பிரசவ காலந் தன்னில்
கூறான பெரும்பாடு காணும் பாரு
கொப்பனவே வலிகண்டு இரட்டைப் பிள்ளை
நேராகப் பிறப்பதற்கு விபரீதப் பிரசவ மென்று
நிச்சயமாய்ச் சொல்லுகிறேன் நினைவாய்க் கேளு
சீரான உதயசலம் விவரம் தன்னை
சிறப்பாகச் சொல்லுகிறேன் திண்ணந் தானே. (1252)

தானான பிரசவத்தில் முதலே தோன்றும்
தனிச்சிசுவின் உறுப்புக்கு உதய மென்றும்
போனான பிரசவத்தில் கருப்பை வாயை
முக்கியமாய்ப் படிந்தது போல அய்யா
தேனாக விரிவாகச் செய் கின்ற
தெளிவான சலப்பைக்கு பனிக்குடமே யென்பார்
ஊனான பிரசவகால சமயங் கேளு
உள்ளபடி சொல்லுகிறேன் உறுதி பாரே. (1253)

உறுதியுள்ள பிரசவகால சமய மப்பா
உள்ளபடி மூன்றுவிதம் சொல்வேன் கேளு
பருதியாய் பிரசவநோய் தான் ஆரம்பித்து
பக்குவமாய் கருப்பையின் வாய்தா னப்பா
அறுதியாய்ப் பூரணமாய் திறக்கு மட்டும்
அப்பனே முதல்பாதம் என்று பேராம்
குருதியுடன் சிவப்பாகத் தோன்று மட்டும்
கொப்பனவே இரண்டாம்பாத மென்று சொல்லே. (1254)

சொல்லடா நஞ்சப்பா கருப்பையை விட்டு
சொகுசாகப் பிரிந்துவெளித் தோன்று மட்டும்
அல்லல்செய்யும் மூன்றும்பாத மென்று பேராம்
அப்பனே பிரசவநோய் என்ப தற்கு
தொல்லுலகில் கருப்பை சுருக்கத் திற்கு
தோகையர்க்கு பிரசவநோய் என்று பேராம்
வல்வினையாய் கருப்பையில் இருந்து வாழும்
வந்தசிசு தனைஉதைத்து வெளிக்குத் தானே. (1255)

வெளிக்குத்தான் தள்ளுகிற வேளைக் கப்பால்
விதமான கருப்பைக்கு உண்டு பாரு
சுளிகின்ற பிரசவ நோய் அற்ப மாகில்
சுகமான சிசுவப்பா வெளியே தோன்ற
களிக்கவே தாமதந்தான் செல்லும் பாரு
கனமான பிரசவநோய் அதிகமாகில
பளிக்கவே அநுகூல முண்டு பாரு
பாங்கான பெண்களுக்கு வருத்த மாமே. (1256)

ஆமடா பிரசூத வாயுவி லப்பா
அப்பனே ஒருசிரமந்தா னுண்டு பாரு
நாமடா ஆரம்பந் தன்னில் நோவு
நலமாக அற்பமா யிருக்கு மாகில்
ஓமடா வரவரத்தா னதிக மாகும்
உத்தமனே கொஞ்சமாம் நேரந் தன்னில்
நாமடா அதிகமா யிருந்த தென்றால்
நலமாகச் சீக்கிரத்தில் தணிந்து போமே. (1257)

தணிந்துவிட்டு அடிக்கடிதான் வருகும் பாரு
தக்கதொரு பிரசவந்தான் சமீப மானல்
அணிந்திட்ட வேதனையு மதிக மாகும்
அப்பனே அப்போது பிரசூத வாயுவு
பிணிந்திட்ட கருப்பையில் கருத்தி லப்பா
பண்பாக எழும்பியே மேல்முகமாய்த் தானும்
துணிந்துமே வியாபிக்கும் பாரு பாரு
சொல்லுகிறேன் இன்னமொன்று சொல்லக் கேளே. (1258)

கேளடா நோய்கண் டிருக்கும் வேளை
கெணிதமுள்ள கருப்பையைத் தொட்டுப் பார்த்தால்
நாளடா அழுத்தமாய் உருண்டை யாக
நலமாக முன்னுக்கு வந்திருக்கும் பாரு
வாளடா நோய்நின்ற பிறகு பார்த்தால்
வளமாக அப்பைதான் மிருது வாகும்
தேளடா முதல்பாதந் தன்னி லப்பா
தெளிவான கருப்பையின் வேலை தானே. (1259)

தானென இரண்டாம் பாதந் தன்னில்
தக்கதொரு வயிற்றினுட சதைக ளோடு
ஊனென ஈரல்தாங்கி தானுஞ் சேர்ந்து
உள்ளபடி சகாயமே செய்யும் பாரு
தேனென அதுவேதான் முக்க லுக்குத்
தெளிவான காரணத்திற் கிடமே யாகும்
மானென பிரசவத்தின் முடிவி லப்பா
மகிபனே யோனிச்சதை சுருங்கிப் போமே. (1260)

சுருங்கியபின் நஞ்சைத்தான் வெளியே போக்கும்
சுகமான பிரசூதவாய்வு மன துக்கு
அயிக்கமின்றி இருந்ததாலும் மனோசஞ்சலங் களாலே
இதமாக முன்ரோகம் பிறக்கும் பாரு
நெருங்கியே கோபம்பயம் ஆச்சரியங் கள்
நிசமாகக் கண்டிட்டால் வேதனைதான் பாரு
பரந்துமே வலிகள்தான் நின்று போகும்
பாங்காக இன்னமொன்று சொல்லக் கேளே. (1261)

பகருகிறே னிடைக்குழியில் சிசுவினுடதலைதா னப்பா
பண்பாக நாலுவிதமா யமைந்திருக்கும் பாரு
இகமதிலே பிரதமைதிதி சொல்லக் கேளு
இதமாக சிசுவினுட பிடரிஉச்சி துவாரம்
தகைமையுள்ள உச்சிமூன்று துவார மெல்லாம்
.... .... .... .... .... ....
செகமதிலே வலப்பக்கம் வஸ்திக ஸ்தானம்
திரமான எலும்பினுட ஓரங் கேளே. (1262)

ஓரமா மூலம் வட்டமாகத் தானே
ஒடுங்கி யமைந்திருக்கும் வண்மை சொன்னேன்
பாரமுள்ள கருப்பைக்குள் விரலைத் தானே
பண்பாகச் செலுத்திநீ பார்த்திட் டாக்கால்
காரமுள்ள சிசுவினுட வலதுபுறத்தில் கையின்
கனமான எலும்பினது பிதுக்கத்தின் மேல்
தாருபோல் உறுத்துமடா சொன்னேன் பாரு
தொலையாத இரண்டாந்திதி சொல்லக் கேளே. (1263)

கேளடா சிசுவினுட பிடரி யப்பா
கெடிதாக தாயினுட வலத்துடைப் பக்கமாக
நாளடா முகம் இடப் பக்கமாயும்
நன்மையுள்ள திரிகஸ்தான எலும்போர மாயும்
வாளடா இருக்குமடா சொன்னேன் பாரு
வளமான திரிகஸ்திதி சொல்லக் கேளு
தேளடா சிசுவின்முகம் தாயினுடதுடைப் பக்கமாயும்
தெளிவான பிடரியது சொல்வேன் பாரே. (1264)

சொல்லுவேன் பிடரி வலஇடுப்பை நோக்கி
சொகுசாக மூலவாட்டமாய் அமைந்திருக்கும் பாரு
மல்லுகின்ற உச்சிமுன் துவார மப்பா
மகத்தான இடது துடைப் பக்கமாக
தொல்லுலகில் இருக்குமென்று சொன்னே னப்பா
தோகையரின் சதுர்ஸ்திதி சொல்லக் கேளு
அல்லல்செய்யும் சிசுவின்முகம் தாயின்வலதுதுடைப் பக்கமாக
அமைந்திருக்கு மென்றுநீ அறிந்து கொள்ளே. (1265)

அறிந்துபார் சிரசப்பா இடைக் குழியின்
அப்பனே வரம்புக்குமேல் முதல்திதியிலிருக்கும் போது
தெரிந்துநல்ல உச்சி துவாரம் இரண்டும்
தெளிவாகச் சமமாக இருக்கும் பாரு
அறிந்தபின்பு அதே திதியில் தானே
அப்பனே குழிக்குள்ளே இறங்கும் பாரு
சரிந்ததொரு பிடரிமுதல் கொஞ்சம் தாழ்ந்து
சரியான முகம்பிறகு தாழும் பாரே. (1266)

பாரப்பா இடைக்குழியில் சிசு வப்பா
　　பண்பாக இறங்கின் பின்பிடரி தானும்
நாரப்பா வலப்பக்கக் கொஞ்ச மப்பா
　　நலமாகத் திரும்பியே மர்ம ஸ்தானம்
வாரப்பா எலும்பினுட வளைவுக்குத் தானும்
　　வண்மையாய் அடியிறங்கியதின்மேல் ஊன்றிக் கொள்ளும்
சீரப்பா முகந்தானும் திரிக ஸ்தான
　　திரமான எலும்பினுட வளைவைத்தள்ளும் பாரே.(1267)

பாரடா அப்போது முகத்தை யய்யா
　　பண்பாக விரித்துமே கொள்ளும் பாரு
சீரடா வெளிநோக்கி வந்து தாயின்
　　சிறப்பான வலது துடைப் பக்கமாக
நேரடா திரும்பிவிடும் பிறகு கேளு
　　நிச்சயமாய்க் காலுடலும் தோளுந் தோன்றும்
கூறடா இந்தவித மென்று சொல்லி
　　குறிப்புமுற்றும் சொன்னேன் கூர்ந்து பாரே. (1268)

## கிரமப் பிரசவம்.

கூர்ந்துபார் கிரமப்பிரசவம் தன்னை யப்பா
　　குறிப்பான சிரசுதான் உதய மாகி
தீர்ந்ததொரு அறுவது நாழிகைக் குள்ளே
　　திரமான தாய்க்கும் சிசுவுக்கே தான்
ஊர்ந்த உபத்திரவம் இல்லாமல் தான்
　　உள்ளபிரசவம் முடிந்துநஞ்சும் வெளியே தோன்றில்
பார்தனிலே அதுதானே கிரமப்பிரசவ மென்று
　　பாடினர் சாஸ்தி ரத்தில் பாடினரே. (1569)

பாடினர் முதற்பேறு பிள்ளை யப்பா
　　பண்பாக எப்போதும் கஷ்டந் தோன்றும்
கூடினர் பிரசவ கால சமீபத்தில்
　　கொப்பனவே சிலகுறிகள் காணும் பாரு
நாடினர் அக்குறியை பூர்வக்குறிக ளென்று
　　நலமான பெரியோர்கள் சொல்வார் பாரு
வாடியே கருப்பைதான் கீழுக்கே தோன்றி
　　வயிறுசற்றே வாடிவரும் வளமை தானே. (1270)

தானென நீர்க்கடுத் தடிக்கடியே தோன்றும்
தனிவயிறு கடுப்புடனே முக்கல் காணும்
தேனென பேதியுந்தான் காணுஞ் சொன்னேன்
தெளிவயிற்றில் பிசைவது போல் தோன்றும்
ஊனென வேதனைதான் இருக்கு மடா
உள்ளபடி யோனிதனி லிருந்து மப்பா
மானென சிலேத்துமநீர் வடியுஞ் சொன்னேன்
மைந்தனே அதிலிருக்கும் குறியைப் பாரே. (1271)

பாரடா இக்குறிகள் கண்ட தானால்
பக்குவமாய் பிரசவகால மாச்சு தென்று
கூறுக நிச்சயித்துக் கொள்வாய் நீதான்
குறிப்பான பிரசவநோய் காணு முன்பு
நேரான அறுபது நாழிகைக்கு முன்னால்
நிச்சயமாய் லட்சணங்கள் பிறக்குங் காணு
சீராக சிலருக்கு ஒன்று மின்றி
சிரமமான வேதனைதான் ஜனிப்ப துண்டே. (1272)

## பிரசவ லக்ஷணம்.

உண்டான லட்சணந்தான் சொல்லக் கேளு
உத்தமனே கருப்பைதான் சுருக்கத் துக்கு
நண்டான ஆரம்பஞ் செய்யும் போதே
நலமான பிரசவத்தின் துவக்க மாகும்
பண்டான பிரசூத வேதனையி லப்பா
பரிவான இரண்டுவித வேதனையே யுண்டு
செண்டான மித்தியா வேதனைதான் என்றும்
செயமான நிசவேதனை யென்று மாச்சே. (1273)

ஆச்சப்பா ஆயாசம் குளிர்ச்சி யோடு
அப்பனே அசீரணமும் மலபந்தம் தோன்றி
காச்சப்பா இன்னும்வெகு காரணத் தால்
கனமான மித்தியாவேதனை தான் தோன்றும்
நீச்சப்பா அதுகிரமமாய்த் தோன்று தப்பா
நிசமான சேத்துமநீர் யோனி தன்னில்
பாச்சப்பா தோன்றுது பாவை யர்க்கு
பண்பான கர்ப்பாசயம் விரியாது பாரே. (1274)

விரியாது பனிக் குடமும் ஏற்படாது
விதமான நிசப்பிரசவ விதத்தைக் கேளு
மறியாத நோய்முதலில் முதுகில் காணும்
மைந்தனே பிறகுஇடுப்பைச் சுற்றிக் கொண்டு
தெரியாத வயிற்றுக்கு வந்து பின்பு
திரண்டக கிறங்கிவிடுந் திறமை பாரு
குறியப்பா இப்படியே நின்று நின்று
குறிப்பெல்லாங் காணுமடா குணமாய்த் தானே. (1275)

தானான கருப்பையின் வாயைத் தானே
தக்கபடி விசாலங்கள் செய்து கொண்டு
ஊனான பனிக்குடத்தைப் பிதுங்கச் செய்யும்
உள்ளபடி நோயிருக்கும் போது நீதான்
தேனான யோனிதனில் விரலை விட்டு
தெளிவாக உயரத்தி லிருந்து வாழும்
மானான கருப்பையின் வாயை யப்பா
மகிழ்ச்சியுடன் தொட்டுநீ பார்த்தால் கேளே. (1276)

பார்த்தாக்கால் அதுமெதுவாய் விரியுஞ் சாடை
பனிக்குடமும் இறங்குகிற விதமுந் தோன்றும்
போர்த்ததொரு முதல்பாதந் தன்னி லப்பா
பொங்கமுடன் பிரசவப்பெண் அங்கு மிங்கும்
கார்த்துமே திரிந்துகொண் டிருப்பாள் பாரு
கனமான ஏக்கமுற்று பயந்து கொண்டு
சீர்த்துமே அழுதிடுவாள் சிலபே ரப்பா
சிறப்பாக சிலபேர்கள் சந்தோஷங் கொள்வாரே. (1277)

வாராகச் சிலருக்கு அத்தருணந் தன்னில்
வாந்தியது காணுமடா வளமை பாரு
கூறுகக் கருப்பையைத் தொட்டுப் பார்த்தால்
குறிப்பாகத் திடமாக இருக்கும் பாரு
நேராக அதன்முகந்தான் பூரண மதாக
நிச்சயமாய் விரிந்தபின்பு பனிக்குடந்தா னப்பா
சீராக உடைந்துநீர் வெளியே தோன்றும்
சிறப்பான முதல்பாத பிரசவநோய் தன்னில் பாரே. (1278)

பாரடா முதல் பிரசவ நோயில்
பக்குவமாய் இடுப்புவலி அதிக முண்டாம்
கூறப்பா அப்போது பெண்க ளப்பா
கூப்பாடு போடுவார்கள் யாருங் கேட்க
சீரான இரண்டாம்பாதந் தன்னிலே தான்
சிறப்பான வேதனையும் முக்கல் காணும்
நேரடா அப்போது மாது அய்யா
நெரியா யிடிந்துமே முக்கு வாளே. (1279)

முக்குவாள் நோயுந்தான் அடிக்கடியே காணும்
முன்னேய்தான் உடனே தான் தீரப்பா
கக்கிஷமாய் இரண்டுவிதங் கண்டு கொண்டு
வைத்தியங்கள் சிகிச்சை செய்வார் கேளே
பொக்கிஷத்தை விட்டுசிசு வந்த பின்பு
பொதுவான மூன்றும்பாத வேதனையே போகும்
தக்கவயிறுமேல் கையை வைத்துப் பார்த்தால்
தரையில் அதுகொஞ்சம் அதரும் பாரே. (1280)

பாரடா கருப்பைதான் சிறுத்துத் தோன்றும்
பார் சற்றும் நோவில்லாம லப்பா
சீராக மறுபடியும் கருப்பை யப்பா
சிறப்பாக சுருங்கவே ஆரம் பித்து
நேராக பிரசூத வேதனை யுண்டாக்கும்
நிச்சயமா யங்நோவில் நஞ்சு தோன்றும்
கூருகச் சிலவேளை குழந்தை யோடு
கொப்பனவே நஞ்சுதான் விழுவ துண்டே. (1281)

உண்டான நஞ்சப்பா ஒருநாழிக் குள்ளே
உத்தமனே விழுகின்ற வழக்கஞ் சொன்னேன்
பண்டாகச் சிலருக்கு இரண்டு நாழி
பாங்காகச் சிலருக்கு மூன்று நாழி
செண்டான நஞ்சுதான் விழுகும் பாரு
செகந்தனிலே விழுகாமல் போவ துண்டு
உண்டான நஞ்சுதான் விழுகா விட்டால்
ஊறியபின் சீவன்தான் போகும் பாரே. (1282)

பாங்கான மருத்துவத்தின் விவரந் தன்னை
பக்குவமாய்த் தானறிய வேணு மென்றால்
சீரான நூல்முற்றும் அறிய வேண்டும்
சிறப்பான கூர்மையுள்ள புத்தி வேண்டும்
நிச்சயமாய் குறிகள்முற்றும் அறிய வேண்டும்
வாரான பெரியோர்கள் தன்னைக் காத்து
வழக்க மெல்லாம் கண்டு கொண்டு
வைத்தியம் செய்யுநீ செய்து பாரே. (1283)

வைத்தியமடா செய்வதற்கு நூலின் தன்மை
வகையுடனே அறிந்தபின்பு சொல்லக் கேளு
குயுக்தியாய் ஒன்றும்நீ செய்யாமல் தான்
குருசொன்ன மார்க்கமாய் போவா யப்பா
பைத்தியமாய் பலபேர்கள் பேச்சைக் கேட்டு
பாங்கான தேகத்தைக் கெடுக்க லாகா
செயித்தமென்று வெகுபேர்கள் செப்பு வார்கள்
செயலற்ற பாவியுட பேச்சைத் தள்ளே. (1284)

தள்ளிவிடு பிரசவஸ்திரீ இடம் தனக்குத்தான்
போனபின்பு நீசெய்யும் விதம் கேளு
மெள்ளவே பேதையுட சமயத்தை முன்பு
மெதுவாக விசாரித்துக் கொண்ட பின்பு
அள்ளவே தோன்றியிருக்கும் உறுப்பு முற்றும்
அழகான குழந்தையுட தன்மை முற்றும்
தெள்ளவே விசாரித்துக் கொள்வாய் முன்னால்
தெளிவான நாடிநடை பின்பு பாரே. (1285)

நாடிநடை மலக்கிரமம் நாக்கு அப்பா
நலமான தேகத்தின் திதியைக் காட்டும்
தேடியே அங்குலியால் பரிட்சை செய்து
செயலான முன்குணத்தை அறிவாய் பின்னே
வாடியே இருக்கின்ற பெண்ணை யப்பா
வளமாக இடப்பக்கம் படுக்க வைத்து
கூடியே முழங்காலை முடக்கிக் கொண்டு
கொப்பனவே வயிறூடே அணையச் செய்யே. (1286)

செய்தபின்பு நோய்காணும் போது அப்பா
செயலான வலதுகைமுன் விரலுக்கு நீதான்
தொய்யவே விளக்கெண்ணெய் இட்டுக் கொண்டு
தோகையுட யோனிக்குள் செலுத்திப் பார்த்தால்
பையவே கருப்பையின் முகமே தோன்றும்
பாங்கான வேதனையில் விரிந்துபிகுவே யாகும்
நையவரும் நோயால் கருப்பைக் கப்பா
நன்மையுடன் அசைவொன்றும் இருக்கா தென்றே. (1287)

அன்றான பனிக்குடந்தான் உடையாம லப்பா
அழகாகத் தானிருக்கும் வேளை தன்னில்
கன்றான கைப்பழக்க மில்லா தோர்கள்
கனமான உதயத்தைக் கண்டு கொள்ள
பன்றாகத் தெரியாது அப்பா கேளு
பரிவாக உடைந்திருந்தால் உதயந் தன்னில்
நன்றாக உறுப்புகள்தான் விரலுக் கப்பா
நன்மையுடன் அகப்படுமே நாடி னோர்க்கே. (1288)

நாடியே உறுப்பைத்தான் தெரிந்து கொண்டு
நலமான யோனியுட பிரமா ணத்தை
தேடியே திரிகஸ்தான எலும்பி லப்பா
திரமான பிதுக்கத்தைத் தெரிந்து கொண்டு
கூடியே அவ்வெலும்பு உள்ளுக்கு மெத்த
குணமாகப் பிதுங்கியிருந்தால் இடைக்குழியின் நேர்மை
வாடியே சிறுத்திருக்கும் அப்போ தப்பா
வளமான சிசுவின்தலை இறங்கா தன்றே. (1289)

இறங்காத வேளைதன்னில் விட் டப்பா
இதமான மந்திரங்கள் ஜெபம் செய்தாலும்
திரங்காது பின்னைதான் கொஞ்சங் கூட
துய்ய மந்திரமொன்றுமே பலித் திடாது
சிறக்கு வியிரயோகஞ் செய்யா விட்டால்
சீவனிரண்டும் போய்விடுமே திடமாய்ச் சொன்னேன்
பரம் தனக்கு நேசமாய் உள்ளவர்கள்
பார்த்தாக்கால் எல்லாந்தான் பலிக்குந் தானே. (1290)

தானான நோவுதான் முதல்பாதந் தன்னில்
தானிருக்கும் வேளைதனில் பசிதான் கண்டால்
ஊனான போசனந்தான் கொடுக்கச் செய்வாய்
உள்ளபடி மலபந்த மிருக்கு மாகில்
தேனான பேதிக்குக் கொடுத்து பின்பு
தெளிவான மலத்தைத்தான் போக்கச் செய்வாய்
மானான மூத்திரந்தான் கட்டி நிற்கில்
மைந்தனே சிலாக்கால் எடுத்துப் போடே. (1291)

போடுவாய் முதல்பாதந் தன்னி லப்பா
பொங்கவே முக்கத்தான் செய்ய லாகா
கூடவே சிலபேர்கள் கர்ப்பப் பெண்ணை
கொப்பனவே படுக்கச்செய்து வேறொருத்தி தன்னை
சாடியே முக்கலுண் டாகச் செய்வார்
சடுதியிலே அதுவாலே வேதனை யுண்டாமே. (1292)

உண்டான வருத்தத்தால் சிலவேளை யப்பா
உத்தமனே கருப்பைதான் கிழிந்து போய்
பண்டான அபாயந்தான் நேரிட்டுப் போகும்
பாழான ஜனங்கள்தான் செய்வா ரப்பா
முண்டான பிரசவ வனை செய்து
முக்கியமாய் கர்ப்பிணிக்கு போட்டா யானல்
திண்டான பிரசவமெல்லாம் சீக்கி ரத்தில்
சிறப்பாகப் பிறக்குமடா சீர்மை தானே. (1293)

தானான பனிக்குடந்தா னுடைந்த பின்பு
தக்கபிள்ளை சிரசுஇறங்கு மிரண்டாம்பாதந் தன்னில்
மோனான கர்ப்பிணியை நிர்வாணி யாக
முக்கியமாய் படுக்கவைத்து துப்பட்டி யாலே
பேனான போர்வையிட்டு வைப்பா யப்பா
பரிவான தேசத்தின் வழக்கங் கேளு
மாறாகச் சிலதேசந் தன்னி லப்பா
மைந்தனே உட்கார வைப்பார் தானே. (1294)

வைப்பார்கள் சிலதேசந் தன்னில் கேளு
வளமாக முழங்கால்மேல் நிற்க வைப்பார்
வைப்பார்கள் சிலதேசந் தன்னில் பாரு
வளமாக கர்ப்பிணியை மல்லாக்க வைத்து
கம்பியே முழங்காலை முடக்கி வைப்பார்கள்*
கனமான சிலதேசந் தன்னில் கேளு
அப்படியே கட்டிலின்மேல் இடப்பக்கம்
அழகான பெண்ணைப் படுக்க வைப்பாரே. (1295)

படுக்கவைத்துப் பிரஷ்டத்தை கட்டி லோரம்
பண்பாக நகர்த்தியே முழங்கால் தன்னை
முடக்கியே வயிறேடு அணையச் செய்து
முக்கியமாய்த் தலையணையைக் கால் களுக்கு
இடுக்கியே மத்தியில்தான் வைத்துப் போவார்
இதமாக பிரசவகாலச் சமீ பத்தில்
கொடுத்திடும் போஜனந்தான் கொடுக்க லாகா
கொடிதான வெந்நீர்கஞ்சி கொடுக்க லாமே. (1296)

ஆமேதான் கருப்பையில் முகந்தா னப்பா
அப்பனே செவ்வையாய் விரிந்த பின்பு
ஓமென்ற பனிக்குடந்தான் உடையாமல்த் தான்
உத்தமனே பிரசவந்தான் தாமதப்படுமே யானல்
நாமென்ற விரலைவிட்டு குத்தி நீரை
நன்மையுடன் மெதுவாக வெளிப்போக்கச் செய்வாய்
தாமென்ற சிசுவின் தலைகீழே தோன்றி
தாயகத்தை முட்டித்தள்ளும் போது பாரே. (1297)

பாரடா அப்போது மருத்துவன் சொல்லக் கேளு
பண்பாக தன்னிடத்து உள்ளங் கையை
நேராக அத்தானத்தின் மேலே வைத்து
நீண்ட பெருவிரலையும் முன்விரலையு மப்பா
சீராக நிதம்பத்தின் ஓரம் நீட்டி
சீராக மெதுவாகத் தாங்கிக் கொள்வாய்
கூருக மெத்தவுந்தான் முத்த லாக
குறிப்பாக இன்னமொன்று சொல்லக் கேளே. (1298)

கேளடா யோனியுட துவாரம் விட்டு
கடிதான சிரசுதான்வெளியே தோன்றுங் காலை
நாளடா வலதுகையா லேந்திக் கொண்டு
நன்மையுள்ள சிரசுதானைத் திரும்பச் செய்வாய்
கேளடா இடதுகை தாங்கலைத் தான்
தெளிவாக விட்டுவிடக் கூடா தப்பா
பாளடா சிரசுவெளி கண்ட போது
பண்பான முகத்தைநீ சோதித்துப் பாரே. (1299)

சோதித்தால் சிலவேளை நாபிக்கொடி தானப்பா
சுகமாகச் சுத்திக்கொண் டிருப்ப துண்டு
ஆதியில் அப்படியே யிருக்கு மாகில்
அதைமெதுவாய் வெளியிழுத்து பிள்ளை தனை
மேதினிக்குள் அவிழ்த்தெறிந்து தோளின் மேலே
மெதுவாகத் தள்ளிவிட வேணு மப்பா
நீதியாய்ச் சிரசுபிரசவ மான போது
நிச்சயமாய் வேறொருத்தி வயிற்றின் மேலே. (1300)

மேலேதான் கையைவைத்து குப்பையைத் தான்
மெதுவாகவிடாமல் அழுத்தியே பிடித்துக் கொண்டு
கீழேதான் கீழுக்கு மெதுவா யப்பா
கிரமமாகத் தள்ளியே போகச் செய்வாய்
மேலாக அப்படியே செய்து வந்தால்
மெதுவான நஞ்சப்பா பிரிந்து போகும்
சீலாகச் சீக்கிரத்தில் வெளிக்கே தோன்றி
சரீரத்தை நன்மைசெய்யுந் தன்மை தானே. (1301)

தானான சிரசுதான் வெளிவந்த பின்பு
தக்க கொஞ்சநேரம் நோய்நின் றிருந்து
மானாக மறுபடியும் ஆரம் பித்து
மாதுவுட சரீரத்தை வெளிப்படுத்தும் பாரு
ஊனான சிரசப்பா வெளிவந்த பின்பு
உள்ளமற்ற உறுப்புவர நேரப் பட்டு
தேனான பிள்ளையப்பா இறந்து போகும்
தெளிவான ஸ்திதியில் தானிருந்தால் கேளே. (1302)

இருந்தாக்கால் வயிற்றையப்பா தேய்த்து விட்டு
இதமாக நோயைத்தான் உண்டாக்கா அப்பா
பிறந் தழுகும் பிறக்கா விட்டால்
பண்பாகக் கருப்பையை அழுத்திக் கொண்டு
தெரிந்தசிசு தலையைத்தான் பிடித்துக் கொண்டு
தெரியாமல் ஒருவிரலை அக்குள் தன்னில்
திருத்தியே செலுத்தி மெதுவாக வப்பா
திரமான சரீரத்தை இழுப்பாய் நீயே. (1303)

இழுப்பாய்நீ சிசுவைத்தான் தீவிரமா யப்பா
இன்பமாய் இழுத்துவிட்டால் கருப்பை தானும்
செழிப்பாகச் சீக்கிரத்தில் சுருங்கா தப்பா
சீரான இரத்தந்தான் உடனே யப்பா
முழிப்பாக வெளிப்பட்டுத் தோன்றும் சொன்னேன்
முக்கியமாய் இந்தவிதி அறிய வேணும்
பழிப்பார்கள் இந்தவிதம் தெரியா விட்டால்
பண்டிதனுய் அவனைநீ பகரொண் ணுதே. (1304)

பகருகின்ற பிறப்பின் நேர்மை தன்னை
பக்குவமாய்த் தானறியாப் பண்டிதர் கள்
செகமதினில் வைத்தியங்கள் செய்வோ மென்று
செயலற்ற பேச்சுகள்தான் அனைத்தும் பேசி
முகிந்திருக்கும் குருவதனை எடுத்துக் கொண்டு
முக்கியமாய் மருந்து ஊட்டிடாமல் தான்
தகைமையற்ற வைத்தியங்கள் செய்வா ரப்பா
தாரணியில் கண்ட பயல்கள் தானே. (1305)

பயல்களைத்தான் நம்பியே வெகுபேர்க ளப்பா
பாங்கான தேகத்தைக் கெடுத்துக் கொண்டார்
தயவாகப் பெரியோர்கள் சொன்ன நூலைத்
தான்விட்டு கைமுறையைப் பற்றிச் சொல்வார்
முயலான கைமுறைதான் ஒருநோய்க் கப்பா
முக்கியமா யாகுமல்லால் மற்றோர்க் காகா
செயலான வைத்தியரின் தன்மை தன்னை
செம்மையா யறிந்தபின்பு மருந்தை யுண்ணே. (1306)

உண்டானதொரு குழந்தையப்பா வருத்த மின்றி
உலகில்தான் பிறந்தபின்பு கைகால் தன்னை
செண்டாக உதறிக்கொண் டழும் பாரு
செம்மையா யழுதபின்பு சுவாச மப்பா
தொண்டாக பூரணமாய் ஏற்பட்டுக் கொள்ளும்
தொப்புள்க்கொடி நாடிநடை நின்ற பின்பு
துண்டித்து தாயையும் சிசுவையு மப்பா
தொல்லுலகில் வேறுசெய்து விடுவாய் நீயே. (1307)

விடுகின்ற கிரமத்தை நமது பெண்கள்
விசாரித் தறியாமல் தேகந் தன்னில்
படுகின்ற சிசு பிறந்தஉடனே தானே
பக்குவமாய் நாபிக்கொடி தன்னை யப்பா
சடுதியிலே துண்டித்து விடுவார் பாரு
சார்பாக அதனாலே சிசுவுக்கே தான்
முடிவான அபாயங்கள் தான் சம்பவித்து
முகுந்தனுர் லோகத்தை அடையுந் தானே. (1308)

தானான சிசுவுதான் வெளிவந்த பின்பு
தாயினுட வயிற்றைத் தான்பரி சோதித்து
ஊனான மறு பிள்ளை யிருக்கும்
உள்ளபடி தெரிந்துமே கொண்ட பின்பு
தேனான வயிற்றையப்பா துணியால் சுற்றி
தெளிவாக இழுத்துமே கட்டி வைப்பாய்
மானான நஞ்சுவெளிக் கண்ட பின்பு
மைந்தனே துணியைத்தான் போட்டு வையே. (1309)

வையப்பா தாயைத்தான் ஜாம மட்டும்
வளமாக அசையாம லிருக்கச் செய்வாய்
பையப்பா பிரசவித்த உடனே கேளு
பாங்கான கஸ்தூரி கொடுக்கச் செய்வாய்
நையப்பா சாதாரணப் பிரசவத் தோர்க்கு
நாட்டியே செய்கின்ற காரந் தன்னை
செய்யப்பா பெண்ணுக்கு உடனே நீதான்
செயலான குழந்தையுட விவரங் கேளே. (1310)

கேளடா சிசுதான் பிறந்தஉடனே நீதான்
கெடிதமுட னதின்வாயில் விரலை விட்டு
நாளடா கோழையைத்தான் நீக்கச் செய்வாய்
நலமான சிசுவப்பா சுவாசந் தன்னை
தாளப்பா தாரளமாகத் தானே தான்
சுவாசம் விட்டிடவே தாமதமே யானல்
வாளடா நாபிக்கொடி நாடிநடை நின்றபின்பு
வளமான கொடியதனைத் துண்டிப் பாயே. (1311)

துண்டிப்பாய் குழந்தையுட தொப்பு ளுக்கு
தொகுப்பான ஒருரெண்டு அங்குலமே விட்டு
கண்டிப்பாய் சன்னக் கயிற்ருல் சுற்றி
கனமாக இறுக்கியே முடிவா யப்பா
பண்டிதனே பிறகுஅந்த முடிக்குத் தானும்
பாங்காக ரெண்டுமூன்று அங்குலமே தள்ளி
கண்டிப்பாய் வேறேஒரு கயிறுஇட்டு நீதான்
செவ்வையாய் முடிபோட்டுப் பின்பு பாரே. (1312)

பாரடா அவ்விரண்டு முடிக ளுக்கும்
பாங்காக பத்தியில்தான் கத்தரிக் கோலால்
சீராக துண்டித்து விடுவா யப்பா
சிறப்பான கத்தியிஞல் துண்டிக்க லாகும்
நேரான சிசுவின் மேலிருந்து வாழும்
நெறியான பசைக்குத்தான் வெந்நீர் விட்டு
சீராகக் கழுவியே தொப்புள்க்கொடியி லப்பா
சிறப்பான ரத்தந்தான் தோன்ருமல் பாரே. (1313)

தோன்ருத வயிற்றைத்தான் துணியால் சுற்றி
துப்புரவாய்த் துண்டித்த தொப்புள் தன்னில்
ஆன்ருத வாயினின்று ரத்தந் தோன்றி
அப்பனே வேறுஒரு முடியே போடு
சீன்ருத ரத்தத்தை ஒழுகாமல் செய்வாய்
சிறப்பான கொடியப்பா ஆரும் நாளில்
கன்ருமல் காய்ந்துபோய் விழுகும் பாரு
கண்டிப்பாய் அந்தஇடம் சுருங்கிப் போமே. (1314)

போமடா சிசுசில காலந் தன்னில்
பொங்கமுடன் விகல்பங்கள் காணும் பாரு
நாமடா அதிகரத்தந் தோன்ற லாலும்
நஞ்சப்பா சீக்கிரத்தில் பிரிவ தாலும்
ஓமடா போஷணையின் குறைவி னாலும்
உள்ளபடி சிசுவுக்கு மூர்ச்சை யோடு
தாமடா சுவாசந்தான் காணும் சொன்னேன்
தன்மையுள்ள குழந்தையிதில் பலஹீன மாமே. (1315)

பலஹீனம் அடைந்தாக்கால் சுவாச மப்பா
பளிச்சென்று விடாமல் அழாமல் காணும்
சலனமுள்ள கொடியில் நாடிநடை தோன்றுது
சதிரான இருதயநடை ஒடுங்கிப் போகும்
மலந்தங்கும் தொப்புள்க் கொடியைக் கட்டி
மாறியே துண்டித்து விட்டுக் கேளு
சலங்கொண்ட சிசுவைத்தான் காய்ந்த நீரில்
தண்மையுள்ள குளிர்ந்தசலந் தன்னில் தானே. (1316)

தானாக மாறிமாறி வைத்தா யானால்
தன்மையுள்ள சுகுணந்தா னுண்டாம் பாரு
மானாக அதிலுந்தான் தோன்ரு விட்டால்
மைந்தனே கம்பளியால் உடம்பு கால்கை
தேனாகத் தேய்த்துவிடு சுரணை யுண்டாம்
தெளிவான மூக்குதொண்டை தனிலே கேளு
ஊனான கோழியுட இறகை விட்டு
உள்ளபடி சுற்றினாக்கால் உயிருண்டாம் பாரு. (1317)

ஆமென்ற உயிர்தான் தோன்ரு விட்டால்
அப்பனே சிசுவப்பா கர்ப்பத்தில் தானே
தாமேதான் மரித்ததென் றெண்ணிக் கொள்வாய்
தப்பிதமாய் தெய்வத்தின் செயலி னாலே
ஓமேதான் போச்சுதென் றெண்ணிக் கொண்டு
உற்றதுணை பராபரத்தை நினைத்து மெல்ல
நாமேதான் செய்வ தொன்று மில்லை
நன்மையுள்ள இன்னமொரு குறியைக் கேளே. (1318)

குறியான பிரசவ காலந் தாமதித்து
கொப்பனவே சிசுவதுதான் செனித்த போது
தெறிக்கின்ற கொடியிற்றான் நாடி யப்பா
தீவிரமாய் நடக்காமல் மாந்து போகும்
மரிக்கின்ற தேகந்தான் வாட்ட மாக
மற்றுமுள்ள சிரசுதான் பேதந் தோன்று
விரிக்கின்ற சுவாசத்தின் கொடியைத் தானும்
விளம்பமா யாகும்வரை கொடியைத் தானே. (1319)

கொடியைத்தான் சேதிக்க லாகா தப்பா
கொப்பனவே கொடியில் ரத்தவோட்டந் தானும்
கடிதாகச் சென்றிடவே சிசுவை வைத்து
கம்பளித் துணியிலே சூடு தேய்த்து
முடிவான சுவாசத்தின் தடையை நீக்கி
முக்கியமாய்ச் சிசுவுக்குப் பிராணன் தானும்
அடியோடே வந்தபின்பு கொடியைக் கட்டி
அப்பனே துண்டித்து விட்டி டாயே. (1320)

விட்டபிரசவ காலந் தான் தாமதித்து
விதமான சிரசப்பா நெருக்கிக் கொண்டு
குட்டசிசு செனித்தாக்கால் கொடியில் நாடி
குபீரென்று க்ஷீணித்துப் போகும் பாரு
சட்டமுள்ள சரீரந்தான் நீலம்போலே யாகும்
சதுரான முகஞ்சிவந்து தலைதா னப்பா
பொட்டியாய்க் குறிப்பாய் இருக்குஞ் சொன்னேன்
புனிதமாய் அதற்குவகை புகலக் கேளே. (1321)

கேளடா கொடியைத்தான் துண்டித்துக் கொஞ்சம்
கெடிதான ரத்தத்தை வெளிப்படவே செய்வாய்
நாளடா சிசுவப்பா சுவாசந் தன்னை
நலமாக விட்டிடவே ரத்தம்நிற்கும் போது
வாளடா கொடியைத்தான் கட்டி வைப்பாய்
வளமான சுவாசந்தான் பிறக்கா விட்டால்
கேளடா குளிர்ந்தஜலம் சிசுவின் மேலே
தெளித்துமே வெந்நீரில் துவைப்பாய் நீயே. (1322)

துவைத்துமே உஷ்ணந்தான் பிறக்கச் செய்து
தோலான சரீரத்தை கம்பளியால் தேய்த்து
சுவைத்தசிசு தனக்கு இப்படியே செய்து
சுகுணந்தான் தோன்ருமல் போகு மாகில்
கவைத்தசிசு இறந்ததென்று தெரிந்து கொள்ளு
காணுத நெருக்கந்தா னதிகப் பட்டு
சிவத்தினிட அருளாலே வந்த சிசுவின்
சிரம்வீக்கங் காண்பதுவு முண்டு பாரே. (1323)

பாரடா அப்போது ரத்தத்தின்நீரே யேனும்
பண்பான ரத்தமடா சருமத்துக் கடியில்
சீராகச் சேர்ந்துமே அந்த வீக்கம்
சிறப்பாகக் கண்டுமே கரைந்து போகும்
நேரான தொப்புள்க்கொடி தன்னி லப்பா
நிலையான ரத்தப்பெருக் குண்டாகு மாகில்
பேராத கொடிவிளாத முன்னுங் காணும்
பிறகும் ரத்தம் காணுமென்று பேசினேமே. (1324)

பேசினேம் பின்னிட்டுக் கண்டா லப்பா
பிரயாசைப் பட்டால்தான் ரத்தம் நிற்கும்
கூசியே அதுவாலே சிசுதா னப்பா
குபீரென்று இறந்துவிடும் குறியைச் சொன்னேன்
தேசிகனே இரத்தமடா முவ்வாறுநாளுக் குள்ளே
தெளிவாகக் காணுமடா தெளிந்து பாரு
வாசிகமாய்ச் சிலசிசு தனக்கு அப்பா
வளமாக இத்துடனே செவ்வாப்புக் காணுந்தானே. (1325)

## செவ்வாப்பு.

தானுன செவ்வாப்புக் கண்ட தாலுல்
தப்பாது சிசுவப்பா சொன்னேன் பாரு
ஊனுன கருப்பைதான் சுருங்காமலத் தான்
உள்ளபடி யிருந்தாக்கால் ரத்த மப்பா
தேனுன பெருக்குக்கு இடமே யாகும்
தெளிவான தேகந்தான் கெட்டுப் போகும்
மானுன ஆயாசம் மிகவுண் டாகும்
மக்களுக்கு அதுதீர பண்டிதம்தான் செய்யே (1326)

பண்டிதந்தான் செய்வதற்கு வகையைக் கேளாய்
பாங்காக சாத்திரத்தின் விவரந் தன்னை
அண்டியே பெரியோர்பால் அறிந்து கொண்டு
அப்பனே அதன்வழியாய் நடந்த பின்பு
கண்டிதமாய் கருவெந்தப் பாகத் தாலே
கணக்காக எடுத்ததென்று கண்டு கொள்வாய்
முண்டிவரும் நோய்தனின் குணங்கள் தன்னை
முக்கியமாய் முன்பு அறிவாய் நீயே. (1327)

அறிந்தபின்பது உடலிற் செய்யுங் கூறை
அப்பனே தெரிந்துகொண்டு தேகந் தன்னில்
செறிந்ததொரு பாகத்தி லெந்தக் கூறிற்
றெளிவாகக் கெட்டுப்போ யிருக்கு தென்று
சரிந்தஉடல் தனக்குள்ளே அந்த நோய்க்குச்
சரியான ஆதாரந் தெரிந்து கொள்வாய்
விரிந்ததுடல் தனக்குள்ளே இருந்து வாழும்
விதமான நோய்க்கு விவரங் கேளே. (1328)

கேளடா நோய்கள்தா னனேகவித முண்டு
கெணிதமுடன் அத்தனையும் உனக்குத் தோன்ற
நாளடா அதற்குவகை சொல்லக் கேளு
நலமான சாத்திரந்தான் குருவே யாகும்
வாளடா சாத்திரத்தால் நோயின் பேரை
வளமாகத் தான்கண்டு மருந்து செய்வாய்
தேளடா நோய்க்கும் மருந்துக்கு முள்ள
தெளிவான தொந்தத்தை கண்டு கொள்ளே. (1329)

கண்டுகொண்டு கொடுக்கின்ற மருந்தோ வப்பா
கனமான தேகத்திற் சென்ற பின்பு
பண்டிதனே அதுசெய்யும் குணத்தை முன்பு
பக்குவமாய் அறிந்தபின்பு மருந்து ஈவாய்
முண்டிஒன்றும் செய்யாதே கோபத் தாலே
முக்கியமாய் மருந்தப்பா கெடுத்துப் போடும்
தொண்டனைப்போல் சாந்தமாய் ஈய்ந்து வந்தால்
தொலைந்துவிடும் சர்வநோய் எல்லாந் தானே (1330)

தானாக குருமுடித்து மருந்து தன்னை
தக்கநோய் தனக்கல்லோ கொடுக்க வேணும்
ஊனாக அனேக நோய்களுக்குக் கேளு
உள்ள தழைவேர் சரக்குபூண்டால் தீரும்
தேனாக லேகியங்கள் சூரணங்கள் பிட்டு தன்னால்
தெளிவான ரசாயனங்கள் பிட்டு தன்னால்
மானாக அனேகநோய் தீரு மென்று
மகிபனே சாத்திரத்தில் வகுத்திட் டானே. (1331)

வகுத்திட்ட பிரசவஸ்திரீ தனக்கு அப்பா
வளமான பிரசவந்தான் வருத்த மின்றி
தரித்திட்ட கர்ப்பந்தான் தோன்று மாகில்
தாரணியில் அவளுக்கு வருத்த தொன்றும்
சரித்திட்ட கர்ப்பந்தான் வந்த பின்பு
சதுராகப் பெண்ணைத்தான் நித்திரைசெய்யச் செய்வாய்
குறித்திட்ட பிரசவப்பெண் நாள்மூன் றப்பா
குணமாக எழுந்திரிச்சு குக்கொ ணாதே. (1332)

குக்கினக்கால் கருப்பைதான் கீழுக்கே தோன்றும்
குணமான மூவைந்து நாளே சென்றால்
பக்கிபோல் நடந்துமே உலாத்த லாகும்
பிரசவந்தான் கடினமாகில் நாடிஒடுங்கிப் போகும்
பொக்கனவே ஆயாசங் களைப்புத் தோன்றும்
பொல்லாத மேல்மூச்சு உண்டாம் பாரு
தக்கமுகம் ஏக்கங்கொண் டிருக்குஞ் சொன்னேன்
தாரணியில் அக்குணத்தை உடனே நீக்கே. (1333)

நீக்கிடவே மருந்துகள்தான் செய்த பின்பும்
நீங்காமல் அப்படியே யிருக்கு மாகில்
போக்கியமாய் அசாத்தியமாய்ப் போகுஞ் சொன்னேன்
பொல்லாத அபினிதந்து நித்திரை யுண்டாகி
தூக்கிநிற்கும் நாடிதான் தணிந்து போகும்
தோகையரின் மேல்மூச்சை சமனஞ் செய்யும்
பாக்கியமுள்ள கஸ்தூரி ஈய்ந்து நீதான்
பாலனுக்கு முலைகளைத்தான் கொடுக்காமல் செய்யே. (1334)

செய்கின்ற பிரசவமப்பா ஆனபின் பப்பா
செயலான நாடிநடை தணியும் பாரு
உய்யவே சிலநேரம் சென்ற பின்பு
உள்ளதொரு நாடிதான் துடித்தே யோடும்
பையவே மறுபடியுந் தணிந்து போகும்
பால்சுரக்கும் போதப்பா தீவிரமாய்ப் போகும்
ஐயமின்றி சகலமுந்தான் அனுகூல மாஞல்
அப்பனே நாடிநடை சுபாவ மாமே. (1335)

ஆமென்ற சுவாசந்தான் நாடிநடையைத் தானே
அப்பனே ஒத்திருக்கும் அருமை பாரு
ஓமென்ற ஸ்திரீகளைக் கண்ட போது
உத்தமனே நாடி வேகம் போகில்
தாமென்ற ரத்தத்தின் பெருக் குண்டாக
சரியான குறி யாகுஞ் சொன்வேன்
நாமென்ற மருத்துவன் அப்போ தப்பா
நல்மான சிகித்சைகள்தான் செய்வான் பாரே.(1336)

பாரடா சிசுவப்பா வெளிவந்த பின்பு
பாங்கான கருப்பைதான் உறுகி யாக
சீராகச் சுருங்கியே குழந்தை தன்னின்
சிரசுக்கு ஒப்பாக இருக்கும் பாரு
நேரான கருப்பைதான் செம்மை யாக
நிச்சயமாய்ச் சுருங்காட்டால் ரத்தப் போக்கு
கூருகத் தோன்றிடுமே சொன்னேன் கண்டாய்
குடிகெடுத்த நஞ்சப்பா வெளித் தோன்ருதே. (1337)

தோன்ருமல் பிறகப்பா கருப்பா சயந்தான்
தொல்லுலகில் தினந்தோறும் சிறுத்துக் காட்டும்
ஊன்ருத எட்டுபத்து நாளில் தானே
உள்ள இடைக்குழிதனிலே இறங்கிக் கொஞ்சம்
தான்றியே கைக்குத்தான் தட்டும் பாரு
தனியாகப் பின்னுமொரு வாரஞ் சென்ருல்
ஊன்றியே இடைக்குழியில் பூர்த்தி யாக
உள்ளபடி இறங்கிக்கைக்குத் தோன்ரு தன்றே. (1338)

அன்றான யோனியுட துவார மப்பா
அறைகிறேன் சீக்கிரத்தில் சுருங்கிப் போகும்
குன்றாத வயிற்றினுட சர்ம மெல்லாம்
குணமாக மெதுவில்தான் சுருங்கிக் காணும்
தோன்றாத இடுப்பினுட துணியை நீதான்
துப்புரவே பிகுவாக இழுத்துக் கட்டில்
சான்றாமல் அவைகள்மெத்த துவண்டு போகா
சரியாக மூன்றுமாதம் சென்றால் தானே. (1339)

தானான வயிறுமேல் நீண்ட வெள்ளை
தனிவரிகள் காணுமடா கண்டு சொன்னேன்
மானான பெண்ணப்பா பிள்ளை பெற்ற
மகத்தான குறிப்பப்பா கண்டு கொள்ளு
தேனான மலடிக்கு இக்குறிதா னப்பா
தெளிவாக இராது தேகந் தன்னில்
ஊனான பிரசவித்த பின்பு கேளு
உண்டாகும் வாந்திக்குக் காரணங் கேளு. (1340)

கேளடா கருப்பையி லுண்டா கின்ற
கடிதான அழுக்குகள்தான் வெளியே தோன்றி
நாளடா உண்டாகும் வேத னைக்கு
நலமான பிரசவவாந்தி என்று பேராம்
வாளடா முதற்பிள்ளை பெற்ற வளுக்கு
வளமாக வாந்திமெத்த இருக்கா தப்பா
தேளடா இந்தநோய் செம்மை யாக
தெளிவாக எடுத்தாக்கால் நல்ல தாமே. (1341)

நல்லதப்பா அப்போது கருப்பை தானும்
நலமாக செம்மையாய் சுருங்கும் பாரு
தொல்லையுள்ள ரத்தந்தான் அதிக மாக
தோன்றாமல் கருப்பையின் அழுக்குத் தானும்
சல்லியமின்றி தாராள மாகத் தோன்றும்
சதிரான குழந்தை முலைகுடிக்கும் போது
வல்வினையாய் இந்த வேதனையே காட்டும்
வளமாக அழுக்கினுட விவரங் கேளே. (1342)

கேளடா அழுக்கினுட விவரந் தன்னை
கெணிதமுடன் சொல்லுகிறேன் நன்ருய்க் கேளு
நாளடா பிரசவித்த பிறகு அப்பா
நலமான கருப்பைய் லிருந்து யோனி
வாளடா மார்க்கமாய்த் தோன்று கின்ற
வளமான ரத்தவோட்டந் தனக்கு அப்பா
தேளடா அழுக்கென்று சொல்வார் மேலோர்
தெளிவாகச் சிலநாட்கள் ஆனல் பாரே. (1343)

சிலநாட்கள் ஆனுக்கால் அழுக்கு அப்பா
சீராக நிறம்மாறி சலரூப மாகும்
பலமான மூனுநாலு அஞ்சுநாள் தன்னில்
பாங்கான ரத்தந்தான் சிவந்து காட்டும்
வலமாக அழுக்குத்தான் உறைந்து போகும்
வல்லமைதா னில்லையடா வளமை பாரு
தலமான நிறமப்பா பிறகு பாரு
பச்சைகண்டுமே மஞ்சளாய்த் திரும்பும் பாரே (1344)

திரும்பியே இவ்விதமாய் மாறிப் போகும்
தீராத முடிவில்தான் சலம் போலாகும்
பருந்தியே அழுக்கு வாசனையே யுண்டு
பண்பான அழுக்கப்பா தேகம் மேலே
அருந்தியே மூனுநாலு வாரந் தன்னில்
அதிகமாய் காணுமடா சிலபேருக்குத் தான்
குருந்தியே சிலருக்குக் குறையுஞ் சொன்னேன்
கொப்பனவே கருப்பையின் கூபந் தானே. (1345)

தானன அழுக்கப்பா அகா லத்தில்
தான்நின்று விட்டாக்கால் சொல்லக் கேளு
ஊனன பெண்ணுக்கு துர்க்குணமே காணும்
உள்ளபடி சன்னிமுதல் யாவுந் தோன்றும்
தேனன இடுப்புவலி பிடரி பாரம்
தெளிவான தாளஞ்சிறுத்தல் எல்லாந் தோன்றும்
மானன அழுக்கையப்போ வெளியேபோக்கி விட்டால்
மைந்தனே ஒருநோயுங் காணு தன்றே. (1346)

காணாத அழுக்கைத்தான் வெளியே போக்கு
கடிதான மருந்தொன்று சொல்லக் கேளு
தோணாத இஞ்சியுடன் அரத்தை இரண்டும்
சுகமான சுரசமே வாங்கிக் கொண்டு
பேணியே கஸ்தூரி மாத்திரை தன்னை
பிலமாக உரைத்துமே தந்தா யானல்
தோணுன அழுக்கெல்லாந் தோணுஞ் சொன்னேன்
தோகையர்க்கு சன்னிமுதல் யாவும் போமே. (1347)

போகின்ற மலமூத்திர விவரங் கேளு
பொங்கமுள்ள பிரசவவேதனை தன்னி லப்பா
தாகின்ற வேதனையில் காணு கின்ற
தனித்ததொரு வியர்வைதான் பிரசவித்த பின்பு
போகிவிடும் வியர்வைதான் அப்பா பின்பு
பொலிவான தேகந்தான் சுபாவ மாகும்
வேகின்ற மூத்திரந்தான் சிலருக் கப்பா
விதமாக முன்போலே இறங்கும் பாரே. (1348)

பாரடா சிலருக்கு அதிக மாக
பாங்கான கஷ்டப்பிரசவந் தன்னி லப்பா
சீரடா நீரடைப்புக் காணுஞ் சொன்னேன்
சிறப்பான மலமப்போ வித்தியாச மாகும்
நேரடா சிலருக்கு எப்போதும்போலே யாகும்
நெறியாகச் சிலருக்கு மலபந்தங் காணும்
வாரடா சிலருக்கு இளகிப் போகும்
வண்மையுள்ள பால்சுரக்கும் விதத்தைக் கேளே (1349)

கேளடா கர்ப்பிணிக்கு சீம்பா லப்பா
கெணிதமுடன் சுரக்குமப்பா வழக்க மாக
நாளடா சிலருக்கு கர்ப்பவேதனையில் தானே
நலமான பால்சுரக்கும் நன்மை யாக
வாளடா சிசுசனித்த உடனே யப்பா
வண்மையுடன் பால்கொடுக்கும் ஸ்திதியே தோன்றும்
தேளடா ஒருநாள்தான் சென்ற பின்பு
தெளிவான ஸ்தனங்கள்தான் பெருக்கும் பாரே (1350)

தானான வேதனையும் வலிப்பு முண்டாகி
தனியான மூன்றுநாள் வரையி லப்பா
ஊனான வேதனைதான் இருக்குஞ் சொன்னேன்
உள்ளபடி அற்பசுரம் காணும் பாரு
தேனான பால்சுரக்க ஆரம் பிக்கும்
தெளிவான முதல்சுரக்கும் பாலுக் கப்பா
தானாக பேதியாகுந் தன்மை யுண்டு
தண்மையுடன்சிலருக்கு பால்சுரப்பு இல்லை பாரே. (1351)

பாரடா பிரசவித்த பெண்களுக் கப்பா
பண்பாக நாடியைத்தான் அடிக்கடியே தான்
சீராகப் பார்த்துவந்தால் பின்னல் தோன்றும்
சிறப்பான அபாயங்கள் தெரிந்து போகும்
கூருக ஸ்திரீயைத்தான் மல்லாக் கப்பா
கொப்பனவே படுக்கவைத்தால் சுகமே யுண்டு
நேரான கருப்பைதான் கீழுக்கே தோன்றி
நிலையான அடிதான் காணு தன்றே. (1352)

அன்றான பெண்களைத்தான் உட்கார வைத்தால்
அப்பனே கருப்பைதான் கீழுக்கே தோன்றும்
நன்றான இரத்தத்தின் பெருக் குண்டாகும்
நலமான சிலவேளை மரணங் காணும்
பன்றான பிரசவத்தின் வாந்திக் கப்பா
பரிவான அபினிதந்தால் தீர்ந்து போகும்
குன்றாத வெந்நீரை ஒத்திட் டாலும்
குணமாகு மென்றுநீ சொல்வாய் தானே. (1353)

தானான மலக் கிரமத்தை நித்தம்
நீதான் விசாரித்து வருவா யப்பா
ஊனான மலந்தான் ஒருநா ளப்பா
உள்ளபடி தோன்றாமல் இருந்தால் சும்மா
மானாக விட்டுவிடலா மப்பா கேளு
மைந்தனே மறுநாள்தான் மலந்தோன்று விட்டால்
தேனான ஆவாரையிலைக் கியாழம் தந்து
தெளிவான மலத்தைத்தான் போக்கு வாயே. (1354)

போகின்ற சிசுவுக்கு முலைப்பா லப்பா
　　பொங்கமுடன் கொடுக்கா தவர்க்குக் கேளு
தாக்கான உப்பைத்தான் பேதிக்குத் தந்தால்
　　தருவான மலக்கட்டு உடையுஞ் சொன்னேன்
நீக்கான முலைவிம்மல் நீங்கிப் போகும்
　　நிச்சயமாய் தனம்வீங்கி நோவே கண்டால்
பாங்கான எண்ணெயைத்தான் சுடவைத்துத் தேய்த்து
　　பாங்கான வெந்நீர்ஒத்தப் போகும் பாரே. (1355)

பாரடா பிள்ளைபெற்றுப் பத்து நாளும்
　　பாவையர்க்கு தேகந்தான் சுகமே யாக
சீரடா இருந்தாக்கால் சொல்லக் கேளு
　　சிறப்பாகப் பதினொன்றும் நாளில் தானே
நேராக எண்ணெயிட்டு சலத்தை வாரு
　　நிச்சயமாய் பத்தியங்கள் வழக்கம் போலே
சீராகக் கொடுத்துவரச் சொல்வா யப்பா
　　சீர்கெட்ட கஷ்டப்பிரசவஞ் சொல்லக் கேளு. (1356)

## கஷ்டப் பிரசவம்.

கேளடா கஷ்டப்பிரசவந் தன்னி லப்பா
　　கெடியான புத்திதனை கூர்மை யாக
வாளடா வைத்திருந்து நிதான மாக
　　வன்மையுள்ள சாத்திரத்தை மனதில் கூர்ந்து
தேளடா நுட்பமுடன் வேலை எல்லாந்
　　தெளிவாக பெண்ணுக்கு சுருக்க மின்றி
நாளடா செய்துவந்தால் நன்மை யுண்டு
　　நலங்கெட்ட கிழவி பேச்சைத் தள்ளுவாயே. (1357)

தள்ளிவிட்டால் உன்னைவீட்டார் நம்ப மாட்டார்
　　தனித்துநீ அவர்களுக்கு நோயின் தன்மை
மெள்ளவே சொல்லிவைத்து நம்பச் செய்வாய்
　　மெலிவான தேகக்குறி பிரசவத் தன்மை
கொள்ளவே கொண்டிருக்குங் கூறை எல்லாம்
　　குணமாகத் தெரிந்துகொண்டு பின்னால் கேளு
உள்ளத்தை திடமாக வைத்துக் கொண்டு
　　ஒப்புரவாய் வேலைகளைச் செய்வாய் நீயே. (1358)

செய்கின்ற சிசுவினுட சிரந்தா னப்பா
திரமாகத் தோன்றியே பிரசவந் தீர
நையவே ஒருநாளுக்கு மேலே சென்ருல்
நலமாக அதுதான் கஷ்டப்பிரசவமே யாகும்
பையவே அதிலிரண்டு சாதி யுண்டு
பாங்கான முதல்சாதி சொல்லக் கேளு
தொய்யவே பிரசவ காலந் தாமதித்து
தொகுப்பாக மாதாவுக்குச் சொல்லக் கேளே. (1359)

கேளடா தாய்க்குஞ் சிசுவுக்கு மப்பா
கடினமா யுபத்திரவங்க ளில்லாமல் தான்
நாளடா ஆகின்ற பிரசவமொன் ருகும்
நன்மையற்ற மற்ருென்று சொல்லக் கேளு
வாளடா ஆயுதப் பிரயோகஞ் செய்து
வளமான சிசுவைத்தான் கொல்லாம லேனும்
தேளடா சேதித்து நீக்கு கின்ற
தெளிவான பிரசவந்தா னிரண்டு மாச்சே. (1360)

ஆச்சடா இதற்குத்தான் காரணத்தைக் கேளு
அப்பனே கருப்பைதான் துர்ப்பலமே யாகி
காச்சடா சுருங்கியே போவ தாலும்
கனமான கருப்பையின் வாய்தா னப்பா
கூச்சடா விரியாம லிருப்ப தாலும்
கொத்தவனே பனிநீர்தா னதிக மாக
பாச்சியே இருக்கின்ற காரணத்தி ஞலும்
பண்பான பனிக்குடலின் சவ்வு கேளே. (1361)

பனிக்குடல் சவ்வப்பா உறுதி யாக
பதிவாக இருப்பதிஞல் கருத்தான் தேன்ற
பனிக்குடம் தோன்ருமல் போவ தாலும்
பண்பான பனிநீர் பக்குவத்துக்கு முன்னே
சனித்துமே வெளிவந்து விடுவ தாலும்
செயலான கருப்பையின் சாய்த லாலும்
தனித்துவரும் சன்னிநோய் மஞே பீடை
சதியான யிக்குணங்களால் சிசுபிறக்க நேரமாமே. (1362)

ஆமடா இன்னம்வெகு காரணந்தா னுண்டு
அப்பனே அதன்விபரம் சொல்லக் கேளு
நாமடா அதில்சிலது சிசுவைப் பற்றி
நடக்குமென்று மேலோர்கள் சொன்னார் பாரு
ஓமென்ற தாயினுட இடைக்குழியைப் பற்றி
உள்ளபடி தோணுகிற நோய்தா னுண்டு
தாமடா அதுவிவரம் எல்லா மிப்போ
சாற்றுவேன் உந்தனுக்கு சாற்றுவேன் தானே. (1363)

சாற்றுவேன் சிசுவினுட கிரமந்தா னப்பா
சதிராகப் பிரண்டிருக்கும் விதந்தான் ஒன்று
போற்றியே முகவுதய விதந்தான் ஒன்று
பொல்லாத சிரசப்பா கிரமத்துக்கு மிஞ்சி
தூற்றியே பெரிதாக இருப்ப தொன்று
துப்பசிரசின் எலும்புகள் தான் உறுதியாக
ஆற்றியே இருக்கின்ற விதந்தான் ஒன்று
அப்பனே ஆண்குழந்தை யின்னங் கேளே. (1364)

கேளடா ஜலமஸ்தகம் மஹோதரத் தோடு
கெடிதான வாய்வுசேர்ந்து வயிறுவிம்மிப் போதல்
நாளடா நாபிக்கொடி குழந்தை தன்னை
நலமாகச் சுற்றிக்கொண் டிருப்ப தாலும்
வாளடா கருவானச்சிசு இவைக ளாலே
வன்மையுள்ள கஷ்டப்பிரசவம் தோன்றுஞ் சொன்னேன்
பாளடா அதில்தாயின் இடைக்குழியைப் பற்றி
பண்பாக உண்டாகும் நோயைக் கேளே. (1365)

நோயான தாயினுட இடைக்குழிதா னப்பா
நுட்பமாய் குறுகியே இருப்ப தாலும்
வாயான அதுகுரூபம் அடைவ தாலும்
வன்மையுள்ள மூத்திரப்பை தன்னில் கேளு
மாயாத நீர்சேர்ந்து இடைக்குழியைத் தானே
மகிபனே அடைத்துக்கொண் டிருப்ப தாலும்
தாயான எலும்புகள்தான் முரடு கட்டி
தன்மையுடன் அசையாமல் இருப்பதால் பாரே. (1366)

பாரடா பக்கத்தில் இருந்து வாழும்
    பண்பான சதைகள் பிருவே யாகி
சீராக இருப்பதால் சிசுதா னப்பா
    சீக்கிரத்தில் தோன்ருமல் வருத்தம் தோன்றும்
நேரான சிசுவினுட சிரந்தா னப்பா
    நிச்சயமாய் பிரண்டுஇருந்தால் பிரசவந் தானும்
பேரான கஷ்ட முண்டாம் பாரு
    பிலமாக அதற்குவகை சொல்லக் கேளே. (1367)

சொல்லுகிறேன் உருக்கூசி என்னுங் கோலே
    சுகமாக உள்ளுக்கு விட்டுப் பின்பு
மல்லுகிறேன் சிரசைத்தான் கிரமஸ்திதியில் தானே
    மகிபனே வைத்தாக்கால் சிசுவே தோன்றும்
தொல்லுலகில் அப்படியுந் தோன்ரு விட்டால்
    துய்யகுறடு தனைவிட்டு சிரசைத் தானும்
வல்வினையா யிடிக்கியே வெளியில் தானும்
    வன்பாக இழுத்துவிட்டால் வருத்தம் போமே (1368)

வருத்தமுள்ள இந்தவிதம் செய்வ தற்கு
    வளமான ஆயுதத்தின் நேர்மை முற்றும்
திருத்தியே கருவிநூல் இருநூற்றில் தான்
    திறமாகச் செய்கின்ற விதங்கள் முற்றும்
உறுத்தியே சொல்லிவிட்டேன் செய்யும் நேர்மை
    உள்ளபடி அப்படியே செய்து கொண்டு
கருத்தாகச் செய்தாக்கால் அபாயந் தோன்ரு
    கனகமாம் புண்ணியங்கள் கைக்குள் ளாமே. (1369)

கைக்குள்ளே அடங்காத முகந்தா னப்பா
    கடிதாக உதயங்க ளான பின்பு
பைக்குள்ள சிசுதான் தங்கா தப்பா
    பழியாக அதுவரவே தடங்க லுற்ருல்
மைக்குறட்டை உள்ளேதான் பிரயோ கித்து
    மகத்தான சிரசைத்தான் பிடித்துக் கொண்டு
தைக்கவே அசையாமல் இழுத்து விட்டால்
    தாரணியில் சிரசுதான் வருகும் பாரே. (1370)

பாரடா இன்னமொரு விதங்கான் கேளு
பண்பான சிரசுதான் கிரமத்துக்கு மீறி
நேரடா காத்திரத்தில் பெரிதாய்த் தோன்றி
நிச்சயமாய் எலும்புதான் கனமே கொண்டால்
கூறடா இடைக்குழியில் கருத்தா னப்பா
கொப்பனவே இறங்கிட வருத்தம் பாரு
சீரடா இக்குறியால் சிரசுதா னப்பா
சீக்கிரமாய்த் தோன்றுது திறமை தானே. (1371)

தானான அவ்வேளை தன்னி லப்பா
தனிக்குறட்டை உள்ளுக்கு பிரயோ கித்து
ஊனான சிரசைத்தான் பிடித்துக் கொண்டு
உள்ளபடி வெளிப்படுத்தி விடுவா யப்பா
தேனான சிரசில்தான் நீரே சேர்ந்து
தெளிவான சிசுவினுட தலைதா னப்பா
மானான காத்திரத்தில் பெருத்துப் போகில்
மைந்தனே பிரசவகாலம் நீடிக்கும் பாரே. (1372)

நீடித்தா லிதிற்தாயுக்கு அபாயந் தோன்றும்
நிச்சயமா யிதற்குவகை சொல்லக் கேளு
கோடித்த சிரசைத்தான் துளைத்து நீரை
கொப்பனவே வடித்துவிட்டுக் குழந்தை தன்னை
வேடிக்கை யாகவே வெளியி லப்பா
விதமாக இழுத்துவிட்டால் தாயுக்குத் தானும்
சாடித்த துர்க்குணங்கள் எல்லாம் போய்
சரீரத்தில் சுகுணங்கள்தான் பிறக்கும் பாரே. (1373)

## இடைக்குழி.

பாரடா பெண்களுக்கு இடைக்குழிதா னப்பா
பண்பாக குறுகியே இருப்ப தாலும்
கூறடா இடைக்குழிதான் குறும பாகங்
கொண்டிருக்குங் காரணத்தால் குழவி தன்னின்
நேரான சிசுதான் இடைக்குழியில் தானாக
நின்றிறங்கி வருவதற்குக் கஷ்ட மாகும்
பேரான அதைஆராய விவரங் கேளு
பிலமான யோனிக்குள் விரலைத் தானே. (1374)

யோனிக்குள் விரலைத்தான் பிரவே சித்து
யூகமாய் விகல்பத்தைக் கண்டு கொள்வாய்
மேனிக்கும் சிசுவினுட சிரந்தா னப்பா
மேலாகத் தடைபட் டிருப்ப துண்டு
கானித்துப் பிகுவாயிறுக்கிக் கொள்வ துண்டு
கனமாக இந்த வித்தியாசந் தன்னை
மாநிலத்தில் வைத்தியந்தான் தெரிந்து கொண்டு
மற்றபடி செய்யும்வகை செய்வான் காணே. (1375)

காணடா சிசுவினுட சிரந்தா னப்பா
கனமாக இடைக்குழியில் தடையே பட்டால்
பூணவே விரலைவிட்டுத் தள்ளி னுக்கால்
பொங்கமுடன் மேலுக்குப் போகும் பாரு
ஆணவே சிரசுக்கும் இடைக்குழிக்கு மப்பா
அப்பனே மத்தியில்தா னிருக்கும் சந்தில்
தோணவே விரல்கள்தான் போகுஞ் சொன்னேன்
தொப்பனவே இன்னமொரு விவரங் கேளே. (1376)

கேளடா சிரசுதான் பிகுவா யப்பா
கடிதாக இறுகிக்கொண் டிருக்கு மாகில்
நாளடா சிரசைத்தான் உள்ளே தள்ளி
நன்மையுள்ள பிரயாச மாகுஞ் சொன்னேன்
வாளடா அப்போது உள்ளின் தன்மை
வளமாக விரல்நுழைய சந்து தோன்று
தேளடா அப்போது தாய்க்கே தான்
தெளிவான கஷ்டங்கள் உண்டாம் பாரே. (1377)

பாரடா அப்போது சொல்லக் கேளு
பாலனுட மிருதுவான உறுப்பு முற்றும்
சீராக நசுங்கியே தாபிதங்கள் கொண்டு
செயலற்று அழுகியே போகுஞ் சொன்னேன்
கூறுன சிசுவினுட சிரந்தானப்பா குறிப்பாக
பெருத்துமே இடைக்குழி சிறுத்துக் கேளு
நேராக இரண்டுக்கும் வித்தியாசந் தோன்றில்
நிச்சயமாய் மருந்தொன்றும் கொடுத் திடாதே.(1378)

கொடுத்திட்டால் தாய்க்கு அபாயங் காணும்
குணமாக சிரசுதா னிறங்கு மாகில்
அடுத்திட்ட பிரசவந்தான் ஆகுஞ் சொன்னேன்
அப்பனே சிரம்பிகுவாய் இறுகிக் கொண்டு
படுத்திட்ட தாய்க்கு துர்க்குணங்க ளப்பா
பண்பாகக் காணும்படி இருந்த தென்றால்
சடுத்தமுடன் ஆயுதப் பிரயோகம் செய்து
சதியான சிசுவைநீ வெளியே தள்ளு. (1379)

தள்ளிவிடு குழந்தையைத்தான் உயிரோ டப்பா
தான்கருவி லாடிக்கொண் டிருக்கு மாகில்
மெள்ளவே குறடுவிட இடமே தோன்றில்
மெதுவாக சிசுவைத்தான் வெளியே தள்ளு
உள்ளிலே குறடுவிட இடமில் லாமல்
உத்தமனே நெருக்கமுற் றிருக்கும் போது
பள்ளவே பலவந்த மாகநீ தான்
பாங்கான குறட்டைவிட்டால் சொல்லக் கேளே. (1380)

சொல்லுகிறேன் அப்போது மிருது வான
சுகமான உறுப்புகள்தான் கிழிந்து போகும்
மல்லுகின்ற சிரசுதான் வெளியே தோன்ற
மகத்தான அசாத்தியங்கள் காணும் போது
வல்வினையாய் சிசுவப்போ இறந் திருந்தால்
வளமான சிரசைத்தான் துளைத்து மூளை
தொல்லுலகில் நீக்கியே சிரசை சிறியதாக்கி
சுகமான சிசுவைநீ இழுத்துப் போடே. (1381)

போட்ட இடைக்குழிக்கடியில் சிரசு தானும்
பொங்கமுடன் இறங்கிக்கொண் டிருக்கு மாகில்
நாட்டமுள்ள உதடுசிக் குறட்டா லப்பா
நலமாக வெளியேதா னிழுத்துத் தள்ளு
வாட்டமுள்ள புசத்தின் எலும்பு தானும்
வளமான திரிகஸ்தான எலும்பி னோடு
தாட்டிகமாய் அசையாமல் கூடிக் கொண்டு
தன்மையுடன் முரடுகட்டி இருந்தால் தானே. (1382)

தானன சிரசிறங்கத் தடையே யாகும்
    தக்கபடி உபாயந்தான் சொல்லக் கேளு
ஊனன அவ்வெலும்பை ஒழித்துப் போட்டால்
    உத்தமனே சிசுதான் இறங்கும் பாரு
தேனன ஆயுதப்பிரயோகஞ் செய்த பின்பு
    தெளிவான யோனிக்கு இரண்டு வேளை
மானன வெந்நீர் ஒத்தணமே செய்து
    மகிபனே வெந்நீரை அடித்தால் போமே. (1383)

## பிரசவ வேலைகள்.

அடித்ததொரு பிரசவ கிருத்தியந்தா னப்பா
    அப்பனே மூன்றுவிதம் உண்டு சொன்னேன்
படித்துஒன்று சொல்லுகிறேன் நன்றாய்க் கேளு
    பாங்கான தாய்க்கும் சிசுவுக்குந் தான்
குடித்தனமாய் அபாயங்கள் நேராமல் தான்
    கொண்டுசெய்யுங் கிருத்தியத்தைச் சொல்லக் கேளு
குடித்தபிள்ளை தன்னையடா அகாலந் தன்னில்
    ஜெனிக்கச் செய்வதுதான் ஒன்று கேளே. (1384)

ஒன்றான சிசுவைத்தான் திப்ப லோடு
    உத்தமனே உதககஞ்சி உபயோகந் தன்னை
நன்றான குறட்டுப் போக மொன்றும்
    நலமாக இதுமூன்றும் ஒன்றே யாகும்
பன்றான இரண்டாம்விதம் சொல்லக் கேளு
    பாங்கான சிசுவைத்தான் கொன்று போட்டு
கன்றான தாய்க்கு அபாய மின்றி
    கபாலத்தைச் சேதிக்கும் விதந்தா விரண்டே. (1385)

விதமான மூன்றும்விதம் சொல்லக் கேளு
    விரிவான தாய்க்கும் சிசுவுக்குந் தான்
இதமான அபாயந்தா னுண்டு செய்யும்
    சிறப்பான விதத்தைத்தான் சொல்லக் கேளு
பதமான தாயினுட வயிற்றைக் கீறி
    மக்களைத்தான் எடுத்துவரும் விதந்தான் மூன்றும்
பதமான கிருத்தியங்கள் செய்வ தற்கு
    பண்டிதந்தான் யூகியாய் வேணும் பாரே. (1386)

## அகாலப் பிரசவம்.

பாரடா இடைக்குழிதான் பெண் களுக்கு
பண்பாக மெத்தவுந்தான் சிறுத்துத் தோன்றில்
சீரடா பூரணகர்ப்பம் சிசுதா னப்பா
சிறப்பாக வெளிக்குத்தான் தோன்றி டாது
கூறடா அதற்குஒரு உபாயங் கேளு
கொற்றவனே ஏழுஎட்டு மாதந் தன்னில்
நேரடா சிசுவைத்தான் பிறக்க வைத்தால்
நிச்சயமாய் தாய்க்கு அபாயமில்லை தானே. (1387)

இல்லையடா சிசுவுந்தான் சீல னோடு
இதமாகப் பிறக்குமடா அழுது கொண்டு
தொல்லையென்று அக்காலந் தள்ளி யப்பா
தோகையரைக் கைவிட்டுவிட்டால் அபாயந் தோன்றும்
சல்லியங்கள் செய்துகொண்டு சிசுவைத் தானே
சரியாக கொல்லவேண்டி நேரும் பாரு
வல்வினையாய் இச்சைவைத்த பிரசவ மப்பா
வளமான சீலனுடன் இருக்குங் காணே. (1388)

காணடா பிரசவவேதனை தன்னை யப்பா
கடிதாக உண்டாக்கும் விதத்தைக் கேளு
பூணடா கருப்பையை அணைந் திருக்கும்
பொல்லாத பனிநீரை அடக்கிக் கொண்டு
பேணியே இருக்கின்ற சவ்வை யப்பா
பிரித்துமே விடுகின்ற விதந்தா னென்று
இனியாம் அச்சவ்வை கிழித்து நீரை
அப்பனே வெளிப்படுத்தும் விதந்தா னென்று. (1389)

ஒன்றான கருப்பையன் வாயி லப்பா
உத்தமனே பஞ்சைவைத்து விலாசஞ்செய்வ தொன்று
நன்றான வெந்நீரை கருப்பையின் வாயில்
நன்மையுடன் படும்படியாய் பீச்சாங் குழலினாலே
கன்றான குழாயினால் பீச்சுவதுதா, னென்றும்
கனமான மின்தாது பிரயோக மொன்றும்
நன்றாக இப்படியே நான்குநாள் செய்யில்
நலமாகப் பிரசவந்தான் ஆகுந் தானே. (1390)

தானான கருவைத்தான் வெளியே போக்க
தன்மையுடன் முன்சொன்ன வித மய்யா
மோனாளில் செய்துவந்தால் கருத்தா னப்பா
முக்கியமாய்ப் பிறந்துமே மோச மின்றி
வானாளுக்கு அறிவுவரும் சித்திர மூலம்
வளமான கள்ளிப்பால் முதலா யுள்ள
ஊனான பதார்த்தத்தை உள்ளுக் கீய்ந்தால்
உடனேதான் மோசம்வரும் உறுதி தானே. (1391)

## சிசுத் திரும்புதல்.

உறுதியுள்ள கருப்பையில் சிசுதா னப்பா
உள்ளபடி பிசகாகத்திரும்பி இருக்கு மாகில்
கருதியே வைத்தியர்தான் கையை விட்டு
கடினமாய்த் திருப்பியே செய்யா விட்டால்
பருதியாய்த் தாய்க்கும் சிசுவுக்கு மப்பா
பண்பான அபாயம் வந்து நேரும்
குருதியுடன் உதயம் பிரசவச் சன்னி
கொப்பனவே பெரும்பாடு இன்னுங் கேளே. (1392)

கேளடா தொப்புள்க் கொடிதா னப்பா
கெணிதமுடன் முன்னோக்கி வருங் காலம்
நாளடா இச்செய்கை வருகும் வேளை
நன்மையுள்ள சிசுவைத்தான் திருப்ப வேணும்
மாளடா அதையறிந்து செய்வாய் நீதான்
பனிக்குடம் உடையாமல் கருப்பையின் வாய்தான்
தேளடா தீர்ந்தாலும் திறக்கும்போ லிருந்தாலும்தான்
தெளிவான சிசுவைத்தான் திருப்பு வாயே. (1393)

திருப்புவாய் பனிக்குடந்தா னுடைவதற்கு முன்னே
திரமான சிசுவைத்தான் திருப்பு வாகில்
வருத்தமது இல்லாமல் திரும்புஞ் சொன்னேன்
வளமான பனிக்குடந்தான் உடைந்து போய்
செறுத்துமே நீரின்றி கருப்பையின் வாய்தான்
சிறிதாக பிகுவின்றி மெத்தவிரியாம லுந்தான்
திருத்தமுள்ள நோயப்பா ஒருவிதமாய்த் தோன்றில்
தீவிரமாய்ச் செய்கின்ற விதத்தைக் கேளே. (1394)

கேளடா கையைத்தான் குவித்துக் கொண்டு
கெடிதான யோனிக்குள் விட்டுப் பின்பு
நாளடா விரல்களால் கருப்பையின் வாயை
நன்மையுடன் மெதுவாக விலாசஞ் செய்து
வாளடா கருப்பைக்குள் கையை விட்டு
வளமான சிசுவைத்தான் திருப்பி வைப்பாய்
தேளடா இச்செய்கை செய்வ தற்கு
தெளிவான பொறுமையுடன் சாமர்த்தியஞ் செய்யே. (1395)

செய்கின்ற பனிக்குடந்தான் உடைந்து கொஞ்சம்
சீராக நேரந்தான் சென்ற பின்பு
உய்கின்ற சிசுவைத்தான் கருப்பை யப்பா
உள்ளபடி பிகுவாக அணைத்துக் கொண்டு
பையான கருப்பைதான் சுருங்கிப் போய்
பாங்கான இடைக் குழிக்குள் மெத்த
மையான மருமஸ்தானம் உலர்ந்து சூடாகி
மகிபனே பசும்புண்ணாய் இருக்கும்வேளை தானே. (1396)

வேளைதனில் வைத்தியர்தான் கையை யப்பா
விதமான கருப்பைக்குள் விட்டால் கேளு
முளையுள்ள கருப்பைதான் கிழிந்து போகும்
முக்கியமாய்ப் பெண்ணுந்தான் இறந்து போவாள்
களையுள்ள வேளைதனில் கையை யப்பா
கண்டிதமாய் விடாதே கருவுக் குள்ளே
கோளையுள்ள அவ்வேளை தன்னில் நீதான்
குறிப்பான அவிழ்தத்தைக் கொடுத்துச் செய்யே (1397)

கொடுத்திடில் அவிழ்தந்தான் எது செய்யும்
குணமான கருப்பையை மிருது வாக்கி
அடுத்திட்ட பிரசவ வேதனைகள் தன்னை
அப்பனே நிறுத்தி நீபின்பு சேர்த்து
படுத்திட்ட பெண்ணுக்கு அபினி யோடு
பண்பான வாந்தியுப்பு ரெண்டுஞ் சேர்த்து
சடுத்தமுடன் கொடுத்திட்டால் குணமே நோக்கும்
சன்மார்க்க முடனே நீசெய் வாயே. (1398)

செய்குவாய் பொறுமையுடன் சாந்த மாக
செயலான கடவுளுட பாதந் தன்னை
மெய்யாக நீநம்பிச் செய்வாயானல்
மைந்தனே உந்தனுக்கு மகிமை தோன்றும்
தையான பிரசவத்தின் பெரும் பாட்டுக்கு
தக்கபடி சீக்கிரமாய் வேலை செய்வாய்
கையான உலகத்தில் உன்னை யாரும்
கனமாக நம்பியே கருதிப் பாரே. (1399)

## சீசுவைத் திருப்புகிற விவரம்.

நம்பியே குழந்தையைத்தான் திருப்பும் நேர்மை
நலமாக மூன்றுவிதம் உண்டு பாரு
அம்புலியின் பிரவேச திரஸ்கிரியை யென்றும்
அப்பனே ஆகர்ஷணம் என்று மூன்றும்
தெம்பாக இதில்சிரசைப் பிடித்துத் தானும்
திருப்புகின்ற விதமொன்ருய் பின்பு கேளு
கம்பிரமான காலைப் பிடித்து நீதான்
கடிசாகத் திருப்புகிற விதந்தா னென்றே. (1400)

ஒன்ருன சிரசைத்தான் திருப்பும் நேர்மை
உரைக்கிறேன் நீயறிய உறுதிப் பாரு
பன்ருன முதன்மையில்தான் பாவை யர்க்கு
பாங்கான மலம்மூத்திரம் தன்னை நீக்கி
நன்ருகப் பெண்ணைத்தான் சிகிச்சை யப்பா
நன்மையுள்ள வசமாகப் படுக்க வைப்பாய்
குன்ருக மல்லாக்க வேணும் வையப்பா
குறையாத இடதுபக்கம் படுக்க வையே. (1401)

வைத்தபின்பு சொல்லுகிறேன் வளமை கேளு
வண்மையுள்ள வைத்தியர்தான் வலது கையில்
கைத்தபின் புறத்துக்கு எண்ணெ யிட்டு
கனமான உள்ளங்கைக்கு எண்ணெய் வேண்டாம்
நைத்தசிசு தனையிடிக்கும் வேளை தனில்
நலமான கையப்பா நழுவிப் போகும்
கைக்கவிரல் தனைக்குவித்து யோனிக் குள்ளே
கனமாக மெதுவாய்த்தான் விடுவாய் நீயே. (1402)

வீடுவாய்நீ காயங்கள் தோன்றி டாமல்
　　விவரமாயிட பின்பு கருப்பையின் வாயை
தடுவாக நீக்குநீக்கு விரல்களைத் தான்
　　கண்டிப்பாய் உள்ளுக்கு விட்ட பிறகு
படுவான வேதனைதான் நின்ற போது
　　பக்குவமாய்க் கைச்சேட்டை செய்த பின்பு
முடுவான வேதனைதான் உண்டாமானால்
　　முண்டிநீ அப்போது செய்யா தொன்றே. (1403)

செய்யாமல் சும்மாதான் இருப்பா யப்பா
　　செயலான கருக்குழிக்குள் கைசென்ற பின்பு
உய்கின்ற சிசுவினுட சிரசை நீதான்
　　உள்ளபடி கிரமப்படுத்த வேண்டிய தாயின்
பையவே அதைப்பிடித்து திருப்பி அப்போ
　　பக்குவமாய் புவ்வாட்ட மாகத்தானும்
நையவே முதல்இரண்டாம் ஸ்திதியில் வைத்து
　　நற்செய்கை செய்தபின்பு கையை வாங்கே. (1404)

வாங்கியபின் பிரசவந்தான் தற்செயலா யப்பா
　　வளமாக வந்திடவே செய்து போட்டு
தங்கியே செய்தபின்பு சிசுத்தான் நேராய்
　　தாரணியில் பிறக்காவிட்டால் சொல்லக் கேளு
ஓங்கியே குறடைவிட்டு சிசுவைத் தானே
　　உள்ளபடி வெளியேறச் செய்வாய் நீதான்
பாங்கிக்கு வருத்தமின்றி செய்வாய் நீதான்
　　பக்குவத்தை ஒன்றும்நீ தப்பி டாதே. (1405)

## காலைப் பிடித்துத் திருப்புதல்.

தப்பாத கால்பிடித்துத் திருப்பும் நேர்மை
　　தாரணியில் சொல்லுகிறேன் மைந்தா கேளு
ஒப்பிதமாய் சிசுவப்பா குறுக்காய்த் தானும்
　　உள்ளபடி விழுந்து கைவெளியே தோன்றில்
அப்படியே சிசுவினுட கையைத் தானே
　　அறிந்திடவே குறிப்பாய் வைத்துக் கொண்டு
ஒப்பிதமாய் முன்செய்யும் விதமாய்க் கையை
　　உயிரான கருப்பைக்குள் பிரயோகிப் பாயே. (1406)

பிரயோகித்து குழந்தையின் முன்புறமா யப்பா
பிரியாத மார்புமேலும் வயிற்று மேலும்
கரமதனைக் கொண்டுபோய் சிசுவின்பாதத்தைத் தொட்டு
கண்டுகொண்டு அதைப்பற்றிப் பிடித்துக் கொண்டு
உரமாக முன்புற மாகத் தானே
உள்ளபடி இழுத்துமே வெளியே தள்ளு
சிரமாக வைத்தியன் கைக்குப் பைக்குள்ளே
சீராக இருக்கின்ற போது கேளே. (1407)

கேளடா பிரசவநோய் கண்டா லப்போ
கெடியான ஹஸ்தத்தை விரித்துக் கொண்டு
நாளடா சிசுவினுட உடம்பு மேலே
நன்மையுடன் அசையாமல் வைத்துக் கொள்வாய்
வாளடா அப்படித்தான் செய்யா விட்டால்
வளமான கருப்பைதான் கிழிந்து போகும்
தேளடா கையிறுகி அதிக மான
தெளிவான வேதனைதான் உண்டாம் பாரே. (1408)

பாரடா சிசுவினுட பாதந் தன்னை
பற்றியே பிடித்ததின் முதுகுப் பக்கம்
சீராகத் திருப்பியே இழுக்க லாகா
சிறப்பாக அவ்விதமாய் இழுத்தால் கேளு
வாரான பூட்டுகள் விலகிப் போகும்
வண்மையுள்ள இருபாதந் தன்னைப் பற்றி
சீராக இழுப்பதுவே நல்ல தப்பா
சிறப்பான இருபாதம் அகப்படா தன்றே. (1409)

அன்றான இருபாதம் அகப்படா விட்டால்
அப்பனே ஒருபாதந் தன்னைப் பற்றி
நன்றாகத் திருப்பிவிடு குழந்தை தன்னை
நலமான கையொன்றும் கால்க ளொன்றும்
குன்றாமல் தெரிந்துகொண்டு இழுப்பா யப்பா
குடிகெடுத்த வேதனைதான் இல்லாத வேளை
கன்றான குழந்தையைத்தான் திருப்ப வேணும்
காலைத்தான் கீழுக்கு இழுக்கக் கேளே. (1410)

கேளடா இழுக்கஇழுக்க கைதா னப்பா
கெடிதாக மேலுக்கு ஏறிப் போகும்
நாளடா சிசுவைத்தான் திருப்பிக் காலை
நன்மையுடன் வெளித்தோன்றச் செய்த பின்பு
பாளடா நோய் வரும்போது கேளாய்
பக்குவமாய்க் குழந்தைதனை இழுக்கச் செய்வாய்
தேளடா குழந்தையைத்தான் செம்மை யாக
தெளிவாக வைப்பதுவே நல்ல தாமே. (1411)

ஆமேதான் இச்செய்கை தன்னி லப்பா
அழகான தாய்க்கும் சிசுவுக்குந் தான்
நாமேதான் அபாயமுண்டு சொன்னேன் பாரு
நலமான கையைத்தான் கடுமை யாக
ஓமேதான் உள்ளுக்குப் பிரயோ கித்தால்
உத்தமனே கருப்பைதான் கிழிந்து போகும்
தாமேதான் களைப்புண்டாய் மரண மாகும்
தன்மையுள்ள குழந்தையுட மரணங் கேளே. (1412)

மரணமடா வருவதற்கு விவரங் கேளு
மகத்தான நஞ்சுக்கொடி இரத்தம் நசுங்க
விரணமுள்ள ஒட்டந்தான் தடையே பட்டால்
வீச்சான குழந்தைதா லிறந்து போகும்
தருணமுள்ள தாய்க்கு தக்க தான
தன்மையுள்ள மருந்துகளைக் கொடுத்துக் கொண்டு
காரணமுள்ள நித்திரையை வருகச் செய்து
கண்டிதமுள்ள அழுக்குவகை விசாரிப் பாயே. (1413)

## ஆயுத விவரம்.

விசாரிப்பாய் ஆயுதத்தின் விவரந் தன்னை
விவரமுடன் சொல்லுகிறேன் விரிவாய்க் கேளு
பசாரிக்கும் பிரசவத்தில் குழந்தை தன்னை
பாங்கான சிரம்பிரண்டு வெளியே போக
நிசாசரமாய் கஷ்டமா யிருக்கும் போது
நின்சிரசை சிலிப்பலுடன் நிமிர்த்திக் கொண்டு
பிசாசுருவாய் வந்தசிசு தன்னைக் கொல்லாமல்
பின்பெருக்கும் கருவிக்கு உதகருசியென்று பேரே. (1414)

பேரான உதகருசி ஆயு தத்தை
பெலமான உருக்கதினுல் செய்வா யப்பா
சீரான சிரசு தடைபட்டுக் கொண்டு
சிரம்வெளிக்கு வாங்காம லிருக்கும் போதும்
நேரான பிரசவநோய் அற்ப மாக
நின்றிருக்கும் வேளைதன்னில் ஆயு தத்தை
சீராக உள்ளுக்குப் பிரயோ கிப்பாய்
சிறப்பாக அதின்சிரத்தைச் சொல்லக் கேளே. (1415)

சொல்லுகிறேன் பிரசவஸ்திரீ தன்னை யப்பா
சுகமான கட்டிலின்மேல் படுக்க வைத்து
புல்லுகின்ற ஆயுதத்தை வெந்நீரில் தானே
போட்டெடுத்து எண்ணெயிட்டுக் கொள்வாய் நீதான்
செல்லுகின்ற யோனிக்குள் இடது கையின்
செயலான இருவிரலை முதலில் புக்கு
தொல்லுலகில் அதன்வழியாய் ஆயுதத்தை விட்டு
தோய்ந்தசிசு தானிருக்கும் பக்கம் பாரே. (1416)

சிசுவினிடம் தலைப்பக்கம் தன்னி லேனும்
திரமான முகத்தினிட மேலே யேனும்
தசைகளு மமையும்படி செய்வா யப்பா
தப்பாமல் வலதுகையால் பிடியைத் தானே
பசையுறவே நழுவாமல் பிடித்துக் கொண்டு
பக்குவமாய் இடக்கைமேல் ஆயு தத்தை
நிசமாகச் சுமத்தியே பெண்ணுக் கப்பா
நிச்சயமாய் உறுத்தாமல் செய்வாய் நீயே. (1417)

செய்வாய்நீ வெகுசாக்கிரதை யோடு அப்பா
செயலான தலையதனை கிளப்பிநோய் தான்
மெய்யாக எடுக்கின்ற நேரந் தன்னில்
மெதுவாக இழுத்துமே உதவி செய்வாய்
பையான கருப்பையின் வாய்தா னப்பா
பாங்கான விசாலமாய் விரிந்து கொண்டு
உய்கின்ற பிரசவநோய் இருக்கும் போது
உள்ளஇந்த ஆயுதத்தைச் செலுத்து வாயே. (1418)

செலுத்துகின்ற வேளைதனில் நோயில்லா விட்டால்
செயலான பிரயத்தினந்தான் முடியா தப்பா
பிலுத்தமுள்ள சிரசுமெத்த உயரந் தன்னில்
பிலமாகத் தானிருந்தால் சொல்லக் கேளு
உலுத்தமுள்ள இக்கருவி தன்னை விட்டு
உள்ளபடி சரிப்படுத்த உதவா தப்பா
சிலுத்துவரும் சிரசப்பா இடைக்குழியில் தோன்றி
சீராக இருக்கின்ற வேளை தானே. (1419)

தானான வேளைதனில் இக்கருவி தன்னை
தக்கபடி ஒருபக்க மாக விட்டு
மானான மற்றொரு பக்கத்தி லப்பா
மகத்தான விரல்களைத்தான் செலுத்திப் பின்பு
தேனான இவ்விரண்டின் உதவி யாலே
தெளிவான தலையைத்தான் வெளியே தள்ள
ஊனான சாமார்த்தியஞ் செய்வாய் நீதான்
உள்ளபடி இன்னமொன்று சொல்லக் கேளே. (1420)

கேளடா இந்தவிதஞ் செய்ய வென்றால்
கெடிதான கைப்பழக்கம் ரொம்ப வேணும்
நாளடா அனுபோகி தன்னை வைத்து
நன்மையுடன் முதல்தரந்தான் பார்த்துக் கொள்வாய்
வாளடா வழக்கத்தை அநு சரித்து
வண்மையுடன் செய்கைமுற்றும் செய்ய வேணும்
தேளடா முரடாகச் செய்தா யானால்
திரேகத்திற் கபாயந்தான் காணும் பாரே. (1421)

## குறடு.

கேளடா கஷ்டப்பிரசவ காலந் தன்னில்
கனமான சிசுவைத்தான் இடுக்கிக் கொண்டு
சீராக வெளியில்தான் இழுத்துக் கொண்டு
சிறப்பாக வருகின்ற ஆயுதத் திற்கு
நேரான குறடுஎன்று சொல்ல லாகும்
நிச்சயமாய் இதிலிரண்டு விதந்தா னுண்டு
கூராக ஒன்றப்பா நீண்டிருக்கும் பாரு
குணமாக மற்றொன்று குறுகியிருக்குந் தானே. (1422)

தானென சிசுவின்தலை இடைக்குழியி லப்பா
    தப்பாமல் உயர்ந்திருக்கும் போது கேளாய்
மானென நீண்டகுறடு தன்னைக் கொண்டு
    மகிபனே சிசுவதனை இழுப்பாய்
தேனென சிரசப்பா இடைக்குழியை விட்டு
    தெளிவாக இறங்க 'சமீபந் தன்னில்
ஊனாக வந்திருக்கும் போது கேளு
    உள்ள சிறுகுறடைத் தாக்கு வாயே. (1423)

தாக்குகின்ற குறடுதான் அனேக முண்டு
    தன்மையுள்ள பிரசவந்தான் தாம தித்தால்
போக்குன்ற மாயப்பெண்ணுக்கு உபத்திரவமே யாகும்
    பொங்கமுள்ள வேதனைதான் கொஞ்ச மாக
சாக்கியா விருக்கின்ற வேதனை தன்னில்
    சங்கையுடன் குறடைத்தான் உபயோ கிப்பாய்
தூக்கியே குறடதனால் சிரசை யப்பா
    துப்புரவா யழுத்தியே பிடித்துக் கொள்ளே. (1424)

பிடித்துநீ கொண்டபின்பு வெளியே யப்பா
    பிலமாக இழுத்திடுவாய் சிசுவைத் தானும்
கடித்த இந்தஆயுதந் தனக்குத் தானும்
    கனமான சிசுத்தான் வெளித்தோன்று விட்டால்
துடித்த தலைதனைத் துணைத்துச்சிசுவை நீதான்
    துய்யவெளி தனிலிழுத்து விடுவாய் நீதான்
படித்த இந்தவிதத்தை நீ சுலபமாக
    பக்குவமாய் எப்போதும் செலுத்த லாமே. (1425)

ஆமேதான் இந்தவிதம் தன்னால் கேளு
    அப்பனே பிராணபயம் ஒன்று மில்லை
தாமேதான் அஜாக்கிரதையாய் செய்தா லப்பா
    தாய்க்கும் சிசுவுக்கும் கெடுதி யாகும்
ஓமென்ற சிசுவினுடசிரசு இடைக்குழியில் தானே
    உள்ளபடி இறுக்கிக்கொண் டிருக்கும் போது
நாமென்ற குறடைத்தான் ஒட்டி டாதே
    நன்மையுள்ள சிரசுக்கும் எலும்புக்கும் கேளே. (1426)

கேளடா மத்தியில்தான் இடமே தோன்றில்
கெடிதான குறடைத்தான் போடலா மப்பா
நாளடா அக்குறடை பிரயோ கிக்கும்
நலமான மார்க்கத்தை நவிலக் கேளு
வாளடா முதலில்தான் பெண்ணுக் கப்பா
வளமான மலஜலத்தைப் போக்கி விட்டு
தேளடா பெண்ணினிட பிட்ட மப்பா
தெளிவாக ஒரமா யிருக்கச் செய்யே. (1427)

செய்யடா பிட்டத்தின் ஒர மாய்
திரமான கட்டிலின்மேல் இருக்கும் போது
நையவே கட்டிலின்மேல் இடது பாகம்
நலமாகப் படுக்கவைப்பாய் பெண்ணை நீதான்
துய்யவே குறட்டினிட ஒருஅலகை நீதான்
தோய்த்திடுவாய் வெந்நீரில் கொஞ்ச நேரம்
ஐயமில்லா விளக்கெண்ணெய் தடவிக் கொண்டு
அப்பனே வேலைக்கு ஆரம்பிப் பாயே. (1428)

ஆரம்பிப்பாய் நோயில்லாச் சமயந் தன்னில்
அப்பனே இடதுகையில் இருவிரல்கள் தன்னை
கூறப்பா சிசுவின் தலைமார்க்க மாக
கொப்பனவே கருப்பையின்வாய்க்குள் விட்டுக் கொண்டு
நேரம்போம் மேல்அலகை விரலுக்கடியில் வைத்து
நிச்சயமாய் இடைக்குழி மத்திய மார்க்கமாக
பேரம்பாய் மெதுவிலசைத் துள்ளுக் கேற்றி
பிலமான அலகினிட பண்மை தானே. (1429)

தானான பண்மையடா சிசுவுக்கே தான்
தலையில்வைத்துப் படும்படியாய் செய்து கொண்டு
ஊனான சிசுவப்பா நழுவாமல் தான்
உள்ளபடி பத்திரமாய் பிடித்துக் கொள்ளு
மானான ஒருவனிடம் கொடுப்பாய் நீதான்
மற்றுமொரு கீழ்அலகைச் சூடே ஏற்றி
தேனான கொழுப்பிட்டு முதலில் விட்ட
தெளிவான அவருக்கு நேர்எதிராய்த் தானே. (1430)

எதிராக முன்விரித்தபடி செலுத்திப் பின்பு
இதமான பக்குவங்கள் ஆன பின்பு
கதிரான இரண்டலகின் பிடியைச் சேர்த்து
கண்டியாய்ப் பூட்டிக்கட்டிச் சுருக்குப் போட்டு
முதிரான மூடிபோட்டு விடுவாய் நீதான்
முக்கியமாய்ப் பிடிகளைத்தான் பூட்டு தற்கு
சதிரான பிரயாசை இருக்கு மாகில்
சங்கையுடன் ஒரலகை இழுப்பாய் நீயே. (1431)

இழுத்தபின்பு மறுபடியும் அகத்தில் விட்டு
இதமாகக் கிரமப்படுத்திக் கொள்வா யப்பா
பழுத்ததொரு குறடப்பா ஆன பின்பு
பண்பான பிரசவநோய் உண்டாம் வேளை
தழுத்தபிடி தனையிரண்டு அலகு களாலும்
தான்பிடித்து மெதுவாக அசைத்துமே தான்
பழுத்த இடைக்குழி மத்திமார்க்க மாக
பண்பான சிரசைநீ இழுத்தி டாயே. (1432)

இழுக்காதே நோய்நிற்கும் நேர்மை தன்னில்
இதமாக விட்டுவிடு அப்பா நீதான்
தழுகாமல் இவ்விதமாய்ப் பிரசவ சூலை
தனைப்பார்த்து முயற்சியுடன் வலிக்கச் செய்வாய்
பழியாகத் தாறுமாருய் இழுக்க லாகா
பாங்கான குறடைத்தான் இழுக்கும் போது
பழுத்த இடைக்குழி மத்தியமார்க்கந் தன்னை
பண்பாக எப்போதும் அனுசரித்துக் கொள்ளே. (1433)

கொள்ளவே சிசு வெளிகண்ட பின்பு
கொடியான மற்றதொறு உறுப்பு முற்றும்
தள்ளவே தற்செயலாய்ப் பிரிந்து போகும்
தாமதந்தான் ஒருவேளை நேரிட்டாக் கால்
மெள்ளவே உடலையுந்தான் பிடித்து அப்பா
மெதுவாகப் பிடித்துமே இழுத்துப் போடு
கள்ளமே இல்லாமல் நெஞ்சில் நீதான்
காப்பாற்றி விட்டாக்கால் புண்ணிய முண்டு. (1434)

உண்டான பெண்ணுக்கு ஆயு தத்தால்
உத்தமனே உண்டாகும் அபாயம் கேளு
நன்றான யோனியப்பா கிழிந்து போகும்
நலமான உறுப்புகளில்தான் காயந் தோன்றும்
பண்டான படும்கிழியும் பாரு பாரு
பண்பான குழந்தையுட கெடுதி பாரு
செண்டான சிரசில்தான் காயந் தோன்றும்
சீரான எலும்பொடிந்து இறந்து போமே. (1435)

போமடா இந்தவிதம் பிரயோ கித்தால்
பொங்கஎன்ற பெண்ணுக்கு ஆயாசம் உண்டாம்
நாமடா அதற்குத்தான் சாரா யத்தை
நாட்டியே ஜலம்விட்டுக் கொடுத்துப் போடு
ஓமென்ற அபினிதந்து குணத்தைச் செய்வாய்
உள்ளபடி பெண்ணைத்தான் தூங்கச் செய்வாய்
ஆமென்ற மர்மத்தின் ஸ்தானத் திற்கு
அப்பனே வெந்நீரைப் பீச்சு வாயே. (1436)

## சேதிக்கும் வகை.

பிசகிவந்த கர்ப்பத்தால் தாய்க்கு அப்பா
பிலமான மரணந்தான் வந்த தென்று
போச்சுதென்று உந்தனுக்குத் தெரிந்த போது
பொல்லாத சிசுவைத்தான் கொல்ல வேணும்
பாச்சியே செய்யாவிட்டா லப்பா கேளு
பாங்கான தாயப்பா மரண மாவாள்
தாச்சியாய்த் தாயைத்தான் ரட்சிக்க வேண்டி
தகாத இச்செய்கை செய்வாய் நீயே. (1437)

செய்கின்ற சிசுஹத்தி செய்யுங் காலை
செயலான ஆண்டவரின் பாதத்தைப் போற்றி
உய்கின்ற சிசுவைத்தான் கொல்லும் போது
உந்தனுக்கு வெகுபாவம் வந்து தோன்றும்
பையவே பரமசிவம் தன்னைப் பார்த்து
பாழான இச்செய்கை செய்யவே தான்
ஐயனே எந்தனுக்கு வாச்சு தென்று
அவரடியைத் தொழுதுபின்பு வேலை செய்யே. (1438)

வேலைசெய்து முடிந்தபின்பு சொல்லக் கேளு
விதமான தீர்த்தங்கள் தான மாடி
ஞானமதில் தோன்றிருக்கும் சிவ தலத்தில்
நாற்பத் தெட்டுநாள் நீதான மய்யா
கோலமுள்ள அர்ச்சனைகள் செய்து வைத்து
கோடியுருவு பஞ்சாட்சரந் தன்னை நீதான்
காலையிலே செய்துகொண்டு வந்த பின்பு
கனமான விளக்கதனைப் போடு வாயே. (1439)

போடுவாய் லட்சந்தான் விளக்கே அய்யா
பொங்கமுள்ள பரந்தனுக்கு அன்ன மிடுவாய்
நாடுவாய் சிவபதத்தை அனுதினமும் நீதான்
நாட்டிலே நீசெய்த பாவந் தீர
கூடுவாய் பெரியோர்கள் திருக்கூட் டத்தில்
கொற்றவனே நீயுந்தான் சேர்ந்து கொண்டு
பாடுவாய் அவர்கள்தான் எனக்குச் சொன்ன
பக்குவத்தை நானுனக்குப் பாடு வேனே. (1440)

பாடுவேன் சிசுஹத்தி தான் அய்யய்யா
பண்பாக ரட்சிக்கும் பொருட்டு நீதான்
சாடியே சிசுவைத்தான் கொல்லு கின்ற
சண்டாள கிருத்தியத்தைச் செய்யா விட்டால்
வாடியே தாய்பிள்ளை இரண்டு மப்பா
வண்மையுடன் மரணந்தான் அடைந்து போகும்
கூடியே இடைக்குழி சிறுத்துக் கொண்டால்
கொற்றவனே சிசுதான் பிறக்கா தன்றே. (1441)

பிறக்காத வேளைதன்னில் சொல்லக் கேளு
பெலமாகக் குறடதனல் சிரசை நீதான்
சிறக்கவே இழுப்பதற்கு நேரா விட்டால்
சிரசை நீதுளைத்துத் தள்ளி மூளைபோக்கி
பெருக்கியே வந்த சிரந்தனை யப்போ
பெரிதன்றி சிறிதாக்கி சிசுவை யப்போ
துறக்கவந்த வெளிவழியாய் இழுப்பாய் நீதான்
துப்புரவாய் இதன்கருவி நான்கு கேளே. (1442)

கேளடா ஆயுதத்தின் பேர்தான் சொல்வேன்
கெடிதான சித்திரிக் கத்திரிதா னென்று
நாளடா அதற்கேற்ற அங்குசந்தா னென்று
நாடியே வழங்கிவரும் மொட்டைக்குறடோ எனவும்
பாளடா கபாலத்தைச் சேதிக் கின்ற
பாங்கான குறடுதான் ஒன்றே யாகும்
தேளடா இந்நான்கு ஆயு தத்தை
தெளிவாக நூல்படியே செய்து கொள்ளே. (1443)

கொள்ளவே ஆயுதங்கள் செய்த பின்பு
கெடிதான இச்செய்கை செய்யுங் காலம்
மெள்ளவே சொல்லுகிறேன் உந்த னுக்கு
மெதுவாக அதனுடைய விவரங் கேளு
தள்ளவே சிசுஇறந்து போச்சு தென்று
தான்உனக்கு நிச்சயமாய்த் தெரிந்த பின்பு
கள்ளவே கஷ்டப்பிரசவம் நேரிடும் போது
கனமான இச்செய்கை செய்ய லாமே. (1444)

ஆமடா ரூபந்தான் குரூ மாகி
அதன்விவரம் பின்நேரளவு அங்குலம்மூன்றுக் கப்பா
போமடா குறைந்துமே சிரந்தா னப்பா
பொங்கமுடன் தற்செயலாய் வரக்கூடாமல் தான்
நாமடா குறடுந்தான் உள்ளே செல்ல
நலமான சந்தின்றி இருக்கும் போது
யேமடா கூபத்தின் அடிப்புறந்தான் பாரு
உள்ளபடி குறுக்களவில் குறுக் கேளே. (1445)

கேளடா 'முழிகள்மெத்த நெருங்கிக் கொண்டு
கெடியான குறடப்பா பிரவே சிக்க
நாளடா பக்குவங்க ளில்லாத போது
நலமான இச்செய்கை செய்வாய் நீதான்
தேளடா இடைக்குழியில் ஏதேனு மப்பா
தெளிவாகக்] கட்டிகள்தான் உண்டாகிக் கொண்டு
வாளடா அசையாமல் பிருவே யற்று
வண்மையுள்ள இடைக்குழியை அடைத்தால் பாரே. (1446)

பாரடா தற்செயலாய் சிரந்தா னப்பா
பண்பாக இறங்கிடவே கூடாமை யாயும்
கூறடா குறடைத்தான் உபயோ கிக்க
கொடிதான பக்குவங்கள் இல்லாத போதும்
நேரடா இச்செய்கை செய்யலாம் நீதான்
நிஜமான ஜலமஸ்தகம் நேரும் வேளை
சீரடா சிரசு இடைக்குழியி லப்பா
சிறப்பாக இறங்காத வேளை செய்யே. (1447)

செய்யடா பிரசவவலி தன்னி லப்பா
சீக்கிரத்தில் சிசுவைத்தான் வெளியே தள்ள
மெய்யாக வேண்டியே இருக்கும் போது
மேலான பூர்ணகர்ப்பம் ஆவதற்கு முன்
பையான பெரும்பாடு கண்டு கொண்டு
பாழான ரத்தோட்டம் அதிக மாக
நையவே காணுகின்ற வேளை தன்னில்
நலமான சிசுவைத்தான் சொல்லக் கேளே. (1448)

சிசுவினுட சிரசைத்தான் துளைத்து அப்போ
சீரான அங்குசத்தால் இழுத்துத் தள்ளு
பசுப்போலே நீபார்த்துக்கொண் டிருப்பா யாகில்
பாங்கான தேகத்திற்காசை உண் டாகும்
கசுவான கபாலத்தை சேதிக்கும் நேர்மை
கண்டுநான் சொல்லுகிறேன் கருத்தாய்க் கேளு
முசுவான இச்செய்கை செய்வ தற்கு
முக்கியமாய் கருப்பையின் வாய்தான் கேளே. (1449)

வாயப்பா பூரணமாய் விரிந்து கொண்டு
வண்மையுடன் இருந்திடவே வேண்டிய தில்லை
காயப்பா கொஞ்சமாய் விரிந்திருந் தாலும்
கண்டிதமாய் அவ்வளவே போகும் பாரு
பையப்பா பிரசவஸ்திரீ தனக் கப்போ
பக்குவமாய் மலஜலத்தைப் போக்கச் செய்து
தாய்ப்பிருட்டம் ஓரமாய் இருப்ப தற்கு
டோலிஎன்ற கட்டிலின்மேல் படுக்க வையே. (1450)

கட்டிலின்மேல் இடதுபக்கம் படுக்கச் செய்து
கனமான சிகிச்சைகள்தான் செய்யக் கேளு
மட்டமுள்ள இடதுகையின் விரலின் இரண்டை
மகிபனே யோனிக்குள் விட்டுக் கொள்வாய்
துட்டகிருத்தியமாக அப்போது தூலிக்கப் போகும்
துய்ய ஸ்தானத்தின் மேலே தான்
சுடமுள்ள சித்தரீக் கத்திரியை யப்பா
சதிரான உள்ளங்கை மார்க்கந் தானே. (1451)

மார்க்கமாய் விரல்களுக்கு உட்புறத்தி லப்பா
மகத்தான தாய்க்குக் காய மின்றி
சேர்த்தியே செலுத்தியபின் எலும்பின் மேலே
செயலான சித்தரீக்கத்திரி தன்னை வைத்து
தீர்த்துமே திருப்புஅதைத் துளைத்து அந்த
துய்யான ஆயுதத்தின் தடைவரையி லப்பா
யேத்தியே எலும்புக்குள் விட்டுப் பின்பு
இதமான பிடிகளை விரித்துக் கேளே. (1452)

விரித்த பின்பு எலும்புகளைக் கத்தரித்து
விதமான ஆயுதத்தை திருப்பிப் பின்பு
குறுக்காக வைத்துமுன் செய்த மேரை
கொற்றவனே செய்தாக்கால் எலும்பு அப்பா
கருக்கான எலும்பப்பா குறுக்கும் நெடுக்குமாக
கண்டிப்பாய் பிளந்துவிடும் பின்பு கேளு
தறியான சித்தரீக்கத்திரி தன்னை யப்பா
தனியான கபாலத்துள் விடுவாய் நீயே. (1453)

விடுவாய்பின் மூளையைத்தான் சின்னஞ் செய்வாய்
விதமான முள்ளந்தண்டுக் கொடியி னப்பா
படுவான சிகரத்தை குறுக்காய் வெட்டி
பண்பான ஆயுதத்தை வெளியே வாங்கு
முடுவான கபாலத்தின் ரேகை தன்னில்
முண்டிநீ துளைக்காதே எலும்பையே தான்
கடுவாகத் துளைத்துமே திரிப்பா யப்பா
கண்டிப்பாய் மறுபடியுஞ் சொல்லக் கேளே. (1454)

மறுபடியும் இடதுகைவிரலை முன் போல்
மகிபனே செலுத்தி அம்மார்க்க மாக
குறுக்கிருக்கும் அங்குசத்தை கபாலத் துள்ளே
கொப்பவே விட்டுமூளை தன்னைக் குத்தி
திருகியே அவ்விதமாய்ச் செய்யா விட்டால்
தெளிவாகச் சிலவேளை சிசுதா னப்பா
மருவியே உயிரோடு பிறக்கும் பாரு
மகிபனே அதினாலே வருத்த மாமே. (1455)

ஆமேதான் பிறகப்பா சொல்லக் கேளு
அங்குசத்தை கபாலத்துக் குள்ளே யேனும்
ஓமப்பா வெளியேயேனும் நழுகவொட் டாமல்
உள்ளபடி மாட்டியே இடைக்குழி மத்தியாக
தாமப்பா சிரசைத்தான் மெதுவாய் நீதான்
தக்கபடி வெளிக்கிழுக்க வேணும் பாரு
நேமப்பா வெளிக்கு இருக்கும்போது கையை
நீளடுத்துப் போடாதே நிசமாய்த் தானே. (1456)

தானான சிரசினிட சரும மதனாலே
தனிஎலும்பு தான்மூடி மிருது வாக
ஊனான உறுப்புக்கு காய மின்றி
உள்ளபடி செய்திடுவாய் உலகத் தோர்க்கு
தேனான தெளிவாக மெதுவாய்த்தான் நிதானித்து
.... .... .... .... ....
மானான சிரசைத்தான் இழுப்பாய் நீயும்
மகிபனே இன்னமொரு விதந்தான் கேளே. (1457)

கேளடா சிரசிருக்கும் பிகுவுக் குள்ளேநீ
கெடிதாகத் தக்கபடி பெலமே போட்டு
நாளடா இழுத்திடுவாய் சிசுவை யப்போ
நன்மையுடன் ஒருவேளை சிசுதா னப்பா
வாளடா வந்திடவே கஷ்ட மாகில்
வளமாக கபாடசேதக் குறடே கொண்டு
தேளடா எலும்பைத்தான் துண்டித்துப் போடு
தெளிவான பாகந்தான் கிழியாமல் பாரே. (1458)

பாரடா சிரசுதான் வெளித்தோன்று விட்டால்
பக்குவமாய் உடல்முற்றும் இறுகும் பாரு
சீரடா அப்படியுந் தோன்று விட்டால்
சிறப்பான மார்புடனே வயிற்றையுந் தான்
நேரடா பிளந்து உறுப்புதன்னை நீக்கு
நிச்சயமாய் சிசுவைத்தான் இழுப்பா யப்பா
வாரடா ஆயாசம் இருந்தால் கேளு
வண்மையுடன் பெண்ணைநீ மதியாய்ச் செய்யே. (1459)

செய்தபின்பு அசையாமல் படுக்க வைப்பாய்
திறமான அபினிமுதல் உஷ்ண மான
துய்யதொரு மருந்துகளை கொடுப்பா யப்பா
தோகையுட யோனியைத்தான் பார்வை யிட்டு
பையவே வெந்நீரால் கழுவச் செய்து
பாங்கான சிகிச்சைகள் செய்வாய் நீதான்
உய்யவே அவளுக்கு வேண்டிய நல்ல
உணவுகளை உணவுகாலத்தில் கொடுக்கச் செய்யே. (1460)

## கருப்பாசய சேதனம்.

செய்துவரும் கோரகிருத்தியம் ஒன்று கேளு
செயலான தாய்க்கும் சிசுவுக்குந் தான்
பையவே எமன்வந்து தோன்றும் போது
பாங்கான கருப்பையைக் கீறிக் கேளு
தொய்யவே குழந்தையைத்தான் வெளியே தூக்கில்
துப்பான குழந்தைதான் சீவ னோடு
நையவே ஜீவனோ டிருக்குஞ் சொன்னேன்
நாட்டிலே இச்செய்கை மோசந் தானே. (1461)

மோசமுள்ள இச்செய்கை தன்னு லப்பா
முடிவிரண்டில் ஒன்றப்பா பிழைக்கும் பாரு
நாசமுள்ள சிசுவை கருப்பையி னின்று
நன்மையுடன் வெளிப்படுத்த உபாய மின்றி
பாசமுள்ள தாய்க்கும் சிசுவுக்குந் தான்
பலமான மரணந்தான் வந்த தென்று
நேசமுடன் நிச்சயித்துக் கொண்ட போது
நிசமாகக் கருப்பையை சோதிப் பாயே. (1462)

சோதிக்கும் வேளைதனைச் சொல்லக் கேளாய்
செயலான இடைக்குழிதான் மெத்தத் தானும்
போதித்து கருரூபந்தான் அடைந்து கொண்டு
பொல்லாத வரம்பிலும் அடிவசத்திலுந் தான்
சோதித்த எண்ரெண்டு அங்குலமே தோன்றி
சொகுசான சிசுவெடுக்க அசாத்தியமான போதும்
வாதித்த எலும்பினின்று கட்டிகளே அப்பா
வளர்ந்துகுழியை அடைத்துக்கொண் டிருக்கும்போது பாரே. (1463)

பாரடா கருப்பை கிழிந்து ஆனபின்பு
பண்பான வழியைத்தான் குழந்தை யப்பா
சீராக வாராம லிருக்கும் போதும்
சிறப்பான கர்ப்பா சயத்தை விட்டு
நேராக வேறிடத்தில் வளர்ந்த தான
நிசமான கருவுக்கும் தாய்க்குந் தான்
பேரான சடுதியில்தான் மரணங் கண்டால்
பெலமான இச்செய்கை செய்வாய் நீயே. (1464)

## கருப்பாசய சேதன முறை.

செய்வாய் பெண்ணுக்கு முன்பு நீதான்
செயலான மலமூத்திரந் தன்னை நீக்கு
பையவே பெண்ணைத்தான் கட்டிலின் மேலே
பாங்காக மல்லாக்காய் படுக்க வைப்பாய்
பையவே தேகத்தைச் சேதித்துக் கொள்ளு
பாங்கான நஞ்சு முன்புறத்தி லப்பா
நையவே ஒட்டிக்கொண் டிராத நேர்மை
நலமாகத் தெரிந்துகொண்ட பின்பு கேளே. (1465)

கேளடா சுக்கிலரேகை யென்று சொல்லும்
கெடிதான வரிகீறுமல் நீண்ட தாக
வாளடா வாட்டமாய் ஏறு மப்பா
வளமான சதைக்குவெளியே தன்னி லேனும்
நாளடா மூலவட்ட மாக வேனும்
நலமான நாபிக்குக்கீழ்க் குறுக்கே யேனும்
தேளடா சருமத்தைக் கீறிக் கொள்வாய்
தெளிவாக அதுஎட்டு அங்குலமே செய்யே. (1466)

அங்குலத்தின் நீளம் கீறிக் கொள்வாய்
அழகான நீண்ட வசந்தான் நீகீறில்
தங்கியிருக்கும் தொப்புளுக்கு கொஞ்சம் மேலே
தானிருந்து ஆரம்பஞ் செய்து கொண்டு
சங்கையுடன் ஈரைந்து அங்குலமே கீறி
சதிரான கத்தியினல் குடல்சவ்வு மட்டும்
சங்கையுள்ள சதைகளைத்தான் துண்டித்துப் போடு
சதிரான அச்சவ்வைப் பின்பு கேளே. (1467)

கேளடா சவ்வை வெகுபத்திரமாய்க் குத்தி
கெடிதாக அதற்குள்ளே விரலை விட்டு
நாளடா குடல்களில்தான் காய மின்றி
நன்மையுள்ள சவ்வைநீ சேதித்து விட்டால்
பாளடா கருப்பைதான் தோன்றுஞ் சொன்னேன்
பண்பாக அதைச்சிறியதாய்க் கீறிக் கொண்டு
தேளடா சவ்வுவரை அறுப்பா யப்பா
தெளிவாக அதற்குப்பின் சொல்லக் கேளே. (1468)

சொல்லுகிறேன் சவ்வுகளில் சிறதாய ரந்திரம்
சுகமாகச் செய்துமே பஞ்சு போல
வல்வினையாய்ப் பனிநீர்தான் வயிற்றி லப்பா
வளமாக விடாமல் எடுத்துப் போடு
தொல்லுலகில் பனிக்குடத்தை முன்ன தாக
சுகமாக உடைத்துவிட்டால் மெத்த நன்று
புல்வினை செய்பிறகு ரந்திரத்தைத் தானும்
புகழாக விசாலப் படுத்திக் கொள்ளே. (1469)

கொள்ளடா குழந்தையைத்தான் வெளியில் தூக்கி
கொடிகட்டி நஞ்சுடனே சவ்வு போக்கி
தள்ளவே கருக்குழியில் நிறைந் திருக்கும்
தனிப்பனிநீர் ரத்தத்தை நீக்கிப் போட்டு
அள்ளவே அழுக்கு வெளிப்படவே வேண்டி
அப்பனே கருப்பையின் வாய்தான் பாரு
மெள்ளவே திறந்திருக்குங் கண்டு கொள்ளு
மேலான கருப்பையைத் தைத்தி டாதே. (1470)

தைக்காதே தற்செயலாய் கூடிக் கொண்டு
தாங்கினதோர் கர்ப்பாதான தினந் தன்னில்
மைப்போல் இரண்டு அங்குலமே யாக
மதிபோலே காய்ந்துவிடும் மகிமை பாரு
கைப்பான வயிறதனில் விழுந் திருக்கும்
சதிரான ரத்தத்தை மெதுவாய் நீதான்
தைப்போலே துவட்டியதை எடுத்து விட்டு
தளிர்ப்பின் குடலைத்தான் எதாஸ்தானத்தில் வையே. (1471)

வைத்தபின்பு வெளிப்புறத்தின் காயம் மூடி
வளமான காற்று அதின்உள்ளே போகாமல்
கைத்தலத்தில் நெருக்கமாய் தைய லிட்டு
கனமான பிளாஸ்திரியைப் போடு போடு
நைத்ததென்ற ஈரத் துணியை மேலே
நலமாகப் போட்டபின்பு பெண்ணை நீதான்
மெத்தைதனில் அசையாமல் படுக்க வைத்து
மேலான மருந்துதன்னைக் கொடுத்தி டாயே. (1472)

தன்னைத்தா னறியாத பண்டிதர் களுக்குத்
தான்இந்த விதம்முற்றும் சாற்றினேன் நூலை
பின்னைத்தான் தேகத்தில் இருந்து வாழும்
பிரிவான அட்சரத்தின் விவரந் தன்னை
முன்னைத்தான் அறிந்தவர்க்கு இந்தத் தீமை
முற்றுந்தான் வேண்டார்கள் முடிவைக் கண்டு
அன்னத்தின் பாதத்தை வணங்கிக் கொண்டு
அப்பனே அவர்கள்செய்யும் விதத்தைக் கேளே. (1473)

கேளடா சிரசுமுதல் பாதம் மட்டும்
கெடியான அட்சரத்தால் நிறைந்திருக்கும் பாரு
நாளடா அவ்வெழுத்தை திருப்பி பாரில்
நலமான கருவெல்லாம் அழிந்து போகும்
தேளடா பவனமுதல் வாச லெல்லாம்
தெளிவாகத் திறந்துமே கருதா னப்பா
பாளடா தாய்க்கும் தோன்றாமல் தான்
பக்குவமாய் பிறக்குமடா பாரில் தானே. (1474)

தாஞன அவ்வெழுத்தைச் சொல்லக் கேளு
தனியான அகாரமுதல் ஒகாரம் முற்றும்
ஊஞன அட்சரத்தால் நினைத்திருக்கும் சொன்னேன்
உள்ளுக்குத் தானிருக்கும் கருவுக்கே அப்பா
தேஞன ஒங்காரம் மகார மாகும்
தெளிவான அவ்வெழுத்தின் நிலையைக் கண்டு
மாருக மாறிநீ விட்டா யாஞல்
மகிபனே கருமுற்றும் மடிந்து போமே. (1475)

வடிந்துபோம் ஊன்முதல் எலும்பு எல்லாம்
வளமான தசையுடனே — —
மடிந்துபோம் தேகத்தில் ஒன்று மின்றி
பாங்கான இம்முறையை அறியா தோர்க்கும்
முடித்தமுப்பூ தன்னைக்கண்டு எடுக்கா தோர்கள்
முன்சொன்ன முறைப்படியே போக வேணும்
இடிந்தசுவர் போல்நிற்கும் உலகத் தோர்க்கு
இவ்விதமாய்ச் செய்து இயம்பி. (1476)

இயம்பிடேன் எந்நூலுக்கு கரும காண்டம்
இதமான ஆயிரத்தை நீதா னப்பா
சுயமாக உட்கார்ந்து பார்த்தா யாஞல்
சுருக்கமுள்ள வழியெல்லாம் தோணும் தோணும்
தயக்கமுடன் திரியாதே நூலைவிட்டுத் தான்
போன பேர்களாகப் போகாமல் தான்
மயக்கமற்ற பெரியோரை வணங்கிக் கேட்டு
மைந்தனே சமுசயத்தைத் தீர்த்துக் கொள்ளே. (1477)

தீர்த்துநீ கொண்டாக்கால் சண்டாளக் கிருத்தியம்
திறமாகச் செய்யாமல் பெண்ணைப் பார்த்து
சேர்த்துமே உந்தனிட ஆரு தார
செயலான பக்கத்தை நடுவே நாட்டி
பார்த்துமே கண்ணுலே அட்ச ரத்தை
பளிச்சென்று ஒட்டிவிடு உடனே நீதான்
ஆர்த்துமே கொடுமைதான் அரைநாழிகைக் குள்ளே
அப்பனே போய்விடும் அனேகமாய்த் தானே. (1478)

அருமையுள்ள அட்சரங்கள் தன்னை யோத
அப்பனே உந்தனுக்கு வாசி வேணும்
பொறுமையுள்ள பெரியோரை காக்க வேணும்
பொல்லாத குணம்முற்றும் தள்ள வேணும்
கருமையென்ற கருத்துடனே கடவுள் தன்னைக்
கண்டுநீ தரிசித்தால் எல்லாத் துன்பமும்
செருமியே ஒடிவிடும் அப்பா சொன்னேன்
செய்யடா இப்பாகம் முன்னே தானே. (1479)

தானான கர்ப்பஸ்திரீ தனக்கு அப்பா
தக்கவலி தான்எடுக்கும் வேளை தன்னில்
மானைப் பிறந்துபின் கர்ப்பந் தன்னை
மகிழ்ச்சியுடன் பிறப்பதற்கு வகையைக் கேளு
தேனான தோள்வளையல் எண்ணெய் பந்து
தெளிவான மூலிகையும் எல்லாம் எந்தன்
ஊனான மாந்திரீக சாஸ்தி ரத்தில்
உள்ளபடி வகுத்திட்டேன் உற்றுப் பாரே. (1480)

உற்றுப்பார் வளையடை நேர்மை தன்னை
உறுதியாகச் சொல்லுகிறேன் உண்மை யாக
கற்றுப்பார் கருமூலி தன்னை யப்பா
கணக்காக கிரகணத்தில் அடைத்துப் பின்பு
நற்றிப்பார் நகாரமுதல் சிகார மட்டும்
நலமாக லட்சஉரு ஓதி நீதான்
வெற்றியுள்ள விளக்கெண்ணெய் தன்னை யோதி
விதமான வளையலை நீகையில் போடே. (1481)

போட்டபின்பு எண்ணெயைத்தான் வயிற்றின் பேரில்
பொங்கமுடன் பூசிவிடு வயிறு முற்றும்
ஆட்டமுள்ள குழந்தையைத்தான் அப்பா கேளு
அழுதுகொண்டு பிறக்குமடா அவனி தன்னில்
வாட்டமுள்ள தாய்க்குக் கொஞ்ச மேனும்
வருத்தங்கள் தோன்றாது வளமை யாக
நாட்டமுடன் சொல்லிவிட்டேன் இந்தப் போக்கை
நன்மையுடன் இன்னம் வெகுவிதத்தைக் கேளே. (1482)

## கிரமாதீதப் பிரசவங்கள்.

கேளடா ஆசனந்தா னுதய மானல்
கெடிதான சிசுவப்பா இரண்டுவிதமாய்க் காணும்
நாளடா சிசுமுதுகு முன்னுக்கு வந்து
நலமான தாய்வயிற்றைப் பார்த்துக் கொள்ளும்
வாளடா இதுவப்பா வழக்க மாகும்
வளமான சிசுமுதுகு பின்னுக்கே தோன்றி
தேளடா தாய்முதுகைப் பார்த்துக் கொள்ளும்
தெளிவான முந்நீர் விவரங் கேளே. (1483)

விவரமுள்ள சிசுவப்பா முன்னும் பின்னும்
விதமாக இருக்காது மூலவாட்ட மாக
அவனிதனில் அமைந்திருக்கும் இந்தத் தோற்றம்
அப்பனே உருண்டு மிருதுவாகத் தோன்றும்
தவனையுள்ள ஆச னத்தினு லப்பா
தப்பாத பிட்டத்தின் மத்தி தன்னில்
கவலைகொண்ட விடவுனல் குதம்தா னப்பா
கண்டிப்பாய் மற்றுமுள்ள குறிப்பால் காணே. (1484)

காணடா சிறுகஇறங்குந் தன்மை யாக
கனமான ஆசனந்தா னிறங்கும் பாரு
பூணடா சிசுவினுட கைதா னப்பா
பொங்கமுடன் சிரசுமேல் விரிந்திருக்கு மாகில்
நாளடா பிரசவந்தான் தாமதமே யாகும்
நலமான ஆசனத்தின் உதயந் தன்னில்
தோனுது தாய்க்கு துர்க்குணந்தா னப்பா
தொல்லுலகில் சிரசைப்போல் ஆசனந்தான் கேளே. (1485)

கேளடா மர்மஸ்தான மார்க்கத்தை யப்பா
கணிதமுடன் செம்மையாய்ப் பெரிதாக் காது
நாளடா அதினலே சிசுவுக்கே தான்
நன்மையுள்ள அபாயம்வருகும் சொன்னேன் பாரு
மாளடா தொப்புள்க்கொடி நசுங்கி யப்போ
பண்பான சிசுதான் இறந்து போகும்
தேளடா இதற்குத்தான் சிகிச்சை கேளு
தெளிவாகச் சொல்லுகிறேன் திறமை பாரே. (1486)

திறமையுள்ள ஆசனந்தான் வெளித்தோன்றுந் தன்னில்
தீவிரமாய்க் கையைத்தான் போட லாகா
பெருமையுள்ள பாகத்தைத்தான் தாங்கிக் கொள்வாய்
பக்குவமாய் ஆசனந்தான் வெளிவந்த பின்பு
செருமையுள்ள சிசுவைத்தான் வலது கையால்
செயலாக ஏற்றிக்கொண் டிருந்தா யாகில்
அருமையாய் தற்செயலாய் வெளியே தோன்றும்
அப்பனே நஞ்சுக்கொடி வெளிதோன்றுங் காலேதானே. (1487)

தானான சிசுவுக்கு அபாயந் தோன்றும்
தக்கபடி அதைக்கொஞ்சம் கீழுக்கே தான்
மானாக இழுத்துவிட்டு நஞ்சுதா னப்பா
மகிபனே நசுங்கிடவே ஒட்டாமல் செய்வாய்
தேனான நாடிநடை துடியாய்த் தோன்றில்
தெளிவான சிசுவைத்தான் மெதுவாய்த் தோன்ற
ஊனாக இறங்கிடவே விடுவா யப்பா
உள்ளபடி குறைந்திருந்தால் சொல்லக் கேளே. (1488)

கேளடா பிரசவத்தை துரிதஞ் செய்வாய்
கெடிதான நோயிருக்கும் வேளை தன்னில்
நாளடா சிசுவைத்தான் வெளிஇழுத்துத் தள்ளு
நன்மையுள்ள மார்பு வெளித்தோன்றுங் காலை
பாளடா கைரெண்டும் நெருங்கிஇருந்தா லப்போ
பண்பான சிகிச்சைக்கு தொந்தரவே யில்லை
தேளடா சிசுவைத்தான் அலைந்திருக்கு மாகில்
தெளிவாக விரலைவிட்டு மெதுவாய்வெளியே தள்ளி. (1489)

தள்ளி விடும்போது அதனில் பெலமதாக
தானிழுத்தால் எலும் பொடிந்து மிருதுவாய்
உள்ளதொரு உறுப்புகளில் காயந் தோன்றும்
உறுதியுள்ள கைகள் வரும்போது கொஞ்சம்
மெள்ளவே தாமதங்கள் ஆகும் பாரு
மெதுவான கொடியில் நாடியிருக்குந் தன்னில்
கள்ளவே கைவிடவே ஆகா தப்பா
கனமான சிரசுஇடைக் குழியில்இறங்கும்போது பாரே. (1490)

பாரடா இடதுகையின் இருவிரலைத்தா னப்பா
பண்பான சிசுவினுட வாயில் விட்டு
நேரடா வலதுகை விரலை நீதான்
நிச்சயமாய் பிடரிமேல் வைத்திழுத்துக் கொண்டு
கூரான முகவாய்க்கட்டை தன்னைக் கேளு
கொப்பனவே மாரோ டணைத்துக் கொண்டு
பேரான தலையை வெளிக்கிழுப்பா யப்பா
பெரிதாக இவ்விதமாய்ச் செய்தால் கேளே. (1491)

செய்தாக்கால் சிசுவினுட அளவு குன்றி
சேயான கோஷ்டமின்றி வெளியே தோன்றும்
உய்கின்ற பிரசவம் முடிவாகும் தன்னில்
உறுதியுள்ள பெண்ணினுட வயிற்றை யப்பா
பையவே பிடித்து அழுத்திக்கொண் டிருப்பாயாகில்
பாங்கான நஞ்சு வெளிப்பட்டே போகும்
ஐயமில்லா விதியைநான் உரைத்தேன் பாரு
அப்பனே இன்னமொரு விதத்தைக் கேளே. (1492)

விதமான பிரசவத்தின் வேதனைதா னப்பா
விரிவாக நின்றுவிட்டால் சொல்லக் கேளு
பதமான வேறுகா ரணங்கள் தன்னால்
பக்குவமாய் சிசுவை யப்பா நீதான்
இதமாக வெளிப்படுத்த வேண்டு மாயின்
சீரான விரல்களைத் துடைச்சந்தில் விட்டு
சதமான பிரசவவேதனை யெடுக்கும் போது
சடுதியாய் இழுத்திடவே உதவி செய்யே. (1493)

செய்யடா நோய்குறைந் திருக்கு மாகில்
செயலான மருந்தீய்ந்து நோயைத் தாக்கு
மெய்யான சிசுவப்பா இறந்து போகில்
மெதுவாகப் பிரசவிக்க கஷ்ட மாகில்
பையவே சிசுவைத்தான் சேதித்து நீதான்
பக்குவமாய் வெளிப்படுத்தி விடுவா யப்போ
தையலர்கள் தனக்குவரும் வேறு மார்க்கம்
தக்கபடி சொல்லுகிறேன் இன்னுங் கேளே. (1494)

இன்னும்கேள் முழங்கால்கள் பாதம் ரெண்டும்
இதமாக உதயங்கள் ஆகும் வேளை
பன்னுகின்ற தாய்க்கு வெகுஉபத்திரவமே யாகும்
பாங்கான உபாயமொன்று சொல்லக் கேளு
பின்னமுள்ள ஆசனத்தின் உதயத் திற்கு
பெலமாகச் செய்கின்ற தன்மை போலே
சொன்னபடி செய்துவைத்தால் பிரசவ மப்பா
சுகமாய்ப் பிறக்குமடா சொகுசாய்த் தானே. (1495)

தானான தொப்புள்க்கொடி நசுங்கிய பின்பு
தனியான ரத்தோட்டந் தடையே யாகில்
கோனாக விலக்கியதை சிசுவுக்கே தான்
கொப்பனவே அபாயமின்றி செய்வாய் நீதான்
தேனான கைஉதயம் ஆகும் போது
தெளிவான குழந்தைதான் குறுக்கே காணும்
ஊனான முதலில்தான் தானே வந்து
உள்ளபடி பிறகுகைகள் வருகும் பாரே. (1496)

பாரடா குழந்தையுட முதுகு அப்போ
பக்குவமாய் முன்புறமாய் திரும்பியிருக்கும் பாரு
கூறடா தாயினுட வயிற்றுப்பக்க மேனும்
குணமாக பின்புறமாய் திரும்பி யேனும்
நேரடா முள்ளந்தண்டுப் பக்க மேனும்
நிச்சயமாய்த் தானிருக்கும் நிலைமை சொன்னேன்
வாராக இப்படியே இருந்த தென்றால்
வண்மையுள்ள குழந்தையைத்தான் திருப்பிக் கேளே. (1497)

திருப்பவே வெளிக்கு இழுக்காம லப்பா
திறமாக விட்டுவிட்டால் சிசுதான் பாரு
கருப்பையைவிட்டு ஜனிப்பதுதான் அசாத்திய மாகும்
கடினமாய் சிசுமடங்கி ஒருவேளைபிறக்கும் பாரு
வருத்தத்தைப் பார்த்துக்கொண் டிருக்க லாகா
வளமான சிசுவினுட வலக்கை யேனும்
பருத்ததொரு இடக்கை யேனும்
பாங்காக வெளிக்கு வரும்போது கேளே. (1498)

கேளடா குழந்தையுட உள்ளங்கை தான்
கெடிதாக முன்னுக்குத் திரும்பியிருக்கு மாகில்
நாளடா சிசுவப்பா முன்புறமே யாகும்
நலமாகப் பின்னுக்குத் திரும்பியிருப்ப தாலே
வாளடா பின்புறமாய்த் திரும்பியிருக்குஞ் சொன்னேன்
வளமான பெருவிரலால் வலமிட மென்ற
தேளடா வித்தியாசந் தெரிந்து கொள்வாய்
தெளிவான குழந்தையுட வலதுகை பாரே. (1499)

பாரடா சிசுவினுட வலதுகை தான்
உத்தமனே நமது வலக்கையி னேடு
பருதியுள்ள இடதுகை இடதுகையி னேடும்
பாங்காகப் பொருந்துமடா சொன்னேன் பாரு
நிருதியுள்ள கைக்கும் காலுக்குந் தான்
நிச்சயமா யுள்ளதொரு பேதங் காண்பாய்
குருதியுடன் கைகள் வரும்போ தப்பா
குறிப்பாகக் குழந்தையை நீ எடுக்கவிட்டால் கேளே. (1500)

கேளடா அப்போது தாய்க்கும் பிள்ளைக்குந்தான்
கெடிதான ஆபத்து வந்து தோன்றும்
நாளடா சிலவேளை சிரசி னேடு
நலமான கைகள்தான் வருவ துண்டு
தேளடா சிலவேளை பாதமுடன்கையுந் தோன்றும்
தெளிவாக இப்படிக் காணும் வேளை
வாளடா வைத்தியந்தான் படித்த முன்னோர்
வண்மையுடன் தானெடு விடுவான் பாரே. (1501)

## கருமசூலை.

பாரடா மாந்தருக்குத் தான்
பாங்கான கருமசூலை வருகும் நேர்மை
கூறடா சொல்லுகிறேன் மைந்தா கேளு
கொற்றவனே தேகத்தில் பித்தம் மிஞ்சி
நேராக இருந்ததொரு புத்தி தன்னை
நிலைகெட்டுப் போகும்படி செய்யு மப்பா
வாரடா சொப்பனத்தில் விகாரங் காட்டும்
வளமாகப் பின்வரும் விதத்தைக் கேளே. (1502)

கேளடா சொப்பனங்கள் ஆன பின்பு
    கடிதான தேகத்தில் கீல்கள் யாவும்
நாளடா நாளுக்கு நாளே யப்பா
    நலமான வலிகண்டு குத்தல் காணும்
தேளடா ஒருவாரம் அப்படியே கண்டு
    தெளிவரன மறுவாரம் அதிகங் காட்டும்
வாளடா மூவைந்து நாளுக்கு மேலே
    வளமான தேகத்தைக் குறுக்குந் தானே (1503)

தானுக நடக்கின்ற நேர்மை தன்னை
    ஸ்தம்பித்துக் கோல்பிடித்து நடக்கச் செய்யும்
மானுக அதன்பின்பு சொல்லக் கேளு
    மைந்தனே படுக்கையில் உட்காரச் செய்யும்
தேனுன திங்கள்தன்னி லப்பா கேளு
    தெளிவான தேகத்தை எழுந்திருக்க வொட்டா
ஊனுன தேகமெல்லாம் குடைச்சல் கண்டு
    உள்ளதொரு நித்திரைதான் அற்றுப் போமே. (1504)

அற்றுநின்ற ரோகந்தான் தீர வென்றால்
    அப்பனே வகையொன்று சொல்லக் கேளு
பற்றிவந்த ரோகந்தான் கண்ட நாளில்
    பாங்கான இருமாதந் தனக் குள்ளாக
முற்றிலுந்தான் எடுக்காவிட்டால் பின்பு கேளு
    முயலாது பின்புதா னென்று மாகா
நந்தியே பேதிமுதல் அவிழ்த மப்பா
    நாட்டியே நீதின்றல் போகா தன்றே. (1505)

அன்றுன நோவுதான் எலும்பைப் பற்றி
    அப்பனே வருவதினல் சொல்லக் கேளு
பன்றுன பலமருந்து தனக்கு அய்யா
    பளிச்சென்று தீராது சொன்னேன் பாரு
குன்றுன பாவத்தால் இன்னே யப்பா
    குபிலென்று காணுவதால் அதற்கு நீதான்
நன்றுக கருமசாந்தி முதலில் செய்து
    நாட்டிலுள்ளோர் மருந்துண்டால் தீரும் பாரே. (1506)

தீருகின்ற சாந்தியைத்தான் சொல்லக் கேளு
திறமான தங்கமது கழஞ்சி யொன்று
உருக்குகின்ற உலையில்வைத்து ஊதிக் கொண்டு
உத்தமனே தகடடித்துப் பின்பு கேளு
தெருக்கின்ற ரோகியுட தேகம் போலே
திறமாக உருவத்தை யடித்துக் கொண்டு
மருக்கின்ற ரோக மாரணத்தின் மூலம்
மைந்தனே அதிலெழுதிப் பூசை செய்யே. (1507)

செய்யடா பதினைந்து நாளே நீதான்
செயலான மூலத்தை மாறி மாறி
பையவே உருவேற ரோக மப்பா
படிப்படியா யிறங்குமடா சொன்னேன் பாரு
நையவே அதன்பின்பு மருந்து கேளு
நாட்டிலுள்ள சொர்ணரசம் ஆறு வேளை
உய்யவே நீகொண்டால் அப்போ பாரு
உத்தமனே தீருமடா உறுதி பாரே. (1508)

உறுதியாய் மருந்துண்ணும் போது கேளு
உத்தமனே குடைச்சல்முதல் யாவும் சாந்தமாகும்
அறுதியாய் விட்டபின்பு ரோக மப்பா
அப்பனே தீருமடா உறுதி சொன்னேன்
பருதியாய் சாந்திசெய்து மருந்து துண்ணுவிடில்
பாலகனே தீராது பண்பாய்ப் பாரு
குருதியென்ற ரத்தமடா ஓட்டங் காட்டி
குபிலென்று நடந்திடுவான் குணமாய்த் தானே.(1509)

குணமாகு மென்றுதான் மூன்று மாதம்
குப்பென்று இருந்துவிட்டால் அப்பா கேளு
பிணம்போலே செய்துவிடுந் தேகந் தன்னை
பின்பு ஒருநாளும் தீரா தப்பா
பண்பான மருந்தை மூன்றுதினங்களுக்கு மேலே
பண்பாக வாரிநீ இறைத் திட்டாலும்
தணல்போலே தேகமெல்லாம் கொப்பளமே கண்டு
தானிறப்பான் பூமியிலே தன்மை பாரே. (1510)

தன்மையுள்ள தலைவிதி தான் கெட்டியாகத்
தானிருந்தால் அப்போது சொல்லக் கேளு
உண்மையுள்ள மனிதன்தான் ஒருவேலைக்குந் தான்
உத்தமனே உதவா நீதான் உறுதியாக
பண்டிதமும் சாந்தியுந்தான் திங்கள் மூன்றில்
பக்குவமாய்ச் செய்திட்டால் தீரும் சொன்னேன்
உண்மையுள்ள சொர்ணரசம் என அறுநூற்றுள்ளே
உத்தமனே உரைத்துவிட்டேன் உறுதி தானே. (1511)

## நூல் விவரம்.

தானான புலத்தியனே சொல்லக் கேளு
கெடிதான நான்சொன்ன சாஸ்திரங்கள் யாவும்
வாளப்பா வாதத்தில் லட்சம் காப்பு
வளமான வைத்தியமோ இரண்டு லட்சமாகும்
கேளப்பா நலக்கோளின் சோதி டங்கள்
கொடிதான ஏழுலட்சம் காப்புச் சொன்னேன்
வீளப்பா போகாமல் அஷ்ட கர்மம்
விதம்விதமாய் அறுநூறு காப்புத் தானே. (1512)

தானான ரேகை சாஸ்திரமோ கேளு
தக்கபடி சொல்லிவிட்டேன் ஐந்து லட்சம்
மானான மாந்திரீகம் மௌன யோகம்
மகத்தான யோகநூல் ஆயிரமும் சொன்னேன்
தேனான கருவில் ஐநூ றப்பா
தெளிவாக நீராவி யந்திரங்கள் செய்யும்
ஊனான சாஸ்திரந்தான் ஏழு காண்டம்
உள்ளபடி சொல்லிவிட்டேன் உண்மை கேளே. (1513)

உண்மையுள்ள சாஸ்திரத்தில் மாந் தருக்கு
உரித்தான வைத்தியந்தான் உண்மை யாகும்
தன்மையுள்ள மாந்தரீகம் அஷ்ட கர்மம்
தக்கபடி யோகிக்குப் பலிக்கும் பாரு
வண்மையுள்ள வாதநூல் குருவே காட்டில்
வளமாக அவ்வளவும் நிஜமே யாகும்
திண்ணமுள்ள சோதிடமே சொல்லக் கேளு
திறமாக குருசாபம் பெற்ற நூலே. (1514)

நூலான சோதிடமோ நடந்த தெல்லாம்
நுணுக்கமாய் சொல்லிவிடும் கேட்ட பேர்க்கு
மேலாகப் பின்னிட்டு நடக்கும் நேர்மை
மேன்மையுடன் ஐந்துக்கு இரண்டே யாகும்
வாளான சாஸ்திரத்தை ஜபித்த தாலே
வளமாக அதற்குஒரு குறை வுண்டாச்சே
பாலான கருவிநூல் யாவு மப்பா
கைமுறையாய்ப் பலிக்குமடா கண்டு பாரே. (1515)

பாரடா நூலொன்றும் பொய்யே அல்ல
பக்குவமாய் ஆத்தாளைப் பணிந்து சொன்னேன்
கூறடா மாந்தருக்கு பின்னே காணும்
குறிப்பான விதம்முற்றும் தெரிந்து கொண்டால்
வாரடா அக்கிரமங்கள் செய்வா ரென்று
வளமான சோதிடத்தைச் சபித்தார் சித்தர்
நேரடா கருத்தொட்டு ஆடும் வேளை
நிச்சயமாய்ப் பலிக்குமடா நீதான் பாரே. (1516)

பலிக்காது நூல்களைத்தான் ஏன் சொன்னீரென்று
பக்குவமாய்க் கேட்டாயே அப்பா கேளு
சலிக்காதே என்பேரில் நீதா னப்பா
சண்டாளர் வெகுபேர்கள் உலக மீதில்
பலிக்குமென்று சொல்வார்கள் அநேக வித்தை
பாபங்கள் நேருமடா பாடி னோர்க்கு
நலிக்காத பெரியோர்கள் அறிய வேண்டி
நாட்டிலே பாடிவைத்தேன் நூல்கள் பாரே. (1517)

பார்த்தாக்கால் தோணுமப்பா நூலின் நேர்மை
பண்பாக உந்தனுக்கு விளங்கும் பாரு
ஏர்த்தாக்கால் எந்நூல்போல யாரும் சொல்வார்
எடுத்துவிட்ட விளக்கதுபோல் தோணுந் தோணும்
வார்த்தஉருவு தனைப்போலே விளக்கிச் சொன்னேன்
வண்மையுள்ள கருமான சூத்திரந் தன்னில்
தீர்த்துவிட்டேன் உருக்கினங்கள் யாவும் சொல்லி
திறமான பன்னீ ராயிரத்தைத் தானே. (1518)

பனிரெண்டு ஆயிரத்தில் அப்பா கேளு
பாங்கான மூலிகையின் போக்கைச் சொல்லி
உன்னிதமாய் பற்பவகை செந்தூ ரங்கள்
உள்ளபடி லோகத்தின் சத்து முற்றும்
நன்னிலத்தில் விளைகின்ற முப்பூ மார்க்கம்
நாட்டியே அதையெடுத்துச் செய்யும் பாகம்
சொன்னபடி அத்தனையும் சொல்லி விட்டேன்
சுருதிகொண்டு நீசெய்து கொள்வாய் தானே. (1519)

காணவே இன்னமொன்று சொல்லக் கேளு
கனமான முப்பூவின் நேர்மை தன்னை
தோணவே அறியாத மாந்தர் கட்கும்
தொல்லுலகில் சொல்லிவிட்டேன் ஐயாயிரந் தான்
பேணியே அந்நூலைப் பார்த்துக் கொண்டு
பிசகாமல் வைத்தியங்கள் செய்து வந்தால்
ஆணவே ரோகமது மெள்ள மெள்ள
அப்பனே தீருமடா அகிலத் தோர்க்கே. (1520)

அகிலத்தோர் தனக்குவரும் நேர்மை பார்த்து
அப்பனே இன்னதென்று அறிய வேணும்
உகமைசொல்லும் வாயாடி பேச்சைக் கேட்டு
உத்தமனே ஒருநாளும் போக வேண்டாம்
தகைமையுள்ள இந்நூலைச் சாங்க மாக
தப்பாமல் படித்துவந்தால் உனக்குத் தோணும்
ஜெகமதிலே வைத்தியன் என்று பேருமாகி
ஜெயமான பேரிகையும் அடிப்பாய் நீயே. (1521)

அடித்துவிடு சுரமதுதான் இருநூற்றிஎழுபதுமே யாகும்
அப்பனே அதற்குள்ளே அறுபத்தி நாலு
படித்துவிட்டேன் பெரிதென்றும் சாஸ்தி ரத்தில்
பாங்காக அதற்குள்ளே பாரி னோர்க்கு
பிடித்துவரும் பதினொன்று சுரமே யாகும்
பெலமான சுரமதுதான் சன்னிபாத மென்றேன்
கெடுத்துவரும் அச்சுரத்தின் நேர்மை தன்னை
கேள்மகனே விவரமதைச் சொல்வேன் கேளே (1522)

கேளப்பா அச்சுரந்தான் வருகும் நேர்மை
கெணிதமுடன் முன்னடி சுரமே காணும்
வாளப்பா பின்னடி தோஷ முண்டாய்
வண்மையுடன் இரண்டாம்நாள் சன்னி தோன்றும்
நாளப்பா அப்போது நாடி நேர்மை
நன்மை சுரந்தனக்கு வாத பித்தம்
தேளப்பா தாண்டியே ஓடும் பாரு
தெளிவான தோஷத்தின் நாடி கேளே. (1523)

நாடிதான் தோஷமது கண்ட பேர்க்கு
நளினமாய் நாடிமுற்றும் அழுந்திக் காணும்
சாடியே சன்னிதான் தோன்றுங் காலே
சாதகமாய் நாடிமுற்றும் படபடத்தே போகும்
வாடியே அந்நாடி பின்னுக்கே சென்றல்
வளமான மருந்தொன்றும் ஏரு தய்யா
தேடியே நாடிதான் முன்னேக்கு மாகில்
தெளியுமென்று மருந்துதான் செய்வாய் நீயே. (1524)

செய்வதற்கு இன்னமொன்று சொல்லக் கேளு
செயலான நாடியுட நேர்மை தன்னை
உய்வதற்குச் சொல்லுகிறேன் உண்மை யாக
உயர்வான கரத்திலது நாடி பத்தாம்
வெய்வதற்கு வாதத்தில் வாத மென்றும்
வெளியான வாதத்தில் பித்த மென்றும்
தோய்வதற்கு வாதத்தில் சிலேற்பன மென்றும்
செயலான வாதத்தில் மூன்று மாச்சே. (1525)

ஆச்சடா இப்படியே மூன்றுக்கு மாகும்
அப்போது குருநாடி முன்னே தோன்றும்
வீச்சடா இதைக்காணும் விதமே தென்னில்
விதமான உன்விரலே மூன்று பங்காய்
காச்சடா வைத்துநீ பார்த்தா யானல்
கனமான வாதமது முன்புறமே நிற்கும்
பேச்சடா பித்தமது மத்தி பத்தில்
பொங்கமுடன் நிற்குமடா சிலேத்துமம் பின்னே (1526)

பின்னேதான் இப்படிக்கு விரலைத் தானே
பெலமாகப் பார்த்திட்டால் எல்லாந் தோணும்
முன்னாலே சொன்னதொரு வாத பித்தம்
முக்கியமாய்த் தணியாது எப்போதுந் தான்
தன்னாலே அழுந்திருக்கும் சேட்டும மப்பா
தாரணியி லதுதாண்டி ஓடு மாகில்
சொன்னோமே எமபுரிச் சேர்வா ரென்று
செப்புவாய் உறுதியுடன் செப்பு வாயே. (1527)

செப்புகின்ற சிலேட்டுமந்தான் எழும்புங் காலை
செயலான வாதந்தான் ஒடுங்கும் பாரு
அப்பனே சேட்டுமந்தான் தாண்டும் வேளை
அய்யனே பித்தந்தான் ஆறிப் போகும்
இப்படியே மாந்தருக்கு நடக்கும் வேளை
விதமான பேச்செல்லாம் ஒடுங்கிப் போகும்
அப்போது சுவாசமது கண்டு கொண்டு
ஆண்டவனார் திருவடியை அடைவான் பாரே. (1528)

அடைவான சன்னி பதின்மூன்றுக் குள்ளே
அப்பனே எழுசன்னி தீரா தப்பா
முடையான சன்னியது தோன்றுங் காலை
முக்கியமாய்க் குறியொன்று சொல்லக் கேளு
சடைவான தேகத்தில் வியர்வை கண்டு
சடுதியிலே அந்நீர்தான் பிசின்போ லாகும்
நடையான இருக்கலுங் குளிர்ந்து காணும்
நாச்செவிதான் கறுத்தலுடன் தொங்கல் காணும்
விடையான இக்குறிகள் கண்ட தானால்
விடமாட்டான் எமன்தான் இவனைத் தானே. (1529)

தானான நாக்குடனே பற்கள் முற்றும்
தனியான நகங்களுடன் உதறுங் கண்ணும்
தேனான குறியெல்லாம் கறுத்துக் காணும்
தெளியாது இக்குறிகள் யாருக்குந் தான்
மானான கடுந்தோஷங் கண்ட தென்றால்
மகத்தான நாக்குத்தான் கறுத்துக் காட்டும்
ஊனான நாடியது ஒடுங்கா தப்பா
உள்ளபடி பின்னோக்கிச் செல்லும் பாரே (1530)

